திருவொற்றியூரான்

MISSING PAGES ARE i & ii, IN BOOK



# கிருஷ்ண எசுர்வேதம்

## தைத்திரீய சங்கிதை

முதலாங்காண்டம் மூன்றும் பகுதி

வே. மோ. பெ, கா. வெளியீடு, நே: 5



# கிருஷ்ண எசுர்வேத

## தைத்திரீய சங்கிதை

புநராதானம் முதலான பிரகரணங்கள்

சாயணபாடியக் கருத்து பதவுரைகளுடன் கூடியது

மூன்றும் பகுதி

இது

உயர் திரு.

காசிவாசி சிவானந்த யதீந்திர சுவாமிகளால்

மொழி பெயர்க்கப்பெற்று

திருவொற்றியூரான் அடிமை என்னும்

சென்னை

த. ப. இராமசாமிப் பிள்ளை யவர்களால்

பதிப்பித்து

நன்கொடையாக அளிக்கப்பெற்றது.

விக்கிரமஹூ மாசித்திங்கள்.

1941

# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை

## ‘புநராதானம்’ என்னும் முதற் காண்ட

### ஐந்தாம் பிரபாடக விடயச் சுருக்கம்

## ' யாசமானம் ' என்னும் முதற் காண்ட

### ஆறும் பிரபாடக விடயச் சுருக்கம்

---

## 'வாசபேயம்' என்னும் முதற் காண்ட

### ஏழாம் பிரபாடக விடயச் சுருக்கம்

---

## 'இரர்ஜசூயயாகம்' என்னும் முதற் காண்ட
## எட்டாம் பிரபாடக விடயச் சுருக்கம்.



முடிந்தது.

## கிருஷ்ண எசுர்வேத முதற்காண்ட மூன்றும் பகுதியின் பிழை திருத்தங்கள்.

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 5 | 28 | தருப்பைகனால் | தருப்பைகளால் |
| 12 | 6 | नड्वन्पु | नड्वान्पु |
| 13 | 1 | மாவடைகள் | மாவடை |
| 18 | 24 | பிரசா | பிராசி |
| 19 | 30 | பதிறை | பதினொரு |
| 21 | 6 | दमुं | द॒मुं |
| ,, | 9 | होमां | होमं। |
| 31 | 8 | इपृ | स्पृ |
| 35 | 29 | நலங்செய்கின்ற | நலஞ்செய்கின்ற |
| 39 | 6 | பஞ்சாத | பஞ்சத |
| 41 | 25 | षउ | षो |
| 43 | 16 | मैव | मेवै |
| ,, | 24 | பகை வரைச்கொல் | பகை வைரக்சொல் |
| 50 | 3 | ஆறு | ஏழு |
| ,, | 8 | स्सा॒ | ंस्सा॒ |
| 55 | 13 | ष्य | ष्या |
| 88 | 6 | ஆகுதிகனில் | ஆகுதிகளில் |
| 94 | 28 | என்னும் என்னும் | என்னும் |
| 103 | 6 | वा | या |
| 120 | 9 | ஒல்வொரு | ஒவ்வொரு |
| 121 | 9 | ருது | ருத |
| 123 | 15 | त्य | स्य |
| 130 | 13 | வேல்வில்யி | வேள்வியில் |
| 156 | 3 | தொடங்ஞர்கள் | தொடங்கினர்கள் |

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 161 | 3 | केऽश्नं | केऽश्नं॑ |
| 171 | 24 | நனை | நிறை |
| 172 | 6 | ज्ञे | ज्ञं |
| ,, | 12 | वं॑ | ँवं॑ |
| ,, | 13 | रिमा॒ श्लोका॒ | रि॒मा श्लो॒का |
| ,, | 14 | श्दे॒॑ | श्दे॑ |
| 173 | 11 | श्वा | ध्रुवा |
| ,, | 14-15-16 | நனை | நிறை |
| 174 | 4 | ज्ञे | ज्ञं |
| 176 | 3 | ஆறு | ஏழு |
| ,, | 21 | नी॒ | नी |
| 180 | 10 | मास्ते | माशास्ते |
| 198 | 1 | மநுவாகம் | ம் விநியோகம் |
| 212 | 13 | स्यो | स्वेयो |
| 249 | 25 | मनुमानुष्या | मनुष्या |
| 258 | 8 | புரோடாசங்களை | புரோடாசத்தை |
| 268 | 2 | பிருத் | பிருதம் |
| ,, | 5 | உமியாற் செய்தல் | உமியுடனுஞ் செய்தல் |
| 295 | 13 | மரத்தின் மீது | மரத்தின் இலையின் மீது |
| 309 | 23 | இலையில் | சுருவத்தில் |
| 310 | 15 | இலையை | சுருவத்தை |
| 338 | 9–10 | स्त्यासु॑ | स्त्या॑सु |
| 348 | 18 | பத்தொன்பது | இருபத்தொரு |
| 365 | 25 | स्वा॒ | स्वा |
| 410 | 16 | स्सोमा॑ | स्सो॑मा |
| ,, | 19 | अ | आं॑ |

முடிந்தது.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

---

### பிரபாடக விடயச் சுருக்கம்.

एकादशानुवाकाः स्युः पञ्चमेऽस्मिन्प्रपाठके ।
तत्राऽऽदौ पुनराधेय मनुवाक चतुष्टये ॥ १ ॥
ततः षट्केऽग्न्युपस्थानं काम्य याज्यास्तथाऽन्तिमे ।
विधीयतेऽनुवाकेस्मिन्नादिमे पुनराहितिः ॥ २ ॥

இப் பிரபாடகம் பதினொரு அநுவாகங்களைக் கொண்டது; அவற்றுள் முதல் நான்கு அநுவாகங்களால் புநராதானம் (மீண்டும் தீ யுண்டாக்கல்) என்பதும், ஆறு அநுவாகங்களில் அக்கினியுபஸ்தானமும், (துதி) சொல்லப் படுகின்றது. ஈற்றையதில் காம்ய புரோநு வாக்கியங்கள்.

ஈண்டு, முந்திய நான்கு பிரபாடகங்களால், வேட்போன், பிரகிருதியில் (முதற் காரணமான வேள்வியில்) ஓத வேண்டிய மந்திரங்கள் கூறப் பெற்றன. இவ்வைந்தாம் பிரபாடகத்தில் புநராதானங் கூறப்படுகின்றது. உற்று நோக்கின், இது, ஆதானத்தின் (தீ யுண்டாக்குவதன்) முன்னர்க் கூறற் பாலது. வேதம் ஓது முறைமைபற்றிச் சிறப்புடையதா மெனக் கொண்டு இங்கு கூறப்படுகின்றது. இம் முறையும், கலைமகள், தனது புதல்வனுக்கு, திருவுள்ளத்திலுதித்தருளியதாம். அதாவது, வாணி, தனது புதல்வனுக்கு இம் முறையாய் வேதமோதுதலை அருள் செய்தனள் என்பது. அதுபற்றியே, ஏனைய மறையோதுவார்களும் இம்முறையைத் தழுவியே ஓதி வருகின்றனர் என்பது உணரற்பாலது.

---

### முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

### முதலாவது அநுவாகம்

இது நான்கு பஞ்சாதிக்கு மேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

---

புநராதானத்தைக் கூறு மந்திரங்கள்.

देवासुरास्संयत्ता आसन्ते देवा विजयमुपयन्तोऽग्नौ वामं वसु
सन्नयंदधतेदमुनो भविष्यति यदिंनो जेष्यन्तीति तदग्निर्न्यकामयत

तेनाऽपाक्रामन्तद्देवा विजित्याऽवरुरुत्समाना अन्वायन्तदस्य सह॒-
साऽऽदित्सन्तसोऽरोदीद्यदरोदीत्तद्रुद्रस्य रुद्रत्वं यदश्र्वशीयत तत् ॥
रजतꣳ हिरण्यमभवत्तस्माद्रजतꣳ हिरण्यमदक्षिण्यमश्रुजꣳ हि यो
बर्हिषि ददाति पुराऽस्य संवत्सराद्गृहे रुदन्ति तस्माद्बर्हिषि नदेयꣳ
सोऽग्निरब्रवीद्भाग्यसान्यथ व इदमिति पुनराधेयन्ते केवल मित्यब्रु-
वन्नृध्नवत्खलु स इत्यब्रवीद्योमद्देवत्यमग्निमादधाता इतितं पूषा-
ऽऽधत्ततेन ॥ २ ॥ पूषाऽऽर्ध्नोत्तस्मात्पौष्णाः पशव उच्यन्ते तन्त्व-
ष्टाऽऽधत्ततेन त्वष्टाऽऽर्ध्नोत्तस्मात्त्वाष्ट्राः पशव उच्यन्ते तं मनुराधत्त
तेन मनुरार्ध्नोत्तस्मान्मानव्यः प्रजा उच्यन्ते तन्धाताऽऽधत्त तेन
धाताऽऽर्ध्नोत्संवत्सरो वै धाता तस्मात्संवत्सरं प्रजाः पशवोऽनुप्रजा-
यन्ते य एवं पुनराधेयस्यर्धिं वेद ॥ ३ ॥ ऋध्नोत्येवयोऽस्यैवं
बन्धुतां वेद बन्धुमान्भवति भागधेयं वा अग्निराहित इच्छमानः
प्रजां पशून् यजमानस्योपदोद्रावोद्वास्य पुनरादधीत भागधेयेनैवैनꣳ
समर्धयत्यथो शान्तिरेवास्यैषा पुनर्वस्वोरादधीतैतद्वै पुनराधेयस्य
नक्षत्रं यत्पुनर्वसूस्वायामेवैनन्देवतायामाधाय ब्रह्मवर्चसी भवति
दर्भैरादधात्ययातयामत्वाय दर्भैरादधात्यद्भ्य एवैनमोषधीभ्योऽव-
रुध्याधत्ते पञ्चकपालः पुरोडाशो भवति पञ्चवा ऋतव ऋतुभ्य एवैन
मवरुध्याधत्ते ॥ ४ ॥

முன்னுள்ள தீயை எடுத்து விட்டு, மீண்டும், அக்கினியை யுண்டாக்குவதன் முன்னர், விதிக்கும் அக்கினியைப் பற்றியதோர் கதையைக் கூறி, தொடர்புபற்றி, வேள்வியில், வெள்ளியைத் தானமளிக்கக் கூடாதென்பதையுங் கூறுகின்றது.

தீயுண்டாக்கல்)

மந்திரம் :

**देवासुरास्संयत्ता आसन्ते देवा विजयमुपयन्तोऽग्नौ वामं वसु सन्न्यद-धतेदमुनो भविष्यति यदिनो जेष्यन्तीति तदग्निर्न्यकामयत तेनाऽपाक्रा-मत्तद्देवा विजित्याऽवरुरुत्समाना अन्वायन्तदस्य सहसाऽऽदित्सन्त-सोऽरोदीद्यदरोदीत्तद्रुद्रस्य रुद्रत्वं यदश्र्वशीयतत्तद्रजतꣳ हिरण्यमभव-त्तस्माद्रजतꣳ हिरण्यमदक्षिण्यमश्रुजꣳ हियो बर्हिषि ददाति पुराऽस्य संवत्सराद्गृहे रुदन्ति तस्माद्बर्हिषि नदेयम् ।**

தேவர்களும், அசுரர்களும் போராடினர். அதில், தேவர்கள் வென்றவர்களாய், அசுரர்களிடத்திற் கவர்ந்துகொண்ட, மாணிக்கம் முத்து முதலான பொருள்களைப் பாதுகாத்துக் கொடுக்கும்படி அக்கினிதேவனிடத்திற் கொடுத்து வைத்தனர். (ஈண்டு, அசுரர்கள் வென்றுவிடுவரேல் தமது ஆபத்திற்குதவும் என்பது தேவர்கள் கருத்து.) அக்கினி தேவன், அப்பொருளை, இச்சித்துக் கவர்ந்துகொண்டு மறைந்தனன். புண்ணியத்தால் தேவர்கட்கு வெற்றியுண்டானபின், அக்கினியிடஞ் சென்று, தமது பொருள்களைக் கேட்க, அக்கினி அதைக் கொடுக்க மனமிலாதிருந்தது. தேவர்கள், வலியால் பொருளை வாங்கத் தொடங்கினர். அப்போது, அக்கினி தேவன் அழுதனன், அழுத கண்ணீர் வெள்ளியாயிற்று; ஆதலின், வெள்ளியை, வேள்வியில் தானமீதல் கூடாது. ஈயினோ, ஈந்தவன், வருடமொன்றிற்குள் தனது வீட்டில் அழுவன். ஆதலின், வேள்வியில் வெள்ளியைத் தானஞ் செய்தல் கூடாது என்பது.

---

அக்கினியைப் புநராதானத்திற் சேர்த்தல்

மந்திரம் :

**सोऽग्निरब्रवीद्भाग्यस्यान्यथ व इदमिति पुनराधेयन्ते केवल मित्यब्रुवन्नृध्न वत्खलु स इत्यब्रवीद्योमदेवत्यमग्निमादधाता इति ।**

உரை.

பிறகு அக்கினி தேவன், யான், சிறந்த பாகத்தை யடைந்துகொண்ட பின்னர், உங்கட்கு இப் பொருளைக் கொடுப்பேன் என்றனன். அதற்கு தேவர்கள் இசைந்து, இதுவே புநராதேய பாகம் என்று கொடுத்தனர். அதில், அக்கினிதேவன் களிப்புற்று, எவன் எனது அவியைச்செய்து அக்கினியைப் புநராதானஞ் செய்கின்றானோ, அவன் பெருஞ்செல்வத்தை யடைகின்றான் என்று கூறினன். ஆதலின், செல்வ வளர்ச்சியின் பொருட்டு அக்கினி தேவதையின் அவியைக் கொண்டு புநராதானஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

அத்தகைய செல்வம், உவமானத்தால் விளக்கப் பெறுகின்றது.

மந்திரம் :

तं पूषाऽऽधत्ततेन पूषाऽऽर्ध्नोत्तस्मात्पौष्णाः पशव उच्यन्ते तन्त्वष्टाऽऽधत्ततेन त्वष्टाऽऽर्ध्नोत्तस्मात्त्वाष्ट्राः पशव उच्यन्ते तं मनुराधत्त तेन मनुरार्ध्नो-त्तस्मान्मानव्यः प्रजा उच्यन्ते तन्धाताऽऽधत्त तेन धाताऽऽर्ध्नोत्संवत्सरो वै धाता तस्मात्संवत्सरं प्रजाः पशवोऽनुप्रजायन्ते ।

உரை.

பூஷா, அத்தகைய ஆதானத்தைச் செய்து செல்வத்தை யடைந்தனன். மற்றும், துவஷ்டா, மநு, வருடாபிமானி தேவதை என்பவர்களும், புநராதானஞ் செய்து, பசு, பிரஜைகள் முதலான செல்வத்தை யடைந்தனர் என்பது.

---

செல்வத்தை யுணர்ந்தவனைப் புகழ்தல்.

மந்திரம் :

य एवं पुनराधेयस्यर्धिं वेदर्ध्नोत्येव ।

உரை.

புநராதானத்தில் செல்வம் வருமென்பதை யுணர்ந்தவன் செல்வத்தை யடைகின்றான் என்பது.

---

அக்கினியின் சுற்றத்தாரை அறிந்தவனைப் புகழ்தல்.

மந்திரம் :

योऽस्यैवं बन्धुतां वेद बन्धुमान्भवति ।

உரை.

இவ்வக்கினியின் சுற்றத்தாரை யுணர்ந்தவன், சுற்றமுடையவன் ஆகின்றான் என்பது.

---

புநராதான விதானம்.

மந்திரம் :

भागधेयं वा अग्निराहित इच्छमानः प्रजां पशून् यजमानस्योपदोद्राबोद्वास्य पुनरादधीत भागधेयेनैवैनꣳ समर्धयत्यथो शान्तिरेवास्यैषा ।

உரை.

முதலில், ஆதானத்தால் வளர்க்கப்பெற்ற அக்கினி, சிறந்த பாகத்தை விரும்பி, மிகுந்த உபத்திரவத்தைச் செய்தது. அதனுடைய சாந்தி இதனால் உண்டாகின்றது. ஆதலின், உத்வாசன இஷ்டியால், முன்னிருந்த அக்

கினியை எடுத்துவிட்டு, மீண்டும் அக்கினியை உண்டாக்கல் வேண்டும். இதுவே, 'அக்கினிக்கு எட்டுக் கபாலம் வைக்க' என்பது முதலான மந்திரத்தாலும் சூத்திரக்காரராலுங் கூறப்பட்டிருக்கின்றது என்பது.

---

காலம்.

மந்திரம் :

**पुनर्वस्वोरादधीतैतद्वै पुनराधेयस्य नक्षत्रं यत्पुनर्वसूस्वायामे वैनन्देवताया माधाय ब्रह्मवर्चसी भवति ।**

உரை.

புனர்வசு, (புநர்பூசம்) என்பது, மீண்டும் தேஜஸையும், தனத்தையுங் கொடுப்பது எனப் பொருள் படுதலின், புநர்பூச நக்ஷத்திரம் புநராதானத்திற்குக் காலமாம். இதில், தேவதையை ஆதானஞ் செய்து பிரம ஒளியை யடைகின்றான் என்பது.

புநராதானம், முதல் ஆதானத்தின் விகாரமாதலின், விறகால் தீ யுண்டாக்கல் வேண்டுமென்று வந்தவிடத்து, அதை மறுத்து, தீ யுண்டாக்குவதற்கு தருப்பைகள் விதிக்கப்படுகின்றன.

---

மந்திரம் :

**दर्भैरादधात्ययातयामत्वाय ।**

உரை.

சாரமுண்டாதற் பொருட்டு, உலர்ந்த தருப்பைகளால், தீ வளர்த்தல் வேண்டும். இங்கு, விறகால் தீ யுண்டாக்கின் சாரமற்றதாய்விடும், இது பற்றியே, குண்டத்தில் பழைய தருப்பைகளை விரித்து, 'भूमिर्भूम्ना' என்பது முதலிய, சர்ப்பராக்ஞீ என்னு மந்திரங்களால் காருகபத்தியத் தீயை யுண்டாக்கல் வேண்டும் என்று கூறுகின்றது சூத்திரமும் என்பது.

---

தருப்பை விதியைப்பற்றிப் புகழ்தல்

மந்திரம் :

**दर्भैरादधात्यद्भ्य एवैन मोषधीभ्योऽवरुध्याऽऽधत्ते ।**

உரை.

தருப்பைகளால், புநராதானஞ் செய்யப்படுகின்றது, நீரிலிருந்தே, இந்தச் செடியாகிய தருப்பை உண்டாயிற்று என்பது.

தருப்பை, நீரின் காரிய மென்பதும், ஓஷதி என்பதும், 'इन्द्रो वृत्रमहन्' என்னும் தாரிசிகப் பிராமணத்தில் வெளியாய்க் கூறப் பெற்றிருக்கின்றன.

(மீண்டுந்

மீண்டும் உண்டாக்கிய இத்தீயில், செய்யத்தக்க இஷ்டிக்கு, அக்கினி தேவதை முன் விதிக்கப்பெற்றது. இனி, திரவியம் (ஆதானத்திற்குரிய பொருள்) விதிக்கப்படுகின்றது.

---

புநராதானம்

**மந்திரம் :**

**पञ्चकपालः पुरोडाशो भवति पञ्चवा ऋतव ऋतुभ्य एवैन मवरुध्याऽऽधत्ते ।**

**உரை.**

ஐந்து கபாலப் புரோடாசங்கள், இருதுக்கள் ஐந்து, அந்த இருதுக்களில் இது இவ்வாறு உண்டாக்கப்படுகின்றது என்பது.

இருக்குவேதப் பிராமணத்தில், பன்னிரண்டு மாதங்களும், முன் பனிக்காலம், பின் பனிக்காலம் என்னு மிரண்டையும் ஒன்றுபடுத்தி ஐந்து இருதுக்கள் என்று கூறப்பட்டிருக்கின்றன.

முதல் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## இரண்டாவது அநுவாகம்.

நான்கு பஞ்சாதிக்குமேல், முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

---

புநராதானத்திற்கு வேண்டிய அங்கத்தொகுதியைக் கூறுமந்திரங்கள்

परावा एष यज्ञं पशून् वंपति योंऽग्निमुंद्वासयंते पञ्चंकपालः पुरो-
डाशों भवति पांक्तों यज्ञः पांक्ताः पशवों यज्ञमेव पशूनवंरुन्धे वीर-
हावा एष देवानां योंऽग्निमुंद्वासयंते नवा एतस्यं ब्राह्मणा ऋंतायवंः
पुराऽन्नंमक्षन्पंक्त्यों याज्यानुवाक्यां भवन्ति पांक्तों यज्ञः पांक्तः पुरुंषो
देवानेव वीरन्निंरवदायाऽग्निं पुनरा ॥ १ ॥ धत्ते शताक्षंरा भवन्ति
शतायुः पुरुंषश्शतेन्द्रिंय आयुंष्येवेन्द्रिये प्रतिंतिष्ठति यद्वा अग्निरा-
हिंतो नर्ध्यंते ज्यायों भागधेयंन्निकामयंमानो यदांग्नेयꣳ सर्वं भवंति
सैवास्यर्धिस्सं वा एतस्यं गृहे वाक्सृंज्यते योंऽग्निमुंद्वासयंते सवाचꣳ

सꣳसृष्टां यजमान ईश्वरोऽनुपराभवितोर्विभक्तयो भवन्ति वाचो
विधृत्यै यजमानस्याऽपराभावाय ॥ २ ॥ विभक्तिं करोति ब्रह्मैव
तदकरुपाꣳशु यजति यथा वामं वसु विविदानो गूहति तादृगेव
तदग्नि प्रतिस्विष्टकृतन्निराह यथा वामं वसुविविदानः प्रकाशञ्जिग-
मिषति तादृगेव तद्विभक्तिमुक्त्वा प्रयाजेन वषट्करोत्यायतनादेव-
नैति यजमानोवै पुरोडाशः पशव एते आहुती यदभितः पुरोडाश-
मेते आहुती ॥ ३ ॥ जुहोति यजमानमेवो भयतः पशुभिः परिगृ-
ह्णाति कृतयजुस्संभृतसंभार इत्याहुर्नसंभृत्यास्संभारान यजुः कर्तव्य
मित्यथो खलु संभृत्या एव संभाराः कर्तव्यं यजुर्यज्ञस्य समृध्यै
पुनर्निष्कृतो रथो दक्षिणा पुनरुत्स्यूतं वासः पुनरुत्सृष्टोऽनड्वान्पुनरा-
धेयस्य समृध्यै सप्तते अग्ने समिधस्सप्तजिह्वा इत्यग्निहोत्रंजुहोति यत्र
यत्रैवास्य न्यक्तन्ततः ॥ ४ ॥ एवैनमवरुन्धे वीरहावा एष देवानां
योऽग्निमुद्वासयते तस्य वरुण एवर्णयादाग्निवारुण मेकादशकपालम-
नुनिर्वपेद्यञ्चैवहन्ति यश्चास्यर्णयात्तौ भागधेयेन प्रीणाति नार्तिमा-
र्च्छति यजमानः ॥ ५ ॥

---

மந்திரம் :

पराचा एष यज्ञं पशून् वपति योऽग्निमुद्वासयते पञ्चकपालः पुरोडाशो भवति
पांक्तो यज्ञः पांक्ताः पशवो यज्ञमेव पशूनवरुन्धे ।

உரை.

இரண்டாம் அநுவாகத்தில் யாஜ்யா முதலான அங்க சமுதாயங்களை விதிக்க விரும்பி, முற்கூறிய பொருள் விதியே மீண்டு மெடுத்துக்கொண்டு புகழப்படுகின்றது.

அக்கினியை எடுத்து விட்டவன், பசுக்களையும், வேள்வியையுங் கொன்ற வனுகின்ருன். இதற்கு ஐந்து கபாலப் புரோடாசம் ஆகின்றது. யக்ஞம் பாங்க்தமாம் பசுக்கள் பாங்தங்கள் பங்க்தி என்னும் வடமொழிச் சந்தம் பசுவிற்குக் காரணமானமையின் பசுக்களும் பாங்க்திகளெனப்பட்டன. யக்ஞமே பசுக்களை அடக்கிக் கொள்ளுகின்றது என்பதை யுணர்க.

---

யாஜ்யா அநுவாக்கியங்கள் விதிக்கப்படுகின்றன.

மந்திரம் :

**वीरहावा एष देवानां योऽग्निमुद्वासयते नवा एतस्य ब्राह्मणा ऋतायवः पुराऽन्नमक्षन्पंक्त्यो याज्यानुवाक्या भवन्ति पांक्तो यज्ञः पांक्तः पुरुषो देवानेव वीरन्निरवदायाऽग्निं पुनराधत्ते ।**

உரை.

'தேவர்களுக்குள் வீரனுகிய அக்கினியைத் தள்ளி விட்டவனுகிய தலைவனுடைய அன்னத்தை, அந்தணர்கள் அருந்திலர், 'अग्नेतमद्याश्वं न' என்பது முதலான நான்கு இருக்குக்களும் பங்திகள். அவற்றுள், இரண்டு, பிரதான அவிகளையுடையன. இரண்டு சுவிஷ்டகிருத் என்னும் வேள்விக்குரியன. இவை அக்கினி காண்டத்தில் 'अग्निर्मूर्धा' என்னும் அநுவாகத்தில், செங்கல் அடுக்குவதின் பொருட்டுப் படிக்கப் பெற்றிருக்கின்றன. ஈண்டு, அவ்விதி, அவ் வாக்கியத்தாலாயது. வேறு சாகைகளில், ஒரு புருடனுடைய கைகளிரண்டு, கால்களிரண்டு, தலை என்னுமிவைகளால் பாங்க்த்தன்மை எனக் கூறப்பட்டிருக்கின்றன. பங்க்திகள் யாஜ்யாநு வாக்கியங்களாகின்றன. பாங்க்தியே யக்ஞம், பாங்க்தியே புருடன், தேவர்களுக்குள் வீரனுகிய அக்கினியைக் கொன்றுவிட்டு மீண்டும் எவன் ஆதானஞ் செய்கின்ருனே. அவன் உத்வாசன பயத்திலிருந்து நீங்குகின்ருன் என்பது.

---

நான்கு இருக்குக்களிலுள்ள எழுத்துக் கணக்குப் புகழப்படுகின்றது.

மந்திரம் :

**शताक्षरा भवन्ति शतायुः पुरुषः शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रतितिष्ठति ।**

உரை

நூறுஎழுத்துக்கள், அதாவது: 'अग्नेतमद्य' என்பது முதலிய முதலாவது இருக்கு எழுத்துக்கள் இருபத்துநான்காம் 'अथाह्यग्ने' என்பது முதலிய இரண்டாவது இருக்கு எழுத்துக்கள் இருபத்தைந்து. 'अभिष्टेअद्य' முதலிய மூன்றுவது இருக்கு எழுத்துக்கள் இருபத்தைந்து, 'एभिः' முதலிய ஈற்றிலுள்ள எழுத்துக்கள் இருபத்தாறு என்பதாம். நூறு வயதுடையவன் புருடன், நூறு இந்திரியங்கள். ஆயுளில் இந்திரியம் நிலைத்திருக்கின்றது என்பது.

தீ யுண்டாக்கல்)

*குறிப்பு :—படைப்பில் நியதமானது நூறுவயதாம்; என்பது பொது. இது புண்ணியத்தாலும் பாவத்தாலும் ஏற்றக்குறைவாம். இங்கு நூற்றுக் கணக்கான நாடிகளில் சஞ்சரித்தலின் பத்து இந்திரியங்கட்கே நூறென்னும் வழக்காம்.*

---

பிரதான கருமங்கட்கு ஒப்ப, பிரயாஜம் ஆஜ்யபாகம் முதலான அங்கங்கட்கும், அக்கினியின் சங்கத் தன்மை விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

**यद्वा अग्निराहितो नर्ध्येते ज्यायो भागधेयन्निकामयमानो यदाग्नेयꣳ सर्वं भवति सैवास्यर्धिः ।**

உரை.

*அல்லது, அக்கினியாதானஞ் செய்தவன் செல்வவானுக விரும்பிலன். சிறந்த பாகதேயத்தையும் விரும்பிலன். மற்றே, எல்லாம் அக்கினியினுடைய வைகளாக்குகின்றான். அதுவே இவனது செல்வமாம் என்பது.*

*குறிப்பு :—இதனல், வேள்வித்தலைவனுக்குச் செல்வமிலாமையால், அக்கினியிலிருந்து செல்வமடையாமை அநுமிக்கப்பட்டது.*

---

'समिधो अग्न आज्यस्य वियन्तु' என்பது முதலான நான்கு பிரயாஜ மந்திரங்களில், சம்புத்தியின் (விளி) ஈற்றின் அக்கினி என்னுஞ் சொல்லுக்கு முன்னர், சம்புத்தி, (எட்டாம் வேற்று விளி) சப்தமி, (ஏழாம் வேற்றுமை) திருதீயா, (மூன்றும் வேற்றுமை) த்விதீயா (இரண்டாம் வேற்றுமை) என்னும் வேற்றுமைகளையேற்ற அக்கினி என்னுஞ் சொற்களுக்கு, முறையே விநியோகம் விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

**सं वा एतस्य गृहेवाक्सृज्यते योऽग्निमुद्वासयते सवाचꣳ सꣳसृष्टां यजमान ईश्वरोऽनुपराभवितोर्विभक्तयो भवन्ति वाचो विधृत्यै यजमानस्याऽपराभावाय ।**

உரை

*அக்கினியை உத்வாசனஞ் செய்விப்பவனுடைய வாக்கு, அங்குள்ள மாதர்களின் வாக்கைப்போலும், சூத்திரர்களுடைய வாக்கைப்போலு மாகின்றது. அதைப்பற்றிய வேள்வித் தலைவனும், ஏனையோர்களினும் சிறப்புடைய தாகாமையின் பழிப்புடையனுகின்றான். நான்கு வேற்றுமை யுருபுகளைக் கொண்ட அக்கினி என்னுஞ் சொற்களால் புநராதானஞ் செய்யில் வேள்வித்*

தலைவன் ஏனையோர்களினுஞ் சிறப்புடையனுகின்றமையால், வாக்கு விரிந்த போது முன்னுள்ள நிந்தை அடங்கி விடுகின்றது என்பது.

குறிப்பு ;—நான்கு விபத்தி (வேற்றுமை) களைக்கொண்ட மந்திரமாவன : '**समिधो अग्नऽग्न आज्यस्य वियन्तु**' இதில், சமிதோ அக்கினே ! என்பது விளி, '**त नूनपादग्नावग्न आज्यस्यवेतु**' இதில், '**अग्नौ**' என்பது ஏழாம் வேற்றுமை, '**इडो अग्निनाऽग्न आज्यस्यवियन्तु**' என்பதில், '**अग्निना**' என்பது மூன்றும் வேற்றுமை, '**बर्हिरग्निमग्न आज्यस्यवेतु**' என்பதில், '**अग्निं**' என்பது இரண்டாம் வேற்றுமை இதுபற்றியே! சூத்திரத்திலும், அக்னே அக்னே, அக்னுவக்னே, அக்னிநுக்னே, அக்னிமக்ன என்று கூறப்பட்டது மென்க.

---

விபக்தி (வேற்றுமை) விதி, மறித்தும் புகழப்படுகின்றது,

மந்திரம் :

**विभक्तिं करोति ब्रह्मैवतदकः ।**

உரை.

அந்தப் புநராதானம், பிரமமே அக்கினியாய்த் தோன்றலின் பிரபுவாகச் செய்கின்றது என்பது.

---

மந்திரங்கட்குக் குறைந்த ஒலி விதிக்கப்படுகிறது,

மந்திரம் :

**उपांशुयजति यथा वामंव सुविविदानो गूहति तादृगेवतत् ।**

உரை.

உலகில், மிகுந்த தனம் பெற்றவன் அதை மறைத்து வைப்பதுபோன்று, மந்திரத்தை மெல்ல வோதி வேட்கின்றான் என்பது.

---

சுவிஷ்டகிருதுக்கு, பெரும் ஒலி விதிக்கப்படுகிறது,

மந்திரம் :

**अग्निं प्रतिस्विष्टकृतन्निराहयथा वामं वसुविविदानः प्रकाशञ्जिगमिषति तादृगेवतत् ।**

உரை.

உலகில், பெரும் பொருளையடைந்தவன் ஆடம்பரத்துடன் வெளிப்படையாய் வெளியிற் செல்வதுபோல், அக்கினியைக் குறித்துச் செய்யும் சுவிஷ்டகிருத்யாகம் இரைச்சலுடன் செய்யப்படுகின்றது என்பது,

---

தீ யுண்டாக்கல்)

முன்னர்க் கூறிய விபத்தி (வேற்றுமை)கட்கு, பிரயாச சம்பந்தம் விதிக்கப் படுகிறது,

மந்திரம் :

विभक्तिमुक्त्वा प्रयाजेन वषट्करोत्यायतनादेवनैति ।

உரை.

முற்கூறிய வேற்றுமையுருபுகளை ஏற்றவாக்கியத்தைக்கூறி பிரயாஜமந்திரத்துடன், வஷட் என்பதையுஞ் சொல்லி வேட்குக. (வேள்வி செய்க.) அங்ஙனஞ் செய்த விடத்து, முற்கூறிய வாக்கு, தனது வீட்டிலேயே இருக்கும் வெளியிற் செல்லாது என்பது.

---

'पुनरूर्जा निवर्तस्व' 'सहरय्यानिवर्तस्व' என்னும் இரண்டாலும், அக்கினியின் புரோடாசத்திற்கு, முன்னும் பின்னும் இரண்டு ஆகுதிகள் விதிக்கப்படுகின்றன.

மந்திரம் :

यजमानोवै पुरोडाशः पशव एते आहुती यदभितः पुरोडाशमेते आहुती जुहोति यजमानमेवो भयतः पशुभिः परिगृह्णाति ।

உரை.

எஜமானன் புரோடாசம், பசுக்கள் ஆகுதிகள், கூறிய புரோடாச ஆகுதிகளை ஓமஞ் செய்கின்றான். அதாவது எஜமானனே, இரண்டு வகையாலும் பசுக்களாற் கிரகிக்கின்றான் என்பது.

---

விதியால் வந்தணையும் சமித்துத் தோகுதிகளையும், ஆதான மந்திரங்களையும், வாசசனேய முதலிய வேறு சாகைகளைத் தழுவி ஆசங்கை வடிவால் மறுக்கின்றது,

மந்திரம் :

कृतयजुस्संभृतसंभार इत्याहुर्नसंभृत्यास्संभारान यजुः कर्तव्यमिति ।

உரை.

முன்னர், எசுர் மந்திரங்கள் ஓதப்பட்டிருத்தலானும், சம்பாரங்களும் (சமித்துக்களும்) தேடப்பட்டிருத்தலானும், அவ்விரண்டும் மீண்டுஞ் செய்யற்பாலன வன்று என்பது.

---

சித்தாந்தங் கூறப்படுகின்றது,

மந்திரம் :

अथो खलु संभृत्या एव संभाराः कर्तव्यं यजुर्यज्ञस्य समृद्ध्यै ।

உரை.

சமித்து வகைகளை நிறையச் சேர்த்து வைத்தல் வேண்டும். அதற்குரிய எசுர் மந்திரங்கள் யக்ஞ சம்பத்தின் பொருட்டாம் என்பது.

---

தட்சிணை விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

**पुनर्निष्कृतो रथो दक्षिणा पुनरुत्स्यूतं वासः पुनरुत्सृष्टोऽनड्वान्पुनराधेयस्य समृद्ध्यै ।**

உரை.

உடைந்துபோய் மீண்டுஞ் சீர்ப்படுத்திய வண்டி, கிழிந்துபோன பின்னர், தைத்த ஆடை, இளைத்தபின் தேற்றிய இடபம் தக்ஷிணைகள் என்பது.

---

மந்திரமின்றி ஓமஞ் செய்யற்பாலது, முதலாதானத்திற்கு மந்திரமின்றி அக்கினி ஹோத்திரம் விதிக்கப்பட்டது, அது இங்கும் பொருந்தியது. அதை மறுத்து விட்டு, மந்திரத்துடன் விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

**सप्त ते अग्ने समिधः सप्त जिह्वा इत्यग्निहोत्रं जुहोति यत्र यत्रैवास्य न्यक्तं तत एवैनमवरुन्धे ।**

உரை.

இம் மந்திரத்தால், மற்றும் புனராதானஞ் செய்யும் அக்கினியின் அங்கம், யாண்டு விடுபட்டதோ, எங்கு மறைக்கப்பட்டதோ, அங்கிருந்து, அங்கத்துடன் அக்கினியைத் தேடுகின்றான். இதன் பொருள் மேல் வரும்.

---

அது நிர்வாப்யம் (மீண்டும் நெல்லெடுத்துச் செய்யும்) அவி விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

**वीरहा वा एष देवानां योऽग्निमुद्वासयते तस्य वरुण एवर्णयादाग्निवारुणमेकादशकपालमनुनिर्वपेद्यञ्चैव हन्ति यश्चास्यर्णयात्तौ भागधेयेन प्रीणाति नाऽऽर्तिमार्च्छति यजमानः ।**

உரை.

அக்கினியை எடுத்தெறிந்தவன் வீரனைக் கொன்றவனாகின்றான். அவனை, வருணன் கடனாளியாக்குகின்றான். அக்கினிக்கும் வருணனுக்கும் பதினொரு

தீ யுண்டாக்கல்)

கபால மா வடைகள் செய்க. இவ்வாறு செய்தவன் வருணனையும் அக்கினியையும் அவர்களுடைய அவிர்ப்பாகத்தாற் பிரியப்படுத்துகின்றவனுகின்முன். எஜமானனும் பீடையுறுவதில்லை என்பது.

இரண்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## மூன்ருவது அநுவாகம்.

### விடயச் சுருக்கம்.

चतुर्भिर्भूमिरित्याद्यै राद्ध्यात्पश्चिमानलम् ।
दक्षिणाग्निं तु यत्त्वेति यदित्याहवनीयकम् ॥ १ ॥
मनस्त्वुपस्थितिः सप्त जुहुयादग्निहोत्रकम् ।
पूनर्द्वाभ्यां पूरोडाशमभितो जुहुया दथ ॥ २ ॥
तृतीयमादधानस्य लोकाद्या होममन्त्रकाः ।

நான்கு மந்திரங்களால், காருகபத்தியத்தீயை யுண்டாக்கல், தக்ஷிணுக்கினியை யுண்டாக்கல், ஆகவனீயத்தை யுண்டாக்கல், போற்றுதல், அக்கினிஹோத்திரஞ்செய்தல், புரோடாசஹோமங்கள், ஹோம மந்திரம்.

---

### புநராதானத் தோடக்கம்

முதலாம் ஆதானத்திற் கூறப்பெற்ற முறையையன்றி மற்ருெருமுறையில், மீண்டுந் தியுண்டாக்கல் என்பது புனராதானமாம். ஆதானஞ் செய்த வருடத்தில் ஆதானஞ் செய்தவனுடைய புதல்வன் இறக்கினும், சுற்றத்தார், அரசனுடைய போரினல் அங்கங்கட்குக் கெடுதிவரினும் புநராதானஞ் செய்தல் வேண்டும்.

இவ்வண்ணம், மேற்கூறின தடைகளுள் யாதேனுமொன்று உண்டானதற்கு அடுத்தாற்போல் வரும் பௌர்ணமி இஷ்டி (வேள்வி) முடிந்தவுடன், 'अग्नीःपुनराधास्ये, ऋध्यासं प्रजावान् भूयासम्' அதாவது, 'மீண்டும் அக்கினிகளை யுண்டாக்குவேனுக, புத்திரப்பேறு பொருட்பேறுகளையுடையவனுவேனுக, என்று, சங்கற்பஞ் செய்துகொள்வதுடன், இன்னகாலத்திற் செய்வேன், என்பதையுங் குறிப்பிட்டுக் கொள்ளல் வேண்டும்.

அஃதன்றியும், 'उत्सर्गेष्टि' உத்சர்க்கேஷ்டி = அக்கினியை விட்டுவிடுதற்குரிய கிரியை செய்கின்றேன் என்று மீண்டுஞ் சங்கற்பித்துக் கொள்ளுதலும் வேண்டும்.

பின்னர், 'विद्युदसि' என்பது, முதலான மந்திரங்களால், பௌர்ணமி யாகத்திற் செய்தது போன்று, கையலம்புதல் முதலான கிரியைகளைச் செய்து

கொண்டு, அக்கினி தேவதையின் பொருட்டு, எட்டுக்கபாலங்களிலும், அக்கினி, வைசுவாநர தேவதையின் பொருட்டு பன்னிரண்டு கபாலங்களிலும், வருண தேவதைக்கு பத்துக் கபாலங்களிலும், அக்னி அம் சுமதியின் பொருட்டு எட்டுக் கபாலங்களிலும் நான்கு புரோடாசங்களைச் செய்து, அவற்றை ஓமஞ் செய்து முடிந்தவுடன், தீக்களை நன்றாய் எரித்தபின் அவ்வாறே விட்டுவிடல் வேண்டும். அன்று தொட்டு, சங்கற்பப்படி ஆதானஞ் செய்ய வேண்டிய நாள் வரும் வரை சும்மாயிருத்தல் வேண்டும். அர்தா தானஞ் செய்து நாடோறும் ஔபாசனை பண்ணுகின்றவனாயிருப்பின், தினம் காலைப்போதில் மாத்திரம் தீயோம்பி வரல் வேண்டும்.

பின்னர், தீயுண்டாக்குதற்குரிய நாள் வந்ததும், முன்னர், ஆதானஞ் செய்த (உண்டாக்கிய) தீயில்: கூறியவாறே, எழுவகை, அல்லது ஐவகை மண்களையும், சமித்து வகைகளையுந் தேடிக்கொள்ளல் வேண்டும். அவற்றுடன் சிறிது பழைய தருப்பைகளையுந் தேடிக்கொள்க.

பிரமோதனஞ்சமைத்தல் முதலான கிரியைகளை, முன், ஆதானத்திற் செய்தது போன்றே செய்துகொண்டுவந்து, மண்களையும், சமித்துக்களையும், மூன்று குண்டங்களிலும் பரப்பிவிட்டு, அதன்மேல் பழைய தருப்பைகளையுஞ் சிறிது பரப்புதல் வேண்டும். இனிமேல் மந்திர விநியோகம்.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## மூன்றாவது அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்குமேல், பதின்மூன்று பதங்களைக் கொண்டது.

---

புநராதான (மீண்டுந் தீயுண்டாக்குதற்குரிய) மந்திரங்கள்.

भूमिर्भूम्ना द्यौर्वरिणाऽन्तरिक्षं महित्वा । उपस्थे ते देव्यदितेऽग्नि-
मन्नादमन्नाद्यायादधे । आऽयङ्गौः पृश्निरक्रमीदसनन्मातरं पुनः ।
पितरञ्च प्रयन्त्सुवः । त्रिꣳशद्धाम विराजति वाक्पतङ्गाय शिश्रिये ।
प्रत्यस्य वहद्युभिः । अस्य प्राणादपानत्यन्तश्चरति रोचना ।
व्यख्यन्महिषस्सुवः । यत्त्वा ॥ १ ॥ क्रुद्धः परोवपमन्युना
यदवर्त्या । सुकल्पमग्ने तत्तवपुनस्त्वोद्दीपयामसि । यत्ते मन्युपरोप्तस्य

पृथिवी मनुंदध्वसे । आदित्या विश्वेतद्देवा वसंवश्च समाभंरन् । मनोज्योतिंर्जुषतामाज्यं विच्छिन्नं यज्ञꣳ संमिमन्दंधातु । बृहस्पतिंस्तनुता मिमन्नो विश्वें देवा इहमांदयन्ताम् । सप्तते अग्ने समिधंस्सप्तजिह्वास्सप्त ॥ २ ॥ ऋषंयस्सप्तधामं प्रियाणिं । सप्तहोत्रांस्सप्तधात्वांयजन्तिसप्तयोनीरापृंणस्वाघृतेनं । पुनंरूर्जा निवंर्तस्व पुनंरग्न इषाऽऽयुंषा । पुनंर्नः पाहि विश्वतंः । सहरय्या निवंर्तस्वाग्ने पिन्वंस्वधारंया । विश्वप्स्निया विश्वतस्परिं । लेकस्सलेंकस्सुलेकस्तेनं आदित्या आज्यं जुषाणावियन्तु केतस्सकेंतस्सुकेतस्तेनं आदित्या आज्यं जुषाणा वियन्तु विवस्वाꣳ अदिंतिर्देवजूतिस्तेनं आदित्या आज्यं जुषाणा वियन्तु ॥ ३ ॥

முன், ஆதானத்திற் கூறியவாறே தீயைக் கடைந்தெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

---

முதல் விநியோகம்.

காருகபத்தியத் தீ யுண்டாக்கல்

முதல் மந்திரம்.

भूमिर्भूम्ना द्यौर्वरिणाऽन्तरिक्षं महित्वा । उपस्थे ते देव्यदितेऽग्निमन्नादमन्नाद्यायाऽऽदधे ।

உரை.

காருகபத்தியத் தீ யுண்டாக்கும் இடமே! நீ, மூன்றுலகமா யிருக்கின்றாய். அவற்றுள், பெரிதாந் தன்மையால் மண்ணுலகமாயிருக்கின்றாய். சிறப்புடைய தாந் தன்மையால் வானுலகமா யிருக்கின்றாய். பரந்திருக்குந் தன்மையால் அந்தரிக்ஷமாயிருக்கின்றாய் என்பதாம். பூமிதேவியே! உன்னுடைய இடுப்பில், அன்ன போக்தாவாகிய காருகபத்தியாக்கினியை, வேள்வித் தலைவனுக்கு உரிய உணவுப்பொருள் கிடைத்தற் பொருட்டு உண்டாக்குகின்றேன் என்பதாம்.

---

## இரண்டாம் மந்திரம்.

**आऽयङ्गौः पृश्निरक्रमीदसनन्मातरं पुनः । पितरञ्च प्रयन्त्सुवः ।**

### உரை.

இக் காருகபத்தியம், இரவியாய், போதல் வருதலை யுடையது. வெண்மை நிறமுடையது. உலகத்தைத் தாண்டிச் செல்கின்றது. (எவ்வாறெனின்?) மீண்டும், பூமியாகிய மாதாவை யடைகின்றது. மறித்தும், சுவர்க்கமாகிய பிதாவையும் நன்கு அடைகின்றதென்பதாம்.

---

## மூன்றும் மந்திரம்.

**त्रिꣳशद्धाम विराजति वाक्पतङ्गाय शिश्रिये । प्रत्यस्य वहद्युभिः ।**

### உரை.

இரவி வடிவாகிய காருகபத்தியத்தின் முகூர்த்தங்கள் முப்பதும் இனிது விளங்குகின்றன. துதியாகிய வாக்கு, பறவையைப் போன்று வானில் உலாவும் சூரியனைப் பற்றிக்கொண்டது. அத்தகைய காருகபத்தியமே! உனக்கு, தள்ளி விடல் (உத்வாசனம்) முதலான தீமைகளைச் செய்தனம், நீ அவற்றை, திருவுள்ளத்தில் வைக்காதே. உனது சுவாலைகளால், எமது அவியை, தேவர்களிடத்திற் சேர்த்து விடுவாயாக என்பது.

---

## நான்காம் மந்திரம்.

**अस्य प्राणादपानत्यन्तश्चरति रोचना । व्यख्यन्महिषस्सुवः ।**

### உரை.

இவ்வாதித்தனுடைய ஒளியானது, பிராணவாயு உள்ளும் புறமும் போய் வருவது போல், உதித்தொடுங்குகின்றது. வான் மண்கட்கு நடுவில் சஞ்சரிக்கின்றது பெருமண்டலத்தில் இருக்கின்றது. என்றும் ஆதித்தனுய் சுவர்க்கத்தை எஜமானர்கட்கு வெளிப்படுத்துகின்றது. இரவி வடிவாய்த் துதிக்கும் காருகபத்தியத் தீயே! உன்னை, உண்டாக்குகின்றேன் என்பது கருத்து.

மேற்கூறின நான்கு மந்திரங்களையும் ஓதி, காருகபத்தியமென்னுங் குண்டத்தில் அத்தியை வைத்தல் வேண்டும்.

குறிப்பு :—அசம்பாரபக்ஷ ஆதானத்தில் ஓதின மந்திரங்களில், 'आदित्यानां त्वा' என்பது முதலிய ஏனைய மந்திரங்கள் இங்கு ஓதற்குரியனவல்ல.

மற்றும், முதல் ஆதானம் போன்றே, 'सुगार्हपत्यः' என்பது முதலிய மந்திரத்தால், எஜமானன், காருகபத்தியத் தீயைப் போற்றுதல் முதலான கிரியைகளைச் சமன ஓமம் முடியும் வரை செய்தல் வேண்டும்.

தீ யுண்டாக்கல்)

அதன் பின், வேள்வித்தலைவன், 'मनोज्योतिर्जुषतां' என்பது முதலிய மந்திரத்தால் காருகபத்தியத் தீயைப் போற்றல் வேண்டும்.

---

### இரண்டாவது விநியோகம்

#### தக்ஷிணாக்கினியை யுண்டாக்கல்

பின்னர், உண்டாக்கிய காருகபத்தியத் தீயை, முன்னர், மீந்திருந்த தருப்பைகளைக் கொண்டு நடுப்பகலில் நன்றாய் எரியச் செய்துவிட்டு, வேட்போன், ஆதானத்திற் கூறியவாறே ஆகவனீயத் தீ யுண்டாக்குவதற்கு, அதில் சிறிதளவு தீயை எடுத்துக் கொள்ளல் வேண்டும். ஆக்னீத்ரனும், தக்ஷிணாக்கினியின் பொருட்டு அதிற் சிறிதளவு தீ யெடுத்துக்கொள்ளல் வேண்டும்.

தீயை அத்வர்யு எடுத்துக் கையில் வைத்துக் கொண்டிருக்கும்போது ஆக்கினீத்ரன்,

மந்திரம் :

**यत्त्वा क्रुद्धः परोवपमन्युना यदवर्त्या। सुकल्पमग्ने तत्तवपुनस्त्वोद्दीपयामसि।**

உரை.

தட்சிணத் தீயே! முனிவுற்ற யான், முனிவு வசத்தால் உன்னை உத்வாசனம் பண்ணிவிட்டேன். மற்றும், வறுமையால் உத்வாசனம் பண்ணினவனாயிருக்கின்றேன். அக்கினியே! உனது அருளால், அவை நலஞ் செய்வனவாகுக. மீண்டும் உன்னை வளர்க்கின்றேன் என்பது.

இம் மந்திரத்தால், தான் எடுத்த தீயை தக்ஷிணாக்கினிக் குண்டத்தில் வைத்தல் வேண்டும்.

மந்திரம் ஓதுதலும், சமன ஹோமமும் முன்போன்றன.

---

### மூன்றாம் விநியோகம்

#### ஆகவனீயத் தீயை யுண்டாக்கல்

மந்திரம் :

**यत्ते मन्युपरोप्तस्य पृथिवी मनुदध्वसे। आदित्या विश्वेतद्देवा वसवश्च समाभरन्।**

உரை.

ஆகவனீயத் தீயே! எனது கோபத்தால் உத்வாசனஞ் செய்த உனது ஒளிகள் மண்ணிற் புகுந்து ஒழிந்தனவன்றோ, அவ்வொளிகளை, ஆதித்தர்கள், விசுவதேவர்கள், வசுக்கள் என்னுந் தேவர்கள் கவர்ந்து கொள்வார்களாக என்பது.

வேட்போன், இம் மந்திரத்தை ஓதி, முற்கூறியபடியே காருபத்தியத்தி லிருந்து எடுத்துக்கொண்டுவந்த தீயை, ஆகவனீய மென்னுங் குண்டத்தில் வைத்தல் வேண்டும்.

சமன ஹோமம் முன்போலவேயாம்.

---

மந்திரம் :

**मनोज्योतिर्जुषतामाज्यं विच्छिन्नं यज्ञं समिमं दधातु । बृहस्पतिस्तनुतामिमन्नो विश्वे देवा इहमादयन्ताम् ।**

**உரை.**

உத்வாசனமாகிய குற்றநீங்குதற்கு, மதிக்கத்தக்க அக்கினியின் சோதி, நெய் அவியைப் புசிக்குக. விட்டுப்போன இவ் வேள்வியை ஏற்றுக்கொள்க, பிருகற்பதி, எமது வேள்வியை வளரச் செய்வாராக. எல்லாத் தேவர்களும் இவ் வேள்வியில் திருப்தி யுடையவர்களாகுக என்பது.

இம் மந்திரத்தால் ஆகவனீயத் தீயைப் போற்றுதல் வேண்டும். மற்றனைத்தையும் ஆதானத்திற் கூறியவாறே செய்துகொள்க,

---

அக்கினி ஹோத்திரம்.

மந்திரம் :

**सप्तते अग्ने समिधस्सप्तजिह्वास्सप्त ऋषयस्सप्तधाम प्रियाणि । सप्तहोत्रास्सप्तधा त्वायजन्ति सप्तयोनीरापृणस्वाघृतेन ।**

**உரை.**

அக்கினியே! உனது சமித்துக்கள், அரசு, அத்தி, முருக்கு, வன்னி, சொத்தைக்களா, இடிவிழுந்த மரம், தாமரைஇலை என எழுவகைத்தாம். உனது நாக்குக்கள், காலி, கராலி, மனோஜவா, சுலோகிதா, சுதூம்ரவர்ணு, விசுவருசி, லேலாயமாணு என எழுவகைத்தாம். உனது இடங்களும், ஆகவனீயம், காருகபத்தியம், தக்ஷிணக்கினி, சப்யம், அவசத்யம், பிரசாஹிதம், ஆக்னீத்ரம் என எழுவகைத்தாம். உனது ஹோதாக்களும், ஹோதா, பிரசஸ்தா, பிராம்ஞச்சம்சி, போதா, நேஷ்டா, ஆக்னீத்ரன், அச்சாவாகன் என எழுவர்கள். அக்கினிஷ்டோமம், அத்யக்னிஷ்டோமம், உக்த்யம், ஷோடசி, அதிராத்திரம், அப்தோர்யாமம், வாஜபேயம், என எழுவகையாய் உன்னை வேள்வியில் ஆராதனை செய்கின்றார்கள். அத்தகைய நீ, ஆகவனீய முதலான எழுவகை இடங்களையும் நெய்யால் நிரப்பிக்கொள்வாயாக என்பது.

தீ யுண்டாக்கல்)

பிறகு, இவ்வாறு புநராதானஞ் செய்த அவ் வக்கினியிலேயே அக்கினி தேவதையின்பொருட்டு, ஐந்து கபாலங்கள் வைத்து ஒரு புரோடாசத்தை பக்குவஞ் செய்துகொண்டு, இஷ்டியிற் செய்த முறையாகவே முதலாவது ஆஜ்யபாக ஹோமம் வரை செய்தல் வேண்டும்.

பின், இரண்டாவது ஆஜ்யபாகத்தை, அக்கினிபவமான தேவதையைக் குறித்துச் செய்துவிட்டு,

---

நான்காம் விநியோகம்

மந்திரம் :

**पुनरूर्जा निवर्तस्व पुनरग्न इषाऽऽयुषा । पुनर्नः पाहि विश्वतः ।**

உரை.

அக்கினியே ! நீ, என்னால் உத்வாசனம் பண்ணப்பட்டிருப்பினும், பால் முதலான இரசங்களுடன் மீண்டும் வருவாயாக. உணவுப் பொருளுடனும், ஆயுளுடனுங்கூட மீண்டும் வருவாயாக. மீண்டும் மீண்டுஞ் செய்த குற்றங்களனைத்திலு மிருந்து எம்மைப் பாதுகாப்பாயாக என்பது.

இம் மந்திரத்தால், துருவாவிலிருந்து நெய்யை எடுத்துக்கொண்டு புரோடாச ஹோமம் செய்யுமிடத்தில் ஹோமம் செய்தல் வேண்டும்.

புரோடாசத் துண்டுகளை நெய்யைத் தடவி சிறிது சிறிதாய்ப் பாகஞ் செய்துகொண்டு வஷட்காரத்தில் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

ஐந்தாம் விநியோகம்

மந்திரம் :

**सह रय्या निवर्तस्वाग्ने पिन्वस्व धारया । विश्वप्स्निया विश्वतस्परि ।**

உரை

அக்கினியே! நீ, தனத்துடன் வருவாயாக. பருகப்படும் நெய்த்தாரையால், புல், தானியம், கொடி முதலானவைகளின்மேல் தெளிப்பாயாக என்பது.

துருவாவிலிருந்து நெய் யெடுத்துக்கொண்டு இம் மந்திரத்தால், ஆகவனீயத் தீயில் அப் புரோடாசத்தின்மீது ஹோமஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், ஏனைய கருமங்களை இஷ்டியிற் செயத்துபோற் செய்து முடித்துக்கொண்டு, மீண்டும், அவ்வக்கினியில், அக்கினி வருண தேவதையின் பொருட்டு பதினாறு கபாலங்கள் வைத்து ஒரு புரோடாசத்தைப் பக்குவஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

மூன்றுமுறை ஆதானஞ் செய்தவன் ஓமஞ் செய்யவேண்டிய மந்திரம்.

**लेकस्सलेकस्सुलेकस्तेन आदित्या आज्यं जुषाणावियन्तु केतस्सकेतस्सु-केतस्तेन आदित्या आज्यं जुषाणा वियन्तु विवस्वाꣳ अदितिर्देवजूति-स्तेन आदित्या आज्यं जुषाणा वियन्तु ।**

உரை.

லேகன், சலேகன், சுலேகன், கேதன், சகேதன், சுகேதன், விவசுவான, அதிதி, தேவசூதி என்னும் ஒன்பது ஆதித்தர்களும், அன்போடு எமது நெய்யைப் பருகுவார்களாக என்பது.

இம் மூன்று மந்திரங்களாலும் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

மூன்றும் அநுவாகம் முற்றிற்று.

---

முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

நான்காவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்கு மேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

---

முன் அநுவாகத்தின் உரையாகிய பிராமணம்.

भूमिर्भूम्नाद्यौर्वरिणे त्याहाशिषैवैन माधत्ते सर्पावैजीर्यन्तोऽम-न्यन्त स एतङ्कसर्णीरः काद्रवेयो मन्त्रमपश्यत्ततो वै ते जीर्णास्त-नूरपाघ्नत सर्पराज्ञिया ऋग्भिर्गार्हपत्यमादधाति पुनर्नवमेवैनमजरं कृत्वाऽऽधत्तेऽथो पूतमेव पृथिवीमन्नाद्यन्नोपानमत्सैतम् ॥ १ ॥ मन्त्रमपश्यत्ततो वैतामन्नाद्यमुपानमद्यत्सर्पराज्ञिया ऋग्भिर्गार्हपत्य-मादधात्यन्नाद्यस्यावरुध्या अथो अस्यामेवैनं प्रतिष्ठितमाधत्ते यत्त्वा क्रुद्धः परोवपेत्याहापह्नुत एवास्मै तत्पुनस्त्वोद्दीपयामसीत्याह समिन्ध एवैनं यत्ते मन्युपरोप्तस्येत्याह देवताभिरेव ॥ २ ॥ एनꣳ संभरति विवा एतस्य यज्ञश्छिद्यते योऽग्निमुद्वासयते बृहस्पतिर्वत्यचोपतिष्ठते

தீ யுண்டாக்கல்)

ब्रह्मवै देवानां बृहस्पतिर्ब्रह्मणैव यज्ञꣳ सन्दधाति विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधात्वित्याहसन्तत्यै विश्वे देवा इहमादयन्ता मित्याहसन्तत्यैव यज्ञन्देवेभ्योऽनुदिशति सप्त ते अग्ने समिधस्सप्तजिह्वाः ॥ ३ ॥ इत्याह सप्तसप्त वै सप्तधाऽग्नेः प्रियास्तनुवस्ता एवावरुन्धे पुनरूर्जा सहरय्येत्यभितः पुरोडाशमाहुती जुहोति यजमानमेवोर्जाचरय्याचोभयतः परिगृह्णात्यादित्यावा अस्माल्लोकादमुं लोकमायन्तेऽमुष्मिं लोके व्यतृष्यन्त इमं लोकं पुनरभ्यवेत्याग्निमाधायैतान् होमान जुहवुस्त आर्ध्नुवन्ते सुवर्गं लोकमायन् यः पराचीनं पुनराधेयादग्निमादधीत स एतान् होमां जुहुयाद्यामेवादित्या ऋद्धिमार्ध्नुवन्तामे वर्ध्नोति ॥४॥

இதில் நான்காம் அநுவாகத்தில் முன் மந்திரங்களுக்கு உரை கூறப்படுகின்றது. அவற்றுள், முதலில் 'अन्नाद्याय' என்பதனுடைய கருத்துக் கூறப்படுகின்றது.

---

மந்திரம் :

भूमिर्भूम्नाद्यौर्वरिणे त्याहाऽऽशिषैवैन माधत्ते ।

உரை.

உணவுப் பொருள் வேண்டுமென்னும் விருப்பால் ஆதானஞ் செய்யப்படுகின்றது என்பது.

---

நான்கு இருக்குக்களால் ஆதானம் விதிக்கப்படுகின்றது.

மந்திரம் :

सर्पावैजीर्यन्तोऽमन्यन्त स एतङ्कसर्णीरः काद्रवेयो मन्त्रमपश्यत्ततो वै ते जीर्णास्तनूरपाघ्नत सर्पराज्ञिया ऋग्भिर्गार्हपत्यमादधाति पुनर्नवमेवैनमजरं कृत्वाऽऽधत्तेऽथो पूतमेव ।

உரை.

கிழப்பருவமடைந்த சர்ப்பங்கள், நமது கிழத்தன்மை நீங்குமாறு செய்பவர் யாவர்? என்று தம்முட்கூடி ஆராய்ந்தன, அப்போது, கத்துருவின் புத்திரன் கசர்ணீரன் என்பவன் 'भूमिर्भूम्ना' என்பது முதலான இம் மந்திரங்களைக்

கண்டு பிடித்தனன். இம் மந்திரங்களின் சக்தியால், சர்ப்பங்கள் தமது பழைய தோல்களை உரித்துவிட்டுப் புதிய தோல்களைப் பெற்றுக்கொண்டன. சர்ப்பங்கட்கு ஆதாரம் பூமியாம். என்னை? 'இயம்வை சர்ப்பராக்ஞி' என்று, ஏனைய சாகைகளிற் கூறி யிருத்தலினென்க. சர்ப்பராக்ஞி என்னும் இம் மந்திரங்களால், காருகபத்தியத் தீ யுண்டாக்கப்படுகின்றது. மற்றும் இவைகளால் உண்டான அக்கினி, புதிதும், புனிதமுமாகின்றது என்பது.

---

அவ் விதியையே அநுவதித்துப் புகழ்கின்றது.

**மந்திரம் :**

**पृथिवीमन्नाद्यन्नोपानमत्सैतम्मन्त्रमपश्यत्ततो वैतामन्नाद्यमुपानमत्सर्प-राज्ञिया ऋग्भिर्गार्हपत्यमादधात्यन्नाद्यस्यावरुध्या अथो अस्यामेवैनं प्रतिष्ठितमाधत्ते ।**

உரை

'அன்னத்யாய' என்றமையின் அன்னத்தை யடைதல் கூறப்பட்டது. 'உபஸ்தேதே தேவி' என்றமையின் பூமியில் பெருமை பெறப்பட்டது; பெறவே, பாலாக்கினியின் சாந்தத் தன்மைக்கு இழுக்கின்மை கூறப்படுகின்றது என்பது.

---

**மந்திரம் :**

**यत्त्वा क्रुद्धः परोवपेत्याहापह्नुत एवास्मै तत् ।**

உரை.

இதனால் 'உத்திபயாமஸி' என்பதன் கருத்துக் கூறப்படுகின்றது என்பது.

---

**மந்திரம் :**

**पुनस्त्वोद्दीपयामसीत्याह समिन्ध एवैनम् ।**

உரை

இதனால் 'ஆதித்யா விஶ்வே' என்பது முதலியவற்றின் கருத்துக் கூறப்படுகின்றது என்பது.

---

**மந்திரம் :**

**यत्ते मन्युपरोप्तस्येत्याह देवताभिरेवैनꣳ संभरति ।**

உரை.

இதனால் உபஸ்தானம் விதிக்கப்படுகின்றது என்பது.

தீ யுண்டாக்கல்)

மந்திரம் :

**विवा एतस्य यज्ञश्छिद्यते योऽभिमुद्वासयते बृहस्पतिवत्यर्चोपतिष्ठते ब्रह्मवै देवानां बृहस्पतिर्ब्रह्मणैव यज्ञꣳ सन्दधाति ।**

உரை.

பிருகஸ்பதி என்னுஞ் சொல்லே யுடையது பிருகஸ்பதிவதி என்பதாம்.

இதனல் அச்சொல்லேப் புகழ்ந்து, 'சந்ததாது' என்பதன் கருத்துக் கூறப்படுகின்றது என்பது.

மந்திரம் :

**विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधात्वित्याह सन्तत्यै ।**

உரை.

இதனல், தேவர்களின் சம்போதனத்தி (விளியி)ன் உபயோகங் கூறப்படுகின்றது என்பது.

மந்திரம் :

**विश्वे देवा इहमादयन्ता मित्याहसन्तत्यैव यज्ञन्देवेभ्योऽनुदिशति ।**

உரை.

வேள்வியை இடையருது செய்து கொண்டிருக்கின்றதைத் தேவர்கட்குக் கூறுதற் பொருட்டு, சமித்து முதலானவைகள் எழாக உபயோகப்படுத்துவதின் பயன் கூறப்படுகின்றது என்பது.

மந்திரம் :

**सप्तते अग्ने समिधस्सप्तजिह्वा इत्याह सप्तसप्त वै सप्तधाऽग्नेः प्रियास्तनुवस्ता एवावरुन्धे ।**

உரை.

சமித்துக்கள் முதலானவைகள் ஒவ்வொன்றுந் தனித்தனி எழு எழுவகைகளாயிருத்தல் வேண்டும். அது, அக்கினியின் பிரிய உடம்புகளே யறுத்துக் கொள்ளப்படுவதாம் என்பது.

மந்திரம் :

**पुनरूर्जा सहरय्येत्यभितः पुरोडाशमाहुती जुहोति यजमानमेवोर्जाचरय्या चोभयतः परिगृह्णाति ।**

உரை.

இரண்டாம் அநுவாகத்தில் விதித்த இரண்டு ஆகுதிகட்கும் மந்திரங்கள் கூறப்படுகின்றன.

மூன்றாவது ஆதானத்தில் ஓமங்களை விதிக்கின்றது,

மந்திரம் :

आदित्यावा अस्माल्लोकादमुं लोकमायन्तेऽमुष्मिं लोके व्यतृष्यन्त इमं लोकं पुनरभ्यवेत्याग्निमाधायैतान् होमान जुहवुस्त आर्ध्नुवन्ते सुवर्गं लोकमायन् यः पराचीनं पुनराधेयादग्निमादधीत स एतान् होमां जुहुयाद्याम्मेवादित्या ऋद्धिमार्ध्नुवन्तामे वर्ध्नोति ।

உரை.

ஆதித்தர்கள் ஆதான புநராதானங்களை அநுட்டித்து, அதனால் சுவர்க்கத்தை யடைந்து, அங்கு, செல்வம் போதியதன்றென எண்ணி, மண்ணுலகிற்கு வந்து, 'லேக:' என்பது முதலான மந்திரங்களால், ஹோமஞ்செய்து மிகுந்த செல்வங்களை யடைந்தனர். ஆதலின் புநராதானத்திற்கு முன்னர், அக்கினியை ஆதானஞ் செய்து, லேக: என்பது முதலான மந்திரங்களால் ஓமஞ் செய்தல் வேண்டும் என்பது.

நான்காவது அநுவாகம் முற்றிற்று.

---

## ஐந்தாவது அநுவாகம்.

விடயச் சுருக்கம்

पूर्वस्यामे रुपस्थानं उपप्रेत्यनुवाकतः ॥

இவ்வநுவாகத்தால், ஆகவனீயத் தீயை உபஸ்தானஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்
## ஐந்தாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல், பதினேழு பதங்களைக் கொண்டது.

---

அக்கினியை போற்று மந்திரங்கள்

उपप्रयन्तो अध्वरं मन्त्रं वोचेमाग्नये । आरे अस्मे च शृण्वते ।
अस्य प्रत्नामनुद्युतꣳ शुक्रन्दुदुहे अह्रयः । पयस्सहस्र सामृषिम् ।
अग्निर्मूर्धा दिवः ककुत्पतिः पृथिव्या अयम् । अपाꣳ रेताꣳसि जिन्वति ।

अयमिह प्रथमो धायि धातृभिर्होता यजिष्ठो अध्वरेष्वीड्यः । यमप्न-
वानो भृगवो विरुरुचुर्वनेषु चित्रं विभ्वं विशेविशे । उभावा
मिन्द्राग्नी आहुवध्यै ॥ १ ॥ उभाराधसस्सहमादयध्यै । उभादाता-
राविषाꣳ रयीणामुभावाजस्य सातये हुवे वाम् । अयन्ते योनिर्ऋत्वियो
यतो जातो अरोचथाः । तञ्जानन्नग्न आरोहाथानो वर्धया रयिम् ।
अग्न आयूꣳषि पवस आसुवोर्जमिषञ्च नः । आरे बाधस्व दुच्छुनाम् ।
अग्ने पवस्व स्वपा अस्मे वर्चस्सुवीर्यम् । दधत्पोषꣳ रयिम् ॥ २ ॥
मयि । अग्ने पावकरोचिषा मन्द्रया देवजिह्वया । आदेवान् वक्षिय-
क्षि च । सनः पावकदीदिवोऽग्ने देवाꣳ इहावह । उपयज्ञꣳ हविश्चनः ।
अग्निश्शुचिव्रततमश्शुचिर्विप्रश्शुचिः कविः । शुचीरोचत आहुतः ।
उदग्ने शुचयस्तव शुक्राभ्राजन्त ईरते । तव ज्योतीꣳष्यर्चयः । आयुर्दा
अग्नेऽस्यायुर्मे ॥ ३ ॥ देहि वर्चोदा अग्नेऽसि वर्चोमे देहि तनूपा
अग्नेऽसि तनुवं मे पाह्यग्ने यन्मे तनुवा ऊनन्तन्म आपृण चित्रावसो
स्वस्तिते पारमशीयेन्धानास्त्वा शतꣳ हिमाद्युमन्तस्समिधीमहि वय-
स्वन्तो वयस्कृतं यशस्वन्तो यशस्कृतꣳ सुवीरासो अदाभ्यम् । अग्ने
सपत्नदम्भनं वर्षिष्ठे अधिनाके । सन्त्वमग्ने सूर्यस्य वर्चसाऽगथास्स-
मृषीणाꣳस्तुतेन संप्रियेण धाम्ना । त्वमग्ने सूर्यवर्चा असि संमामा-
युषा वर्चसा प्रजया सृज ॥ ४ ॥

நான்கு அநுவாகங்களால், புநராதானம் முடிக்கப் பெற்றது. இனி, ஐந்தாவதுமுதல், பத்தாமநுவாக முற்பாதிவரை அக்கினியின் துதி கூறப் படுகின்றது.

---

முதல் மந்திரம்

**उपप्रयन्तो अध्वरं मन्त्रं वोचे माग्नये । आरे अस्मेच शृण्वते ।**

**உரை.**

வேள்வி கிடைக்கப் பெற்ற யாம், தூரத்திருப்பினும், அருளால், எமது சொல்லைக் கேட்கும் அக்கினியினுடைய களிப்பின் பொருட்டு மந்திரங்களைக் கூறுகின்றோம் என்பது.

நாடோறும், ஆகவனீயத்தீயில், இரண்டாவது ஹோமஞ்செய்து முடிந்தவுடன், வேள்வித்தலைவன் எழுந்து நின்று, ஆகவனீயத்திற்கு நேராய்ச்சிறிது திரும்பிக்கொண்டு, முதல் ஆறு மந்திரங்களால் ஆகவனீயத்தைப் போற்றுதல் வேண்டும்.

பிறகு, பூர்வபட்சத்தில், '**अग्नीषोमा विमꣳसुमे**' என்பது முதலான மந்திரத்தையும், அபரபட்சத்தில், '**उभावामिन्द्राग्नी**' என்பது முதலிய மந்திரத்தையும் எழாவதாகச் சேர்த்துக் கொள்ளுதல் வேண்டும்.

மற்றும், '**दधिक्राव्णो अकारिषं**' என்பது முதலிய மந்திரத்தையும் எட்டாவதாகச் சேர்த்துக் கொள்ளல் வேண்டும்.

பின்னர், '**ममाग्ने वर्चोविहवेषु**' என்பது முதலான நான்கு மந்திரங்களையுங் கூட்டிக் கொள்ளல் வேண்டும், இவ்வாற்றால் உபஸ்தானத்தில் மந்திரங்கள் பன்னிரண்டு என்பதை யுணர்க.

மற்றும், '**अग्न आयूꣳषि**' என்பது முதலான ஆறு மந்திரங்களால், வருடத்திற் கொருமுறை ஒருநாளில், அதாவது ஆதானஞ் செய்தநாளில் ஆகவனீயத்தைப் போற்றும்போது கூட்டிக் கொள்க. நாடோறுங் கூட்டிக் கொள்ளினுங் கொள்க.

பின்னர் '**आयुर्दा अग्ने**' என்பது முதலான மூன்று மந்திரங்களாலும் ஆகவனீயத்தைப் போற்றுதல் வேண்டும்.

மற்றும், '**इन्धानास्त्वा**' என்பது முதலிய மந்திரத்தாலும், '**अग्ने स्समिदसि**' என்பது முதலான மூன்று மந்திரங்களாலும், ஒவ்வொருதீயில் நான்கு நான்கு சமித்துக்களை வைத்து விட்டு, '**संत्वमग्ने**' என்பது முதலான மந்திரங்களால் மீண்டும் ஆகவனீயத்தைப் போற்றிக்கொண்டு **वयंसोमव्रते**' என்பது முதலிய மந்திரத்தால் முகத்தைத் துடைத்துக் கொள்ளல் வேண்டும்.

### இரண்டாம் மந்திரம்

**अस्य प्रत्नामनुद्युत॑ꣳ शुक्रन्दुदुह्रे अह्रयः । पयस्सहस्र सामृषिम् ।**

**உரை.**

நாணமற்ற இருத்துவிக்குக்கள், இவ்வக்கினியின், பழைமையாகிய அநுகூல ஒளியென்னும் பசுவில், வெண்ணிற முடையதும், பல் பொருளையளிப்பதும், கருமத்தை நடத்துவதுமாகிய சோதி யென்னும் பாலைக் கறக்கின்றார்கள் என்பது.

---

### மூன்றும் மந்திரம்

**अग्निर्मूर्धा दिवः ककुत्पतिः पृथिव्या अयम् । अपाꣳ रेताꣳसि जिन्वति ।**

**உரை.**

இவ்வக்கினி, வானுலகிகற்குத் தலைமையானது, மண்ணுலகைப் பாதுகாப்பது, நீரின் காரியமான தாவர சங்கமப் பொருள்களைக் களிப்பிக்கின்றது என்பது.

---

### நான்காம் மந்திரம்

**अयमिह प्रथमो धायि धातृभिर्होता यजिष्ठो अध्वरेष्वीड्यः । यमप्नवानो भृगवो विरुरुचुर्वनेषु चित्रं विभुवंविशेविशे ।**

**உரை.**

இவ்வக்கினி, இக்கருமத்தில் முக்கியமாக எங்களால் போற்றப்படுகின்றது. (எத்தன்மைய அக்கினியெனின் ?) தேவர்களை அழைப்பதும், மக்களை நோக்க வியப்பாய் ஆராதிப்பதும், வேள்விகளில் துதிக்கப் பெறுவதுமாம். மற்றும், இவ்வக்கினி அப்னவானர், பிருகு என்னுமுனிவர்களால், வனங்களிலுள்ள தமது ஆசிரமங்களில், மக்களின் நலத்தின் பொருட்டு, பல்வகை வேள்விகளின் ஆதாரமாந் தன்மை பற்றி பலவகையாய் வளர்க்கப்பற்றதுமாமென்க.

---

### ஐந்தாம் மந்திரம்

**उभावा मिन्द्राग्नी आहुवध्या उभाराधसस्सहमादयध्यै । उभादातारविषाꣳ रयीणामुभावाजस्य सातये हुवेवाम् ।**

**உரை.**

இந்திர அக்கினிகளே ! உங்களை, ஒருமைப்புடன் ஹோமத்தால் ஆராதிக்க விரும்புகின்றேன். மற்றும், உங்களிருவரையும், உணவுப் பொருளால் களிப்

பிக்க விரும்புகின்றேன். நீங்களிருவரும், தனத்தைக் கொடுக்கின்றவர்களா தலின் உணவுப் பொருளின் இலாபத்தின் பொருட்டு உங்களை யழைக்கின் றேன் என்பது.

இம் மந்திரத்திற்கு முதற் பிரபாடகத்திலும் உரை கூறப்பட்டிருக் கின்றது.



ஆறும் மந்திரம்

**अयन्ते योनिर्ऋत्वियो यतो जातो अरोचथाः । तञ्जानन्नग्न आरोहाथोनो वर्धया रयिम् ।**

உரை

அக்கினியே! ஆகவனீயம் உனது இடமாம், அதுவும், இருதுக்களைப் பற்றியதாம். இது இருதுவில் ஹோம முண்டாதலின் என்க. ஆகவனீயத் தலத்திற் றோன்றினமையின், அதையுணர்ந்து, அதாவது இது எமது பிறப்பிடம் என்று அதை உணர்ந்து கொண்டு, பின்னர், எமக்குத் தனத்தை வளர்ப்பாயாக் என்பது.

இது முதல் ஆறு மந்திரங்களால், வருடந்தோறும், அல்லது இடைய றாது அக்கினி போற்றப் பெறுகின்றது. இதற்கு, முன், பொருளுரைக்கப் பட்டது.

---

முதல் மந்திரம்.

**अग्न आयूꣳषि पवस आसुवोर्जमिषञ्चनः । आरे बाधस्व दुच्छुनाम् ।**

உரை.

அக்கினியே! நீ, எமது ஆயுட்களை குற்றமற்றவைகளாய்ச் செய்வாயாக. எமக்கு, இரசத்தையும், உணவுப் பொருளையுங் கொண்டுவருவாயாக. பகை வரின் படையைத் தூரத்தில் ஓட்டுவாயாக என்பது.

---

இரண்டாம் மந்திரம்.

**अग्ने पवस्व स्वपा अस्मे वर्चस्सुवीर्यम् । दधत्पोषꣳ रयिम्मयि ।**

உரை.

அக்கினியே! நற் கருமமுடைய நீ, பிரம ஒளியையும், பேராற்றலையும், எம்மிடத்துச் சோதிப்பாயாக. எவ்வாற்றாலெனின்? புஷ்டியையும், தனத்தை யும் எம்மிடத்தில் வைக்கும் வகையால் என்பது.

மூன்றும் மந்திரம்.

अग्ने पावकरोचिषा मन्द्रया देवजिह्वया। आदेवान् वक्षियक्षिच।

உரை.

பாவகமென்னும் அக்கினிதேவ! விளங்குவதும், களிப்பிப்பதுமாகிய உனது நாவால் தேவர்களை வரவழைப்பாயாக. வரவழைத்து ஆராதிப்பாயாக என்பது.

---

நான்காம் மந்திரம்.

सनः पावकदीदिवोऽग्ने देवा॑ इहाऽऽवह। उपयज्ञ॑ हविश्चनः।

உரை.

பாவகமென்னும் அக்கினியே! ஒளிர்கின்ற நீ, தேவர்களை, இங்குக் கொண்டு வந்து சேர்ப்பாயாக. எமது, வேள்வியையும், அவியையும் அடைவாயாக என்பது

---

ஐந்தாம் மந்திரம்

अग्निश्शुचिव्रततमश्शुचिर्विप्रश्शुचिः कविः। शुचीरोचत आहुतः।

உரை.

இவ்வக்கினி, மிகுந்த சுத்த விரதத்துடன் கூடியது, விப்பிராபிமானத்தால் புனிதமுமாம். வித்வத் அபிமானித்தாலும் பவித்திரமாம், எம்மாலும், யாண்டும் ஆகுதி செய்யப் பெற்று சுத்தமாய் ஒளிர்கின்றதுமாம் என்பது.

---

ஆறும் மந்திரம்

उदग्ने शुचयस्तव शुक्रा भ्राजन्त ईरते। तव ज्योती॑ष्यर्चयः।

உரை

அக்கினியே! புனிதங்களும், வெண்மைகளும், ஒளிர்கின்றவைகளுமான உனது கிரணங்கள் மேலெழும்புகின்றன. ஆராதிப்போர் உனது சோதிகளை யடைகின்றார்கள் என்பது.

---

மாலையிற் போற்றுதல்

மந்திரம்:

आयुर्दा अग्नेऽस्यायुर्मे देहि वर्चोदा अग्नेऽसिवर्चोमे देहि तनूपा अग्नेऽसितनुवंमे पाह्यग्ने यन्मे तनुवा ऊनन्तन्म आपृण।

உரை.

அக்கினியே! நீ ஆயுளைக் கொடுக்கின்றோனு யிருக்கினறாய் ஆதலின், எனக்கு ஆயுளைக்கொடுப்பயாக. அழகைக் கொடுப்போனு யிருக்கின்றாய் ஆதலின் எனக்கு அழகைக் கொடுப்பயாக. உடம்பைப் பாதுகாப்போனுயிருக்கின்றாய் ஆதலின் எனது உடம்பைப் பாதுகாப்பயாக. அதாவது எனது உடம்பின் குறைவை நிறைவாக்குவாயாக என்பது.

---

மற்றொரு எசுர் மந்திரம்

**चित्रावसो स्वस्तिते पारमशीय ।**

உரை.

இரவே! எனது கரும முடிவை நலமாய் அடைகின்றேன் என்பது.

---

அங்குள்ள மந்திர பாடம்

மந்திரம் :

**इन्धानास्त्वा शतꣳहिमाद्युमन्तस्समिधीमहि वयस्वन्तो वयस्कृतं यशस्वन्तो यशस्कृतꣳसुवीरासो अदाभ्यम् । अग्ने सपत्नदम्भनं वर्षिष्ठे अधिनाके ।**

உரை.

அக்கினியே! அன்னத்திற்குத் தலைவனும், கீர்த்தியைக் கொடுக்கின்றவனும், எவராலேனும் தாழ்த்தப்படாதவனும், உறுதியான சுவர்க்கத்தில், பகைவரை யொழிக்கின்றவனுமாகிய உன்னை, உணவுப் பொருளையுடையவர்களும், கீர்த்தியுடையவர்களும், நற்புத்திரன் முதலானோர்களை யுடையவர்களுமான யாம், சமித்துக்களால் நன்கு வளர்க்கின்றவர்களாய், நூற்றுக் கணக்கான ஹேமந்தரிது (பனி)க் காலங்களால் உபலட்சிதமான பல வருடங்கள் கீர்த்தியுடன் உலகில் வாழ்வோமாக என்பது.

---

அநுவாகசேட மந்திரம்

பூர்வ அக்கினியை இவ்வநுவாகத்தாற் போற்றல்·

மந்திரம் :

**सन्त्वमग्ने सूर्यस्य वर्चसाऽगथास्समृषीणाꣳस्तुतेनसंप्रियेण धाम्ना । त्वमग्ने सूर्यवर्चा असि संमामायुषा वर्चसा प्रजयासृज ।**

உரை.

அக்கினியே! நீ, இரவியின் ஒளியுடன் இனிது கூடிக் கொண்டிருக்கின்றாய். இருடிகளின் துதிகளுடனுங் கூடியிருக்கின்றாய். பிரியமாகிய ஆகவனீய

போற்றுதல்)

மென்னுங் காலத்திலுங் கூடியிருக்கின்றாய். அக்கினியே! நீ, இரவியின் ஒளியா யிருக்கின்றாய். ஆதலின் என்னை ஆயுக்களுடன் கூடியவனுகச் செய்வாயாக என்பது.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது

---

## ஆறுவது அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

संप्रेक्ष्य गृहानम्भः स्थ गोष्ठमुपतिष्ठते ।
रेवान्तराऽग्नी जपति संहिता वत्सकं स्पृशेत् ॥ १ ॥
उपत्वा पश्चिमं वह्निं षण्मन्त्रैरुपतिष्ठते ।
ऊर्जा प्रेक्ष्य गृहांस्तस्स चतुर्भिः पूर्वपावकम्
उपस्थायाग्न इत्यस्मात्पश्चिमं चोपतिष्ठते ॥ २ ॥

வீட்டைப் பார்த்தல், பசுக்களைக் கட்டுமிடத்தையும் பார்த்தல், இரண்டு அக்கினிகளுக்கும் நடுவில் நின்று செபித்தல், ஒரு கன்றைத் தொடுதல், மூன்று காயத்திரிகளாலும் நான்கு துவிபதைகளாலும் காருகபத்தியத்தைத் துதித்தல், மீண்டும் வீட்டைப் பார்த்தல், ஆகவனீயத்தைத் துதித்தல், மீண்டுங் காருகபத்தியத்தைத் துதி செய்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## ஆறுவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிகு மேல் இருபத்தொன்பது பதங்களை கொண்டது.

---

காருகபத்திய ஆகவனீயங்களைப் போற்று மந்திரங்கள்.

संपंश्यामि प्रजा अहमिडं प्रजसो मानवीः । सर्वा भवन्तु नो गृहे । अंभस्स्थां भोंवो भक्षीयमहंस्स्थमहोंवो भक्षीय सहंस्स्थ सहोंवो भक्षीयोर्जस्स्थोर्जंवो भक्षीयरेवंतीरमंध्वमस्मिंलोकेंऽस्मिन्गोष्ठेंऽस्मिन् क्षंयेऽस्मिन् योनांविहैवस्तेतोमाऽपंगात बह्वीमें भूयास्त ॥१॥ सꣳहिताऽसि विश्वरूपी रामोर्जा विशागौंपत्ये नाऽऽरायस्पोषेंण सहस्रपोषंवंः पुष्यासं

मयिं वो रायंश्श्रयन्ताम् । उपंत्वाऽग्ने दिवे दिवे दोषांवस्तर्धिया वयम् । नमो भरंन्त एमंसि । राजंन्तमध्वराणांङ्गोपामृतस्य दीदिंविम् । वर्धंमानꣳ स्वेदमें । सनंः पितेवं सूनवेऽग्नें सूपायनो भंव । सचंस्वानस्स्वस्तयें । अग्नें ॥ २ ॥ त्वन्नो अन्तंमः । उतत्राता शिवो भंववरूथ्यंः । तन्त्वांशोचिष्ठ दीदिवः । सुम्नायंनूनमींमहे सखिंभ्यः । वसुंरग्निर्वसुंश्रवाः । अच्छांनक्षिद्युमत्तंमोरयिन्दाः । ऊर्जावंः पश्यामियूर्जा मांपश्यत रायस्पोषेणवः पश्यामि रायस्पोषेण मापश्यतेडांस्स्थमधुकृतंस्स्योनामाऽऽविंशते रामदंः । सहस्रपोषं वंः पुष्यासम् ॥ ३ ॥ मयिं वो रायंश्श्रयन्ताम् । तत्संवितुर्वरेण्यं भर्गों देवस्यं धीमहि । धियो योनंः प्रचोदयांत् । सोमानꣳ स्वरंणंकृणु हि ब्रंह्मणस्पते । कक्षीवंन्तं य औंशिजम् । कदाचनस्तरीरंसिनेन्द्रंसश्चसि दाशुषें । उपोपेन्नु मंघवन्भूय इन्नुते दानंन्देवस्यं पृच्यते । परिंत्वाऽग्ने पुरं वयं विप्रꣳ सहस्य धीमहि । धृषद्वंर्णन्दिवे दिंवे भेत्तारं भङ्गुरावंतः । अग्ने गृहपतेसुगृहपतिरहन्त्वयां गृहपंतिना भूयासꣳसु गृहपतिर्मयात्वं गृहपंतिना भूयाश्शतꣳ हिमास्ता माशिषमाशांसे तन्तवे ज्योतिंष्मतीन्तामाशिष माशांसेऽमुष्मैज्योतिंष्मतीम् ॥ ४ ॥

*இவ்வாறும் அநுவாகம், மீண்டும், காருகபத்தியம், ஆகவனீயத்தைத் துதிக்கின்றது.*

—⊢—

1. வீட்டைப் போற்றல்

மந்திரம் :

संपश्यामि प्रजा अहमिड प्रजसो मानवीः । सर्वा भवन्तुनो गृहे ।

போற்றுதல்)

உரை.

யான், மக்கட் டோற்றத்தையும், பசுத் தோற்றத்தையும் நோக்குகின் றேன். மூலத்தில் 'இட' என்பது கன்று ஆதலின், மக்களும், பசுவின் கன்றுகளும் எமது வீட்டில் இனிதிருக்குக என்பது.

---

2. பசுக்களைப் பார்த்தல்

மந்திரம் :

**अंभस्स्थांभोवो भक्षीय महस्स्थमहोवो भक्षीय सहस्स्थ सहोवो भक्षीयोर्ज-**
**स्स्थोर्जं वो भक्षीय ।**

உரை.

பருகிய நீரின் சாரமும், போற்றத்தக்கதும், வன்மையளிப்பதும், மிகுந்த இன்சுவை யுடையதுமாகிய பால் முதலானவற்றின் காரணமாந் தன்மையால் பசுக்காள் ? நீங்கள் அவ் வடிவுகளா யிருக்கின்றீர்கள். ஆதலின், உங்களுடைய பால் முதலானவைகள், யாங்கள் அருந்துதற்குரியவைகளாகுக என்பது.

---

இரண்டு அக்கினிகளுக்கும் நடுவில் நின்றுகொண்டு செபித்தல்

மந்திரம் :

**रेवतीरमध्वमस्मिं लोकेऽस्मिन्गोष्ठेऽस्मिन् क्षयेऽस्मिन् योना विहैवस्तेतो-**
**माऽपगात बह्वीर्मे भूयास्त ।**

உரை.

பசுக்களே ! நீங்கள், சாலையிலும், வீட்டிலும், மற்றுஞ் சில விடத்திலும் விளையாடுவீர்களாக. இந் நிலயத்திலேயே எப்போதும் இருப்பீர்களாக. இவ்விடத்தை விட்டு வெளியிற் செல்லாதீர்கள். என்பொருட்டு, கன்றுகளை தொடர்பாய் பல்வகையாய்ப் பெருக்குவீர்களாக என்பது.

---

கன்றைத் தோடுதல்

மந்திரம் :

**सꣳहिताऽसि विश्वरूपी रामोर्जा विशागौपत्ये नारायस्पोषेण सहस्रपोषं**
**वः पुष्यासं मयि वो रायश्श्रयन्ताम् ।**

உரை.

கன்றே ! நீ, மாதாவுடன் கூடி யிருக்கின்றாய். அன்பால் ஒரு முலையை விட்டு மற்றொரு முலையிற்றூண்டி பால் உண்ணுதலால் பல கன்றுகள்போல் தோன்றுகின்றனை. அத்தகைய நீ, பால் முதலான நிமித்தங்களால் என்னை

யடைவாயாக. பல்வகைப் பசுக்கட்குத் தலைவனாகிய எமது தலைவனை முன்னிட்டு எம்மிடம் வருவாயாக. தனத்தை நிலை நிறுத்துவதற்கு வருவாயாக. ஆயிரக்கணக்காய் வளருமாறு உன்னைப் போஷிக்கின்றேன். எம்பால், உனது பால் முதலான தனங்கள் இருப்பனவாக என்பது.

---

மேல்வரும் ஆறு காயத்திரி மந்திரங்களாலும் காருகபத்தியத்தைத் துதித்தல்.

முதலாவது காயத்திரி

மந்திரம் :

**उप त्वाऽग्ने दिवे दिवे दोषावस्तर्धिया वयम्। नमो भरन्त एमसि।**

உரை.

அக்கினியே! உன்னை, நாடோறும் காலை மாலை வணங்குகின்றவர்களாய் உன்னையே அடைகின்றோம் என்பது.

---

இரண்டாங் காயத்திரி

மந்திரம் :

**राजन्तमध्वराणां गोपामृतस्य दीदिविम्। वर्धमानं स्वे दमे**

உரை

வேள்விகட்கு வேந்தனும், பசுக்களைப் பாதுகாப்பவனும், உண்மையாய் விளங்குகின்றவனும், அக்கினி ஹோத்திரமாகிய தனது வீட்டில் அவிகளால் வளர்கின்றவனுமாகிய அக்கினிதேவனை அடைகின்றோம் என்று, முன் மந்திரத்துடன் கூட்டுக என்பது,

---

மூன்றாங் காயத்திரி

மந்திரம் :

**स नः पितेव सूनवेऽग्ने सूपायनो भव। सचस्वा नः स्वस्तये।**

உரை.

அக்கினியே! அத்தகைய நீ, எமக்கு, எளிதிற் பெறக் கூடியனாவாய். புதல்வன் பொருட்டு தந்தை உடனிகழ்ச்சியா யிருப்பது போன்று, எமது நலத்தின் பொருட்டு ஒற்றுமைச் சம்பந்தத்தோ டிருப்பாயாக என்பது.

---

முதலாவது துவிபதம்

மந்திரம் :

**अग्ने त्वन्नो अन्तमः। उत त्राता शिवो भव वरूथ्यः।**

உரை

அக்கினியே! நீ, எமக்கு, மிக அருகிலிருப்பாயாக. மற்றும், பரிபாலிப்பவனும், மங்கல வடிவனுமாயிருந்து நாடோறும் வீட்டுக் கருகில் விளங்குவாயாக என்பது.

———

இரண்டாம் துவிபதம்.

மந்திரம்:

तन्त्वाशोचिष्ठ दीदिवः । सुम्नाय नूनमीमहे सखिभ्यः ।

உரை.

மிகப் புநிதமுடையதும், ஒளிர்கின்றதுமாகிய அக்கினியே! எமது நலத்தின்பொருட்டு, கூறிப்போந்த குணமுடைய உன்னை யடைகின்றோம் என்பது.

———

மூன்றாவது துவிபதம்.

மந்திரம்:

वसुरग्निर्वसुश्रवाः । अच्छानक्षिद्युमत्तमो रयिन्दाः ।

உரை.

தனமுடையது இவ்வக்கினி என்று, உருத்திரன் முதலான தேவர்களாற் புகழப்படும் அக்கினியே! நீ, எம்மையடைந்து எமக்குத் தனத்தைக் கொடுப்பாயாக. 'सनोबोधि श्रुधीहवं' என்றதற்றொடக்கத்து மந்திரம் நான்காவதாம் அது வேறு சாகையிலுள்ளது.

———

வீட்டைப் பார்த்தல்.

மந்திரம்: மந்திர பாடம்

ऊर्जांवः पश्याम्यूर्जा मापश्यत रायस्पोषेणवः पश्यामि रायस्पोषेण मापश्यतेडास्स्थ मधुकृतस्स्योनामाऽऽविशते रामदः । सहस्रपोषं वः पुष्यासम्मयि वो रायश्श्रयन्ताम् ।

உரை.

வீட்டிலுள்ள பசுகாள்! பால் முதலிய இரத்தினத்தின் பொருட்டும், தனம் மிகுதிப்படுதற்பொருட்டும் உங்களை நான் பார்க்கின்றேன். அங்ஙனமே நீங்களும் என்னை நோக்குவீர்களாக. பசுக்களே! நீங்கள், இனிய நெய்யை யுண்டாக்குகின்றவர்களா யிருங்கள். மற்றும், நலஞ்செய்கின்றவர்களும், உணவுப் பொருளை யுடையவர்களும், களிப்பிக்கின்றவர்களுமாய் என்னை யடைவீர்

களாக. ஆயிரக்கணக்காய்ப் பெருகுமாறு உங்களை வளர்க்கின்றேன். உங்களுடைய நெய் முதலான தனங்கள் எம்மை யடைக என்பது.

---

## ஆகவனீயத் துதி.

### முதலாவது

மந்திரம் :

**तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि। धियो योनः प्रचोदयात्।**

உரை.

எந்தச் சவிதாதேவன் எமது புத்தியைச் செலுத்துகின்றானோ, அந்தச் சவிதா தேவனுடைய, போற்றத்தக்க ஒளியைத் தியானிக்கின்றோம் என்பது.

---

### இரண்டாவது

மந்திரம் :

**सोमानं स्वरणं कृणु हि ब्रह्मणस्पते। कक्षीवन्तं य औशिजम्।**

உரை.

பெருங் கருமத்திற்கு இறைவனாகிய அக்கினியே! நீ, கக்ஷீவந்த இருடியை கருமத்தைச் செய்பவனாகச் செய்தனை. அத்தகைய நீ, என்னையும், சோம யாகங்கட்கு ஆசிரியனாகச் செய்வாயாக என்பது.

'मित्रस्य चर्षणीधृतः' 'प्रसमित्र' என்றற்றொடக்கத்து மூன்றாவது நான்காவது மந்திரங்கள் வேறிடத்தில் இருக்கின்றன.

---

### ஐந்தாவது

மந்திரம் :

**कदाचनस्तरीरसि नेन्द्रसश्चसि दाशुषे। उपोपेन्नुमघवन्भूय इन्नुते दानंदेवस्य पृच्यते।**

உரை.

சிறந்த செல்வமுடைய அக்கினியே! நீ, ஓர் காலும், துன்புறுத்துவோனாகின்றிலை. மற்றோ, அவியளிக்கும் வேள்வித்தலைவனுக்கு, மிக அருகிலேயே ஒற்றுமையா யிருக்கின்றாய். இந்திரனையொத்த அக்கினியே! தேவனாகிய உனது தானம் மீண்டும், எம்மால் விரும்பப்படுகின்றது என்பது.

'कदाचनप्रयुच्छसि' என்றற் றொடக்கத்து மந்திரம் ஆறாவதாம் அது வேறிடத்திலுள்ளது.

போற்றுதல்)

ஏழாவது.

மந்திரம் :

परित्वाऽग्ने पुरं वयं विप्रꣳसहस्य धीमहि । धृषद्वर्णन्दिवे दिवे भेत्तारं भंगुरावतः ।

உரை.

ஆற்றலுடைய அக்கினியே! வேண்டியவற்றை நிறையக் கொடுப்பவனும், விப்ரனும், பகைவர் பயப்படும் வடிவுடையவனும், துன்புறுத்தும் அரக்கரைக் காய்கின்றவனுமாகிய உன்னை, யாம், நாடோறும், நாற்புறத்துந் தாங்குகின்றோம் என்பது.

---

காருகபத்தியத்தைத் துதித்தல்.

அக்கினிபாவமானங்கள் வேறிடத்தில் உள்ளன.

மந்திரம் :

अग्ने गृहपतेसुगृहपतिरहन्त्वया गृहपतिना भूयासꣳसु गृहतिर्मयात्वं गृहपतिना भूयाश्शतꣳहि मास्ता माशिषमाशासे तन्तवे ज्योतिष्मतीन्तामाशिष माशासेऽमुष्मैज्योतिष्मतीम् ।

உரை.

வீட்டைப் பரிபாலிக்கும் அக்கினியே! உன்னால் அருள்பெற்ற யான், அழகிய வீட்டின் தலைவனாவேனாக. அங்ஙனமே, வீட்டின்றலைவனாகிய என்னால் ஆராதிக்கப்பெற்ற நீ வீட்டிற்கு இறைவனாவாயாக. (எதுகாலவரையெனின்?) நூறு வருடம்வரை யென்க. யான், தோற்றும் புதல்வர்களின் தொடர்பின் பொருட்டு, ஆயுள், ஆரோக்கிய ஐசுவரியப் பெருக்குவடிவ ஆசீர்வாதத்தை விரும்புகின்றேன். உண்டாகிய தேவதத்தன் முதலான பெயருடையவன் பொருட்டும் விரும்புகின்றேன் என மேலே கூட்டுக என்பது.

ஆறுமநுவாகம் முடிந்தது

---

முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

ஏழாவது அநுவாகம்

ஆறு பஞ்சாதிக்குமேல், பதினுறு பதங்களைக் கொண்டது

---

ஐந்தாம் அநுவாக மந்திரங்களின் உரை.

अयंज्ञोवा एषयोंऽसामोपंप्रयन्तों अध्वरमित्याहस्तोमंमेवास्मैं

युनक्त्युपेत्याह प्रजावै पशव उपेमं लोकं प्रजामेव पशूनिमं लोकमुपे-

त्यस्य प्रत्नामनुद्युतमित्याह सुवर्गो वै लोकः प्रत्नस्सुवर्गमेव लोकं समारोहत्यग्निर्मूर्धा दिवः ककुदित्याह मूर्धानम् ॥ १ ॥ एवैनं समानानांकरोत्यथो देवलोका देवमनुष्यलोके प्रतितिष्ठत्ययमिह प्रथमो धायि धातृभिरित्याह मुख्यमेवैनंकरोत्युभावामिन्द्राग्नी आहुवध्या इत्याहौजो बलमेवावरुन्धेऽयन्ते योनिर्ऋत्विय इत्याह पशवो वै रयिः पशूनेवावरुन्धे षड्भिरुपतिष्ठते षड्वै ॥ २ ॥ ऋतवं ऋतुष्वेव प्रतितिष्ठति षड्भिरुत्तराभिरुपतिष्ठते द्वादश संपद्यन्ते द्वादशमासास्संवत्सरस्संवत्सर एव प्रतितिष्ठति यथा वै पुरुषोऽश्वो गौर्जीर्यत्येव मग्निराहितो जीर्यति संवत्सरस्य परस्तादाग्निपावमानीभिरुपतिष्ठते पुनर्नवमेवैनमजरंकरोत्यथो पुनात्येवोपतिष्ठते योग एवास्यैष उपतिष्ठते ॥३॥ दम एवास्यैष उपतिष्ठते याच्ञैवास्यैषोपतिष्ठते यथा पापीयाञ्छ्रेयस आहृत्य नमस्यति तादृगेव तदायुर्दा अग्नेऽस्यायुर्मे देहीत्याहायुर्दा ह्येष वर्चोदा अग्नेऽसि वर्चो मे देहीत्याह वर्चोदा ह्येष तनूपा अग्नेऽसि तनुवं मे पाहीत्याह ॥ ४ ॥ तनूपा ह्येषोऽग्ने यन्मे तनुवा ऊनन्तन्म आपृणेत्याह यन्मे प्रजायै पशूना मूनन्तन्म आपूरयेति वावै तदाह चित्रावसो स्वस्तिते पारमशीयेत्याह रात्रिर्वै चित्रावसुरव्युष्ट्यैवा एतस्यै पुरा ब्राह्मणा अभैषुर्व्युष्टिमेवावरुन्ध इन्धानास्त्वाशतम् ॥ ५ ॥ हिमा इत्याह शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्येवेन्द्रिये प्रतितिष्ठत्येषा वै सूर्मीकर्णकावत्येतया ह स्म देवा असुराणां शततर्हांस्तृंहन्ति यदेतया समिधमादधाति वज्रमेवै तच्छतघ्नीं यजमानो भ्रातृव्याय

प्रहरन्तिस्त्वा अश्वं शकारङ्ं सन्त्वमग्ने सूर्यस्य वर्चसाऽगथा इत्यां-
हैतत्त्वमसीदमहं भूयासमिति वावै तदाह त्वमग्ने सूर्यवर्चा असी-
त्याहाशिषमेवैतामाशास्ते ॥ ६ ॥

ஏழாம் அநுவாகத்தில், ஐந்தாம் அநுவாகத்திற் கூறின மந்திரங்கட்கு உரை கூறப்படுகின்றது. 'உபப்ர' என்பது முதலான மந்திர மஞ்சரிகளால், திரிவிருத் (மும் மூன்று முறை திருப்பல்) பஞ்சாதச (பதினைந்து முறை திருப்பல்) முதலான வேறுபாட்டால், அக்கினி ஹோத்திரத்திலும், ஸ்தோம (துதிகளின்) சம்பந்தம் உபசாரமாய்க் கூறப்படுகின்றது.

---

மந்திரம் :

अयज्ञोवा एषयोऽसामोपप्रयन्तो अध्वरमित्याहस्तोममेवास्मै युनक्ति ।

உரை.

சாமப்பாடல் இலாதது வேள்வியன்று, இருக்கு வேறுபாட்டாலும், ஆவிருத்தி (மறித்து மறித்துக் கூறல்) வேறுபாட்டாலும், சாமப்பாடல்களின் கூட்டங்களாலும் ஸ்தோமம் துதி என்பன உண்டாகின்றன. அதுவும், இவ்வக்கினி ஹோத்திரத்தில், மந்திரங்களின் கூட்டத்தால் தேடப்படுகின்றது என்பது.

---

'உப' என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்டதை விளக்குகின்றது,

மந்திரம் :

उपे याह प्रजावै पशव उपेमं लोकं प्रजामेव पशूनिमं लोकमुपैति ।

உரை.

மக்களும், பசுக்களும், மண்ணுலகை யடைகின்றனர். வேள்வித்தலைவனும், 'உப' என்னுஞ் சொல்லின் வலியால், மக்களையும், பசுக்களையுமடைந்து அவைகளுடன் பூலோகத்தை யடைகின்றான் என்பது.

---

'ப்ரத்ன' என்பதின் பொருள் கூறப்படுகின்றது.

மந்திரம் :

अस्य प्रत्नामनुद्युतमित्याह सुवर्गोवै लोकः प्रत्नस्सुवर्गमेव लोकꣳसमा-
रोहति ।

உரை.

சுவர்க்கலோகம் பழைமையானதால், 'ப்ரத்ன' என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்டமையால், அச் சொல்லானே சுவர்க்கத்திலேறல் உண்டாகிறது என்பது.

---

'மூர்த்த' பிருதிவி என்னுஞ் சொற்களால், குறிப்பிட்டதை விளக்குகின்றது,

**மந்திரம் :**

**अग्निर्मूर्धा दिवः ककुदित्याह मूर्धानमेवैनꣳ समानानां करोत्यथो देवलोकादेव मनुष्यलोके प्रतितिष्ठति ।**

உரை.

சிறந்த இவ்வேள்வித்தலைவனை, ஒத்த சாதியார்களுக்குள் தலைவனாக வைக்கின்றது. மற்றும், தேவலோகத்திலிருந்து வந்து மனித வுலகத்திலேயே புகழுடையவனாகின்றான் என்பது.

---

'பிரதமம்' என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்டதை விளக்குகின்றது.

**மந்திரம் :**

**अयमिह प्रथमो धायि धातृभिरित्याह मुख्यमेवैनं करोति ।**

உரை.

இதனால் முக்கியனாக இவனைச் செய்கின்றது என்பதாம்.

---

இந்திரன் வன்மையன் யான் என்னும் அபிமானியாதலின், அக்கினி, ஒளியுடையேன் யான் என்னுமபிமான முடையதாதலின் இரண்டு சொல்லாலும் இரண்டு மடையப்படுகின்றன என்பதைக் குறிப்பிடுகின்றது,

**மந்திரம் :**

**उभावामिन्द्राग्नी आहुवध्या इत्याहौजो बलमेवावरुन्धे ।**

உரை.

வீரியத்தையும் பலத்தையும் அடைகின்றான் என்பது.

---

'ரயி' என்னும், பதத்தின் உரை கூறுகிறது,

**மந்திரம் :**

**अयन्ते योनिर्ऋत्विय इत्याह पशवो वै रयिः पशूनेवावरुन्धे ।**

உரை.

'அயந்தே' என்பது முதலியதால், பசுக்களை அடைகின்றான் என்பது.

போற்றுதல்)

முற்கூறிய இரண்டு ஆறுகளாலும், நாடோறுந் துதியை விதிக்கின்றது:

மந்திரம் :

**षड्भिरुपतिष्ठते षड्वाऋतव ऋतुष्वेव प्रतितिष्ठति षड्भिरुत्तराभि रुपति- ष्ठते द्वादश मासास्संवत्सरस्संवत्सरएव प्रतितिष्ठति ।**

உரை.

முதல் ஆறல் துதிக்கின்றவன் இருதுக்கள் ஆறு ஆதலின் இருதுக்களில் நிலக்கின்றான். பின் ஆறல் துதிக்கின்றவன், இரண்டுஞ் சேர்ந்து பன்னிரண்டாதலின் மாதங்கள் பன்னிரண்டு கொண்ட வருடத்தில் நிலக்கின்றான் என்பது.

---

முதல் ஆறைப்போல் இரண்டாவது ஆறிலும் உபஸ்தானம் (துதி) வந்தவிடத்து கால விசேடத்தை விதிக்கின்றது.

மந்திரம் :

**यथावै पुरुषोश्वोगौर्जीर्यत्येवमग्निराहि तो जीर्यति संवत्सरस्य परस्ता दाग्नि पावमानीभिरुपतिष्ठते पुनर्न वमे वैनमजरंकरो त्यथो पुनात्येव ।**

உரை.

குதிரை, கோக்கள் கிழத்தன்மையடைவதுபோல் மனிதன், கிழத்தன்மையடைகின்றான். ஆதலின், வருடத்திற்கு மேலும் அக்கினி பவமானர்கள் முதலானோர்களின் துதிகளால் போற்றுகின்றான். அதனல், அக்கினியும் பவமான தேவதையும் இவனைப் புநிதமாக்கி புதிய உடம்புடையவனைச் செய்கின்றார்கள் என்பது.

ஈண்டு 'உபப்ரயந்த' என்றற் றொடக்கத்தியது முதலாறும், அக்ன ஆயூம்ஷி என்பது முதலியன பின்னாறும்.

---

விதித்த துதியை நான்கு வகையாயெடுத்துப் புகழ்கின்றது,

மந்திரம் :

**उपतिष्ठतेयोग एवा स्यैष उपतिष्ठते दमएवास्यैष उपतिष्ठते याच्ञै वास्यैष उपतिष्ठते यथापापीयान् च्छ्रेयस आहृत्य नमस्यति तादृगेवतत् ।**

உரை.

அக்கினிக்கும் வேள்வித் தலைவனுக்கும் அருளல் அருள் பெறல் சம்பந்தமாம். சுடுதல்முதலான துன்பம்போக்கல்தமமாம். தனமுதலியவற்றை யாசித்தல் இரத்தலாம், வறியோன், யாதானுமொருபொருளை கையிலெடுத்துக்

கொண்டு சென்று தனமுடையானுக்கு வணங்குகின்றான் அத்தன்மையது இத் துதியாம். 'அயமிஹ' என்பது முதலியதால் சம்பந்தமும், ஆரேபாதஸ்வ, என்பதால் துன்பம் போக்கலும், 'அதாநோவர்த்தயா ரயிம்' என்பதால் இரத்தலும், 'மந்திரம் வோசே' என்பதால் கையிற் பொருள் கொண்டுபோத லுங் கூறப்பட்டன.

---

மூன்று எசுர்கட்கும் வெளிப்படையான பொருளைக் காட்டுகின்றது,

மந்திரம் :

**आयुर्दा अग्ने स्यायुर्मे देहीत्याहाऽऽयुर्दा ह्येष वर्चोदा अग्नेसि वर्चो मे देहीत्याह वर्चोदाह्येष तनूपा अग्नेसि तनुवंमेपाहीत्यह तनूपाह्येषः ।**

உரை.

'ஆயுர்தா' என்பது முதலியவைகளால், இவ்வக்கினி, ஆயுளைக் கொடுப் பதும், அழகைக் கொடுப்பதும், உடம்பைப் பாதுகாப்பதுமாம் என்கின்றது.

---

தநு, என்னுஞ் சொல்லால், பிரசைகள் (மக்கள்) பசுக்கள் உபலக்ஷிதங்கள் என்னுங் கருத்துக்கொண்டு உரை கூறப்படுகிறது,

மந்திரம் :

**अग्नेयन्मे तनुवा ऊनं तन्म आपृणेत्याह यन्मे प्रजायै पशूनामूनं तन्म आपूरयेति वावैतदाह ।**

உரை.

'அக்னே யந்மே' என்பது முதலியது, எனது பிரசைகளின் குறைவை யும், பசுக்களின் குறைவையும் நிறைவாக்குவாயாக என்கின்றது.

---

சித்திராவசு, என்னுஞ் சொல்லின் பொருளும், வாக்கியத்தின் கருத்துங் கூறப் படுகின்றது,

மந்திரம் :

**चित्रावसो स्वस्ति ते पारमशीयेत्याह रात्रिर्वै चित्रा वसुरव्युष्ट्यैवा एतस्यै पुराब्राह्मणा अभैषुर्व्युष्टि मेवावरुन्धे ।**

உரை.

நக்ஷத்திரம் முதலானவைகள் இரவில் நன்கு விளங்கப்படுதலின் இரவு சித்திராவசுவெனப்பட்டது. அவ்யுஷ்டி = காலைப்போதின்முடிவு. பனிக்காலங் களில் இரவு நெடும் போதாதலின் காலைப்போது வாராதெனை ஒருகால் பிரா மணம் பயமுற்றது; ஆகையால், 'பாரமசீய' என்னும், பிரார்த்தனையால் காலைப்போது பெறப்பட்டது என்பது.

போற்றுதல்)

நூறு என்னும் எண்ணைப் புகழ்தல்.

மந்திரம் :

**इन्धानास्त्वाशत॑ हिमाइत्याह शतायुः पुरुषश्शतेन्द्रिय आयुष्ये वेन्द्रिये प्रतितिष्ठति ।**

உரை.

'நூற்றுக் கணக்காக உன்னை வளர்க்கின்றான்' என்பது, ஒருவனுக்கு வயது நூறும் இந்திரியமும் (விருத்திபேதங்களால்) நூறும் ஆயுட்களால் இந்திரியங்களில் நிலைக்கின்றான் என்கின்றது. இதனுரை, முன் கூறப்பட்டது ஆண்டுக் காண்க.

இம் மந்திரத்தின் துதியையும், சமித் ஆதானத்தையும், சூத்திரர்காரரும் இரண்டு விநியோகங்களாற் கூறியுள்ளார் விரிவை ஆண்டுக்காண்க. இங்கு இதனால் நான்கு சமித்துக்களை வைத்தலாம்.

---

அந்த, சமித் ஆதானத்தின் அங்கமே விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

**एषावै सूर्मी कर्णकावत्येतया हस्मवै देवा असुराणा॑ शततर्हा॑ स्तृ॑ हन्ति यदेतया समिधमादधाति वज्रमेव तच्छतघ्नीं यजमानो भ्रातृव्याय प्रहरतिस्तृत्या अच्छंबट्कारम् ।**

உரை

எரிகின்ற இருப்புத் தூண் சூர்மி. அதுவும், துளைகளையுடையதாய் உள்ளெரிந்து கொண்டிருப்பதாம். அதை யொத்தது இந்த இருக்கு, ஒரு அடியால் நூற்றுக் கணக்கானவர்களைக் கொல்கின்றவன் சூரன். இந்த இருக்கால், தேவர்கள் அசுரர்களைக் கொல்லுகின்றனர். இந்தச் சமித்து ஆதானத்தால், நூற்றைக் கொல்லும் இந்த இருக்கு மந்திரத்தால் இதை வச்சிரமாகச் செய்து பகைவரைச் கொல்லும்படி புடைக்கின்றனர். 'அச்சம்பட்காரம், என்பது தனக்குக் கேடில்லாமல் என்றபடி. ஸ்திருத்யை = விரிவால் என்பது பொருள்.

---

'சம்த்வம்' என்பதன் பாதியால் அக்கினியின் குணங்களைக் கூறல் தனக்கும் அதை வேண்டுதற் பொருட்டென்கின்றது,

மந்திரம் :

**सन्त्वमग्ने सूर्यस्य वर्चसाऽऽगथा इत्या है तत्वमसीदमहं भूयास मिति वद्वैतदाह ।**

உரை.

சம்த்வம், என்பது முதலியது, நீ இத் தன்மையனு யிருக்கின்ருய். யானும் இவ்வாறு ஆவேனுக என்பது.

---

இரண்டாம் பாதியால், 'சம்மாமாயுஷா' என்னும் பிரார்த்தனையை விளக்குகின்றது,

மந்திரம் :

त्वमग्ने सूर्यवर्चा असीत्याहाशिष मेवै तामाशास्ते ।

உரை.

'த்வமக்னே' என்பது முதலியது, ஆசிர்வாதத்தை விரும்புகின்ருன் என்கின்றது.

ஏழாம் அநுவாகம் முற்றிற்று.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்கு மேல் இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

இது ஆருமநுவாக மந்திர உரையாம்.

संपश्यामि प्रजा अहमित्याह यावन्त एव ग्राम्याः पशवस्तानेवावरुन्धेऽम्भस्स्थाम्भो वो भक्षीयेत्याहाम्भो ह्येतामहस्स्थ महो वो भक्षीयेत्याह महो ह्येतास्सहस्स्थ सहो वो भक्षीयेत्याह सहो ह्येता ऊर्जस्स्थोर्जं वो भक्षीयेति ॥ १ ॥ आहोर्जो ह्येता रेवतीरमध्वमित्याह पशवो वै रेवतीः पशूनेवात्मन्रमयत इहैवस्तेतोमाऽपगातेत्याह ध्रुवा एवैना अनपगाः कुरुत इष्टकचिद्वा अन्योऽग्निः पशुचिदन्यस्संहिताऽसि विश्वरूपीरिति वत्समभिमृशत्युपैवैनन्धत्ते पशुचितमेनं कुरुते प्र ॥ २ ॥ वा एषोऽस्माल्लोकाच्च्यवतेय आहवनीय मुपतिष्ठते गार्हपत्य मुपतिष्ठते-

ऽस्मिन्नेव लोके प्रतितिष्ठत्यथो गार्हपत्यायैव निह्नुते गायत्रीभिरुप-
तिष्ठते तेजो वै गायत्री तेज एवात्मन्धत्तेऽथो यदेतन्तृचमन्वाहसन्तत्यै
गार्हपत्यं वा अनुद्विपादो वीराः प्रजायन्ते य एवं विद्वान् द्विपदा-
भिर्गार्हपत्य मुपतिष्ठते ॥ ३ ॥ आऽस्य वीरो जायत ऊर्जा वः पश्या-
म्यूर्जामापश्यते त्याहाऽऽशिष मेवैतामाशास्ते तत्सवितुर्वरेण्य मित्याह
प्रसूत्यै सोमानꣳ स्वरणमित्याह सोमपीथमेवावरुन्धे कृणुहि ब्रह्मण-
स्पत इत्याह ब्रह्मवर्चस मेवावरुन्धे कदाचनस्तरीरसीत्याह नस्तरीꣳ
रात्रिं वसति ॥ ४ ॥ य एवं विद्वानग्निमुपतिष्ठते परित्वाऽग्ने पुरं
वयमित्याह परिधिमेवैतं परिदधात्यस्कन्दायाग्ने गृहपत इत्याह यथा
यजुरेवैतच्छ तꣳ हिमा इत्याह शतन्त्वा हेमन्तानिन्धिषीयेति वा वै
तदाह पुत्रस्य नामगृह्णात्यन्नादमेवैनङ्करोति तामाशिषमाशासे तन्तवे
ज्योतिष्मतीमिति ब्रूयाद्यस्य पुत्रोऽजातस्स्यात्तेजस्व्येवास्य ब्रह्मवर्च
सी पुत्रो जायते तामाशिषमाशासेऽमुष्मै ज्योतिष्मतीमिति ब्रूयाद्यस्य
पुत्रो जातस्स्यात्तेज एवास्मिन्ब्रह्मवर्चसन्दधाति ॥ ५ ॥

இவ்வெட்டாமநுவாகத்தில், ஆறுமநுவாகத்திற் கூறின மந்திரங்களின் உரை கூறப்படுகின்றது. அதில், 'இடப்ரஜஸ' என்பதால், பசு, குதிரை கொள்ளப்பட்டன என்னுங் கருத்துக்கொண்டு கூறுகின்றது.

---

மந்திரம் :

**संपश्यामि प्रजा अहमित्याह यावन्त एव ग्राम्याः पशवस्तानेवावरुन्धे ।**

உரை.

இதனால் கிராமத்திலுள்ள பசுக்களனைத்தையும் அடைகின்றான் என்கின்றது.

---

'அம்போமஹ : சஹ ஊர்ஜ' என்னுஞ் சொற்களால், பசுக்களின் உபலக்கணம் அமையும் என்கின்றது,

மந்திரம் :

अम्भस्स्थांभोवो भक्षीयेत्याहां भोह्येतामहस्स्थ महोवो भक्षीयेत्याह महोह्येतास्सहस्स्थ सहोवो भक्षीयेत्याह सहोह्येता ऊर्जस्स्थोर्ज वो भक्षीयेत्याहोर्जोह्येताः ।

உரை.

*இதனுல், இவைகள் நீர்களாகவும், மகத்துக்களாகவும், இரசங்களாகவும் இருக்கின்றன என்கின்றது.*

---

'ரேவதி' என்னுஞ் சொல்லால், பால் முதலான தனங்கள் பசுக்களிடத்திலிருத்தலின், பசுக்கள் பொருளென்று விரிவுரை கூறுகின்றது,

மந்திரம் :

रेवतीरमध्वमित्याह पशवो वै रेवतीः पशूनेवात्मन्नमयते ।

உரை.

*ஆத்மந் = தனது வீட்டில் என்பதாம். ரேவதி, என்பது பசுக்கள் ஆன்மாவில் இரமிக்கின்றன என்கின்றது.*

---

'ஸ்த' என்பதால், நீண்டவாழ்வும், மா அபகாதா, என்பதால், பிரிதலின்மையும் வேண்டப்படுகின்றன என்கின்றது,

மந்திரம் :

इहैवस्तेतोमाऽपगातेत्याह ध्रुवा एवैना अनपगाः कुरुते ।

உரை.

*எப்போதும் முழு ஆயுளுடன் இருக்கச் செய்கின்றது என்கின்றது.*

---

கன்றைத் தொடுதல் விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

इष्टकचिद्वा अन्योऽग्निः पशुचिदन्यस्सꣳहिताऽसि विश्वरूपीरितिवत्समभिमृशत्युपैवैनन्धत्ते पशुचितमेनं कुरुते ।

உரை.

செங்கலைக்கொண்டு சில அக்கினி அடுக்கப்படுவது போன்று, பசுக்களைக் கொண்டு மற்றொரு அக்கினி அடுக்கப்படுகின்றதுபோல் காட்டுகின்றது. இதனால், பசுவை வைத்து சயனஞ் செய்ததுபோலாம் என்கின்றது.

---

காருகபத்தியத்தின் துதியை விதிக்கின்றது,

மந்திரம் :

**प्रवा एषोऽस्माल्लोकाच्च्यवते य आहवनीय मुपतिष्ठते गार्हपत्य मुपतिष्ठतेऽस्मिन्नेव लोके प्रतितिष्ठत्यथो गार्हपत्यायैव निह्नुते ।**

உரை.

சுவர்க்கலோகம் ஆகவனீயம் என்று மற்றொரு சுருதி கூறுதலால், இவ்வுலகம் விடுபட்டது. அதுவும், காருகபத்தியத் துதியினால் எடுத்துக் கொள்ளப்பட்டது. ஆனாலும், ஆகவனீயத்தில் கருத்துடையதாய், காருக பத்தியத்தைத் துதிக்கின்றது தனது புகழின் பொருட்டாம் ஆகலின் தனி யாய் அதை மறுக்கின்றது என்பதாம்.

---

'உபத்வாக்ன' என்பது முதலிய மூன்று இருக்குக்கள் விதிக்கப்படுகின்றன,

மந்திரம் :

**गायत्रीभिरुपतिष्ठते तेजोवै गायत्री तेज एवात्मन्धत्तेऽथो यदेतन्तृचमन्वाहसन्तत्यै ।**

உரை.

பிரசாபதியின் முகத்திலிருந்து அக்கினியுடன் தோன்றியதால், காயத் திரிக்கு ஒளியுடைமை. திரிசின் அநுவசனமோ, தொடர்பு கெடாதிருத்தற் பொருட்டாம், காயத்திரிகளால் துதிக்கின்றவன் ஆன்மவொளியை யடைகின் றான் என்கின்றது.

---

'அக்னே த்வம் ந' என்பது முதலிய மூன்று துவிபதங்கள் விதிக்கப்படுகின்றன,

மந்திரம் :

**गार्हपत्यं वा अनुद्विपादो वीराः प्रजायन्ते य एवं विद्वान्द्विपदाभिर्गार्हपत्य मुपतिष्ठत आऽस्य वीरो जायते ।**

உரை.

துவிபாத இருக்குக்களால் துதிக்கின்றவன் வீரனாகிய புத்திரனை யடைகின்றான் என்கின்றது.

'பஸ்யத' என்னுஞ் சொல்லின், 'லோட்டு' (வியங்கோள்வினை) க்கு, ஆசீர்வாதம் (வாழ்த்து) பொருள் என்கின்றது,

மந்திரம் :

ऊर्जांवः पश्याम्यूर्जामापश्यतेत्याहाशिषमेवैतामाशास्ते ।

உரை.

இதனால் ஆசீர்வாதங் கொள்ளப்படுகின்றது என்கின்றது.

---

சவிதா, சோம, பிரம என்னுஞ் சொற்களின் கருத்தைக் கூறுகின்றது,

மந்திரம் :

तत्सवितुर्वरेण्यमित्याह प्रसूत्यै सोमानꣳ स्वरणमित्याह सोमपीथमेवाव-
रुन्धे कृणुहि ब्रह्मणस्पत इत्याह ब्रह्मवर्चस मेवावरुन्धे ।

உரை.

இவைகளால், ஏவல், சோமபானம், பிரம வொளிகளை யடைகின்றான் என்பது.

---

'ஸ்தரீரஸீ ந' என்பதின் நகாரம் நீக்கப் பொருள் தந்தமைக்குக் கருத்துக் கூறப்படுகின்றது,

மந்திரம் :

कदाचनस्तरीरसीत्याह नस्तरीꣳ रात्रिं वसति य एवं विद्वानग्निमुपतिष्ठते ।

உரை.

இருளுடைய இரவு, கள்ளன், தேள் முதலான துன்பங்களுடன் கூடியது; ஆதலின், 'ஸ்தரீ:' எனப்படுகின்றதென்பதாம். துதிப்போன், அத்தகைய இரவில் தங்கமாட்டான். மற்றோ, இன்பளிக்கும் இரவில் என்பது பொருள்.

---

'பரித்மஹி' என்னுங் குறியால், மந்திரமே, அக்கினியின் நழுவாமைக்கு காரணம் விறகு என்கின்றது,

மந்திரம் :

परित्वाऽग्ने पुरं वयमित्याह परिधिमेवैतं परिदधात्यस्कन्दाय ।

உரை.

அக்கினி நழுவாதிருத்தற் பொருட்டு விறகைப் பக்கங்களில் வைக்கின்ருன் என்கின்றது.

—

மந்திரத்தின் வெளிப்படையாகிய பொருளைக் கூறுகின்றது,

மந்திரம் :

अग्ने गृहपत इत्याह यथा यजुरेवैतत् ।

உரை.

எசுரில் உள்ள பொருளேயாம் என்கின்றது.

—

'ஹிமம்' என்னுஞ் சொல், ஹேமந்தம் (பனிக்காலம்) என்னும் பொருள் பட்டு நின்றது என்கின்றது,

மந்திரம் :

शतꣳ हिमा इत्याह शतन्त्वा हेमन्तानिन्धिषीयेति वा वै तदाह ।

உரை

நூறு பனிக்காலம் ஆயுள் வேண்டும் என்கின்றது.

—

'தந்தவே அமுஷ்மை' என்பதில் நாமங் கொள்ளல் விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

पुत्रस्य नामगृह्णात्यन्नादमेवैनङ्करोति ।

உரை.

இப் புத்திரனை அன்னமருந்துகின்றவனுக்குகின்றது என்கின்றது.

—

புதல்வன் பிறக்கா விடத்தில் 'தந்து' என்னுஞ் சொல், புத்திரன் பிறந்த விடத்து இவனுக்கு என்னுஞ் சொல் அதாவது இவன் பெயர் என்னும் பாகுபாட்டை விளக்குகின்றது,

மந்திரம் :

तामाशिषमाशासे तन्तवे ज्योतिष्मतीमिति ब्रूयाद्यस्य पुत्रोऽजातस्स्यात्ते-
जस्व्येवास्य ब्रह्मवर्चसी पुत्रो जायते तामाशिषमाशासेऽमुष्मै ज्योतिष्म-
तीमिति ब्रूयाद्यस्य पुत्रोजातस्स्यात्तेज एवास्मिन्ब्रह्मवर्चसन्दधाति ।

உரை.

பிள்ளை யில்லாதவன் 'தந்தவே' என்பதாலும், பிள்ளை யுடையவன் அவன் பேரைக் கூறியும் அக்கினியைப் போற்றி ஆசீர்வாதம் பெறல் வேண்டும். இதனால், ஒளியுடைய புத்திரனை உடையவனுகின்ருன் என்கின்றது.

எட்டாம் அநுவாகம் முடிந்தது.

முதற் காண்டம் ஐந்தாம் பிரபடகம்

ஒன்பதாவது அநுவாகம்

ஆறு பஞ்சாதிக்கு மேல் பதின்மூன்று பதங்களைக் கொண்டது.

---

முற்கூறிய உபஸ்தானம் (துதி) அக்கினிஹோத்திரத்திற்கு அங்கமாம் என்பதை விளக்கும் மந்திரங்கள்

अग्निहोत्रञ्जुहोति यदेव किञ्च यजमानस्य स्वन्तस्यैव तद्रेतस्सि-
ञ्चति प्रजनने प्रजननंँहिवा अग्निरथौषधीरन्तगतादहतितास्ततो
भूयसीः प्रजायन्ते यस्सायं जुहोतिरेत एवतत्सिञ्चति प्रैव प्रातस्तनेन
जनयति तद्रेतस्सिक्तन्नत्वष्ट्राऽविकृतं प्रजायते यावच्छोवै रेतसस्सि-
क्तस्य ॥ १ ॥ त्वष्टा रूपाणि विकरोति तावच्छोवै तत्प्रजायत एषवै
दैव्यस्त्वष्टायो यजते बह्वीभिरुपतिष्ठते रेतस एवसिक्तस्य बहुशो
रूपाणि विकरोति सप्रैव जायतेश्वश्श्वो भूयान्भवति य एवं विद्वा-
नग्निमुपतिष्ठतेहर्देवानामासीद्रात्रिरसुराणान्तेसुरायद्देवानां वित्तं वेद्य-
मासीत्तेन सह ॥२॥ रात्रिं प्राविशन्ते देवाहीना अमन्यन्त तेऽप-
श्यन्नाग्नेयी रात्रिराग्नेयाः पशव इममेवाग्निँस्तवामसनस्स्तुतः पशू-
न्पुनर्दास्यतीति तेऽग्निमस्तुवन्त्स एभ्यस्स्तुतो रात्रिया अध्यहरभि-
पशून्निरार्जत्ते देवाः पशून् वित्वाकामाँ अकुर्वत य एवं विद्वानग्नि-
मुपतिष्ठते पशुमान् भवति ॥ ३ ॥ आदित्योवा अस्माल्लोकादमुं लोक-
मैत्सोऽमुं लोकङ्गत्वा पुनरिमं लोकमभ्यध्यायत्स इमं लोकमागत्य
मृत्योरबिभेन्मृत्युसंयुत इव ह्ययं लोकस्सोऽमन्यतेममेवाग्निँस्त-
वानि समास्तुतस्सुवर्गं लोकङ्गमयिष्यतीति सोऽग्निमस्तौत्स

एनँ स्तुतस्सुवर्गं लोकमंगमयद्यः ॥ ४ ॥ एवं विद्वानग्नि मुपतिष्ठते सुवर्गमेव लोकमेति सर्वमायुरेत्यभिवा एषोऽग्नी आरोहति य एनावुपतिष्ठते यथा खलु वै श्रेयानभ्यारूढः कामयते तथा करोति नक्तमुपतिष्ठते नप्रातस्सँहि नक्तं व्रतानि सृज्यन्ते सह श्रेयाँश्च पपीयाँश्चासाते ज्योतिर्वा अग्निस्तमो रात्रिर्यत् ॥ ५ ॥ नक्तमुपतिष्ठते ज्योतिषैव तमस्तरत्युपस्थेयोऽग्नी३र्नोपस्थेया ३ इत्याहु र्मनुष्यायेन्वै योऽहरहराहृत्याथैनं याचति स इन्वैत मुपार्च्छत्यथको देवानहरहर्याचिष्यतीति तस्मान्नोपस्थेयोऽथो खल्वाहुराशिषेवैकं यजमानो यजत इत्येषा खलुवै ॥ ६ ॥ आहिताग्ने राशीर्यदग्निमुपतिष्ठते तस्मादुपस्थेयः प्रजापतिः पशूनसृजत ते सृष्टा अहोरात्रे प्राविशन्तान्छन्दोभिरन्वविन्दद्यच्छन्दोभिरुपतिष्ठते स्वमेव तदन्विच्छति न तत्र जाम्यस्तीत्याहुर्योऽहरहरुपतिष्ठत इति योवा अग्निं प्रत्यङ्ङुपतिष्ठते प्रत्येन मोषति यः पराङ् विष्वङ् प्रजया पशुभिरेतिकवातिर्यङ्ङिवोपतिष्ठतेनैनं प्रत्योषति नविष्वङ् प्रजया पशुभिरेति ॥ ७ ॥

---

இவ்வொன்பதாமநுவாகத்தில், கூறிப்போந்த உபஸ்தானம் (அக்கினியின் துதி) அக்கினிஹோத்திரத்திற்கு அங்க மென்பது விளங்கப்படுகின்றது. அதில், முதலில், அக்கினி ஹோத்திரம் விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

अग्निहोत्रं जुहोति यदेव किञ्च यजमानस्य स्वन्तस्यैव तत् ।

உரை.

வேறு வாக்கியங்களால் விதிக்கப்பெற்ற, பால், தயிர், பொங்கல் முதலான பொருள்களால், அக்கினி ஹோத்திரம் என்னும் ஓமத்தைச் செய்க. வேள்வித்தலைவனுடைய பால் முதலான பொருள்களுள் எவை தீயில் ஹோ

மஞ் செய்யப்பட்டனவோ, அவைகள் கெட்டுப் போகின்றவைகளல்ல; மற்ரூ, அவ்வேள்வித்தலைவனுக்குத் தனமாய் இருக்கின்றன என்பதாம்.

அக்கினியிலிட்டது, கெடுதலின்றி யிருத்தலுக்கு உவமை கூறி விளக்கல்,

மந்திரம் :

रेतस्सिञ्चति प्रजनने प्रजननꣳहिवा अग्निः ।

உரை.

மகற் பேற்றின் பொருட்டு, பெண் குறியில் விடப்பட்ட சுக்கிலம் கெடாமல் இருத்தல் போன்று, அக்கினி உற்பவமாந் தன்மையால், அதில் ஹோமஞ் செய்யப்பட்டது கேடுறுதிருக்கின்றது என்பதாம்.

---

தீயிலிட்ட பொருள் எரிந்து போதல் கண் கூடாய்க் காணப்படுகின்றதே ? என்ருசங்கித்துக் கூறுகின்றது,

மந்திரம் :

अथौषधीरन्तगता दहतितास्ततो भूयसीः प्रजायन्ते ।

உரை.

மிகு வேனிற் காலத்தில் எரியும் அக்கினி தனக்கருகிற் கிடைத்த கொடி செடிகளை எரித்து விடுகின்றது. அங்ஙனமாயினும், எரிக்கப்பட்ட கொடி செடிகள் மழைக்காலத்தில் நன்ருய் வளர்கின்றன. ஆதலின், அவற்றை உண்டாக்குகின்றது அக்கினியாம் என்பது.

இரண்டு காலங்கள் விதிக்கப்படுகின்றன,

மந்திரம் :

यत्सायञ्जुहोतिरेत एवतत्सिञ्चति प्रैव प्रातस्तनेन जनयति तत् ।

உரை.

மாலை ஹோமத்தால் சுக்கிலம் விடுதல், காலை ஹோமத்தால் உற்பத்தி என்பதாம்.

விதித்த அக்கினிஹோத்திரத்திற்கு அங்கமாகிய உபஸ்தானம் விதிக்கப்படுகின்றது,

மந்திரம் :

रेतस्सिक्तन्नत्वष्ट्राऽविकृतं प्रजायते यावच्छोवै रेतसस्सिक्तस्य त्वष्टा रूपाणि विकरोति तावच्छोवै तत्प्रजायत एषवै दैव्यस्त्वष्टायो यजते बह्वीभिरुपतिष्ठते रेतस एवसिक्तस्य बहुशो रूपाणि विकरोति ।

போற்றுதல்)

உரை.

உலகில், யோனியில் விடப்பட்ட சுக்கிலம், விசுவகருமாவால் விகாரப் படலின்றேல், பிரசை பிறக்காது. அதுவும், துவஷ்டா, எவ்வளவு வடிவுக ளைக் குறித்து, சுக்கிலத்தைப் பல்வகையாய்ச் செய்கின்றனனோ, அவ்வளவு வடிவுகள் உற்பத்தியாகின்றன. ஈண்டும், வேள்வித் தலைவன், தேவர்களால் அருளீயப் பெற்ற துவஷ்டா, பல்வகை வடிவுகளைச் செய்தற்கு, பல்வகை களாற் போற்றுகின்றான். இது உபஸ்தான கருமவிதி. இதுவே, ஆறு மந்தி ரங்களால் துதிக்கப்படுகின்றது என்பது.

---

உபஸ்தானம் புகழப்படுகின்றது,

மந்திரம் :

**सप्रैव जायतेश्वश्श्वो भूयान्भवति य एवं विद्वानग्निमुपतिष्ठते ।**

உரை.

அக்கினியைப் போற்றுகின்றவன், மக்களை யுண்டாக்கிக் கொண்டு, நாளுக்கு நாள் மேலும் மேலும் தன முதலானவைகளால் வளர்கின்றான் என் பது.

---

அதுவே மற்றொருமுறையாற் புகழப்படுகின்றது,

மந்திரம் :

**अहर्देवानामासीद्रात्रिरसुराणान्तेऽसुरायद्देवानां वित्तं वेद्यमासीत्तेन सह रात्रिं प्राविशन्ते देवाहीना अमन्यन्त तेऽपश्यन्नाग्नेयी रात्रिराग्नेयाः पशव इममेवाग्निꣳ स्तवामसनस्स्तुतः पशून्पुनर्दास्यतीति तेऽग्निमस्तुवन्त्स एभ्य-स्स्तुतो रात्रिया अध्यहरभि पशून्निरार्जत्ते देवाः पशून् वित्वाकामाꣳ अकुर्वत य एवं विद्वानग्निमुपतिष्ठते पशुमान् भवति ।**

உரை.

முன்னர்க் கிடைத்த பசுவாகிய தனம், மேல் அடைதற்குரிய தனம் என் னும் இரண்டு தேவப் பொருள்களைக் கவர்ந்து கொண்டு, அசுரர்கள் இரவிற் புகுந்து இருளில் யாண்டோ சென்று விட்டனர். அதனால், பசுக்களில்லாதவர் யாம் என்று, துன்புற்று தேவர்கள் ஒரு உபாயத்தைக் கண்டனர். இரவில், அக்கினியின் ஒளி மிகுதியானதால், இரவு ஆக்னேயியாம். அக்கினி பசுக் கட்கு இறையாதலின் பசுக்களும் ஆக்னேயங்களாகின்றன. இவ்வாறு துதிக் கப்பெற்ற அக்கினி இவர்களிடத்திலிருந்து, இரவிலிருந்த அப்பசுக்களைத் தேவர்கட்குக் கொடுத்து விட்டது என்பது.

மற்று மோரு முறையாற் புகழ்கின்றது,

மந்திரம் :

**आदित्योवा अस्माल्लोकादमुं लोकमैत्सोऽमुं लोकङ्गत्वा पुनरिमं लोकमभ्य-ध्यायत्स इमं लोकमागत्य मृत्योरबिभेन्मृत्युसंयुत इव ह्ययं लोकस्सो-ऽमन्यतेममेवाग्निꣳस्तवानि समास्तुतस्सुवर्गं लोकङ्गमयिष्यतीति सोऽग्निमस्तौत्स एनꣳ स्तुतस्सुवर्गं लोकमगमयद्य एवं विद्वानग्नि-मुपतिष्ठते सुवर्गमेव लोकमेति सर्वमायुरेति ।**

உரை.

ஆதித்தன் இவ்வுலகத்திலிருந்து மேல் உலகம் சென்றான். அவ்வுலகத்தை அடைந்து மீண்டும் இவ்வுலகத்திற்கு வந்து மிருத்துவுக்கு பயப்பட்டான். ஏனெனின்? இவ்வுலகம் மிருத்யுவுடன் கூடியதால் என்க. பிறகு அக்னியைத் தோத்திரஞ் செய்யில் அக்கினி சுவர்க்கத்தை அடைவிக்கும் என்று எண்ணி அக்கினியைப் போற்றினார்கள். பிறகு, அவரை, அக்கினி சுவர்க்கத்தை அடையும்படி செய்தது ஆதலின், யாவனொருவன் அக்கினியைப் போற்றுகின்றானோ, அவன் சுவர்க்கத்தை அடைகின்றான் ஆயுளையும் அடைகின்றான் என்பது.

---

மீண்டும் மற்றொருமுறையாற் புகழ்கின்றது,

மந்திரம் :

**अभिवा एषोऽग्नी आरोहति य एनावुपतिष्ठते यथा खलुवै श्रेयानभ्यारूढः कामयते तथा करोति ।**

உரை.

எவன், ஆகவனீய காருகபத்தியங்களைப் போற்றுகின்றானோ, அவன், இரண்டையும் தன் வயப்படுத்திக் கொள்கின்றான். உலகில் ஒருவன் தியவனாயிருந்தும், யான் கல்வி முதலானவைகளால் சிறந்த பதவியை யடைவேன், என்று விரும்புவது போல், இவ்வேள்வித்தலைவன், உபஸ்தானத்தால் தனக்கு உயர்ந்த பதவியைத் தேடிக் கொள்கின்றான். ஆதலின் உபஸ்தானம் (துதி) புகழப்படுகின்றது என்பது.

---

ஈண்டு, காலைத்தீயே போற்றத்தக்க தென்பர் சிலர், மற்றுஞ் சிலர், எப்போதுமே போற்றத் தகாதென்பர். சித்தாந்தியோ, எப்போதும் போற்றத்தக்க தென்பர். அவற்றுள், முதலாவது பூர்வபக்ஷத்தை விளக்குகின்றது,

மந்திரம் :

**नक्तमुपतिष्ठते नप्रातस्सꣳ हिनक्तं व्रतानि सृज्यन्ते सह श्रेयाꣳश्च पापी-याꣳश्चाऽऽसाते ज्योतिर्वा अग्निस्तमो रात्रिर्यन्नक्तमुपतिष्ठते ज्योतिषैव तमस्तरति ।**

உரை

இரவில் அநுட்டிக்க வேண்டிய கர்மங்கள் ஒன்றற் கொன்று கலந்து போய் விடுகின்றன. இருட்டில், எதனால்? எவ்வாறு? அநுட்டிக்க வேண்டியது என்று உணர்வதற்கில்லை யாதலின் என்க. சாத்திர முறைப்படி செய்த கருமங்களே நலத்தைத் தருவனவாகின்றன; மாறுபடிலோ, பாவங்களாகின்றன. இவ்விரண்டுங் கூடவே யிருக்கின்றன. எனவே, அக்கினி யுபஸ்தானஞ் செய்யப்பெற்ற விடத்து ஒளியால் இரவின் இருட் குற்றம் நீங்குகின்றது. ஆதலின், இரவு உபஸ்தானஞ் செய்யத் தக்கதாம். (போற்றத்தக்கது.) பகலில் இருளின்மையின் உபஸ்தானஞ் செய்ய வேண்டியதில்லை எனல் ஒரு பூர்வ பக்கமாம் என்பது.

ஆராய்ச்சியுடன் இரண்டாம் பூர்வபக்ஷம் விளக்கப்படுகின்றது.

மந்திரம்:

**उपस्थेयोऽग्नी ३ र्नोपस्थेया ३ इत्याहुर्मनुष्ययेन्वै योऽहरहराहृत्याथैनं याचति स इन्वैत मुपार्च्छत्यथको देवानहरहर्याचिष्यतीति तस्मान्नोपस्थेयः ।**

உரை.

உலகில், ஒரு வறியான், அரசன் முன்னிலையில் ஒரு எலுமிச்சம்பழ முதலான பண்டத்தை வைத்துப் பார்த்துவிட்டு, தன முதலானவற்றை யிரந்து அரசனுக்குப் பீடையைக் கொடுக்கின்றான். அங்ஙனமிருக்க, யார்தான், பெருமை மிக்குள்ள தேவர்களிடம் நாடோறு இரக்கமாட்டார்? '**आयुर्दा अग्नेऽस्यायुर्मे**' என்பதால், இத்துதியில் இரத்தல் காணப்படுகின்றது. ஆதலின், ஒருபோதும் போற்றத் தகாதது என்பது இரண்டாம் பூர்வபட்சம்.

சித்தாந்தம் விளக்கப்படுகின்றது.

மந்திரம்:

**अथो खल्वाहुराशिषे वैकं यजमानो यजत इत्येषा खलुवा आहिताग्ने राशीर्यदग्निमुपतिष्ठते तस्मादुपस्थेयः ।**

உரை.

வேண்டியவற்றை யடைதற் பொருட்டே, பிரசாபதிக் கொப்பாய் எல்லாத் தேவதை வடிவாயிருக்கும் அக்கினியை ஆராதிக்கின்றனர் என்று பெரியோர்கள்கூறுகின்றனர். உலகிலும், அரசனுடைய மனோநிலைமையை உணராமல், சமயமல்லாதபோது, கொடு கொடு என்று இரக்கில் அரசனுக்கு முனிவுண்டாகின்றது. போற்றிப் புகழ்தலாலேனும், வேடிக்கையாலேனும் மனதிற்குக் களிப்பை யுண்டாக்கிக் கொண்டு இரக்கும்போது, உற்சாகத்தோடு,

இரப்போன் இரந்ததினும் மிகுதியைக் கொடுக்கின்ருன். அங்ஙனமே, ஆதானஞ் செய்த அக்கினியைப் போற்றலே இரத்தலாம். அதுவும், பல்வகைப் புகழ்களுடன் கூடியதால் முனிவை யுண்டாக்காது. மற்ருே, மிகுந்த சந்தோஷத்தையே உண்டாக்கும். ஆதலின், காலை மாலை அக்கினி போற்றத் தக்கதேயாம் என்பது.

---

இருக்குக்களால் உபஸ்தானஞ் செய்வதைப் புகழ்கின்றது,

மந்திரம் :

**प्रजापतिः पशूनसृजत ते सृष्टा अहोरात्रे प्राविशन्ताञ्छन्दोभिरन्वविन्दन् यच्छन्दोभिरुपतिष्ठते स्वमेव तदन्विच्छति ।**

உரை.

இரவு பகல்களின் தேவதைகளால், உள்ளே வைக்கப்பட்டிருந்த பசுக்கள் சந்தத்துடன் கூடின மந்திரங்களால் அடையப்பட்டன. ஆதலின், சந்தங்களால் உபஸ்தானஞ் செய்தல் கெட்டுப்போன பொருள் கிடைப்பதற்குக் காரணமாகின்றது என்பது.

---

நாடோறும் உபஸ்தானஞ் செய்யவேண்டு மென்று உணர்த்துகின்றது,

மந்திரம் :

**न तत्र जाम्यस्तीत्याहुर्योऽहरहरुपतिष्ठत इति ।**

உரை.

துதிக்கின்றவனுக்கு வேண்டுகோளிருத்தலானும், போற்றத்தக்கதற்கு துதி யிருத்தலானும், துதிப்பதில் ஒருவனுக்குஞ் சோம்பல் இல்லை என்பது.

---

உபஸ்தான (துதிக்குங்) காலத்தில் கவிழ்ந்த முகமாய் இருத்தல் வேண்டு மென்கின்றது,

மந்திரம் :

**योवा अग्निं प्रत्यङ्ङुपतिष्ठते प्रत्येन मोषति यः पराङ् विष्वङ् प्रजया पशुभिरेतिकवातिर्यङ्ङिवोपतिष्ठत नैनं प्रत्योषति नविष्वङ् प्रजया पशुभिरेति ।**

உரை.

முகத்தைத் திருப்பிக் கொள்ளில், அக்கினி, இவ் வேள்வித் தலைவனை, அபகாரமாய் எரித்து விடுகின்றது. பிறவற்றை நோக்கியிருக்கில், (பராங்முகமாகில்) வேள்வித்தலைவன், மக்கள் பசுக்களிலிருந்து விடுபட்டுப் போகின்ருன். ஆதலின், முகம் சிறிது முன்பக்கம் கவிழ்ந்திருத்தல் வேண்டு மென்பதாம்.

ஒன்பதாமநுவாகம் முடிந்தது.

---

## பத்தாவது அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

मम प्रवत्स्यन्पूर्वाग्निं मन्त्रयेत्पुनरागतः ।
ममेत्याद्यैश्चतुर्मन्त्रैर्मनस्तत्र जुहोति हि ॥ १ ॥
गतमग्ने रुपस्थानं मन्त्राः प्रासङ्गिका अथ ।
पयेत्याचा मतिस्वामी दर्शपूर्णि मयोरपः ॥ २ ॥
अग्रे प्रागग्नि पार्श्वस्थो जपेदग्निं हविस्तथा ।
निरुप्यमाणं संमन्त्र्य कस्त्वा यज्ञं युनक्ति हि ॥ ३ ॥
यानीति मुच्यमानानि कपालान्यनुमन्त्रयेत् ।
अभिन्नोऽप्सु क्षिपेद्भिन्नं कपालं यत इत्यतः ॥ ४ ॥
कपालान्तर मादध्यादिति प्रासङ्गिका गताः ।

வெளியூருக்குப் போகும்போது ஆகவனீயத்தைப் போற்றல், திரும்பி வந்த பிறகு ஆகவனீயத்தைத் துதி செய்தல், வெளியூரில் ஒன்பது நாளுக்கு மேல் தங்கினால் அதன் பொருட்டு ஹோமஞ் செய்தல், எஜமானன் தரிசபூர்ண மாத வேள்வியில் விரதத்தை யேற்றுக் கொள்ளும்பொழுது ஆசமனஞ் செய்துக்கொள்ளல், ஆகவனீயத்தைப் பார்த்துக்கொண்டு செபித்தல், அவியை யெடுக்கும்போது போற்றல், எடுத்த அவியைவைத்த பிறகு விஹாரங்களைப் பார்த்தல், கபாலங்களை யெடுக்கும்பொழுது செபித்தல், உடைந்த கபாலங் களை சலத்தில் போடுதல், புதிய கபாலங்களை யெடுத்துக் கொள்ளல் என்பது.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பத்தாவது அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்குமேல் நாற்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

---

வேள்வித்தலைவனுடைய உபஸ்தான மந்திரங்களையும், தரிசபூரண மாச அங்கங்களையுங் கூறுகின்ற மந்திரங்கள்,

मम॒ नाम॑ प्रथ॒मं जा॑तवेदः पि॒ता मा॒ता च॑ दधतु॒र्यदग्रे॑ । तत्त्वं
बिंभृ॒हि पु॒नरामदै॑तो॒ स्तवा॒हं नाम॑ बिभराण्यग्ने । मम॒ नाम॒ तव॑ च

(அக்கினியைப்

जातवेदो वाससी इव विवसानौ ये चरावः । आयुषे त्वं जीवसे वयं यथायथं विपरिदधावहै पुनस्ते । नमोऽग्नयेऽप्रतिविद्धाय नमोनाधृष्टाय नमस्सम्राजे । अषाढः ॥ १ ॥ अग्निर्बृहद्वया विश्वजित्सहन्त्यश्श्रेष्ठो गन्धर्वः । त्वत्पितारो अग्ने देवास्त्वामाहुतयस्त्वद्विवाचनाः । सम्माभायुषा संगौपत्येन सुहिते माधाः । अयमग्निश्श्रेष्ठतमोऽयं भगवत्तमोऽयꣳ सहस्रसातमः । अस्मा अस्तु सुवीर्यम् । मनोज्योतिर्जुषतामाज्यं विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधातु । या इष्टा उषसो निम्रुचश्चतास्सन्दधामि हविषा घृतेन । पयस्वतीरोषधयः ॥ २ ॥ पयस्वद्वीरुधां पयः । अपां पयसो यत्पयस्तेन मामिन्द्र सꣳसृज । अग्ने व्रतपते व्रतं चरिष्यामि तच्छकेयं तन्मेराध्यताम् । अग्निꣳ होतारमिह तꣳ हुवे देवान् यज्ञियानिह यान् हवामहे । आयन्तु देवास्सुमनस्यमाना वियन्तु देवा हविषो मे अस्य । कस्त्वा युनक्ति सत्वा युनक्तु यानि घर्मे कपालान्युपचिन्वन्ति ॥ ३ ॥ वेधसः । पूष्णस्तान्यपि व्रत इन्द्रवायू विमुञ्चताम् । अभिन्नोघर्मो जीरदानुर्यत आत्तस्तदगन्पुनः । इध्मोवेदिः परिधयश्च सर्वे यज्ञस्यायुरनुसञ्चरन्ति । त्रयस्त्रिꣳशत्तन्तवो ये विततिरे य इमं यज्ञꣳ स्वधया ददन्ते तेषां छिन्नं प्रत्येतद्दधामि स्वाहा घर्मो देवाꣳ अप्येतु ॥

*இப் பத்தாமநுவாகத்தின் முற்பாதியில், வெளியூருக்குச் சென்று வந்த வேள்வித்தலைவனுடைய துதி மந்திரங்களும், பிற்பாதியால், சில தரிசபூரண மாசாங்க மந்திரங்களுங் கூறப்படுகின்றன.*

—•—

போற்றுதல்)

வெளியூருக்குப் போகும்பொழுது ஆகவனீயத்தைத் துதித்தல்,

மந்திரம்—1

**मम नाम प्रथमं जातवेदः पिता माताच दधतुर्यदग्रे। तत्त्वं बिभृहि पुनरामदैतो स्तवाहं नाम बिभराण्यग्ने।**

உரை.

அந்தணர்கட்கு இரண்டு பெயர்களுள்ளன. அவற்றுள், தேவதத்தன் எக்ஞதத்தன் என்பது முதலாயினது ஒன்று. உபாத்யாயன், தீக்ஷிதன் என்பது முதலாயினது மற்றொன்று, இவற்றுள், வேதமோதிய பின்னர் வந்தமையின் உபாத்தியாயன் என்பது முதலியன பிற்பட்டன. பிறப்பிலிருந்து தாய் தந்தையர்களா லிடப்பெற்றமையின், தேவதத்தன் முதலாயின முற்பட்டன என்பது ஈண்டு உணரற்பாலது என்பது.

தோன்றியவைகளை யுணரும் அக்கினியே! என்னுடைய முதலாவது பெயரை நீ வைத்துக் கொள்வாயாக. எதுவரையெனின்? யான் மீண்டும் வரும் வரை யென்க. யானும், உனது நாமத்தை வைத்துக் கொள்கின்றேன். நீ, இங்கு, எனது குறைகளை நீக்கி எனது காரியத்தைச் செய்வாயாக. உன்னுடைய பெயரைத் தாங்கிய யான், செல்லுமிடத்தில் குறைவென்பதே எனக்கு வராதென்பது பொருள்.



ஊரிலிருந்து திரும்பி வந்த பிறகு செய்யும் ஆகவனீயத்துதிகள் நான்கனுள்

முதலாவது துதி

மந்திரம்—2

**मम नाम तवच जातवेदो वाससी इव विवसानौ ये चरावः। आयुषे त्वं जीवसे वयं यथायथं विपरिदधावहै पुनस्ते।**

உரை.

தோன்றியவற்றை யுணரும் அக்கினியே! தேவதத்தன் என்பது முதலான எனது நாமங்களும், வன்னி, தீ என்பது முதலான உனது நாமங்களும், இப்போது பிரிப்பின்றி நம்மிருவருக்கும் வழங்குவனவாகுக. இதற்கு மேல், தனித்தனி நம்முடைய பெயர்களை ஏற்றுக் கொள்வோமாக. இதனால், ஆயுள் வளர்ச்சி, தனமுதலான சம்பத்துக்களால் புகழுடைய வாழ்க்கை உண்டாகும் என்பது.



மந்திரம்—3

**नमोऽग्नयेऽप्रतिविद्धाय नमोऽनाधृष्टाय नमस्सम्राजे। अषाढोऽग्निर्बृहद्वया विश्वजित्सहन्त्यश्श्रेष्ठो गन्धर्वः।**

உரை.

ஒருவராலுங் கொல்ல முடியாததும், தாழ்த்த முடியாததும், ஒளிப்பிழம்பானதும், பகைவரால் பொறுக்க முடியாததும், அளவற்ற உணவுப் பொருளையுடையதும், அனைத்தையும் வெற்றிக் கொள்வதும், பொறுமை யுடையதும், சங்கீதங்களில் வல்லதுமாகிய அக்கினிக்கு வணக்கம் என்பது.

மந்திரம்—4

**त्वत्पितारो अग्ने देवास्त्वा माहुतयस्त्वद्विवाचनाः। सम्मा मायुषा सङ्गौपत्येन सुहिते माधाः।**

உரை.

தேவர்கள், உன்னையே தந்தையாகக் கொண்டவர்களும், உன்னால் ஆகுதிகளை யடைகின்றவர்களும் (உனக்கு ஆகுதி செய்யில் தேவர்கள் களிப்புறுகின்றனர் என்பதாம்.) உன்னையே புகழ்ந்து பேசுகின்றவர்களுமாவார்கள். அக்கினியே! நீ, என்னை, நீண்ட ஆயுளை யுடையவனாகச் செய்வாயாக. கோக்கட்கு இறைவனாகச் செய்வாயாக. புருடார்த்தத்தில் என்னை நிலை நிறுத்துவாயாக என்பது.

மந்திரம்—5

**अयमग्निश्श्रेष्ठतमोऽयं भगवत्तमोऽयꣳ सहस्र सातमः। अस्मा अस्तु सुवीर्यम्।**

உரை.

புகழுடையார்களுட் சிறந்ததும், மற்றும், அவர்களுள் பெருஞ் சிறப்புடையதும், அதிசயமான ஈசுரத் தன்மை யுடையதும், ஆயிரக்கணக்கான பொன்களை ஈகின்றவர்களுக்குள் பெருங் கொடையாளியுமாகிய அக்கினியின் அருளால், இவ் வேள்வித்தலைவனுக்கு நல்ல வன்மை யுண்டாகுக என்பது.

மந்திரம்—6

வெளியூரில் ஒன்பது நாட்களுக்குமேல் இருந்தால் ஹோமஞ்செய்தல் மந்திர பாடம்.

**मनो ज्योतिर्जुषता माज्यं विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधातु। या इष्टा उषसो निम्रुचश्चतास्सन्दधामि हविषा घृतेन।**

போற்றுதல்)

உரை.

இம் மந்திரத்தின், முற்பாதிக்கு, 'பூமிர்பூம்நா' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டுள்ளது. காலைப்போதாற் குறிப்பிட்ட ஆகுதிகள், மாலைப்போதாற் குறிப்பிட்ட ஆகுதிகள், (இஷ்டிகள்) ஏனைய வேள்வித் தலைவராலும் என்னாலும் ஆசரிக்கப்பெற்ற ஆகுதிகள் என்னுமிவைகளனைத்தையும், இந்த நெய் அவியால் கேடுறுதவைகளாக்குகின்றேன் என்பது.

முதற்பாதி முடிந்தது

பிற் பாதி.

மந்திரம்—7

पयस्वती रोषधयः पयस्वद्वीरुधां पयः । अपां पयसो यत्पयस्तेनमामि-
न्द्रस॑ँसृज ।

உரை.

ஓஷதிகள் சார முடையவைகள், கொடிகளின் சம்பந்தமான பாலும் சாரமுடையது, தண்ணீருக்குள்ளும் சாரம் இருக்கின்றது. பசுவின் பால் முதலானவைகளிலும் சாரமிருக்கின்றது. அக்கினியே! நீ, என்னை இவ்வாறுள்ள சாரங்களனைத்துடனும் கூடியவனாகச் செய்வாயாக என்பது.

வேள்வித்தலைவன் இம் மந்திரத்தால் ஆசமனஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

மந்திரம்—8

अग्ने व्रतपते व्रतं चरिष्यामि तच्छकेयं तन्मेराध्यताम् ।

உரை.

நான் விரதத்தை ஆசரிப்பேன். அவ்விரதத்தை யநுட்டிக்க வன்மையுடையனாவேனாக. எனது விரதம் இனிது முடிவையடைக என்பது.

இதை, ஆகவனீயத்திற்குத் தென் புறமாய் நின்று விரதத்தைக் கைக்கொண்டு, கடலை மனதால் எண்ணியபின் செபித்தல் வேண்டும்.

அவியெடுக்கும் போது போற்றல்,

மந்திரம்—9

अग्निँ होतार मिहत॑ँहुवे देवान् यज्ञियानिह यान् हवामहे । आयन्तु
देवास्सुमनस्यमाना वियन्तु देवा हविषो मे अस्य ।

உரை.

இக் கருமத்தில், தேவர்களை யழைக்கின்ற அக்கினியை யான் அழைக்கின்றேன். மற்றும், இதில், எத்தேவர்களைக் குறித்து ஓமஞ்செய்கின்றேனோ, அத் தேவர்களையும் அழைக்கின்றேன். அழைக்கப் பெற்ற தேவர்கள் மனக் களிப்புடன் இங்கு வருவார்களாக. வந்து என்னுடைய இந்த அவிகளை யுண்பார்களாக என்பது.

இம் மந்திரத்தால் அவியெடுக்கும்போது அதைப் போற்றுதல் வேண்டும்.

---

யக்ஞ யோகம்,

மந்திரம்—10

**कस्त्वा युनक्ति सत्वायुनक्तु ।**

உரை.

வேள்வியே! எந்தப் பிரசாபதி தேவதை, யாண்டும், உன்னை உரிமையுடைவனாகச் செய்கின்றதோ, அதுவே உன்னை இங்கு உரியவனாகச் செய்க என்பது.

இதனால் எடுத்த அவிகளைக் கொண்டுபோய் வைத்த பிறகு வேள்வித் தலைவன் விஹாரங்களை எல்லாம், (அக்கினிகளின் இடங்களனைத்தையும்) பார்த்தல் வேண்டும்.

---

கபால விமோசனம்

மந்திரம்—11

**यानि घर्मे कपालान्युपचिन्वन्ति वेधसः । पूष्णस्तान्यपि व्रत इन्द्र वायू विमुञ्चताम् ।**

உரை.

இம்மந்திரம், அத்வரியு காண்டத்திலும் பாடமாதலின் முதற் பிரபாடகத்தில் இதற்கு உரை கூறப்பட்டிருக்கின்றது.

பிரமாவிற் கொப்பான இருத்துவிக்குக்கள் எவ்வளவு கபாலங்கள் அக்கினியில் வைக்கின்றார்களோ, அவைகளனைத்தையும், விரத முடிந்தவுடன் இந்திரனும் வாயுவும் வெளியில் எடுத்தெறிவார்களாக என்பது.

கபாலங்களை எடுத்தெறியும்போது, இம் மந்திரத்தை அத்வர்யும், வேள்வித்தலைவனும் ஓதல் வேண்டும்.

உடைந்த கபாலத்தை சலத்திற் போடுதல்,

மந்திரம்—12

**अभिन्नो घर्मो जीरदानुर्यत आत्तस्तदगन्पुनः । इध्मो वेदिः परिधयश्च सर्वे यज्ञस्यायुरनुसञ्चरन्ति ।**

உரை.

வெந்துபோன இக் கபாலம், உடைந்து போனதுபோற் காணப்படினும், மந்திர வன்மையால் உடையாததேயாம், அதாவது உடைந்துபோன குற்றத்தை யடையா தென்பதாம். இக்கபாலம், புரோடாச வாயிலாக வேள்விக்கு உயிரைக் கொடுத்தலின், உடைதல் எவ்வாறும்? உடையவில்லை யெனில், கபாலத் தோற்றம் இல்லாததென்னை? கபாலமோ, தனது முதற்காரணமாகிய மண்ணுய்த் தோற்றுகின்றது. காரிய வடிவாய்த் தோற்றல் இல்லை. அஃது தோன்றுவிடினும், இத்மம் (விறகு) முதலானவைகள் தனது தனது வடிவாய்த் தோன்றுகின்றவைகளாய், வேள்வியின் ஆயுளை யுண்டாக்கிக் கொண்டு போகின்றன என்பது.

இம் மந்திரம் கபால முடைந்த குற்றத்தை நீக்கப் பிராயச்சித்தமாம்.

---

வேறு கபாலத்தைச் சேர்த்தல்,

மந்திரம்—13

**त्रयस्त्रिꣳशत्तन्तवो ये वितत्निरेय इमं यज्ञꣳस्वधया ददन्ते तेषांछिन्नं प्रत्ये तद्दधामि स्वाहा घर्मो देवाꣳअप्येतु ।**

உரை.

நாலாங் காண்டத்தில், 'प्रजापतिर्मनसाऽन्धोऽच्छेतः' என்னும் அநுவாகத்தில், செங்கல்களை யடுக்குவதன் பொருட்டு, 'யக்ஞதநு' என்னும் பெயர் கொண்ட, முப்பத்து மூன்று மந்திரங்கள் கூறப்பட்டிருக்கின்றன. அதிற் கூறிய யக்ஞதநுக்கள் இங்கு நூல்கள் எனப்படுகின்றன. நூலால் ஆடை உண்டாவது போல், அத் தநுக்கள் யக்ஞத்தை உண்டாக்குகின்றன. மற்றும், இருத்துவிக்கு முதலானோர், அவியால் இவ்வேள்வியை அசரிக்கின்றனர். யக்ஞாபிமானியாகிய பிரசாபதி முதலான தேவர்கள், செய்யும் இருத்துவிக்கு முதலான யக்ஞ அங்கங்களுக்குள் எது குறைவுபடுகின்றதோ, அதையும் எடுத்துக் கொள்ளுகிறேன், ஆதலின் சுவாஹா அதாவது நன்கு விளங்குகின்ற யக்ஞாங்க விசேடங்கள் தேவர்களை யடைக என்பது.

இம் மந்திரத்தால், வேறு கபாலங்களை வைத்துப் புரோடாசஞ் செய்தல் வேண்டும்.

பத்தாம் அநுவாகம் முற்றிற்று.

## பதினோராவது அநுவாகம்.

விடயச் சுருக்கம்.

अन्त्यानु वाक्या याज्या यागी वैश्वानराभिधे ॥
वैश्वेत्यष्टौ विकल्पास्यु रवद्दे वारुणे चरौ ॥ १ ॥
दधीति दध्यादि चरावग्न्यु द्वासनयागके ॥
अग्निर्भुव इतिद्वेस्तः प्रतीके ते उभेमते ॥ २ ॥
मरुत्सप्त कपालेष्टा वदीत्यादित्यके चरौ ॥
चतस्रस्युर्विकल्पार्था इतिप्रश्नोऽत्र पञ्चमः ॥ ३ ॥

வைசுவானர இஷ்டியில் வைசுவானர தேவதையின் பொருட்டு விகற்பமாக நான்கு யாஜ்யா புரோநு வாக்கியங்கள், வருணதேவதையின் பொருட்டு ஒரு யாஜ்யா புரோநு வாக்கியம், 'ததிக்கிராவ' தேவதையின் பொருட்டு ஒரு யாஜ்யா புரோநு வாக்கியம், அக்னி தேவதையின் பொருட்டு ஒரு யாஜ்யா புரோநு வாக்கியத்தின் சுருக்கம், மாருத தேவதைக்காக ஒரு யாஜ்யா புரோநு வாக்கியம், ஆதித்யேஷ்டியில் அதிதி தேவதையின் பொருட்டு இரண்டு யாஜ்யா புரோநு வாக்கியங்கள் என்பது.

---

## முதற் காண்டம் ஐந்தாம் பிரபாடகம்

## பதினோராவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்கு மேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

காமியயாஜ்ய புரோநுவாக்கிய மந்திரங்கள்

वैश्वानरोनं ऊत्याऽऽप्रयांतु परावतः । अग्निरुक्थेन वाहंसा । ऋतावांनं वैंश्वानरमृतस्य ज्जोतिंषस्पतिंम् । अजंस्रङ्घर्मंमींमहे । वैश्वानरस्यं दंसनांभ्यो बृहदारिंणा देकंस्स्वपस्यंया कविः । उभा पितरां महयंन्नजायताग्निर्द्यावां पृथिवी भूरिंरेतसा । पृष्टो दिवि पृष्टो अग्निः पृंथिव्यां पृष्टो विश्वा ओषंधीरा विंवेश । वैश्वानरस्सहंसा पृष्टो अग्निस्सनो दिवासः ॥ १ ॥ रिषः पांतुनक्तंम् । जातो यदंग्ने भुवंना

व्यख्यः पशुन्नगोपा इर्यः परिज्मा । वैश्वानर ब्रह्मणे विन्दगातुं यूयं पातस्वस्तिभिस्सदानः । त्वमग्ने शोचिषा शोशुचान आरोदसी अपृणाजायमानः । त्वन्देवाꣳ अभिशस्तेरमुञ्चो वैश्वानर जातवेदो महित्वा । अस्माकमग्ने मघवत्सुधारयानामि क्षत्रमजरꣳ सुवीर्यम् । वयञ्जयेम शतिनꣳ सहस्रिणं वैश्वानर ॥ २ ॥ वाजमग्नेतवोतिभिः । वैश्वानरस्य सुमतौस्यामराजाहिकं भुवनानामभिश्रीः । इतो जातो विश्वमिदं विचष्टे वैश्वानरो यतते सूर्येण । अवते हेडो वरुण नमोभिरवयज्ञेभिरीमहे हविर्भिः । क्षयन्नसभ्य मसुरप्रचेतो राजन्नेनाꣳसिशिश्रथः कृतानि । उदुत्तमं वरुणपाशमस्मदवाधमं विमध्यमꣳश्रथाय । अथावयमादित्य ॥ ३ ॥ व्रतेतवानागसो अदितयेस्याम । दधिक्राव्णो अकारिषंजिष्णोरश्वस्य वाजिनः । सुरभिनो मुखाकरत्प्रण आयूꣳषि तारिषत् । आदधिक्राश्शवसा पञ्चकृष्टीस्सूर्य इव ज्योतिषाऽपस्ततान । सहस्रसाश्शतसा वाज्यर्वा पृणक्तुमध्वासमिमा वचाꣳसि । अग्निर्मूर्धा भुवः । मरुतो यद्धवो दिवस्सुम्नायन्तो हवामहे । आतूनः ॥ ४ ॥ उपगन्तन । यावश्शर्मशशमानाय सन्तित्रिधातूनि दाशुषे यच्छताधि । अस्मभ्यन्तानि मरुतो वियन्त रयिन्नो धत्त वृषणस्सुवीरम् । अदितिर्न उरुष्यत्वदितिश्शर्म यच्छतु । अदितिः पात्वꣳहसः । महीमूषु मातरꣳ सुव्रतानामृतस्य पत्नीमवसे हुवेम । तुवि क्षत्रामजरन्ती मुरूचीꣳसु शर्माणमदितिꣳसु प्रणीतिम् । सुत्रामाणं पृथिवीन्द्यामनेह सꣳसु शर्माणमदितिꣳसु प्रणीतिम् । दैवीन्ना-

वꣳ स्वरित्रामनागसमस्रवन्तीमारुहे मा स्वस्तये। इमाꣳ सुनावमा-
ऽरुहꣳशतारित्राꣳशतस्फ्याम्। अच्छिद्रां पारयिष्णुम्॥ ५॥

இவ்வநுவாகத்தில் காமிய யாஜ்யா புரோநு வாக்கியங்கள் கூறப்படுகின்றன. அவற்றுள், இஷ்டி காண்டத்தில் மூன்று அவிகளை யுடைய ஒரு இஷ்டி விதிக்கப்படுகின்றது. அது, 'वैश्वानर न्द्वादशकपालं' என்பது முதலியதாம். இவ் விஷ்டியில், முதலாவது அவியையுடைய யாஜ்யா புரோநு வாக்கியங்களின் இருமை விகற்பத்தால் அவை நான்காம். அவற்றுள்,

---

முதலாவது இரண்டின் புரோநு வாக்கியம்,

மந்திரம்—1

वैश्वानरोन ऊत्याऽऽप्रयातु परावतः। अग्निरुक्थेन वाहसा।

உரை.

எல்லா மக்கட்கும் உதவி புரியும் அக்கினியே வைசுவானரனும். அது, பாதுகாப்பின் பொருட்டு, தூரத்திலிருந்தும் கொண்டுவந்து சேர்க்கும் வன்மையுடையதாய் எழுந்திருந்து வந்து எம்மை அடைக என்பது.

---

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—2

ऋतावानं वैश्वानरमृतस्य ज्योतिषस्पतिम्। अजस्रङ्घर्ममीमहे।

உரை.

உண்மையுடையதும், வேள்வியின் விரும்பிய பலனை விளக்குந் தலைமை யுடையதும், இடையறாது ஒளிர்கின்றதுமாகிய வைசுவானர அக்கினியை யாம் அடைகின்றோம் என்பது.

---

இரண்டாம் யுக்மத்தில் புரோநுவாக்கியம்

மந்திரம்—3

वैश्वानरस्य दꣳसनाभ्यो बृहदरिणा देकस्स्वपस्यया कविः। उभा पितरा महयन्नजायताग्निर्द्यावापृथिवी भूरिरेतसा।

உரை.

நுண்ணறிவாளனாகிய வேள்வித்தலைவன், வைசுவானர சம்பந்தமுடைய கிரியைகளின் பெரும்பயனை யடைவானாக. இது வைசுவாநர யாகமாகிய நற்கருமத்தால் என்பது பொருள். இவ்வக்கினி, வான் மண் வடிவினதும், மிகுந்த வீரி

யத்தை யுடையதும், மாதா பிதாக்களை யுடையதும், உலகத்தால் போற்றுந் தன்மையுடையதுமாய்த் தோன்றியது. ஆதலின், இதனுடைய கருமம், பெரும் பயனையுடையதென்பது பொருந்தும் என்பது.

---

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—4

**पृष्टोदिवि पृष्टोअग्निः पृथिव्यां पृष्टोविश्वा ओषधीरा विवेश । वैश्वानरस्सहसा पृष्टो अग्निस्सनो दिवास रिषः पातुनक्तम् ।**

உரை.

இவ்வக்கினி, இரவியாய் வானிலிருக்கின்றது. மண்ணிலும், சமைத்தல், சுடல், விளக்கல்களைச் செய்து கொண்டிருக்கின்றது. பலபாகத்தைச் செய்வதாய்க் கூடி நின்று எல்லாக் கொடி செடிகளிலும் புகுந்திருக்கின்றது. வைசுவாநராக்கினி வன்மையோடு கூடியது. அத்தகைய அவ்வக்கினி, எம்மை, இரவும் பகலும் பாவத்தினின்றும் பாதுகாப்பதாகுக என்பது.

---

மூன்றும் யுக்மத்தில் புரோநுவாக்கியம்

மந்திரம்—5

**जातो यदग्ने भुवनाव्यख्यः पशुन्नगोपाइर्यः परिज्मा । वैश्वानर ब्रह्मणे विन्दगातुं यूयं पातस्वस्तिभिस्सदानः ।**

உரை.

உண்வுப் பொருள்களுக்கு உரியோனும், நாற்புறத்துஞ் செல்கின்றவனுமாகிய அக்கினியே! நீ, தோற்ற மாத்திரத்தானே, புவனங்களை அறிவுறுத்தினை. எதுபோலெனின்? கோ பாலகன் பசுவைக் சுட்டிக் காட்டுவதுபோல் என்க. நீ இத் தன்மையனுதலின், வைசுவாநர! பெரிய இக் கருமத்தின் வழியை அறிவாயாக. நீ, எப்போதும் எம்மை, நலத்துடன் பாதுகாப்பாயாக என்பது.

---

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—6

**त्वमग्ने शोचिषा शोशुचान आरोदसी अपृणाजायमानः । त्वन्देवाँ अभिशस्तेरमुञ्चो वैश्वानरजातवेदो महित्वा ।**

உரை.

அக்கினியே! நீ, தோற்றமாத்திரத்தானே வானையும் மண்ணையும், ஒளி

யால் யாண்டுஞ் சூழ்ந்து கொண்டனை. தோன்றியவைகளை யுணரும் வைசுவாநர அக்கினியே! நீ, தனது மகிமையால் இருத்துவிக்குக்களை, பாவத்தினின்றும் விடுவித்தனை என்பது.

---

நான்காம் யுக்மத்தில் புரோநுவாக்கியம்

மந்திரம்—7

**अस्माकमग्ने मघवत्सुधारयानामि क्षत्रमजरꣳ सुवीर्यम्। वयञ्जये मशतिनꣳ सहस्रिणं वैश्वानर वाजमग्नेतवोतिभिः।**

உரை.

பிறர்க்கு வணக்கஞ் செய்யாததும், மூப்பிலாததும், கேடிலாத வன்மையுடையதுமாகிய பரிபாலனத் தன்மை இந்திரனுக்கிருப்பதுபோல் எமக்கும் அருள் செய்வாயாக. வைசுவானர! உனது பாதுகாப்புக்களால் நூற்றுக்கணக்கான உணவுப் பொருள்களை வெல்வோமாக என்பது.

---

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—8

**वैश्वानरस्य सुमतौस्यामराजाहिकं भुवनानामभिश्रीः। इतोजातो विश्व-मिदं विचष्टे वैश्वानरो यतते सूर्येण।**

உரை.

யாம், வைசுவானரனுடைய அருளில் நிலைத்து நிற்போம். செல்வமிக்க இவ் வைசுவானரன், இரவி வடிவாய் பகற்போது செல்கின்றான். எல்லாப் புவனங்களையும் விளக்குகின்றான். இதனானே, உதித்த மாத்திரத்தானே இவ்வுலகைச் சிறப்பாக அறிவுறுத்துகின்றான் என்பது.

---

இரண்டாம் அவியின் புரோநுவாக்கியம்

மந்திரம்—9

**अवते हेडो वरुण नमोभिरवयज्ञेभिरीमहे हविर्भिः। क्षयन्नस्मभ्य मसुरप्र-चेतो राजन्नेनाꣳसि शिश्रथः कृतानि।**

உரை.

வருணனே! உனது முனிவை, வணக்கங்களாற் சாந்தப்படுத்துகின்றோம். மற்றும், வேள்வி விசேடங்களாலும், புரோடாசம் முதலான அவிகளாலும் அடக்குகின்றோம். பகைவரைக் கெடுக்குந் திறலோய்! நன் மனத்

புரோநுவாக்கியம்)

தோய்! ஒளிர்க்கின்றோய்! நீ, எமக்கு அருள் செய்தற் பொருட்டு இங்கு வசித்திருந்து, எம்மாற் செய்யப்படுகின்ற பாவங்களைப் போக்குவாயாக என்பது.

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—10

**उदुत्तमं वरुणपाशमस्मदवाधमं विमध्यमꣳश्रथाय। अथावयमादित्य व्रतेतवानागसो अदितयेस्याम।**

உரை.

வருண! எனது தலையிற் கட்டியுள்ள உனது பாசத்தை அவிழ்த்து அறுத்தெறிவாயாக. காலில் உள்ள பாசத்தையும் எடுத்து விடுவாயாக. இடையில் உள்ள பாசத்தையும் நீக்கி விடுவாயாக. இவ்வாறு மூன்று பாசங்களையுந் தொலைத்த பிறகு, இரவியை ஒத்த வருண! யாம், பாவமொழிந்தவர்களாய் உனது விரதமாகிய எமது கருமத்தில் நிலைப்பதற்கு உரியராவோம் என்பது.

மூன்றும் அவியின் புரோநுவாக்கியம்

மந்திரம்—11

**दधिक्राव्णो अकारिषंजिष्णोरश्वस्य वाजिनः। सुरभिनो मुखाकरत्प्रण आयूꣳषितारिषत्।**

உரை.

'ததிக்ராவ' (தயிர்ப் பிரியன்) என்பது ஒரு தேவதை விசேடம், (அக்கினி யென்பர் பிறர்.) அத் தேவதையின் கருமத்தைச் செய்கின்றவனாயிருக்கின்றேன். அத் தேவதை எத் தன்மையதெனின்? வெற்றித் தன்மையையுடையது, நிறைந்தது, உணவுப் பொருளை யுடையது என்க. அத் தேவதை எமது முகத்தை நறுமண முடையதாகச் செய்க. எமது ஆயுளை வளர்க்குக என்பது.

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—12

**आदधिक्राश्शवसा पञ्चकृष्टीस्सूर्य इवज्योतिषाऽपस्तता। सहस्रसाश्शतसा वाज्यर्वा पृणक्तुमध्वासमिमा वचाꣳसि।**

உரை.

'ததிக்ராவ' என்னுந் தேவதை, நிஷாதர்களை (வேடர்களை) ஐந்தாவதாகக் கொண்ட ஐவகை மக்களையும் வளர்க்கின்றது. (தழைக்கச் செய்கின்றது.) எவ்வாறெனின்? இரவி, மண்ணின் சாரத்தை யிழுத்து மழைக்காலத்தில் தண்ணீரைப் பெருக்குவது போன்றென்க. அத் தேவதை எத்தன்மையதெனின்? ஆயிரக் கணக்கான பொன்களை யளிக்கின்றதாம். அவ்வாறே நூற்றுக்கணக்கான பொன்களையு மளிக்கின்றதாம். உணவுப் பொருள்களை யுடையதுமாம், கருமத் தலத்திற்கு வருவதுமாகும். அத்தகைய தேவதை, சுவையுடைய எனது துதிகளை ஏற்றுக்கொள்க என்பது.

---

ஆக்னேய அவிகளின் யாஜ்யா புரோநு வாக்கியங்களில் இரண்டு சொற்கள் கூறப்படுகின்றன,

மந்திரம்—13, 14

अग्निर्मूर्धा भुवः ।

உரை.

இவ் விரண்டிற்கும், 'अग्निर्मूर्धा' என்பது புரோநு வாக்கியமாம். இதற்கு 'உபப்ரயந்த' என்னும் அநுவாகத்தில் உரை கூறப்பட்டுள்ளது ஆண்டுக் காண்க. 'भुवो यज्ञस्य' என்பது, யாஜ்யா. இதற்கும், நான்காங் காண்டத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது ஆண்டுக் காண்க என்பது.

---

மாருதயாகத்தில் புரோநுவாக்கியம்

மந்திரம்—15

मरुतो यद्ध वो दिवस्सुम्नायन्तो हवामहे । आतू न उपगन्तन ।

உரை.

மருத்துக்காள்? உங்களை யாம் சுகத்தை விரும்பி, வானுலகினின்றும் அழைக்கின்றோமாதலின் அழைக்கப்பெற்ற நீவிர் எம்மிடம் வருவீர்களாக என்பது.

---

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—16

यावच्छर्मशशमानाय सन्तित्रिधातूनि दाशुषे यच्छताधि । अस्मभ्यन्तानि मरुतो वियन्तरयिन्नो धत्त वृषणस्सुवीरम् ।

உரை.

மருத்துக்காள்? உங்களை வழிபடுவோர்க்குக் கொடுப்பதன் பொருட்டு வைத்திருக்கின்ற சுகங்களையும், அவி யளிப்பவர்களின் பொருட்டுக் கொடுப்பதற்கு வைத்திருக்கும் மூன்றுலகத்துமுள்ள சம்பத்து முதலானவைகளையும், நீவிர், எமக்குக் கொடுப்பீர்களாக என்பது.

'आदित्यं चरुं निर्वपेत्' என்பது முதலிய வாக்கியத்தால் விதிக்கப்படும் இஷ்டியில் இரண்டு யுக்மம் கூறப்படுகின்றது,

அவற்றுள் முதல் யுக்மத்தில் புரோநுவாக்கியம்

மந்திரம்—17

**अदितिर्न उरुष्यत्वदितिश्शर्म यच्छतु । अदितिः पात्व ँ हसः ।**

உரை.

அதிதி தேவி, பகைவரினின்றும் பாதுகாப்பாளாக சுகமளிப்பாளாக பாவங்களினின்றும் பாதுகாப்பாளாக என்பது.

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—18

**मही मूषु मातर ँ सुव्रतानामृतस्य पत्नीमवसे हुवेम । तुवि क्षत्रामजरन्ती मुरूची ँ सु शर्माणमदिति ँ सु प्रणीतिम् ।**

உரை.

அதிதி தேவதையையே எமது பாதுகாப்பின் பொருட்டு அழைக்கின்றோம். எத்தகைய அதிதி தேவதை யெனின்? பெரிதும், நற்கரும முடையார்க்குத் தாயும், அதாவது தாய் போன்று நலஞ் செய்வதும், உண்மையைப் பாதுகாப்பதும், பல மன்னர்களைப் பாதுகாப்பதும், கட்டிளமை யுடையதும், பரந்து செல்வதும், நல்ல சுகமுடையதும், கருமங்களை நன்கு நடாத்துவதுமாமென்பது.

இரண்டாம் யுக்மத்தில் புரோநுவாக்கியம்

மந்திரம்—19

**सुत्रामाणं पृथिवीन्द्यामनेहस ँ सु शर्माणमदिति ँ सु प्रणीतिम् । दैवीन्नाव ँ स्वरित्रामनागसमस्रवन्तीमारुहे मा स्वस्तये ।**

உரை.

நன்கு பாதுகாப்பதும், பரந்ததும், ஒளிர்கின்றதும், பாவமற்றதும், நெடுங்கால மிருப்பதும், தெய்வீக ஓடமும், இது பூமி தண்ணீரில் மிதக்கின்ற

தாலென்க. பகைவரிலிருந்து பாதுகாப்பதும், துளையின்றியதுமாகிய பூமியென்னும் அதிதி தேவதையை நலத்தின் பொருட்டு அடைகின்றோம் என்பது,

யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—20

**इमाँ सुनावमाऽरुहँ शतारित्राँ शतस्फ्याम् । अच्छिद्रां पारयिष्णुम् ॥ ५ ॥**

உரை.

பூமியாகி நல்ல ஓடத்தின் மீது ஏறியிருக்குந் தன்மையை யடைந்தனம். (அது எவ்வண்ணமாகிய ஓடமெனின் ?) கள்ளர்களின் பொருட்டுப் பாதுகாக்க நூற்றுக்கணக்கான ஆயுதங்களை யுடையதும், அதாவது திக்பாலகர்களால் பரிபாலிப்பது என்பது பொருள். கத்திபோன்ற ஓடந் தள்ளுந் தடிகளை நூற்றுக் கணக்காக வுடையதும், அதாவது தவளை, ஆமை முதலானவைகளைத் தாங்குகின்றது என்பது பொருள். அடியில் நீர் போகும் வழியற்றதும், வேண்டிய பயனை யடையக் கரை காட்டுவதுமாம் என்க.

ஐந்தாம் பிரபாடகம் முடிந்தது.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

### பிரபாடக விடயச் சுருக்கம்.

षष्ठे प्रश्ने याजमान काण्डे द्वादश वर्णिताः ।
अनुवाकाः षट्सु मन्त्रा ब्राह्मणं पञ्चसूदितम् ॥ १ ॥
अन्ते याज्याः क्रमेणाऽऽज्यग्रहणाद्यनुमन्त्रणम् ।
आज्यग्रहो मुख्यहोमो भक्ष्यश्शेषाहुतिस्तथा ॥ २ ॥
एतेऽनुमन्त्रणीयार्था मन्त्रा आप्यायनादिगाः ।
सूर्योपस्थित्यादिमन्त्रा ब्राह्मणेतु विभज्यते ॥ ३ ॥
परिग्रहो देवताना मायुधानांच संभृतिः ।
द्वादश द्वन्द्व संपत्तिर्हविषां सादने विधिः ॥ ४ ॥
विधिरा श्रावणादीनां याज्या इत्यनुवाकगाः ।

இப் பிரபாடகம், யாஜமான காண்ட மெனப்படும். இதில், பன்னிரண்டு அநுவாகங்களிருக்கின்றன. அவற்றுள், முதல் ஆறு அநுவாகங்களில் மந்திரங்களும், பிறகு ஐந்து அநுவாகங்களிலும் முன் ஆறு அநுவாகங்களின் பொருளும், கடைசி அநுவாகத்தில் காமிய யாஜ்யா புரோநு வாக்கியங்களுங் கூறப்பட்டுள்ளன.

சுருக்குக்களில் நெய் யெடுக்கும்போது போற்றல், ஆஜ்ய பாகங்களையும், பிரதான ஹோமங்களையும், இடா பாகங்களையும் அருந்தும்போதும், அநூயாஜ ஹோமங்களையும் போற்றல், ஆப்யாயனஞ் செய்தல், சூரியனைத் துதித்தல்.

இஷ்டியில் எவ்வெத் தேவர்களை பூசிக்க வேண்டும்? எக் கருவிகளைத் தேடல் வேண்டும்? பன்னிரண்டு துவந்துவங்கள் ஏற்படும் விதம், அவியை வைக்கும் விதி, ஆக்னீத்திரனை ஏவல் முதலியவைகளின் விதி, யாஜ்யா புரோநு வாக்கியங்களுங் கூறப்படுகின்றன என்பது.

## முதலாவது அநுவாகம்

### விடயச் சுருக்கம்.

स्याद्दर्शपूर्णमासस्थं काण्डंतु यजमानगम् ।
षष्ठः प्रश्नस्तत्र संत्वा स्कन्नाज्यं प्रक्षिपेत्स्रुचि ॥ १ ॥
आज्यमाज्यमवेक्षेत पञ्चानां त्वा चतुर्दश ।
स्रुक्ष्वाज्यमन्त्रणे मन्त्रा इति मन्त्रास्तु षोडश ॥ २ ॥

சிதறிய நெய்யைச் சுருக்கில் போடல், நெய்யைப் பார்த்தல், சுருக்குக்களில், பதினான்கு முறை நெய்யை யெடுத்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## முதலாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்கு மேல் முப்பத்து மூன்று பதங்களைக் கொண்டது.

---

### முக்கியமாய் நெய் யெடுப்பதைப் போற்றும் மந்திரங்கள்

सन्त्वां सिञ्चामि॒ यजु॑षा प्र॒जामायु॒र्धनं॑ञ्च । बृह॒स्पति॑ प्रसू॒तो॒ यज॑मान इ॒ह मारि॑षत् । आज्य॑मसि स॒त्यम॑सि स॒त्यस्याध्य॑क्षमसि ह॒विर॑सि वैश्वान॒रं वै॑श्वदे॒वमुत्पू॑तशुष्मꣳ स॒त्यौजा॒स्सहो॑ऽसि॒ सह॑-मानमसि॒ सह॒स्वारा॑ती॒स्सह॑स्वाराती यत॒स्सह॑स्व॒ पृत॑ना॒स्सह॑स्व पृत-न्य॒तः । स॒हस्र॑वीर्यमसि॒ तन्मा॑ जि॒न्वाज्य॒स्याज्य॑मसि स॒त्यस्य॑ स॒त्य-म॑सि स॒त्यायु॑: ॥ १ ॥ अ॒सि॒ स॒त्यशु॑ष्ममसि स॒त्येन॑ त्वा॒ऽभिघा॑रया-मि॒तस्य॑ ते भक्षीय प॒ञ्चाना॒न्त्वा वाता॑नां य॒न्त्राय॑ ध॒र्त्राय॑ गृह्णामि प॒ञ्चाना॒न्त्वर्तू॒नां य॒न्त्राय॑ ध॒र्त्राय॑ गृह्णामि प॒ञ्चाना॒न्त्वां दि॒शां य॒न्त्राय॑ ध॒र्त्राय॑ गृह्णामि प॒ञ्चाना॒न्त्वां प॒ञ्चज॒नानां॑ य॒न्त्राय॑ ध॒र्त्राय॑ गृह्णामि च॒रोस्त्वा॒ पञ्च॑बिलस्य य॒न्त्राय॑ ध॒र्त्राय॑ गृह्णा॒मि ब्रह्म॑णस्त्वा॒ तेज॑से य॒न्त्राय॑ ध॒र्त्राय॑ गृह्णामि क्ष॒त्रस्य॒ त्वौज॑से य॒न्त्राय॑ ॥ २ ॥ ध॒र्त्राय॑

गृह्णामि विशेत्वा यन्त्राय धर्त्राय गृह्णामि सुवीर्यायत्वा गृह्णामि सुप्रजास्त्वायत्वा गृह्णामि रायस्पोषायत्वा गृह्णामि ब्रह्मवर्चसायत्वा गृह्णामि भूरस्माकꣳ हविर्देवानामाशिषो यजमानस्य देवानान्त्वा देवताभ्यो गृह्णामि कामायत्वा गृह्णामि ॥ ३ ॥

---

சிதறிய, நெய்யை எடுத்துக் கொள்ளுதல், அல்லது, போற்றுதல்,

மந்திரம்—1

सन्त्वा सिञ्चामि यजुषा प्रजामायुर्धनञ्च । बृहस्पति प्रसुतो यजमान इह मारिषत् ।

உரை.

சிதறிய நெய்யே! பிருகற்பதியால் ஏவப்பெற்ற யான், பிரசை, ஆயுள், தன முதலானவைகளைத் தேடுகின்றேன். உன்னை, இம் மந்திரத்தால் பாத்திரத்தில் வார்க்கின்றேன். இக் கருமத்தில், வேள்வித்தலைவனை, சிதறிய குற்றத்தால் துன்புறுத்தல் கூடாது. இம் மந்திரம் அத்வரியுவினதாம், ஆதலின், வேள்வித்தலைவனைப் பிரித்துக் கூறுதல் மாறுபாடில்லை என்பது.

புநிதமாகிய விடத்தில் நெய் சிதறி இருக்கில், இம் மந்திரத்தால் அந் நெய்யை பாத்திரத்தில் வார்த்தல் வேண்டும். புநிதமில்லா விடத்தில் சிதறி இருக்கில், இம் மந்திரத்தால் நெய்யை அபிமந்திரண மாத்திரஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

வேள்வித் தலைவனும், வேட்போனும், நெய்யின் மீது மூச்சு விடாமல் கண்ணைத் திறந்து பார்த்தற்குரியது,

மந்திரம்—2

आज्यमसि सत्यमसि सत्यस्याऽध्यक्षमसि हविरसि वैश्वानरं वैश्वदेवमुत्पूत शुष्मꣳ सत्यौजास्सहोऽसि सहमानमसि सहस्वाऽरातीस्सहस्वा रातीयतस्सहस्व पृतनास्सहस्व पृतन्यतः । सहस्र वीर्यमसि तन्माजिन्वाज्यस्याऽज्यमसि सत्यस्य सत्यमसि सत्यायुरसि सत्यशुष्ममसि सत्येनत्वाऽभिघारयामि तस्यते भक्षीय ।

உரை.

அக்கினியை அடைவிப்பதும், உண்மையாகிய பயனுடையதும், சத்தியஞ் செய்வதற்குச் சாட்சியும், முக்கிய அவியும், உண்ணப்படுந் தன்மையால் எல்லா

மக்களின் சம்பந்த முடையதும், ஓமஞ் செய்வதால் எல்லாத் தேவதைகளின் சம்பந்தமுடையதும், பேராற்றலுடையதும், உண்மையாகிய வன்மையை யுடையதும், பகைவரை யடக்கும் வலியை யுடையதும், பகைவரை யடக்கு வதையேதொழிலாகவுடையதும், மனத்தால் விரோதஞ் செய்வோர்களை யடக்குவதும், பகைவரின் சேனைகளை யடக்குவதும், சேனைகளைப் பெருக்க விரும்பும் பகைவரை யடக்குவதும், ஆயிரக்கணக்கான வன்மைகளை யுடையதுமாக இருக்கின்றது. அத்தகைய நெய்யே! நீ, என்னைப் பிரியப்படுத்துவாயாக. புனிதமுடைமையின் நெய்க்கும் நெய்யா யிருக்கின்றாய். உலகப் பொருள்கள் சத்தியங்கள், நீயோ, சத்தியங்கட்குஞ் சத்தியமாக இருக்கின்றாய். உண்மையாகிய ஆயுளாயிருக்கின்றாய். பயனளிப்பதில் உண்மையாகிய பயனுடையதாயிருக்கின்றாய். அத்தகைய உன்னை, கண்ணுற் பார்க்கின்றேன். அத்தகைய வுன்னை யருந்துகின்றேன் என்பதாம்.

இம் மந்திரத்தால், நெய்யை நோக்கல் வேண்டும் என்பது.

---

ஒவ்வொரு முறை நெய் யெடுக்கும்போதும் போற்றுதல்,

### மந்திரம்—3

இது, பதினான்கு மந்திரங்களை யுடையது

**पञ्चानान्त्वावातानां यन्त्राय धर्त्राय गृह्णामि पञ्चानान्त्वर्तूनां यन्त्राय धर्त्राय गृह्णामि पञ्चानान्त्वा दिशां यन्त्राय धर्त्राय गृह्णामि पञ्चानान्त्वा पञ्चजनानां यन्त्राय धर्त्राय गृह्णामि चरोस्त्वा पञ्चबिलस्य यन्त्राय धर्त्राय गृह्णामि ब्रह्मणस्त्वा तेजसे यन्त्राय धर्त्राय गृह्णामि क्षत्रस्य त्वौजसे यन्त्राय धर्त्राय गृह्णामि विशेत्वा यन्त्राय धर्त्राय गृह्णामि सुवीर्यायत्वा गृह्णामि सुप्रजास्त्वा-यत्वा गृह्णामि रायस्पोषायत्वा गृह्णामि ब्रह्मवर्चसायत्वा गृह्णामि भूरस्माकं हविर्देवानामाशिषो यजमानस्य देवानान्त्वा देवताभ्यो गृह्णामि कामायत्वा गृह्णामि ।**

உரை

நாற்றிசைகளுடன், மேல் என்னும் ஐவகைத் திக்குக்களிலுமுள்ள ஐந்து வாயுக்களின், அல்லது, பிராணன் முதலான ஐவகை வாயுக்களின், செயல்களின் நியமனத்தின் பொருட்டும், உலகைத் தாங்குங் குசலத்தின் பொருட்டும், நெய்யே; உன்னை எடுத்துக்கொள்கின்றேன். மேலும், இவ்வாறே, ஐந்து இருதுக்களுக்குள்ளும் ஐந்து திசைகளிலுங் காண்க. தேவ, மனித, அசுர, ரக்ஷ, கந்தர்வ என்னும் ஐவகை ஜனங்கள், வெண்பொங்கலின் ஐந்து துளைகள், அந்த

போற்றுதல்)

ணனது பிரமஒளி, அரசரின் போர் வன்மை, வணிகனது வியாபாரம், மற்றும், எல்லாவற்றிற்கும் தத்தமது தொழில்களின் நியமனத்தின் பொருட்டும், மற்றும், நற்புத்திரன், மிகுதியாகிய தனம், பிரமவொளி, (மறையோதல்) பூரஸ்மாகம் என்பது முதலான மந்திரங்கள், ஹவிர்தேவானும், ஆசிஷோ யஜமானஸ்ய தேவானும், என்னும் மந்திரங்களிலுள்ள தேவர்களின் பொருட்டும், முறையே, எமது மேன்மையின் பொருட்டும், வேள்வித்தலைவனுடைய ஆசீர்வாதத்தின் பொருட்டும் அநுகூலமாவாயாக. தேவர்களைத் திருப்தி பண்ணுவதன் பொருட்டும் உன்னை எடுத்துக் கொள்கின்றேன். ஈண்டு, எடுத்துக்கொள்கின்றேன் என்பதை ஒவ்வொரு வாக்கியத்திலுஞ் சேர்த்துக்கொள்க. தேவர்கள், எவ்வாறு எவ்வாறு உன்னை விரும்புகின்றனரோ, அவ்வாறு அவ்வாறுள்ள விருப்பின் பொருட்டு உன்னை எடுத்துக்கொள்ளுகின்றேன் எனல் ஆபத்தம்ப சூத்திரம் என்பது.

முதல் அநுவாக முடிந்தது.

---

## இரண்டாவது அநுவாகம்

### விடயச் சுருக்கம்

ध्रुवोऽसीतित्रिभिर्मन्त्रैः परिधित्रयमन्त्रणम् ।
युनाग्नियोग इन्धानाः समिधोरनुमन्त्रणम् ॥ १ ॥
यन्मे हविर्मन्त्रयेत भूस्त्विभिः सादयेद्धविः ।
उच्छुष्मो मन्त्रयेतेध्म ममर्त्यं प्रवृतिं तथा ॥ २ ॥
स्रौवाघारं मनोऽसीति स्रुच्याघारंतु वागिति ।
वसन्तपञ्चभिर्मन्त्रैः प्रयाजान्पञ्चमन्त्रयेत् ॥ ३ ॥
अग्नीषोमेत्याज्य भागा वह्नेरित्यग्नि यागकम् ।
दधिघरुपांशुयाजस्य स्पष्टमग्नीतिपञ्चकम् ॥ ४ ॥
अनुवाके द्वितीयेऽस्मिन्मन्त्राः षड्विंशतिर्मताः ।

விறகுகளைப் போற்றல், அக்னியைப் போற்றல், அவியைப் போற்றல், அவியை அந்தர்வேதியில் வைத்தல், சாமிதேனி (விறகு)களைப் போற்றல், கோத்திரஞ் சொல்லும்போதுப் போற்றல், சுருவாகாரத்தையும் சுருக்காகாரத்தையும் போற்றல், பிரயாஜங்களைப் போற்றல், ஆஜ்யபாகங்களைப் போற்றல், பிரதான ஹவிர் ஹோமங்களைப் போற்றல் என்பது.

## முதற் காண்டம் ஆறும் பிரபடகம்

## இரண்டாவது அநுவாகம்

மூன்று பஞ்சாதிச்சு மேல் முப்பத்தாறு பதங்களைக் கொண்டது

—•—

அவி ஹோமத்தைப் போற்றும் மந்திரங்கள்

ध्रुवोऽसि ध्रुवोऽहꣳ सजातेषु भूयासन्धीरश्चेत्ता वसुविदुग्रोऽस्युग्रोऽहꣳ सजातेषु भूयासमुग्रश्चेत्ता वसुविदभिभूरस्यभिभूरहꣳ सजातेषु भूयासमभिभूश्चेत्ता वसुविद्युनज्मित्वा ब्रह्मणा दैव्येन हव्यायास्मै वोढवे जातवेदः । इन्धानास्त्वा सुप्रजसस्सुवीराज्योग्जीवेम बलिहृतो वयन्ते । यन्मे अग्ने अस्य यज्ञस्य रिष्यात् ॥ १ ॥ यद्वा स्कन्दादाज्यस्योत विष्णो । तेन हन्मिसपत्नन्दुर्मरायुमैनन्दधामि निर्ऋत्या उपस्थे । भूर्भुवस्सुवरुच्छुष्मो अग्ने यजमानाये धिनिशुष्मो अभिदासते । अग्ने देवेद्धमन्विद्धमन्द्र जिह्वाऽमर्त्यस्यते होतर्मूर्धन्नाजिघर्मि रायस्पोषाय सुप्रजास्त्वाय सुवीर्याय मनोऽसि प्राजापत्यं मनसा माभूतेनाविश वागस्यैन्द्री सपत्नक्षयणी ॥ २ ॥ वाचामेन्द्रियेणा विश वसन्तमृतूनां प्रीणामि समाप्रीतः प्रीणातु ग्रीष्ममृतूनां प्रीणामि समाप्रीतः प्रीणातु वर्षा ऋतूनां प्रीणामि तामाप्रीताः प्रीणन्तु शरदमृतूनां प्रीणामि सामा प्रीता प्रीणातु हेमन्त शिशिरावृतूनां प्रीणामितौ मा प्रीतौ प्रीणीतामग्नीषोमयो रहन्देवयज्यया चक्षुष्मान्भूयासमग्ने रहन्देवयज्ययाऽन्नादो भूयासम् ॥ ३ ॥ दब्धिरस्यदब्धो भूयासममुन्दभेय मग्नीषोमयो रहन्देवयज्यया वृत्रहा भूयासमिन्द्राग्नियो रहन्देवयज्ययेन्द्रिया व्यन्नादो भूयास मिन्द्रस्याहन्देवयज्ययेन्द्रियावी

போற்றுதல்)

भूयासं महेन्द्रस्याहन्देवयज्यया जेमानं महिमानङ्गमेयमग्नेस्स्विष्ट-
कृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेयम् ॥ ४ ॥

முதலநுவாகத்தில், அவி (நெய்) யெடுத்தலைப் போற்றுதல் கூறப்பட்டது. இரண்டாமநுவாகத்தில் அவிஹோமத்தைப் போற்றுதல் கூறல் வேண்டும். அதில், ஓமம் பண்ணப்பெற்ற நெய் வெளியில் தெறித்துவிழாமலிருக்குமாறு, அங்கு வைத்துள்ள பரிதி (விறகு) களைப் போற்றல் முதலியது கூறப்படுகின்றது.

---

பரிதிகளைப் போற்றல்,

இது, மூன்று மந்திரங்களைக் கொண்டது

மந்திரம்—1-2-3

ध्रुवोऽसि ध्रुवोऽहꣳ सजातेषु भूयासन्धीरश्चेत्ता वसुविदुग्रोऽस्युग्रोऽहꣳ
सजातेषु भूयासमुग्रश्चेत्ता वसुविदभिभूरस्यभिभूरहꣳ सजातेषु भूया-
समभिभूश्चेत्ता वसुवित् ।

உரை.

மத்தியம (மேற்கிலுள்ள) பரிதியே! (விறகே!) நீ, அரக்கர்களால் அசைக்க முடியாமையின் நிலையா யிருக்கின்றாய். நிலைத்துள்ள உன்னைப் போற்றுதலால், எம்மவர்கட்குள் யானும் நிலையுடைவனாவேனாக. மற்றும், உறுதியுடையவனும், இராக்கதரைக் கொல்லும் உபாயத்தை யுணர்ந்தவனும், தனமுடையவனுமாவேனாக. தெற்கிலுள்ள விறகே! நீ, இராக்கதரைக் கொல்வதில் உக்கிரமுடையோனா யிருக்கின்றாய். உன்னைப் போற்றுதலால் யானும் உக்கிரமுடையவ னாவேனாக. (உக்கிரத் தன்மை: சுற்றத்தார் எதிரிகளாகாமற் செய்தல்) மற்றும், பகைவரைக் கொல்வதிலும் உக்கிரமுடைய னாவேனாக. உத்தர (வடக்கிலுள்ள) பரிதியே! நீ, அரக்கரை யடக்குவோனா யிருக்கின்றாய். உன்னைப் போற்றுவதால், யானும், சுற்றத்தாரையும், பகைவரையும் அடக்கி விடுவேனாக என்பதாம்.

---

அக்கினியைப் போற்றல்

மந்திரம்—4

युनज्मित्वा ब्रह्मणा दैव्येन हव्यायाऽस्मै वोढवे जातवेदः ।

உரை.

தோன்றியவற்றை யுணரும் அக்கினியே! தேவர்கட்குரிய மந்திரத்தால், இக்கருமத்தில், அவியைக் கொண்டுபோதற் பொருட்டு உன்னை இதில் சேர்க்கின்றேன் என்பது.

---

இதுவமது

மந்திரம்—5

इन्धानास्त्वा सुप्रजसस्सुवीराज्योग्जीवेम बलिहृतो वयन्ते ।

உரை.

தோன்றியவற்றை யுணரும் அக்கினியே! உன்னை வளர்க்கின்ற யாம், நல்ல புதல்வர்களை யுடையவர்களாயும், நல்ல ஏவற்காரரை யுடையவர்களாயுமாகி, உனது பூசையை ஏற்றுச் செய்கின்றவர்களாய் நீண்டகாலம் வாழ்வோமாக என்பது.

---

இதுவமது

மந்திரம்—6

यन्मे अग्ने अस्य यज्ञस्य रिष्याद्यद्वा स्कन्दादाज्यस्योत विष्णो । तेन
हन्मिसपत्नन्दुर्मरायुमैनन्दधामि निर्ऋत्या उपस्थे ।

உரை.

வியாபகமாகிய அக்கினியே! எனது வேள்விக்குரிய தருப்பை முதலான பொருள்களைக் கெடுக்கின்ற இராக்கதர் முதலானோரை, கீழே சிதறி விழும் நெய்த்துளியால், அல்லது, நெய்யால் நாசப்படுத்துகின்றேன். கொல்ல முடியாத பகைவனை, பாவதேவதையின் இடுப்பில் வைக்கின்றேன் என்பது.

---

இதுவமது

வியாகிருதியின் சிறப்பு

மந்திரம்—7-8-9

भूर्भुवस्सुवः ।

உரை.

பூர், புவ:, ஸ்வ:, என்பது முறையே மூவுலக வாசகங்கள். இந்த அவிகளும் மூவுலகங்களா மெனத் துதிக்கப்படுகின்றன. இம் மூன்று சொற்களும் எஜமான காண்டத்தில், கூறப்பட்டிருப்பினும் நேரே பிராமண வாக்கியத்தால் அத்வர்யுவின் கிரியையில் விநியோகப்பட்டிருத்தலின் இவைகள் மேம்பட்டவைகள் என்பதை யுணர்க என்பது.

### விறகை ஏற்றுக்கொண்ட தீயைப் போற்றல்

### மந்திரம்—10

**उरुष्युष्मो अग्ने यजमानायैधि निशुष्मो अभिदासते। अग्ने देवेद्धमन्विद्ध मन्द्रजिह्व।**

உரை.

ஒளி முதலான குணங்களை யுடையோய்? தேவர்களால் எரியச் செய்யப் பெற்றோய்! மநுவால் வளர்க்கப் பெற்றோய்! களிப்பிற்கு ஏதுவாகிய நாவை யுடையோய்! அக்கினியே! நீ, வேள்வித்தலைவன் பொருட்டு பேராற்றல் உடையவனுவாயாக. அதாவது, வேள்வித் தலைவனுடைய காரியங்களில் வெளிப்பட்ட வன்மையுடையவனுவாயாக என்பதாம். மற்றும், பகைவரைக் கெடுக்கத்தக்க வன்மையை யுடைவனுமாவாய் என்பதாம். இப்பொருளே நான்கு முறை விளிப்பதாற் குறிப்பிடப்படுகின்றது என்பது.

---

### குலமரபை வளர்க்கின்ற தீயைப் போற்றுதல்

### மந்திரம்—11

**अमर्त्यस्यते होतर्मूर्धन्नाजिघर्मि रायस्पोषाय सुप्रजास्त्वाय सुवीर्याय।**

உரை.

தேவர்களை வரவழைக்கும் அக்கினியே! இறப்பிலாத உனது சிரசின் மீது, வேள்வித் தலைவனுக்கு, தனமிகுதி, நற்புதல்வன், நல்லவன்மை என்பவைகள் உண்டாதற் பொருட்டு நெய் முதலானவைகளை வார்க்கின்றேன் என்பது.

---

### சுருவஆகார ஹோமத்தைப் போற்றுதல்

### மந்திரம்—12

**मनोऽसि प्राजापत्यं मनसा माभूतेनाऽऽविश।**

உரை.

சுருவத்தாற் செய்யப்படும் ஆகார ஹோமமே! நீ, மனமாயிருக்கின்றாய். பிரசாபதியின் சம்பந்தமுடையதாகவும் இருக்கின்றாய். (பிரசாபதியைத் தியானம் பண்ணும் அத்வரியுவினால் செய்யப்பெற்றமையின் பிரசாபதியின் சம்பந்தமாம்) ஆதலின், பிரசாபதியாற் செய்யப்பெற்ற வேள்வியோடும், அதன் சாதனமாகிய மனதோடுங்கூட எம்மை யடைவாயாக. பூதம் என்றது = பிரசாபதியாற் செய்யப்பட்ட யக்ஞமாம். இது, பிராமணம் அவ்வாறே கூறுதலினென்க என்பது

---

சுருக் ஆகார ஹோமத்தைப் போற்றுதல்

மந்திரம்—13

वागस्यैन्द्री सपत्नक्षयणी वाचामेन्द्रियेणाऽऽविश ।

உரை.

சுருக்காற் செய்யப்படும் ஆகார ஹோமமே! நீ, வாக்கா யிருக்கின்றாய். எத்தன்மைய வாக்கெனின்! இந்திரனால் வெளிப்பட்டமையின் பகைவரைக் கொல்லுந் தன்மையது. மந்திரத்தை ஓதும் அத்துவரியுவினால் உண்டாக்கப் பெற்றமையின் ஆகார ஹோமம் வாக் எனப்பட்டது. அத்தகைய வாக்குடனும், இந்திரனால் ஆக்கப்பெற்ற கண் முதலான இந்திரியங்களுடனும் கூடியவனாக என்னைச் செய்வாயாக என்பது,

---

பிரயாஜங்களைப் போற்றுதல்

மந்திரம்—14-15-16-17-18

இது ஐந்து மந்திரங்களைக் கொண்டது

वसन्तमृतूनां प्रीणामि समाप्रीतः प्रीणातु ग्रीष्ममृतूनां प्रीणामि समाप्रीतः प्रीणातु वर्षा ऋतूनां प्रीणामिताम्प्रीताः प्रीणन्तु शरदमृतूनां प्रीणामि सामाप्रीता प्रीणातु हेमन्तशिशिरावृतूनां प्रीणामितौ मा प्रीतौ प्रीणीताम् ।

உரை.

'இருது' என்பதால், 'சமித்' முதலான ஐவகை யாகாபிமானி தேவதைகளை யான் களிப்படைவிக்கின்றேன், களிப்புற்ற அத்தேவர்கள் என்னைக் களிப் புறுவிப்பார்களாக எனல் பொருள் என்பதாம்.

---

ஆஜ்யபாகங்களைச் செய்துவிட்டு தன்னை வாழ்த்திக் கொள்ளுதல்

மந்திரம்—19

अग्नीषोमयो रहन्देवयज्यया चक्षुष्मान्भूयासम् ।

உரை.

வடக்குப் பாதியில், அக்கினியின் பொருட்டு ஹோமம், தெற்குப் பாதியில் சோமன் பொருட்டு ஹோமம் எனக் கூறப்பட்டிருத்தலின், ஆஜ்யபாகத்திற்குத் தேவதைகள் அக்கினி சோமன்களாவார்கள்; அவர்களைப் பற்றிய மந்திரங்களுடன் அத்துவரியுவாற் செய்யப்படு நெய்யாகுதியால் வேள்வித்தலைவனாகிய யான், கண்ணையுடையவனாவேனாக. இது பிராமணத்தில், ஆஜ்யபாகங்கள் கண்கள் என்று கூறியிருத்தலின் என்பது கருத்து.

அக்கினி யாகத்தைப் போற்றுதல்

மந்திரம்—20

अग्नेरहन्देवयज्ययाऽन्नादो भूयासम् ।

உரை.

அமாவாசை பௌர்ணமிகளுக்குள், முக்கிய யாகத்திற்கு அக்கினி தேவதையாகும். அவ் வக்கினி, அன்னத்தை யருந்துவதாம். ஆதலின், அவ் வேள்வியால் வேள்வித் தலைவனாகிய யான் அன்னமுண்போனாவேனாக என்பதாம்.

---

உபாம்சுயாகத்தைப் போற்றுதல்

மந்திரம்—21

दब्धिरस्यदब्धो भूयासममुन्दभेयम् ।

உரை.

உபாம்சு யாகத்திற்கு, பிரசாபதி, விஷ்ணு, அக்கினி சோமன் என்பவர்களுள் ஒருவர் தேவதையாவர். உபாம்சு யாக மே! நீ, எம்மிடம் பொறாமை யுடையவர்களைக் கொல்லுவோனா யிருக்கின்றாய்; உனது அருளால், யான், பகைவரால் துன்புறுத்துப்படாதோனாவேனாக. இப் பகைவனைக் கொல்லுகின்றேன். ஈண்டு, இது, என்னுஞ் சுட்டு எஜமானனால் எண்ணப்படுகின்றவனைக் குறிக்கின்றது என்பது.

---

அக்கினிஷோம யாகத்தைப் போற்றுதல்

மந்திரம்—22

अग्नीषोमयो रहन्देवयज्यया वृत्रहा भूयासम् ।

உரை.

பௌர்ணமி யாகத்தின் மூன்றாவது யாகத்திற்கு அக்கினி சோமர்கள் தேவதைகளாவார்கள். அவர்கள் செய்தது, 'விருத்ரஹத்யா நிமித்தம் த்வஷ்டா ஹத புத்திர, என்னும் அநுவாகத்தில், விருத்திரனைக் கொல்வதன் பொருட்டென்பது விரித்துக் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலின், அந்த யாகத்தால், வேள்வித் தலைவன் பகைவனைக் கொல்லுகின்றவன் ஆவன் என்பதாம்.

---

இந்திராக்கினி யாகங்களைப் போற்றுதல்

மந்திரம்—23

इन्द्राग्नियो रहन्देवयज्ययेन्द्रियाव्यन्नादो भूयासम् ।

(இடா முதலியவற்றைப்

உரை.

அமாவாசையில் சோமயாகம் பண்ணுதவனுக்கு, சாங்நாயம் (பால் தயிர்) இன்மையின், இரண்டாவது புரோடாசத்திற்கு இந்திரன் அக்கினி தேவதைகளாவார்கள். அவர்களுள், இந்திரனருளால் வேள்வித் தலைவனுகிய யான், இந்திரியத்துடன் கூடியவனும், அக்கினியால் அன்ன முண்போனுமாவேனுக என்பதாம்.

இந்திர யாகத்தைப் போற்றுதல்

மந்திரம்—24

**इन्द्रस्याहन्देवयज्ययेन्द्रियावी भूयासम् ।**

உரை.

சாங்நாயத்திற்கு (பால் தயிர்க்கு) இந்திரன் தேவதை யாதலின், அத்தகைய இந்திர யாகத்தால் (இந்திரனருளால்) யான் இந்திரிய முடையனுவேனுக என்பதாம்.

மாஹேந்திர யாகத்தைப் போற்றுதல்

மந்திரம்—25

**महेन्द्रस्याहन्देवयज्यया जेमानं महिमानङ्गमेयम् ।**

உரை.

சில சாங்நாயத்திற்கு (பால் தயிர்களுக்கு) மகேந்திரன் தேவதையாவன். அதில், இந்திரன் என்னுஞ் சொல்லிருத்தலின் என்க. ஆதலின், வேள்வித் தலைவனுகிய யான், வெற்றித் தன்மையையும், 'மகான்' என்னுஞ் சொல்லால், கல்வி, ஐசுவரிய முதலான குணங்களையு மடைவேனுக என்பதாம்.

சுவிஷ்டகிருத், என்னும் வேள்வியைப் போற்றுதல்,

மந்திரம்—26

**अग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेयम् ।**

உரை.

சில அக்கினி, சில நிமித்தத்தால், உருத்திரன் என்னும் பெயரை யடைகின்றது. அவ்வக்கினி, ஒரு காலத்தில் தேவர்களால் அழைக்கப் பெற்று வேள்விகளின் குறைவை நீக்கி வேண்டியவற்றை நன்கு செய்தது. இது பிராமணங்களில் பல விடங்களிற் கூறப்பட்டிருக்கின்றது. ஆதலின், அக்கினியால், யான் நலஞ் செய்யப்பெற்றனன். அதாவது வேள்வித் தலைவன், வேள்வியால் நீண்ட ஆயுளையும், புகழையும் அடைகின்முன் என்பதாம்.

இரண்டாவது அநுவாகம் முடிந்தது.

## மூன்றாவது அநுவாகம்

### விடயச் சுருக்கம்

अग्निः प्राशित्राऽवदानं योमेऽन्ति स्वामिभागकम् ।
इडाद्वयं सुरूपेति जुष्टिरनुमन्त्रयेत् ॥ १ ॥
मनोऽद्भिर्मार्जनं ब्रध्नपुरोडाशं प्रजापतेः ।
अन्वाहार्यं म त्रयेत म न्त्राः सप्तेहवर्णिताः ॥ २ ॥

பிரமனுக்குச் செய்யும் பிராயசித்தத்தில் புரோடாசத்துண்டை யெடுக்கும்போதும், வேள்வித் தலைவன் பொருட்டு புரோடாசத்துண்டை யெடுக்கும் போதும், இருமுறை இடாபாகத்தை அருந்தும்போதும் போற்றல். நீரை தெளித்துக்கொள்ளல். புரோடாசத்தை பங்கிட்டுக் கொடுக்கும்போதும், அன்வாஹாரியத்தையும் (தக்ஷிணையாகக் கொடுக்கும் அன்னத்தையும்) போற்றல் என்பது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்.

### மூன்றாவது அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்கு மேல் ஆறு பதங்களைக் கொண்டது.

---

அருந்த வேண்டிய இடா முதலிய பாகத்தை போற்றும் மந்திரங்கள்.

अग्निर्मादुरिष्टात्पातु सविताऽघशꣳसाद्योमेऽन्ति दूरेऽरातीयति तमेतेन जेषꣳसुरूप वर्षवर्ण एहीमान् भद्रान्दुर्याꣳ अभ्येहिमा मनु-व्रतान्युशीर्षाणि मृद्ध्वमिड एह्यदित एहि सरस्वत्येहि रन्तिरसि रमतिरसि सूनर्यसि जुष्टे जुष्टिन्तेऽशीयोपहूत उपहवम् ॥ १ ॥ तेऽशीय सामे सत्याऽऽशीरस्य यज्ञस्य भूयादरेडता मनसा तच्छकेयं यज्ञो दिवꣳ रोहतु यज्ञो दिवङ्गच्छतु यो देवयानः पन्थास्तेन यज्ञो देवाꣳ अप्येत्वस्मास्विन्द्र इन्द्रियन्दधात्वस्मान्राय उतयज्ञास्संचन्तामस्मासु सन्त्वाशिषस्सानः प्रिया सुप्रतूर्तिर्मघोनी जुष्टिरसि जुषस्वनो जुष्टानः ॥ २ ॥ असि जुष्टिन्ते गमेयं मनोज्योतिर्जुषतामाज्यं विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधातु । बृहस्पतिस्तनुतामिमन्नो विश्वेदेवा

इहमांदयन्ताम् । अग्नपिन्वंस्व ददंतोमे माक्षांयि कुर्वतो मेमोपंदस-
त्प्रजापंतेर्भागोंऽस्यूर्जस्वान्पयंस्वान्प्राणाऽपानौ मे पाहि समानव्यानौ
मे पाह्युदानव्यानौ मे पाह्यक्षिंतोऽस्यक्षिंत्यैत्वामा मेंक्षेष्ठा अमुत्रा
मुष्मिं लोके ॥ ३ ॥

*இரண்டாமநுவாகத்தில், அவியைப் போற்றுதல் கூறப்பட்டது. மூன்று மநுவாகத்தில், அருந்தத்தக்க இடா முதலிய பாகத்தை (புரோடாசத்துண்டை)ப் போற்றுதல் கூறப்படுகின்றது.*

---

பிராசித்திரம், என்னும் ஒரு பாத்திர விசேடத்தில் புரோடாசத் துண்டை யெடுக்கும்போது போற்றுதல்,

மந்திரம்—1

अग्निर्मादुरिष्टात्पातु सविताऽघशंसात् ।

உரை.

*மந்திரக் குறைவாலோ, அல்லது, கிரியையின் குறைவாலோ வேள்வி மாறுபாட்டிலிருக்கில், அக்கினி என்னைப் பாதுகாக்க. பாவிகளான அசுரர் முதலானோரிடத்தினின்றும், சவிதா என்னைப் பாதுகாக்க என்பதாம்.*

---

எஜமானபாகத்தை எடுக்கும்போது சேபித்தல்

மந்திரம்—2

योमेऽन्ति दूरेऽरातीयतितमेतेन जेषम् ।

உரை.

*எனக்குத் தூரத்திலேனும், அருகிலேனும் இருந்து பகைமை செய்ய விரும்புகின்ற அசுரர் முதலானோரை வெல்வேனாக என்பது.*

---

எடுத்த இடாவைப் போற்றுதல்

மந்திரம்—3

सुरूपवर्षवर्ण एहीमान् भद्रान्दुर्यां अभ्येहिमा मनुव्रतान्युशीर्षाणि
मृड्वमिड एह्यदित एहि सरस्वत्येहि रन्तिरसि रमतिरसि सूनर्यसि
जुष्टे जुष्टिन्तेऽशीयोपहूत उपहवन्तेऽशीय सामे सत्याऽऽशीरस्य

போற்றுதல்)

यज्ञस्य भूयादरेडता मनसा तच्छकेयं यज्ञो दिवं रोहतु यज्ञो दिवं गच्छतु यो देवयानः पन्थास्तेन यज्ञो देवां अप्येत्वस्मास्विन्द्र इन्द्रियन्दधात्वस्मात्राय उतयज्ञास्सचन्तामस्मासु सन्त्वाशिषस्सानः प्रिया सुप्रतूर्तिर्मघोनी ।

உரை.

அழகிய உருவம், மழை, நிறங்களை யுடைய பசு என்னும் இடா தேவதையே! நீ விதிப்படி அமைக்கப் பெற்றவைகளும், அழகியவைகளுமான எமது வேள்வி வீடுகளை யடைவாயாக, மற்றும், இவ் வேள்விக்கு அநுகூலமாயிருந்து வருவாயாக. அஃதன்றியும், எமது தலைகளை, அன்போடு முகந்து பார்ப்பதால் பரிசோதனை செய்வாயாக. (புநிதமாக்குவாயாக.) இடாவே! நீ வருவாயாக. அதிதியே! நீ வருவாயாக. சரசுவதியே! நீ வருவாயாக. நீ, ரந்தியா யிருக்கின்றாய். ரமதியா யிருக்கின்றாய். சூநர்த்தமா யிருக்கின்றாய். இவ்வாறுள்ளன இடாவின் பெயர்கள்.

மற்றும், அன்புடையாய்! அல்லது வழிபடத் தக்கோய்! யான் உனது அன்பையுடையவன் ஆவேனாக. அழைக்கப்பெற்ற இடாவே! நீ வருவாயாக. எங்களால் அழைப்பதற்கு உனது அநுக்ஞையுள்ள விடத்து, அநுக்ஞைப்படி உன்னை அழைப்பேனாக. இவ் வேள்வியின் பயனை வேண்டல் எனக்குண்மையாகுக. அன்பார்ந்த மனதால் அப் பயனைச் சாதிக்க வல்லேன். என்னால் ஆசரித்து வந்த இவ்வேள்வி, நாளடைவில் வானிலேறிச் செல்க. தடையிருக்கில் வானிலேறாது, இன்றெனில் வானிலேறும். வானை யடைந்து அவியை யுண்ணுவோர் வாழ்கின்ற விடமாகிய சுவர்க்கத்தை யடைக. அங்குள்ள தேவர்கள் அவியுண்ணுஞ் சாலையை யடையும் வழியாய் வேள்வி அவிகளும் தேவர்களை யடைக. அவ் வேள்வியால் களிப்புற்ற இந்திரன், வேறோர் வேள்வியைச் செய்வதன் பொருட்டு எனது இந்திரியங்களை உறுதிப் படுத்துவானாக. அத்தகைய வேள்வியைச் செய்வோராகிய எங்கட்குப் பொருள் உண்டாகுக. ஆசீர்வதித்த வேள்வியின் பயன் எமக்குண்டாகுக. அத்தகைய நீ, எமக்கு, பகைவரைக் கெடுப்போனும், தனமுடையோனு மாவாயாக என்பது.

---

மற்றொரு இடாபாக அருந்தலைப் போற்றுதல்,

மந்திரம்—4

जुष्टिरसि जुषस्वनो जुष्टानोऽसि जुष्टिन्ते गमेयम् ।

உரை.

அவாந்தர இடாவே! நீ பிரிய வடிவாயிருக்கின்றாய். எங்களைப் பிரியப்படுத்துவாயாக. எம்மால் வழிபடப் பெற்றோனா யிருக்கின்றாய். உனது பிரியத்தைப் பெற்றுக் கொள்வோமாக என்பது

அந்தர்வேதி நீராற் றெளித்துக்கொள்ளுதல்

மந்திரம்—5

मनोज्योतिर्जुषतामाज्यं विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधातु । बृहस्पतिस्तनुतामिमन्नो विश्वेदेवा इह मादयन्ताम् ।

உரை.

மதிக்கத்தக்க இவ் வக்கினி, அவ்வாகுதிகளில் நெய்யை ஏற்றுக்கொள்க. யாதானுமொரு குறைவால் விடுபட்ட அவ்வேள்வியின் குறைவை நீக்கி ஏற்றுக்கொள்க. பிருகற்பதி எமது வேள்வியைத் தானுகவே வளர்ப்பாராக. விசுவ தேவர்கள் இவ்வேள்வியில் களிப்படைவார்களாக என்பது.

---

தருப்பையின்மேல் வைத்த புரோடாசத்தைப் போற்றுதல்

மந்திரம்—6

ब्रह्मपिन्वस्वददतो मे माक्षायि कुर्वतो मे मोपदसत् ।

உரை.

வேள்விப் புருடனே! நீ, இருத்துவிக்குக்களைப் பிரியப்படுத்துவாயாக. பொருளை யீயும் எமது பொருள் குறைவுபடாததாகுக. மேலும் வளருக. வேள்வியைச் செய்யும் எனது வன்மை குறையற்க. மற்றும், வளருக என்பது.

---

அந்தர் வேதியில் வைத்திருக்கின்ற அன்வாஹாரியத்தை (பொங்கலை)ப் போற்றுதல்

மந்திரம்—7

प्रजापतेर्भागोऽस्यूर्जस्वान् पयस्वान्प्राणापानौ मे पाहि समानव्यानौ मे पाह्युदानव्यानौ मे पाह्यक्षितोऽस्यक्षित्यै त्वामा मे क्षेष्ठा अमुत्रामुष्मिँ लोके ॥

உரை.

அன்வாஹாரிய மென்னும் பொங்கலன்னம் இருத்துவிக்குக்கட்குப் பாகமாக வேண்டியது. அதனல் பிரசாபதிகளிப் படைதலின் பிரசாபதியின் பாகமெனினும் மாறுபாடாகாது. அது, வன்மையுடையதாம். இது, அருந்துவோருக்கு வன்மையைக் கொடுத்தலின் என்க. பாலுடையது, இது, சுவை மலிதலால், அல்லது, பால்விட்டுப் பொங்குவதாலென்க. இத்தகைய அன்வாஹாரிய மென்னும் பொங்கலன்னமே! நீ, பிராணவாயுவையும் அபானவாயு

வையும் பாதுகாப்பாயாக. சமான வியான வாயுக்களையும் பாதுகாப்பாயாக. உதான வியானன்களையும் பாதுகாப்பாயாக. 'வியானன்' என இருமுறை கூறியது, அது முக்கியமாமென்பதைக் குறிப்பிடுதற் பொருட்டாம். அன்வாஹாரியமே! (பொங்கலே!) நீ, குறையாதிருக்கின்றாய். தக்ஷிணாக்கினியிற் பொங்குவது நிறைய இருக்கின்றது என்று கூறப்பட்டிருத்தலினென்க. இதனால், இவ்வுலக பரவுலக போகங்களின் பொருட்டுக் குறைவாகாதே. ஆதலின், இங்கு விரும்பியபடி உன்னை அருந்துகின்றேன் என்பது கருத்து.

மூன்றாவது அநுவாகம் முடிந்தது.

---

## நான்காவது அநுவாகம்

விடயச் சுருக்கம்

बर्हिस्त्रिभिरनूयाजान्मन्त्रयेत्सूक्तवाककम् ।
अग्नेरित्यष्टभिर्वाजद्वाभ्यां व्यूहेत्स्रुचौ तथा ॥ १ ॥
एषाः स्वनामग्रहणे रोहीति प्रस्तरं त्रिभिः ।
विस्ते परिधि मोक्षंतु विष्णोः शं शंयुवाककम् ॥ २ ॥
त्रिभिः सोमादि संयाजान्वेदो वेदाभिमर्शनम् ।
अनुवाके चतुर्थेऽस्मिंस्त्रयो विंशति रीरिताः ॥ ३ ॥

மூன்று அநூயாஜைகளையும், சூக்த வாகத்தையும், (பிரஸ்தரத்தை ஆகவனீயத்தில் எரிய விடுங்கால் ஹோதா சொல்வது) சுருக்குகளை மாற்றி யெடுத்தலையும், வேள்வித் தலைவனுடைய பேரைச் சொல்வதையும், சம்யுவாகத்தையும், (பரிதிகளை ஆகவனீயத்தில் எரிக்கும்போது ஹோதா ஓதுவது) பத்தினீ சம்யாஜைகளையும், வேதத்தையும் போற்றல் என்பது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## நான்காவது அநுவாகம்

இது மூன்று பஞ்சாதிச்துமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது

---

சேஷாகுதிகளின் அநுயாசை முதலானவைகளைப் போற்றும் மந்திரங்கள்.

बर्हिषोऽहन्देवयज्यया प्रजावान् भूयासन्नराशꣳसस्याहन्देव-
यज्यया पशुमान् भूयासमग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान्

यज्ञेनं प्रतिष्ठाङ्गमेयमग्ने रहमुज्जिति मनूज्जेषꣳ सोमंस्याहमुज्जिति मनू-
ज्जेषमग्ने रहमुज्जिति मनूज्जेषमग्नीषोमयो रहमुज्जिति मनूज्जेषमिन्द्रा-
ग्नियो रहमुज्जिति मनूज्जेषमिन्द्रंस्याहम् ॥ १ ॥ उज्जिति मनूज्जेषं
महेन्द्रस्याह मुज्जिति मनूज्जेषमग्नेस्स्विष्टकृतोऽहमुज्जिति मनूज्जेषं
वाजंस्यमा प्रसवेनोंद्ग्राभेणोदंग्रभीत् । अथास पत्नाꣳ इन्द्रोमे निग्रा-
भेणा धराꣳ अकः । उद्ग्राभञ्च निग्राभञ्च ब्रह्मदेवा अंवीवृधन् ।
अथास पत्नानिन्द्राग्नीमे विषूचीनान्व्यंस्यताम् । एमा अंग्मन्नाशिषो
दोहंकामा इन्द्रंवन्तः ॥ २ ॥ वनामहे धुक्षीमहि प्रजामिषम् ।
रोहिते नत्वाऽग्निर्देवताङ्गमयतु हरिभ्यान्त्वेन्द्रो देवताङ्गमयत्वेतशे-
नत्वा सूर्यो देवताङ्गमयतु वितें मुञ्चामि रशनाविरश्मीन् वियोक्त्रा
यानि परिचर्तनानि धत्तादस्मासु द्रविणं यच्च भद्रं प्रणो ब्रूता-
द्भागधान्देवतासु । विष्णोश्शं यो रहन्देवयज्ययां यज्ञेनं प्रतिष्ठाङ्ग-
मेयꣳ सोमंस्याहन्देवयज्ययां ॥ ३ ॥ सुरेतारेतो धिषीयत्वष्टुरह-
न्देवयज्ययां पशूनाꣳ रूपं पुषेयन्देवानां पत्नीरग्निर्गृहपतिर्यज्ञस्य
मिथुनन्तयोरहन्देवयज्ययां मिथुनेन प्रभूयासं वेदोऽसि वित्तिरसि
विदेय कर्मासि करुणमसि क्रियासꣳ सनिरसि सनिताऽसि सनेयं
घृतवन्तं कुलायिनꣳ रायस्पोषꣳ सहस्रिणं वेदो ददातु वाजि-
नम् ॥ ४ ॥

மூன்று மநுவாகத்தில், அருந்துதற்குரிய இடா பாகத்தின் துதி கூறப்பட்டது. நான்காமநுவாகத்தில் சேஷாகுதிகளின் துதி கூறப்படுகின்றது.

அவற்றுள் அநுயாசைகளின் ஒவ்வோரு ஆகுதியுந் துதிக்கப்படுகின்றது.

மந்திரம்—1—3

**बर्हिषोऽहन्देवयज्यया प्रजावान् भूयासन्नराशꣳसस्याहन्देवयज्यया पशुमान् भूयासमग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेयम् ।**

உரை.

பர்ஹி, நராசம்ஸம், சுவிஷ்டகிருத் என்னுஞ் சொற்கள் அநுயாஜ தேவதைகளான அக்கினி விசேடங்களைக் குறிப்பிடுவன. பர்ஹி நராசம்ஸ யாகங்களால், பிரசாபதி யென்பவன் முறையாகப் பிரசைகளையும், பசுக்களையும் படைத்தனன், ஆதலின், அவனை வேண்டிக் கொள்ளல் பொருந்துமாறுணர்க. 'சுவிஷ்டகிருத்' என்னும் இம் மந்திரத்திற்கோ, முன்னர்ப் பொருள் கூறப்பட்டுள்ளது என்பது.

---

ஹோதா, சூக்தவாக மந்திரத்தை ஓதும்போது, அத்வர்யு, வேள்வித் தலைவனை ஓதும்படி செய்யவேண்டிய மந்திரம்,

மந்திரம்—4—11

**अग्ने रहमुज्जिति मनूज्जेषꣳ सोमस्याहमुज्जितिमनूज्जेषमग्ने रहमुज्जिति मनूज्जेषमग्नीषोमयो रहमुज्जितिमनूज्जेषमिन्द्राग्नियो रहमुज्जिति मनूज्जेष मिन्द्रस्याह मुज्जितिमनूज्जेषं महेन्द्रस्याहमुज्जितिमनूज्जेषमग्ने स्स्विष्टकृतोऽहमुज्जिति मनूज्जेषम् ।**

உரை.

ஆச்யபாக தேவதையாகிய அக்கினி, அவியை யுண்டு பருத்து வேள்விக்கு விரோதிகளான அசுரர்களையடக்கி வெற்றி பெற்றது. அதைத் தழுவிய வேள்வித் தலைவனாகிய யானும் பாவமாகிய பகையைக் கெடுத்து சிறந்த வெற்றியை யடைந்துள்ளேன் என்பது ஏனைய தேவதைகட்கும் இவ்வாறே பொருளுரைத்துக் கொள்க.

ஹோதா, சூக்தவாகத்தைப் படித்து, 'अग्निरिदं' என்பது முதலியதால் அவ்வத் தேவதைகளை நினைப்பூட்டும் மந்திரங்களை ஓதுகின்றபோது, அத்துவர்யு, அவ்வத் தேவதை விடயமாகிய வாக்கியத்தை, வேள்வித் தலைவன் ஓதுமாறு செய்தல் வேண்டும்.

அத்வர்யு, சுரு, 'உபபிருத்' என்னும் சுருக்குக்களைக் கைமாற்றும் (வ்யூகனஞ் செய்யும்)போது வேள்வித்தலைவன் செபிக்கவேண்டியது,

மந்திரம்—12—13

**वाजस्य मा प्रसवेनोद्ग्राभेणोदग्रभीत्। अथास पत्नाꣳ इन्द्रोमे निग्राभेणाधराꣳ-अकः। उद्ग्राभश्च निग्राभश्च ब्रह्मदेवा अवीवृधन्। अथास पत्नानिन्द्राग्नीमे विषूचीनान्व्यस्यताम्।**

உரை.

*இந்திரன், அன்னத்தை உண்டாக்க வேண்டு மென்னும் நிமித்தத்தால், சுருக்கை மேலே வாங்குவதால், என்னையும்மேம்பாடடைவித்தனன். சுருக்கை, கீழே வாங்குவதால் எனது பகைவர்களையுந் தாழ்த்தி விட்டனன். தேவர்களும், பிரமனும், சுருக்கை மேலுங் கீழும் வாங்குதலாகிய கருமமிரண்டையும் வளர்த்தனன். மற்றும், இந்திரனும் அக்கினியும், எனது துன்ப காரணமான பகைவரை வெருட்டி முழுது மொழிப்பார்களாக என்பது.*



ஹோதா சூக்தவாகத்தை ஓதி, 'ஆசாஸ்தேயம்' என்பது முதலான வாக்கியங்களைச் சொல்லுங்கால், வேட்போன், வேள்வித்தலைவனை ஓதும்படி செய்ய வேண்டியது,

மந்திரம்—14

**एमा अग्मन्नाशिषोदोह कामा इन्द्रवन्तो वनामहे धुक्षीमहि प्रजामिषम्।**

உரை.

*இந்த ஆசிர்வாதங் (வாழ்த்துக்) கள் என்னை யடைக. யாமும், ஆயுள் முதலான தோஹனங்களை விரும்பியவர்களாயும், அவ்வப் பயனைக் கொடுக்கும் இந்திரனுடன் கூடியவர்களாயும் இந்திரனைப் போற்றுவோமாக. அதனால், புதல்வன், பேரன் முதலானோர்கள் விரும்புகின்ற உணவுப் பொருள், ஆயுள் முதலானவைகளை, காமதேனுவைப்போன்ற இந்திரனிடங் கறந்து கொள்வோமாக என்பது. தோஹனம் = நிறையப் பயன்களைப் பெறல்.*

குறிப்பு :—*சூக்தவாகத்தில், '**आयुराशास्ते सुप्रजास्त्वमाशास्ते**' என்று ஆயுள் முதலான ஆசிர்வாத மொழிகள் கூறப்பட்டிருக்கின்றன என்பதை யுணர்க.*



பிரஸ்தரத்தைக் கொளுத்துவதைப் போற்றுதல்,

மந்திரம்—15—17

**रोहितेनत्वाऽग्निर्देवताङ्गमयतु हरिभ्यान्त्वेन्द्रो देवताङ्गमयत्वेतशेनत्वासूर्यो देवताङ्गमयतु।**

போற்றல் முதலியன)

உரை.

பிரஸ்தரமே! உன்னை, அக்கினி, சூரியன், இந்திரன் என்பவர்கள், முறையே, ரோகிதம், ஏதசம், ஹரீ என்னுங் குதிரைகளால் சூக்தவாக தேவதைகளை யடையுமாறு செய்வார்களாக என்பது.

---

பரிதிக (விறகுக)ளை யெடுத்துவிடும்போது போற்றுதல்

மந்திரம்—18

**विते मुञ्चामि रशनाविरश्मीन् वियोक्त्रा यानि परिचर्तनानि धत्तादस्मासु द्रविणं यच्च भद्रं प्रणोब्रूताद्भागधान्देवतासु ।**

உரை.

உலகில், குதிரையேற விரும்பினோன், கடிவாளம் முதலானவைகளால் குதிரையைக் கட்டுவது போன்று, அக்கினியே! உன்னை, பரிதி (விறகு) கள் என்னுங் கயிற்ருற் கட்டியிருந்த கட்டை அவிழ்த்து விடுகின்றேன். அதனுற் களிப்புற்ற நீ, எங்கட்கு உணவுப் பொருள்களையும், தனங்களையுங் கொடுப்பாயாக. எமது அவிகளையருந்துந் தேவர்களிடம் எம்மை நன்கு தெரிவிப்பாயாக என்பது.

---

சம்யுவாகத்தை (விறகை யெரியவிடுவதை)ப் போற்றுதல்.

மந்திரம்—19

**विष्णोश्शंयो रहन्देवयज्यया यज्ञेन प्रतिष्ठाङ्गमेयम् ।**

உரை.

'சம்யு' என்பது சுகத்தோடு கூடிய பிருகற்பதியின் புதல்வனை யுணர்த்துகின்றது. அவன், பல காரியங்களிற் கலந்திருத்தலின் விஷ்ணுவென்னப்படுகின்முன், அவனுடைய களிப்பிற்குக் காரணமாகிய பரிதியை யெடுத்தலாகிய தேவாராதனையால், வேள்வித் தலைவனுகிய யான் எல்லா வேள்விப் பயனையுமடைவேனுக என்பது.

---

பத்தினி சம்யாஜைகளைப் போற்றுதல்,

மந்திரம்—20—22

**सोमस्याहन्देवयज्यया सुरेतारेतो धिषीयत्वष्टुरहन्देवयज्यया पशूनाꣳ रूपं-पुषेयन्देवानां पत्नीरग्निर्गृहपतिर्यज्ञस्य मिथुनन्तयोरहन्देवयज्यया मिथुनेन प्रभूयासम् ।**

உரை.

பத்தினி சம்யாசை நான்கிற்கும் முறையே, சோமம், துவஷ்டா, தேவ பத்தினிகள், கிருகபதியாகிய அக்கினி தேவதைகளாவர். அவர்களுள், சோமன் சுக்கிலத்தைக் கட்டும் அபிமானியாதலின் அவ்வேள்வியால் சுக்கிலத் தைக் கட்டுவேன். சுக்கிலத்தைக் கட்டல். இருவகையாம். மலடாதல் ஒன்று. உற்பத்தி செய்தல் மற்றொன்று. ஈண்டு உற்பத்தி செய்தலாகிய சுக்கிலக் கட்டாம். துவஷ்டா தேவதை, விடப்பெற்ற சுக்கிலத்தை பசு முதலான உயிர்களாக மாற்றுகின்றது, அதனால், பசு முதலானவைகளை வளர்ப்பேன். தேவபத்தினிகளும் கிருகபதி யென்னும் அக்கினியும் கூடும் அவ்வேள்வியால், யானும், மனைவியொடுகூடி, புதல்வன் மகள் முதலானோர்களாய்ப் பெருகுவே னாக என்பது.

---

வேதத்தை (தருப்பை முடிச்சை) அந்தர்வேதியில் வைக்கும்போது வேள் வித்தலைவனை ஓதுமாறு செய்வது,

மந்திரம்—23

**वेदोऽसि वित्तिरसि विदेय कर्मासि करुणमसि क्रियासꣳ सनिरसि सनिताऽसि सनेयं घृतवन्तं कुलायिनꣳ रायस्पोषꣳ सहस्रिणं वेदो ददातु वाजिनम् ।**

உரை.

தருப்பை முடிச்சே! நீ, தனத்தைப் பெறுவதற்கு ஒரு கருவியாயிருக் கின்றாய் எனவே அதனுடைய கிருபையால் யான் தனத்தை யடைவேன் எனவாயிற்று. கருமம் என்பது கரணமாம். ஆகவே, வேதிகையைத் துடைத் தல் சாம்பரைத் தள்ளல் முதலாயின கொள்ளப்பட்டன. கொள்ளுங்கால், இதனால், உன்னால் யான் துடைத்தல் முதலான செயல்களைச் செய்கின்றேன் என்பது பெறப்பட்டது. சநி: என்பது சநிதா என்பதன்மேனின்றது, நிற்குமிடத்து தனத்தைக் கொடுப்போனா யிருக்கின்றாய் என்பது பொருளா யிற்று. ஆகுங்கால், உனதருளால் தனத்தைப் பெற்று வேள்விச் செய்வோர்க் குக் கொடுத்துக் கொண்டிருக்கின்றேன் என்பது பெறப்பட்டது. மற்றும், எனக்கு, நெய் முதலான அருந்தும் பொருள் நிறைந்ததும், வாழுவதற்கு இல்லம் முதலானவைகளுடன் கூடியதும், ஆயிரம், இலட்சம் என்னும் என் னும் எண்களைக் கொண்டதும், உணவுப் பொருள்களுடன் சேர்ந்ததுமாகிய வேதமா (தருப்பை முடிச்சா) னது தனத்தை அளிப்பதாகுக என்பது.

நான்காம் அநுவாகம் முடிந்தது.

---

## ஐந்தாவது அநுவாகம்

விடயச் சுருக்கம்

आद्या ध्रुवाप्यायनं स्यात्प्रजास्वाम्यंशभक्षणम् ।
सदसीति प्रणीतानां धाराया अभिमन्त्रणम् ॥ १ ॥
प्राच्यां तु पञ्चभिः सिञ्चेत् क्रमेद्विष्णोश्चतुष्टयात् ।
अनुवाके पञ्चमेऽस्मिन्मन्त्रा द्वादशवर्णिताः ॥ २ ॥

துருவாவில் நெய்யை விடுதல், வேள்வித்தலைவன் பாகத்தை அருந்துதல், பிரணீத்ராவின் தாரையைப் போற்றுதல், கிழக்கு முதலிய ஐந்து திக்குக்களிலும் தண்ணீரை இறைத்தல், நான்கு அடிகளை எடுத்து வைத்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## ஐந்தாவது அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்கு மேல் இருபத்தொன்பது பதங்களைக் கொண்டது.

---

துருவா, என்னும் பாத்திரத்தில் நெய் நிறைத்தலைப் போற்றுதல் முதலிய மந்திரங்கள்.

आप्यायतान्ध्रुवा घृतेन यज्ञं यज्ञं प्रतिदेवयद्भ्यः । सूर्याया ऊधोऽदित्या उपस्थ उरुधारा पृथिवी यज्ञे अस्मिन् । प्रजापतेर्विभान्नामलोकस्तस्मिꣳस्त्वा दधामि सह यजमानेन सदसि सन्मे भूयास्सर्वमसि सर्वं मे भूयाः पूर्णमसि पूर्णं मे भूया अक्षितमसि मा मे क्षेष्ठाः प्राच्यान्दिशि देवा ऋत्विजो मार्जयन्तान्दक्षिणायाम् ॥ १ ॥ दिशि मासाः पितरो मार्जयन्तां प्रतीच्यान्दिशि गृहाः पशवो मार्जयन्तामुदीच्यान्दिश्याप ओषधयो वनस्पतयो मार्जयन्ता मूर्ध्वायान्दिशि यज्ञस्संवत्सरो यज्ञपतिर्मार्जयन्तां विष्णोः क्रमोऽस्यभिमातिहा गायत्रेण छन्दसा पृथिवीमनुविक्रमे निर्भक्तस्स यन्द्विष्मो विष्णोः क्रमोऽस्यभिशस्तिहा त्रैष्टुभेन छन्दसाऽन्तरिक्षमनुविक्रमे

निर्भक्तस्सयन्द्विष्मो विष्णोः क्रमोऽस्य रातीयतो हन्ता जागतेन छन्दसा दिवमनुविक्रमे निर्भक्तस्सयन्द्विष्मो विष्णोः क्रमोऽसि शत्रूयतो हन्ताऽऽनुष्टुभेन छन्दसा दिशोऽनुविक्रमे निर्भक्तस्स यन्द्विष्मः ॥ २ ॥

---

துருவாவில் நெய் நிறைத்தலைப் போற்றுதல்

மந்திரம்—1

**आप्यायतान्ध्रुवा घृतेन यज्ञं यज्ञं प्रतिदेवयद्भ्यः । सूर्याया ऊधोऽदित्या उपस्थ उरुधारा पृथवी यज्ञे अस्मिन् ।**

உரை.

ஒவ்வொரு வேள்விகளிற் செய்யும் ஒவ்வொரு ஆகுதிகளின் பொருட்டும் தேவர்களை வரவழைக்க விரும்புகின்ற இருத்துவிக்குக்கள், போதுமான நெய் யால், இத் துருவா என்னும் பாத்திர விசேடத்தை மீண்டும் மீண்டும் நிறைப் பார்களாக. எதைப்போலெனின்? பசுவடிவுபூண்ட சூரிய பத்தினியின் முலை யானது, பாலால் நிறைந்திருப்பதுபோல் நிறைப்பார்களாக என முடிக்க. மற்றும், வேதிகையாகிய மண்ணின் (அதிதியின்) மார்பில், இருக்கின்ற இத் துருவா, பெருந்தாரையை யுடையதாம். அதாவது, மீண்டும் மீண்டும் விடப் பெற்ற நெய்த்தாரைகளுடன் கூடியது. ஆதலின், மண், பரப்புடையதாய் வேள்விகளனைத்திலும் இனிது நெய்யை நிறைப்பதாகுக என்பது.

---

எஜமான பாகத்தை அருந்துதற்குரியது,

மந்திரம்—2

**प्रजापतेर्विभान्नामलोकस्तस्मिंस्त्वा दधामि सह यजमानेन ।**

உரை.

பிரசாபதியின் சம்பந்தமுடையதும், 'விபாத்' (நன்குவிளங்குவது) எனப் படுவதுமாகிய மண்ணுலகில், அவிர்ப்பாகத்தை அருந்தும் எஜமானனுகிய என்னுடன்கூட உன்னையும் வைக்கின்றேன் என்பது.

---

பூரண பாத்திரத்தில் நீர் வார்க்குங்கால் எஜமானனுக்கு ஓதுவித்தற்குரியது,

மந்திரம்—3

**सदसि सन्मे भूयास्सर्वमसि सर्वं मे भूयाः पूर्णमसि पूर्णं मे भूया अक्षितमसि मा मे क्षेष्ठाः ।**

உரை.

பூரண பாத்திரமே! நீ, சபையில், சம்பவன முதலான காரியங்களைச் செய்வதால் மங்களமாயிருக்கின்றாய். ஆதலின், எனக்குப் பயனை யளிக்குந் தன்மையால் மங்களமாவாயாக. மேலே கூறப்படும் நீர் தெளித்தலால், கிழக்கு முதலான திசைகளைக் கலந்திருக்கின்றாய். ஆதலின், யான் விரும்பிய காரியத்தைச் செய்ய வல்லுநனாவாயாக. நீர், நிறையப் பெற்றிருக்கின்றாய்; ஆதலின், எனது கருமத்தைச் செய்ய முன் வருவாயாக. பூரணமாதலின், கேடிலாதிருக்கின்றாய். ஆதலின், எனது காரியத்தைச் செய்வதிற் குறைவாக்காதே என்பது.

---

ஐந்து திசைகளையுந் தூய்மைப்படுத்தல்.

மந்திரம்—4-5-6-7-8

प्राच्यान्दिशि देवा ऋत्विजो मार्जयन्तान्दक्षिणायां दिशि मासाः पितरो मार्जयन्तां प्रतीच्यान्दिशि गृहाः पशवो मार्जयन्तामुदीच्यान्दिश्याप ओषधयो वनस्पतयो मार्जयन्ता मूर्ध्वायान्दिशि यज्ञस्संवत्सरो यज्ञपतिर्मार्जयन्ताम् ।

உரை.

இருத்துவிக்குக்கள், தேவர் முதலானோர், வேள்வி அபிமானிகள் என்னும் எல்லாப் பிராணிகளும் வேள்வியைப் பார்ப்பதன் பொருட்டு கிழக்கு முதலான திசைகளில் மறைவாய் வந்திருக்கின்றனர். மாதம், முதலானவைகள் சடங்களாயினும் அவைகளின் அபிமானி தேவதைகள் ஈண்டுக் கொள்ளற் பாலன. மறைந்துபோதற்கு வல்லுநர்களாதலின் காணப்படாதிருத்தல் எனல் மாறுபாடில்லாதது. அத்தகைய, தேவர்கள் அவ்வத் திசைகளில் சோதிக்கப் பெறுவார்களாக என்பது.

---

எழுந்து வலதுகாலால் விஷ்ணு அடி (மூன்றடி) வைக்குதலில் முதலாவது அடிவைத்தல்,

மந்திரம்—9

विष्णोः क्रमोऽस्यभिमातिहा गायत्रेण छन्दसा पृथिवीमनुविक्रमे निर्भक्तस्स यन्द्विष्मः ।

உரை.

மூன்றாம் அடியில் நின்று கொண்டு நான்காமந்திரத்தை ஓதுதல் வேண்டும். நான்காமந்திரத்தில் அடியெடுத்து வைத்தல் கூடாது. ஆனால் மந்திர

மின்றி நான்காமடியை யெடுத்து வைத்தல் வேண்டும். நான்காம் அடி யெடுத்து வைத்து ஆகவனீயத்தைத் தாண்டல் கூடாது. மற்றோ, ஆகவனீயத்திற்கு பிறகே வேதிக்கு நடுவில் நான்காம் அடியை முடித்துவிடல் வேண்டும் என்பது.

---

இரண்டாவது முதல் நான்குவரையுள்ள மந்திரங்கள்.

மந்திரம்—10-11-12

विष्णोः क्रमोऽस्यभिशस्तिहा त्रैष्टुभेन छन्दसाऽन्तरिक्षमनुविक्रमे निर्भक्तस्स-यन्द्विष्मो विष्णोः क्रमोऽस्यरातीयतो हन्ता जागतेन छन्दसा दिवमनु-विक्रमे निर्भक्तस्सयन्द्विष्मो विष्णोः क्रमोऽसि शत्रूयतो हन्ताऽऽनुष्टुभेन छन्दसा दिशोऽनुविक्रमे निर्भक्तस्सयन्द्विष्मः ।

உரை.

எஜமானன், இங்கு, தன்னை விஷ்ணுவாகப் பாவித்தல் வேண்டும். நான்கு அடிக்குட்பட்ட பூமியை மண்ணுலக முதலான உலகங்களாகப் பாவித்துக் கொள்ளல் வேண்டும். காயத்திரி முதலான சந்தங்களின் அபிமானி தேவதைகள் அநுக்கிரகஞ் செய்கின்றவர்களாக விருக்கின்றனர். அபிமாதி = பாவம்.

முதலாவது காலடியே! நீ, பாவத்தைப் போக்குகின்ற விஷ்ணுவின் காலடியாக இருக்கின்றாய். காயத்திரிச் சந்த தேவதையால் அருளப் பெற்ற யான் இம் மண்ணைப் பற்றிக்கொண்டு காலை எடுத்து வைக்கின்றேன். எமக்கு வெறுப்பாகிய பாவம் இக்காலடியிடத்திலிருந்து முழுதும் ஒழிந்துபோயிற்று. மேலும் இவ்வாறே கூறிக் கொள்க. மூன்றாவது முறை காலெடுத்து வைத்தல், எமக்குப் பொருள் வராமற்றடுக்கின்ற பகைவரைக் கொல்லுகின்றதாம். நான்காவது அடியெடுத்து வைத்தல், எம்மைக் கொல்லுதற் கெண்ணிய பகைவரைக் கொல்லுகின்றதாகும் என்பது.

ஐந்தாம் அநுவாகம் முடிந்தது.

---

## ஆறாவது அநுவாகம்

விடயச் சுருக்கம்

अगन्पूर्वाग्न्युपस्थानं सुभूर्भानोरुपस्थितिः ।
इदं निः सारयेच्छत्रून्संज्योतिस्वाभिमर्शनम् ॥ १ ॥
ऐन्द्रीं प्रदक्षिणा वृत्तिः समहं तद्विपर्ययः ।
समिद्धः समिदाधानं वसु पूर्वाग्न्युपस्थितिः ॥ २ ॥

போற்றல் முதலியன)

अग्न आयूत्रिभिर्मन्त्रै रपराग्ने रुपस्थितिः ।
कस्त्वायज्ञ विमोकस्यादग्ने तद्व्रतमुत्सृजेत् ॥ ३ ॥
यज्ञेति पुनरालम्भं जपेद्गोमांस्तु गोमतीम् ।
षष्ठेऽनुवाक एतस्मिन्मन्त्राः पञ्चदशेरिताः ॥ ४ ॥

ஆகவனீயத்தைப் போற்றல், சூரியனைப் போற்றல், சத்துருவை விலக்குதல், தன்னைத் தொட்டுக் கொள்ளல், வலமாய் திரும்புதல், இடமாய் திரும்புதல், சமித்தை வைத்தல், மீண்டும் ஆகவனீயத்தைப் போற்றல், மூன்று மந்திரங்களால் காருகபத்தியத்தைத் துதித்தல், யக்ஞத்தை விடல், விரதத்தை விட்டு விடுதல், மீண்டும் யக்ஞத்தை அடைவதற்குச் செபித்தல், 'கோமதி' என்னும் மந்திரத்தைச் செபித்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்.

## ஆறவது அநுவாகம்

மூன்று பஞ்சாதிக்குமேல் முப்பத்தைந்து பதங்களைக் கொண்டது

---

சூரிய துதி முதலியவற்றின் மந்திரங்கள்.

अगन्म सुवस्सुवरगन्म सन्दृशस्तेमा छित्सियत्ते तपस्तस्मैते माऽऽवृक्षि सुभूरसि श्रेष्ठो रश्मीनामायुर्धा अस्यायुर्मे धेहि वर्चोधा असि वर्चोमयि धेहीदमहममुं भ्रातृव्य माभ्यो दिग्भ्योऽस्यै दिवो-स्मादन्तरिक्षादस्यै पृथिव्या अस्मादन्नाद्यान्निर्भजामि निर्भक्तस्स-यन्द्विष्मः ॥ १ ॥ सञ्ज्योतिषाऽभूवमैन्द्रीमावृतमन्वावर्ते समहं प्रजया संमया प्रजासमहꣳ रायस्पोषेण संमया रायस्पोषस्समिद्धो अग्नेमे दीदिहि समेद्धाते अग्ने दीद्यासं वसुमान् यज्ञो वसीयान् भूयासमग्न आयूꣳषि पवस आसुवोर्जमिषंञ्च नः । आरे बाधस्व दुच्छुनाम् । अग्ने पवस्व स्वपा अस्मे वर्चस्सुवीर्यम् ॥ २ ॥ दधत्पोषꣳ रयिं मयि । अग्ने गृहपते सुगृहपति रहन्त्वया गृहपतिना

भूयासꣳ सुगृहपतिर्मयात्वं गृहपतिना भूयास्शतꣳ हिमास्ता माशिष-
माशासे तन्तवे ज्योतिष्मतीन्तामाशिषमाशासेऽमुष्मै ज्योतिष्मती-
ङ्कस्त्वा युनक्ति सत्वा विमुञ्चत्वग्ने व्रतपते व्रतमचारिषन्तदशकन्त-
न्मेऽराधि यज्ञो बभूव स आ ॥ ३ ॥ बभूव सप्रजज्ञे सवावृधे ।
सदेवानामधिपतिर्बभूवसो अस्माꣳ अधिपतीन् करोतु वयꣳस्याम-
पतयो रयीणाम् । गोमाꣳ अग्नेऽविमाꣳ अश्वी यज्ञो नृवत्सखा
सदमिदप्रमृष्यः । इडावाꣳ एषो असुर प्रजावान्दीर्घो रयिः पृथु-
बुध्नस्सभावान् ॥ ४ ॥

ஐந்தாமநுவாகத்தில் நெய் நிறைத்தற்குரிய மந்திரங் கூறப்பட்டது. ஆறுவதில், சூரியனைப் போற்றுதல் முதலான மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

ஆகவனீயத்தின் துதி

மந்திரம்—1

अगन्म सुवस्सुवरगन्म सन्दृशस्तेमा छित्सियत्ते तपस्तस्मैते माऽऽवृक्षि ।

உரை.

ஆகவனீயத் தீயே! உனதருளால், மக்கள் பேரன்மார்களுடன் யாம் பல போகங்களை யடைவோமாக. அதன்பின், முத்தி வாயிலாகிய ஆதித்த வுலகை யடைவோமாக. இதன்பொருட்டு உனது கடைக்கண் பார்வையிலிருந்து விடுபடோம். அதாவது, உன் பொருட்டு செய்யப்படுந் தவத்தினின்றும் விலகமாட்டோம் என்பது.

---

ஆதித்தனுடைய தோத்திரம்,

மந்திரம்—2

सुभूरसि श्रेष्ठो रश्मीना मायुर्धा अस्यायुर्मे धेहि वर्चोधा असि वर्चो मयि धेहि ।

உரை.

சூரியனே! நீ, இனிது எழுகின்றவன். கிரணங்களுடன் கூடிய சந்திரன் முதலானோர்களுக்குச் சிறந்தவன். ஆயுளைக் கொடுப்போனா யிருக்கின்றாய்,

ஆதலின், எனக்கு ஆயுளைக் கொடுப்பாயாக. இவ்வாறே பிரம வொளியையுங் கொடுப்பாயாக என்பது. இவ்விரண்டு மந்திரங்களையும் ஒரே விநியோக மாக்கி இரவியை உபஸ்தானஞ் செய்தல் வேண்டும் என்பது ஆபஸ்தம்ப மதம் என்பது.

---

பகைவரை யோதுக்கல்,

மந்திரம்—3

**इदमहममुं भ्रातृव्य माभ्यो दिग्भ्योऽस्यै दिवोऽस्मादन्तरिक्षादस्यै पृथिव्या अस्मादन्नाद्यान्निर्भजामि निर्भक्तस्सयन्द्विष्मः ।**

உரை.

மண்ணுலக முதலிய மூன்றுலகங்களிலும், கிழக்கு முதலிய திசைகளி லும் எனக்குப் பகைமை செய்கின்றவர்களும், எமது உணவுப் பொருள் முத லானவைகளைக் கவர்ந்து கொள்கின்றவர்களுமாக எந்தச் சத்துருக்கள் உள் ளார்களோ, அவர்களை, விரைவில் நீக்குகின்றேன். இச்சமயம் பகைமை செய் யாவிடினும் மற்றொரு சமயத்தில் விரோதஞ் செய்வார்களென ஐயுற்று எவரை யாம் துவேஷஞ் செய்கின்றோமோ, அவரையும் நீக்கி விடுகின்றனம் என்பது.

---

தன்னைத் தொட்டுப் போற்றிக் கொள்ளல்.

மந்திரம்—4

**सञ्ज्योतिषाऽभूवम् ।**

உரை.

யான், ஆதித்தனுடைய ஒளியோடு ஒன்றுபடுவேனாக என்பது.

---

வலஞ் சுற்றுதல்.

மந்திரம்—5

**ऐन्द्रीमावृतमन्वावर्ते ।**

உரை.

சிறந்த ஐசுவரியமுடைய இரவி சுற்றி வருவதைத் தழுவி, யானும் வலம் வருகின்றேன் என்பது.

மாறிச் சுற்றுதல்.

மந்திரம்—6

**समहं प्रजया संमया प्रजा समहꣳ रायस्पोषेण संमया रायस्पोषः ।**

உரை.

யான், பிரசையுடன் கூடியவனுவேனுக. பிரசைகள் என்னோடு கூடியிருக்குக. பிரசைகள் என்னல் அடையப்படுவதாகுக. தனம், என்னல் அடையப்படுவதாகுக. தனத்தை பெறத்தக்கவனுவேனுக என்பது.

ஆகவனீயத்தில் சமித்தை வைத்தல்,

மந்திரம்—7

**समिद्धो अग्नेमे दीदिहि समेद्धाते अग्नेदीयासम् ।**

உரை.

அக்கினியே! இச் சமித்தால் சுடர்விட் டெழுவாயாக. என் பொருட்டு ஒளி வீசுவாயாக. உன்னை வளர்க்கின்ற யானும், உனதருளால் வளர்கின்றனம் என்பது.

ஆகவனீயத்தைப் போற்றுதல்.

மந்திரம்—8

**वसुमान् यज्ञो वसीयान् भूयासम् ।**

உரை.

இவ்வேள்வி, உனதருளால் தனத்தையுடையது. யானும் உனதருளால் மிகுந்த தனமுடையனுகின்றேன் என்பது.

காருகபத்தியத் தீயைப் போற்றுதல்.

மந்திரம்—9—10

**अग्न आयूꣳषि पवस आसुवोर्जमिषञ्च नः । आरे बाधस्व दुच्छुनाम् । अग्ने पवस्व स्वपा अस्मे वर्चस्सुवीर्यम् । दधत्पोषꣳ रयिं मयि ।**

உரை.

அக்கினியே! மக்கள், பேரன்மார்களையுடைய எமது ஆயுளைப் பரிசோதிப்பாயாக. அதாவது, அவமிருத்தியுவினின்றும் விடுவிப்பாயாக. எமக்கு, உணவுப் பொருள்களையும் வன்மையையும் அளிப்பாயாக. பகைவரின் சேனை

போற்றல் முதலியன)

யைத் தூரத்தில் ஓட்டுவாயாக. அக்கினியே! நீ, நற்கரும முடையோனை எம்மைச் சோதிப்பாயாக. எமக்கு, வழக்கில் வன்மையையும், உறுதி, தனம் என்பவைகளையு மளிப்பாயாக என்பது.

இதுவுமது.

மந்திரம்—11

**अग्ने गृहपते सुगृहपतिरहन्त्वया गृहपतिना भूयासꣳ सुगृहपतिर्मया त्वं गृहपतिना भूयाश्शतꣳ हिमास्ता माशिषमाशासे तन्तवे ज्योतिष्मतीन्ता माशिषमाशासेऽमुष्मै ज्योतिष्मतीम् ।**

உரை.

மனைக்குத் தலைவனாகிய அக்கினியே! உனது அருளைப் பெற்ற யான், நல்ல கிருகபதியாகின்றேன். கிருகபதியாற் பூசிக்கப்பெற்ற நீயும் நல்ல கிருகபதியாவாய். நூறு, வருடமாக, தீயோம்பிய யான், பல மக்களைப் பெறுவதற்கு வாழ்த்துவாயாக. மக்களைப் பெற்றவனுக்கு நல்ல புத்தியுண்டாமாறும் வாழ்த்துவாயாக என்பது.

வேள்வியை முடித்து விடல்,

மந்திரம்—12

**कस्त्वायुनक्ति सत्वा विमुञ्चतु ।**

உரை.

வேள்வியே! உன்னை, முன்னர், என்னுடன் கூட்டிவைத்த பிரசாபதி இப்போது, உன்னை, என்னிலிருந்து விடுவிப்பானாக என்பது.

விரதத்தை விடுதல்.

மந்திரம்—13

**अग्ने व्रतपते व्रतमचारिषन्तदशकन्तन्मेऽराधि ।**

உரை.

வேள்விவடிவாகிய விரதத் தலைவ! உனது அருளால் இவ் விரதத்தை ஆசரித்தேன். அதாவது அவ்விரதத்தை முடிக்கு மாற்றலுடையவனானேன். எனது, விரதம் பலனை யடைந்தது என்பது.

வேள்வியை மீண்டும் வருவித்தல்.

மந்திரம்—14

**यज्ञो बभूव स आबभूव सप्रजज्ञे सवावृधे। सदेवानामधिपतिर्बभूवसो अस्मा॑ अधिपतीन् करोतु वय॑स्यामपतयो रयीणाम्।**

உரை.

இப்போது ஆசரித்த வேள்வி இனிது முடிவுபெறுக. அவ்வேள்வி, மீண்டுந் திரும்புக. எமது வீட்டில் மீண்டு மீண்டும் அநுட்டிப்பதால் வளருக. அவ்வேள்வி, எம்மாற் பூசிக்கப்பெற்ற தேவதைகளைப் பரிபாலிப்பதாகுக. மிகுந்த அநுட்டானம் எம்மைப் பரிபாலிப்போனாகச் செய்க. யாமும், வேள்விப் புருடனுடைய அருளால் வேள்விச் சாதனமாகிய தனத்திற்குத் தலைவனாவேனாக என்பது.

---

கிழக்கிற் சென்று செபித்தல்.

மந்திரம்—15

**गोमा॑ अग्नेऽविमा॑ अश्वी यज्ञो नृवत्सखा सदमिदप्रमृष्यः। इडावा॑ एषो असुर प्रजावान्दीर्घो रयिः पृथुबुध्नस्सभावान्।**

உரை.

அக்கினியே! மீண்டும் வரல் வேண்டுமென்று வேண்டிக்கொண்ட வேள்வியானது, பசு, குதிரை, இருத்துவிக்குக்கள், தேவசகாயம், தாழ்மையிலாமை, உணவுப் பொருள்கள், பல்வகை மக்களை யளித்தற்றன்மை, இடையில் விடுபடாமை, மிகுந்த தனம், மந்திர அநுட்டானங்களிற் குறைவின்மை, வித்வான்களுடைய சபை என்பவைகளை யுடையதாகுக. அதாவது உயிருடைய அக்கினியே! மீண்டும் வேண்டிக்கொண்ட வேள்வி, மேற்கூறியுள்ள விசேடணங்களை யுடையதாகுக என்பது. அசுர: = பிராணனுடைமை.

ஆறும் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## ஏழாவது அநுவாகம்

**நான்கு பஞ்சாதிக்குமேல் மூன்று பதங்களைக் கொண்டது**

---

தேவதா பரிக்கிரகவிதி

**यथावै संभृतसोमा एवं वा एते संभृतयज्ञायद्दर्शपूर्णमासौ कस्यवाऽह देवा यज्ञमा गच्छन्ति कस्य वा न बहूनां यजमानानां योवै देवताः**

தம் வசமாக்கல்)

पूर्वः परिगृह्णाति स एनाञ्श्वोभूते यजत एतद्वै देवानामायतनं यदाहवनीयोऽन्तराऽग्नी पशूनां गार्हपत्यो मनुष्याणामन्वाहार्यपचनः पितृणामग्निं गृह्णातिस्व एवाऽऽयतने देवताः परि ॥ १ ॥ गृह्णाति ताञ्श्वोभूते यजते व्रतेन वै मेध्योऽग्निर्व्रतपतिर्ब्राह्मणो व्रतभृद्व्रतमुपैष्यन् ब्रूयादग्ने व्रतपते व्रतञ्चरिष्यामीत्यग्निर्वै देवानां व्रतपतिस्तस्मा एव प्रतिप्रोच्य व्रतमा लभते बर्हिषा पूर्णमासे व्रतमुपैति वत्सैरमावास्यायामेतद्ध्येतयो रायतनमुपस्तीर्यः पूर्वश्चाऽग्निरपरश्चेत्याहुर्मनुष्याः ॥ २ ॥ इन्न्वा उपस्तीर्णमिच्छन्ति किमु देवा येषान्नवावसानमुपास्मिञ्छ्वो यक्ष्यमाणे देवता वसन्ति य एवं विद्वानग्निमुपस्तृणाति यजमानेन ग्राम्याश्च पशवोऽवरुध्या आरण्याश्चेत्याहुर्यद्ग्राम्यानुपवसति तेन ग्राम्यानवरुन्धे यदारण्यस्याश्ञाति तेनारण्यान् यदनाश्वानुपवसेत्पितृदेवत्यस्स्यादारण्यस्याश्ञातीन्द्रियम् ॥ ३ ॥ वा आरण्यमिन्द्रियमेवात्मन्धत्ते यदनाश्वानुपवसेत्क्षोधुकस्स्याद्यदश्ञीयाद्रुद्रोऽस्य पशूनभिमन्येतापोऽश्ञाति तन्नेवाशितन्नेवानशितन्नक्षोधुको भवति नास्य रुद्रः पशूनभिमन्यते वज्रोवै यज्ञः क्षुत्खलुवै मनुष्यस्य भ्रातृव्यो यदनाश्वानुपवसति वज्रेणैव साक्षात्क्षुधं भ्रातृव्यꣳ हन्ति ॥ ४ ॥

கூறிப்போந்த ஆறு அநுவாகங்களால் யாஜமான மந்திரங்கள் கூறப்பட்டன. மேல்வரும் ஐந்து அநுவாகத்தில் யாஜமானப் பிராமணங் கூறப்படுகின்றது. அவற்றுள், இவ்வேழாமநுவாகத்தில் தேவதா பரிக்கிரகவிதி கூறப்படுகின்றது. ஆகவனீய முதலிய அக்கினிகளை அத்துவரியு அன்வாதானஞ் செய்யும் (மீண்டும் உண்டாக்கும்) போது, எஜமானன் அச்சித்திர காண்டத்திற்கூறிய 'அக்கினியை எடுத்துக் கொள்கின்றேன்' 'अग्निं गृह्णामि' என்பது

முதலிய மந்திரங்களைச் செபித்தல் தேவதா பரிக்கிரகம் எனப்படும், இது ஆபத்தம்பருடைய சூத்திரத்தில் விளக்கம் என்பது.

தேவதா பரிக்கிரகத்தை விதித்தற் போருட்டு முதலில் துதிக்கபப்டுகின்றது,

பிராமணம்—1

**यथा वै समृतसोमा एवं वा एते समृतयज्ञा यद्दर्शपूर्णमासौ कस्य वाऽह देवा यज्ञमा गच्छन्ति कस्य वा न बहूनां यजमानानां यो वै देवताः पूर्वः परिगृह्णाति स एनाञ्श्वो भूते यजते ।**

உரை.

ஒரே வசந்த ரிது காலத்தில் பல வேள்வித்தலைவர்களின் சோமயாகங்கள் ஒன்றுபட்டுவருகின்றன. அவ்வாறே அமாவாசை பௌர்ணமியில், பல தரிச பூரணமாத யாகங்கள் ஒன்றுபட்டுவருகின்றன. இவற்றிற்கு அக்கினி முதலிய தேவதைகள் ஒன்றேயாம். ஆதலின், தேவர்கட்கு, யாருடைய வேள்விக்குப் போகலாம்? யாருடை வேள்விக்கு போதல் கூடாது என்று மனச் சங்கட முண்டாகின்றது. அச் சங்கடம் பரிக்கிரக மந்திரங்களை ஓதுவதால் நீங்குகின்றது. அல்லது யோகவலியால் பற்பல வடிவங்களைத் தாங்கிக் கொண்டு, தேவர்கள் அவ்வவ் வேள்விக்குச் செல்கின்றனர். இவ்வாறு பல்லுருவெடுத்துச் செல்கின்றனர் என்பதை வியாசரும் தேவதாதி கரணத்தில் இனிது கூறியுள்ளார். விரிப்பதிலென், இவ்வாக்கியம் தேவதா பரிக்கிரக விதியின் பொருட்டாதலின் தேவர்கட்குச் சங்கடம் இன்மை கருத்து என்பது.

---

தேவதா பரிக்கிரகத்திற்கு இடங் கூறப்படுகின்றது,

பிராமணம்—2

**एतद्वै देवानामायतनं यदाहवनीयोऽन्तराऽग्नी पशूनां गार्हपत्यो मनुष्याणामन्वाहार्यपचनः पितृणाम् ।**

உரை.

ஆகவனீயம் தேவர்கட்கு இடமாம். ஆகவனீய காருகபத்தியங்களுக்கு நடு பசுக்கட்கு இடமாம், தக்ஷிணாக்கினி பிதிர்க்கட்கு இடமாம் என்பது.

அவ்விடங்களிலுள்ள தேவதா பரிக்கிரகம்

பிராமணம்—3

**अग्निं गृह्णाति स्व एवाऽऽयतने देवताः परि गृह्णाति ताञ्श्वो भूते यजते ।**

உரை.

அக்கினியைக் கிரகிக்கின்றான். தனது இடத்தில் தேவதை கிரகிக்கப்படுகின்றது; அதாவது பூசிக்கப்படுகின்றது என்பது.

---

மந்திரத்தால் வேள்வியாகிய விரதத்தை விதிப்பதற்குத் துதிக்கின்றது,

பிராமணம்—4

**व्रतेन वै मेध्योऽग्निर्व्रतपतिर्ब्राह्मणो व्रतभृत् ।**

உரை.

மேற் கூறப்படும் மந்திரத்தைப் படித்தலாகிய விரதத்தைக் கொள்வதனாலே, அக்கினி, யாகத்திற்கு உரியதாகின்றது. வேள்வித்தலைவனும் விரதத்தைப் பூண்டவனாகின்றான் என்பது.

---

மந்திரத்துடன் விரதத்தை ஏற்றல் விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—5

**व्रतमुपैष्यन्ब्रूयादग्ने व्रतपते व्रतञ्चरिष्यामीति ।**

உரை.

விரதத்தை ஏற்றுக்கொண்டு, அக்கினியே! விரதபதியே! விரதத்தை ஆசரிக்கின்றேன் என்று கூறுக என்பது.

---

மந்திரத்திலுள்ள 'விரதபதி' என்னுஞ் சொல்லுக்கும், மந்திரத்திற்குங் கருத்துக் கூறப்படுகின்றது,

பிராமணம்—6

**अग्निर्वै देवानांव्रतपतिस्तस्मा एव प्रतिप्रोच्य व्रतमा लभते ।**

உரை.

தேவர்களுக்குள் அக்கினி, விரதத்திற்குத் தலைவன் ஆதலின், அதன்பாற் சொல்லிக்கொண்டு, விரதந் தொடங்கப் பெறுகின்றது என்பது.

---

விரதகால விசேஷம் விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—7

**बर्हिषा पूर्णमासे व्रतमुपैति वत्सैरमावास्यायामेतद्ध्येतयो रायतनम् ।**

உரை.

தருப்பையைக் கொண்டு வருவதால் உபலட்சிதமாகிய காலமும், பசுக்களி

னின்று கன்றைப் பிரித்தலால் உபலட்சிதமாகிய காலமும், விரதத்தை ஏற்றுக்கொள்ளத்தக்க காலமாம் என்பது.

---

இனி, தருப்பையைப் பரப்பல்.

அத்வரியு, ஆகவனீய, காருகபத்தியத்திற்கருகில் தருப்பையை விரித்து விடும்போது, அச்சித்திரகாண்டத்திற் கூறியுள்ள 'உபௌ அக்கினி உபஸ் திருணுதே' என்பது முதலிய மந்திரத்தை வேள்வித்தலைவன் செபிப்பதே விரித்தல், அல்லது, அத்துவரியுவினுல் தருப்பை விரித்தல் இக்காண்டத்தில் விதிக்கப்படுகின்றது.

தருப்பை விரித்தலைக் கூறுகின்றது,

பிராமணம்—8

**उपस्तीर्यः पूर्वश्चाऽग्निरपरश्चेत्याहुः ।**

உரை.

பூர்வாக்கினியும், பராக்கினியும் தருப்பையால் பரப்பப் பெறுகின்றது என்பது. இது பரோக்ஷமாய்க் கூறுதலின் விதியைப் புகழ்கின்றதாம்.

---

தருப்பையை விரிப்பதிற் காரணங் கூறுகின்றது,

பிராமணம்—9

**मनुष्या इन्वा उपस्तीर्णमिच्छन्ति किमु देवा येषान्नवावसानमुपास्मिन्श्वो यक्ष्यमाणे देवता वसन्ति य एवं विद्वानग्निमुपस्तृणाति ।**

உரை.

மிகவறியரும், குளிர், காற்று, வெயில் நீங்குதற் பொருட்டு, புல்லால் ஒரு குடிசை செய்து கொள்கின்றனரெனின்? பெருமகிமை வாய்ந்த தேவர்கட்குத் தருப்பையை விரித்தல் வேண்டுமென்பதிற் சொல்லற்பாலதென்னை? அப்போதப்போது தேவர்கள் வசிப்பதற்கு புதிய புதிய இல்லம் விரும்பியபடி அமைக்கப்படுகின்றது என்க. எவ் வேள்வித்தலைவன், அக்கினிக்குத் தருப்பையை விரிக்கின்றானே, அவன் மறுநாள் வேட்பதன் பொருட்டு விரித்து வைத்திருக்கின்ற தருப்பையின்மீது, அவிகளை யருந்துகின்ற தேவர்கள் முதல் நாள் வந்து தங்குகின்றனர் என்பது.

---

சூத்திரகாரர் கூறிய ஆரண்ய உணவு விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—10

**यजमानेन ग्राम्याश्च पशवोऽवरुध्या आरण्याश्चेत्याहुर्यद्ग्राम्यानुपवसति तेन ग्राम्यानवरुन्धे यदारण्यस्याश्नाति तेनारण्यान् यदनाश्वानुपवसेत्पितृदेवत्यस्स्यात् ।**

உரை.

ஈண்டு, கிராமத்தில் விளைந்த உணவுப் பொருளை உண்பதா? வனத்தில் விளைந்ததை உண்பதா? அல்லது உண்ணுதிருப்பதா? என்பது சங்கையாம். இவற்றுள், வனத்திலுள்ளது உண்ணத்தக்கதென்று கொண்டு ஏனையவைகள் இரண்டுந் தள்ளப்படுகின்றன என்பதையுணர்க.

ஈண்டு, விலங்குகள் இருவகைப்படுகின்றன, அவை, கிராமத்திலுள்ளவை, வனத்திலுள்ளவை என்ப. அவற்றுள்ளும், கோ, குதிரை, ஆடு, பள்ளையாடு, மனிதன், கழுதை, ஒட்டை என்னும் ஏழும் கிராமத்திலுள்ளவை. மான் புலி, பறவை, பாம்பு, யானை, குரங்கு, நாதேயம் என்பன வனத்திலுள்ளவைகள். இவ் விருவகையையும் வேள்வித்தலைவன் தேடிக் கொள்ளல் வேண்டுமென்று அறிஞர் கூறுகின்றனர். கிராமத்திலுள்ள நெல் முதலானவைகளை விடுவதாலாகிய விரதத்தால் கிராமத்திலுள்ள பசு முதலானவைகளைத் தேடிக்கொள்கின்ருன். வனத்திலுள்ள, தினை, சாமை முதலியவற்றை யுண்ணுவதால் வனத்திலுள்ள பசுக்களைத் தேடிக் கொள்கின்ருன். இருவகை யுணவையு முண்ணுவிடில் இவ் விரதம் பிதிருக்களின் பொருட்டாய் முடியும் என்பது.

---

உணவுப் பொருள் விதானம்.

பிராமணம்—11

आरण्यस्याऽश्नातीन्द्रियं वा आरण्यमिन्द्रियमेवात्मन्धत्ते ।

உரை.

ஆரண்யத்திலுண்டானவற்றை அருந்துக. இந்திரியம் ஆரண்ய வுணவால் வளர்ந்து உறுதிப்படுகின்றது என்பது.

---

மற்ருெரு பட்சத்தை விதிப்பதன் பொருட்டு உண்ணல் உண்ணுமையிற் குற்றங் கூறப்படுகின்றது,

பிராமணம்—12

यदनाश्वानुपवसे त्क्षोधुकस्स्याद्यदश्नीयाद्रुद्रोऽस्य पशूनभिमन्येत ।

உரை.

உண்ணுவிடில் பசியால் வருந்துகின்ருன், உண்ணில் உருத்திரன் இவனுடைய பசுக்களைக் கொல்லுகின்ருன் என்பது.

---

விதிக்கவிரும்பிய மற்ருெருபட்சங் கூறப்படுகின்றது,

பிராமணம்—13

अपोऽश्नाति ।

உரை.

'தண்ணீரை யருந்துகின்றான்.' என்னுமிதனால் முற்கூறிய குற்றங்களிரண்டும் நீக்கப்படுகின்றன என்பது.

---

குறித்த குற்றமிரண்டும் நீக்கும் வகை கூறப்படுகின்றது,

பிராமணம்—14

तन्नेवाशितन्नेवानशितन्नक्षोधुको भवति नाऽस्य रुद्रः पशूनभिमन्यते ।

உரை.

தண்ணீரருந்தில், உணவருந்தாமையின் அருந்தியதும் ஆகாது. பசி நீங்கினமையின் அருந்தாமையு மாகாது என்பது.

---

உண்ணாமை கூறப்படுகின்றது,

பிராமணம்—15

वज्रोवै यज्ञः क्षुत्खलुवै मनुष्यस्य भ्रातृव्यो यद्नाश्वानुपवसति वज्रेणैव साक्षात्क्षुधं भ्रातृव्यꣳ हन्ति ।

உரை.

வேள்விக்கு அங்கமாகிய உண்ணாமை (விரதம்) யென்னும் வச்சிரத்தால், மேல்வரும் பிறப்பில் உண்டாகும் பசியென்னும் பகையைக் கொல்கின்றான். இது இவ்வேள்வியால் மறு பிறப்பில் உணவுப்பொருள் மிகுதியாய்க் கிடைக்குமாதலின் என்பது.

ஏழாவது அநுவாகம் முடிந்தது

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## எட்டாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் பதினெரு பதங்களைக் கொண்டது

---

வேள்வி ஆயுதங்களைக் கொள்ளுதலைக் கூறுகின்ற பிராமணங்கள்

योवै श्रद्धामनारभ्य यज्ञेन यजतेनास्येष्टाय श्रद्दधतेऽपः प्रणयति श्रद्धावा आपश्श्रद्धामेवारभ्य यज्ञेन यजत उभयेऽस्य देवमनुष्या इष्टाय श्रद्दधते तदाहुरति वा एतावर्त्रन्नेदन्त्यति वाचं मनोवा वैतानातिने-

दन्तीति मनसा प्रणयतीयं वै मनः ॥ १ ॥ अनयै वैनाः प्रणयत्य-
स्कन्न हविर्भवति यएवं वेदयज्ञायुधानि सम्भरति यज्ञो वै यज्ञायु-
धानि यज्ञमेव तत्संभरति यदेकमेकꣳ संभरेत्पितृदेवत्यानिस्युर्यत्सह
सर्वाणि मानुषाणि द्वेद्वे सम्भरति याज्यानुवाक्ययोरेव रूपङ्करो-
त्यथो मिथुनमेव यो वै दशयज्ञायुधानि वेदमुखतोऽस्य यज्ञः
कल्पतेस्फ्यः ॥ २ ॥ च कपालानि चाग्निहोत्रहवणीच शूर्पञ्च
कृष्णाजिनञ्च शम्याचो लूखलञ्च मुसलञ्च दृषचोपला चैतानि वै
दशयज्ञायुधानि य एवं वेदमुखतोऽस्य यज्ञः कल्पते यो वै देवेभ्यः
प्रति प्रोच्य यज्ञेन यजते जुषन्तेऽस्य देवा हव्यꣳ हविर्निरुप्यमाण
मभिमन्त्रयेताग्निꣳ होतारमिहतꣳ हुव इति ॥ ३ ॥ देवेभ्य एव
प्रतिप्रोच्य यज्ञेन यजते जुषन्तेऽस्य देवा हव्यमेषवै यज्ञस्य ग्रहो
गृहीत्वैव यज्ञेन यजते तदुदित्वा वाचं यच्छति यज्ञस्य धृत्या अथो
मनसावै प्रजापतिर्यज्ञमतनुतमनसैव तद्यज्ञन्तनुते रक्षसा मनन्वव-
चारायोवै यज्ञं योग आगते युनक्ति युंक्ते युञ्जानेषु कस्त्वायुनक्ति
सत्वा युनक्त्वित्याह प्रजापतिर्वैकः प्रजापति नैवैनं युनक्ति युंक्ते
युञ्जानेषु ॥ ४ ॥

ஏழாம் அநுவாகத்தில், தேவதாபரிக்கிரகங் கூறப்பட்டது. எட்டாமநு
வாகத்தில், வேள்விச் சாதனப் பொருள்களை வைத்தல் கூறப்படுகின்றது.

---

அவற்றுள் முதலில், தண்ணீரை யெடுத்தல் கூறப்படுகின்றது.

பிராமணம்—1

**योवै श्रद्धामनारभ्य यज्ञेन यजतेनास्येष्टाय श्रद्दधते ।**

உரை.

எவ்வேள்வித் தலைவன், மனதில், தேவதையின்மீது அன்பை வைக்காமல் வேள்வி செய்ய முயல்கின்றானோ, அவனுடைய ஆகுதியை, இருத்துவிக்குக் களும், தேவதைகளும் விரும்ப மாட்டார்கள் என்பது.

---

அது விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—2

**अपः प्रणयति श्रद्धा वा आपश्श्रद्धामेवारभ्य यज्ञेन यजत उभयेऽस्य देवमनुष्या इष्टाय श्रद्दधते ।**

உரை.

ஐதரேயங் கூறுவதுபோல், நீராடி ஆசமனஞ் செய்து, தேவாராதனை செய்யில் மனவொருமை காணப்படுதலின், தண்ணீரைக் கொண்டுவருதலின் தேவர்களிடத்து அன்பிருத்தலால் தேவர்கட்கும், இருத்துவிக்குகளுக்கும் வேள்வியில் அன்புள்ளதாம் என்பது.

---

தண்ணீரெடுக்கும்போது தியானங் கூறப்படுகின்றது; ஆதலின், தியானத்தை விதித்தற் பொருட்டுத் துதிக்கின்றது,

பிராமணம்—3

**तदाहुरति वा पतावर्त्रन्नेदन्त्यति वाचं मनोवा वैतानातिनेदन्तीति ।**

உரை.

இத் தண்ணீர், உடம்பின் விருத்தியையும், வாக்கையுங் கடந்து செல்கின்றது. ஆற்றுப் பெருக்கு நீரை, உடம்பாலும் வாக்காலுந் தடுத்தல் முடியாது மனம், ஒன்றுதான் நீரைக் கடந்து செல்வது. இதன் பொருள் மேல் வெளியாகும் என்பது.

---

அதை விதிக்கின்றது,

பிராமணம்—4

**मनसा प्रणयति ।**

உரை.

மனதால் தியானித்துக் கொண்டு தண்ணீர் எடுக்கப்படுகின்றது. இவ்வாறு சூத்திரகாரர் கூறியிருத்தலின் என்பது.

---

வைத்தல்)

கடக்கமுடியாமை கூறப்படுகின்றது,

பிராமணம்—5

इयंवै मनोऽनयै वैनाः प्रणयति ।

உரை.

மனது மண்போன்று வியாபிக்க முடியுமாதலின் மனம் மண்ணும் ஆதலின் ஆறு முதலியவைகளின் தண்ணீர் மண்ணைக் கடந்து செல்ல முடியாது என்பது.

மனதால் பிரணயனஞ் செய்வதின் ஞானம் புகழப்படுகின்றது,

பிராமணம்—6

अस्कन्न हविर्भवति यएऽवं वेद ।

உரை.

இவ்வாறுணர்தல், சிதறாத அவியாகின்றது என்பது,

அதை விதிக்கின்றது.

பிராமணம்—7

यज्ञायुधानि सम्भरति यज्ञो वै यज्ञायुधानि यज्ञमेव तत्संभरति ।

உரை.

வேள்விக்குச் சாதனங்களாதலின், ஸ்ப்யம் (மரக்கத்தி) முதலியவைகள் வேள்வியின் ஆயுதங்களெனப்படுகின்றன. அவைகளை அத்வர்யு தேடல் வேண்டும். சாத்தியமும் சாதனமும் ஒன்றெென வுபசரிக்கப்படுதலின் யக்ஞமும் ஆயுதமாயிற்று. இவைகளைத் தேடுதலால் வேள்வி தேடப் பெற்றதாகின்றது என்பது.

ஈண்டு, ஆயுதங்களின் பிரயோகம், ஒவ்வொன்ருகப் பிரயோகித்தல், அனைத்தையும் ஒன்ருய்ப் பிரயோகித்தல், இரட்டையிரட்டையாய்ப் பிரயோகித்தல் என மூவகைப்படும். அவற்றுள், மூன்ருவது பட்சத்தை விதித்தற் பொருட்டு ஏனைய இரண்டு பட்சங்களும் பழிக்கப்படுகின்றன.

அவற்றுள் ஒன்றையும், அநேகத்தையும் பழித்தல்,

பிராமணம்—8

यदेकमेकं संभरेत्पितृदेवत्यानिस्युर्यत्सह सर्वाणि मानुषाणि ।

உரை.

ஒவ்வொன்ருய்ப் பிரயோகித்தல் பிதிர்க்களுக்காம். அனைத்தையும் ஒன்று படுத்திப் பிரயோகித்தல் மனிதர்களுக்காம். இரட்டையாய் வைத்தல் தேவர் களுக்காம் என்பது.

---

இரட்டையின் விதி,

பிராமணம்—9

**द्वेद्वे सम्भरति याज्यानुवाक्ययोरेव रूपङ्करोत्यथो मिथुनमेव ।**

உரை.

இரட்டை என்பதற்கு, ஒத்திருத்தலின், யாஜ்யாநு வாக்கியரூபங்கள் ஆண் பெண்வடிவம் என்பதும், மிதுனம் என்பதும் பெறப்பட்டன என்பது.

---

தேடவேண்டிய யக்ஞாயுதங்களின் வடிவங்களை விதித்தற் பொருட்டு அதன் உணர்ச்சி புகழப்படுகின்றது,

பிராமணம்—10

**यो वै दशयज्ञायुधानि वेदमुखतोऽस्य यज्ञः कल्पते ।**

உரை.

எவ் வேள்வித்தலைவன், வேள்வித் தொடக்கத்தில் ' இப்பத்துந் தேடற் பாலன ' என்று, உணர்கின்ருனே, அவனுடைய யாகம் தடையின்றி முடிவடை வதாகின்றது என்பது.

---

ஆயுதவடிவங்கள் விதிக்கப்படுகின்றன,

பிராமணம்—11

**स्फ्य श्च कपालानि चाग्निहोत्रहवणीच शूर्पञ्च कृष्णाजिनञ्च शम्याचो लूखलञ्च मुसलञ्च दृषच्चोपला चैतानि वै दशयज्ञायुधानि य एवं वेदमुखतोऽस्य यज्ञः कल्पते ।**

உரை.

ஸ்ப்யம், (மரக்கத்தி) கபாலம், (அகல்) அக்கினி ஹோத்ரஹவணி, (கன்றின் காதுபோன்றுள்ள ஒருவகை மரப்பாத்திரம்) சூர்ப்பம், (முறம்) கிருஷ் ணாஜினம், (கருமான் தோல்) சம்மியை, (தடி) உலூகலம், (உரல்) முஸலம், (உலக்கை) திருஷத், (அம்மி) உபலா, (குழவிக்கல்) இவை பத்து ஆயுதங்க

வைத்தல்)

ளெனப்படுகின்றன. இவைகளை யுணர்ந்தவன் வேள்வியைச் சிறப்பாய்ச் செய்கின்ருன். இவற்றின் விரிவை பிரயோகத்திற் காண்க. வேறு, பத்தாயுதங்கள் உண்டென்பதையு முணர்க என்பது.

---

எஜமானன் போற்றுவதை விதிப்பதன் பொருட்டுப் புகழப்படுகின்றது,

பிராமணம்—12

**यो वै देवेभ्यः प्रतिप्रोच्य यज्ञेन यजते जुषन्तेऽस्य देवा हव्यम् ।**

உரை.

எவன், 'ஓமம் பண்ணுகின்றேன்' என்று, தேவர்கள் கேட்குமாறு கூறிவிட்டு வேள்வியைச் செய்கின்ருனே, அவனுடைய அவியை, தேவர்கள் அருந்துகின்ருர்கள் என்பது.

---

விதிக்கின்றது

பிராமணம்—13

**हविर्निरुप्यमाणमभि मन्त्रयेताग्निꣳ होतार मिहतꣳ हुव इति देवेभ्य एव प्रतिप्रोच्य यज्ञेन यजते जुषन्तेऽस्य देवा हव्यम् ।**

உரை.

'அக்கினிம் ஹோதாரம்' என்பது முதலிய மந்திரம் முன் பிரபாடகத்தில் 'மமநாம' என்னு மநுவாகத்தில் உரையுடன் கூறப்பட்டது. தேவர்களை வரவழைக்கின்ற அவ்வக்கினியை, இவ்வேள்வியில் அழைக்கின்றேன். நன்மனத்தர்களாய்த் தேவர்கள் வருவார்களாக என்று இவ்வாறு தேவர்கட்கு அறிவித்து விட்டு வேள்வியைச் செய்கின்ற எனது அவியை, தேவர்கள் இனிது உண்பார்களாக என்பது.

---

இப்போற்றுதலையே மீண்டும் புகழ்கின்றது,

பிராமணம்—14

**एषवै यज्ञस्य ग्रहोगृहीत्वैव यज्ञेन यजते ।**

உரை.

இம் மந்திரப் பிரயோகம் வேள்வியை ஏற்றுக் கொள்ளுதலாம். 'அவியை உண்பார்களாக' என்பதால் என்க. தேவதையை முன்னிட்டுப் பொருளை விடுதலால் வழிபடல் என்பது.

---

எஜமானனுக்கு மௌனம் விதிக்கப்படுகின்றது.

பிராமணம்—15

**तदुदित्वा वाचं यच्छति यज्ञस्य धृत्यै ।**

உரை.

அபி மந்திரணஞ் செய்யும் மந்திர வாக்கியத்தைக் கூறிவிட்டு வாக்கை அடக்கிக்கொள்கின்றான். அது, வேள்வியின் உறுதியின் பொருட்டாகின்றது என்பது.

---

மீண்டும் மௌனத்தைப் புகழ்கின்றது.

பிராமணம்—16

**अथो मनसा वै प्रजापतिर्यज्ञमतनुत मनसैव तद्यज्ञन्तनुते रक्षसा मनन्ववचाराय ।**

உரை.

பேசில், பேசவிரும்பிய சொற்பொருளைச் சிந்திக்கின்றதாலும், அஃது, அமைதலாலும் அமையாமையாலும் மனங் கலங்குவிடில் மனத்தைக் காரணமாகவுள்ள வேள்வியும் விடுபடும். இக் காரணத்தாலே, பிரசாபதி, மனம் அலையாதிருத்தற் பொருட்டு மனதினால் வேள்வியைச் செய்தனன். அதைப் போல், எஜமானனும் அம் மௌனத்தால் மனதினாலேயே வேள்வியை நன்கு செய்கின்றான். இவ்வாறு செய்யும்போது, மறைப்பின்மையின் அசுரர் இங்கு நடமாடல் இல்லை என்பது.

---

வேள்வி யோகத்தை யுணர்வதற்குப் புகழப்படுகின்றது,

பிராமணம்—17

**यो वै यज्ञं योग आगते युनक्ति युङ्क्ते युञ्जानेषु ।**

உரை.

எவ்வேள்வித் தலைவன், யக்ஞயோக காலம் வந்தபோது மறதியின்றிய வனாய் வேள்வியை ஏற்றுக் கொள்கின்றானோ, அவனே, வேள்விகளைச் செய்யும் வேள்வித் தலைவர்களுக்குள் உள்ளவாறு வேள்வி செய்கின்றவனாகின்றான் என்பது.

---

யோகவிதியையுணருவது கருத்தாக அதன் காரணமான இரண்டு மந்திரங்களைக் கூறி உரை கூறுகின்றது

பிராமணம்—18

**कस्त्वा युनक्ति सत्वा युनक्त्वित्याह प्रजापतिर्वै कः प्रजापतिनैवैनं युनक्ति युङ्क्ते युञ्जानेषु ।**

உரை.

இம் மந்திரத்திற்கு, முன் பிரபாடகத்தில் உரை கூறப்பட்டிருக்கின்றது. எப்போதும், எல்லா எஜமானர்களுடைய வேள்வியைக் கூட்டி வைக்கின்ற பிரசாபதியே, இப்போதும், தேரிற் குதிரைகளைப் பூட்டுவதுபோல் எம்மிடத்தில் வேள்வியைச் சேர்ப்பானாக. இம் மந்திரத்தால் வேள்வியைக் கூட்டுக என்பதால் இது உந்நீதவிதியாம் என்பது. உந்நீதம் = குறிப்பு.

எட்டாம் அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## ஒன்பதாவது அநுவாகம்

**மூன்று பஞ்சாதிக்கு மேல் நாற்பது பதங்களைக் கொண்டது.**

---

பன்னிரண்டு, துவந்துவசம்பத்தியைக் கூறு பிராமணங்கள்.

प्रजापतिर्यज्ञानसृजताग्निहोत्रञ्चाग्निष्टोमञ्च पौर्णमासीञ्चोक्थ्यं-
ञ्चाऽमावास्याञ्चाऽतिरात्रञ्च तानुदमिमीत यावदग्निहोत्रमासीत्तावा-
नग्निष्टोमो यावती पौर्णमासी तावानुक्थ्यो यावत्यमावास्या तावान-
तिरात्रो यएवं विद्वानग्निहोत्रञ्जुहोति यावदग्निष्टोमेनो पाप्नोति ताव-
दुपाप्नोति यएवं विद्वान् पौर्णमासीं यजते यावदुक्थ्येनो पाप्नोति ॥१॥
तावदुपाप्नोति यएवं विद्वानमावास्यां यजते यावदतिरात्रेणो पाप्नोति
तावदुपाप्नोति परमेष्ठिनोवा एष यज्ञोऽग्र आसीत्तेन स परमाङ्काष्ठा-
मगच्छत्तेन प्रजापतिन्निरवासाययत्तेन प्रजापतिः परमाङ्काष्ठा मग-
च्छत्तेनेन्द्रन्निरवासाययत्तेनेन्द्रः परमाङ्काष्ठा मगच्छत्तेनाग्नीषोमौ
निरवासाययत्तेनाग्नीषोमौ परमाङ्काष्ठा मगच्छतां यः ॥ २ ॥ एवं
विद्वान्दर्शपूर्णमासौ यजते परमामेव काष्ठाङ्गच्छति योवै प्रजा तेन
यज्ञेन यजते प्रप्रजया पशुभिर्मिथुनैर्जायते द्वादशमासास्संवत्सरो

द्वादंश द्वन्द्वानिं दर्शपूर्णमासयोस्तानिं सम्पाद्यानीत्यांहुर्वत्सञ्चोपाव सृजत्युखाञ्चाधिश्रयत्य वंचहन्ति दृषदौंच समाहन्त्यधिंच वपंते कपालांनि चोपंदधाति पुरोडाशंञ्च ॥ ३ ॥ अधिश्रयत्याज्यंञ्च स्तम्ब यजुश्च हरंत्यभिचं गृह्लाति वेदिंञ्च परिगृह्लाति पत्नींञ्च सन्नंह्यति प्रोक्षंणीश्चासादयत्याज्यंञ्चैतानि वै द्वादंश द्वन्द्वानिं दर्शपूर्णमासयोस्तानि य एवꣳ सम्पाद्य यजंते प्रजांतेनैव यज्ञेनं यजते प्रप्रजयां पशुभिंर्मिथुनैर्जांयते ॥ ४ ॥

எட்டாமநுவாகத்தில் யக்ஞ ஆயுதங்களை வைக்கு முறை கூறப்பட்டது. ஒன்பதாமநுவாகத்தில், பன்னிரண்டு இரட்டைகளையடைதல் கூறப்படுகின்றது.

---

அதில் முதலாவதாக, ஆசரிப்பவர்கட்கு பயன் மிகுதியாதற் பொருட்டு உணர்வு விசேட விதியைக் கொண்டு வருவித்ததற்குப் புகழ்கின்றது,

பிராமணம்—1

प्रजापतिर्यज्ञानसृजताग्निहोत्रञ्चाग्निष्टोमञ्च पौर्णमासीञ्चोक्थ्यञ्चाऽमावास्याञ्चाऽतिरात्रञ्च तानुदमिमीतयावदग्निहोत्रमासीत्तावानग्निष्टोमो यावती पौर्णमासी तावानुक्थ्यो यावत्यमावास्या तावानतिरात्रः ।

உரை.

அக்கினிஹோத்திரம், பௌர்ணமி அமாவாசை யாகங்கள், குறைவுபட்ட பொருள், மந்திரம், கிரியா விசேடங்களால் முடிவனவாமாதலின் குறைந்த பலன்களை யுடையவைகள். அக்கினிஷ்டோமம், உக்தியம், அதிராத்திர யாகங்கள் மிகுதியானபொருள், மந்திரம், கிரியைகளால் முடிவனவாதலின் மிகுந்த பலன்களையுடையன. இவ் விருவகை வேள்விகளையும், பிரசாபதியானவன் படைத்துவிட்டு, இளைய மகன்மீது தந்தை போன்று, குறைந்தவைகளான அக்கினி ஹோத்திர முதலானவைகட்கு அநுக்கிரகம் பண்ணும் வாயிலாக மூன்று துவந்துவமாக (இரட்டைகளை) ச்சேர்த்தனன். அவைகளின் உதவியால் அக்கினிஹோத்திரம் முதலானவைகளும் அக்கினிஷ்டோம முதலியவைகட்கு ஒப்பாயின என்பது.

உணர்ச்சி விசேட விதியை யூகிக்கின்றது,

பிராமணம்—2

य एवं विद्वानग्निहोत्रं जुहोति यावदग्निष्टोमेनोपाप्नोति तावदुपाप्नोति य एवं विद्वान् पौर्णमासीं यजते यावदुक्थ्येनो पाप्नोति तावदुपाप्नोति य एवं विद्वानमावास्यां यजते यावदतिरात्रेणोपाप्नोति तावदुपाप्नोति ।

உரை.

இவ்வாறு சமமாகிய பயனென்றுணர்ந்து, அக்கினிஹோத்திரத்தைச் செய்கின்றவன், அக்கினிட்டோமத்தால் அடையும் பயனை அடைகின்றான். அங்ஙனமே, பௌர்ணிமியாகஞ் செய்கின்றவன் உக்தியத்தால் அடையும் பயனை யடைகின்றான். அவ்வாறே அமாவாசை யாகஞ் செய்கின்றவனும், அதிராத்திர யாகத்தால் அடையும் பயனை யடைகின்றான் என்பது.

ஈண்டு, 'பிரசாபதியின் அருளால் அக்கினி ஹோத்திர முதலானவைகள்' அக்கினிஷ்டோம முதலானவைகட்கு ஒப்பாம் என்றுணர்ந்தவன், ஒத்த பயனைக் கூறுதலால், பயன் மிகுந்த அநுட்டான முடையவர்கள் அக்கினிஷ்டோம முதலானவைகளின் சமத்தைப் பாவித்தல் வேண்டும் என்பது விதியாயினமை காண்க.

சாளிக்கிராமம் முதலானவைகளில் விஷ்ணுவைப் பாவிப்பதுபோல், அக்கினி ஹோத்திர முதலானவைகட்கு, அக்கினிஷ்டோம முதலானவைகளின் பயன்களைப்போன்ற பயன்கள் உண்டெனப் பாவித்தல் வேண்டுமென்பது திரண்ட பொருள்.

---

மீண்டும் தரிசபூரணமாச யாகங்கள் துதிக்கப்படுகின்றன

பிராமணம்—3

परमेष्ठिनोवा एष यज्ञोऽग्र आसीत्तेन स परमाङ्काष्ठामगच्छत्तेन प्रजापतिन्नि-र्वासाय यत्तेन प्रजापतिः परमाङ्काष्ठा मगच्छत्तेनेन्द्रन्निरवासाय यत्तेनेन्द्रः परमाङ्काष्ठा मगच्छत्तेनाग्नीषोमौ निरवासाय यत्तेनाग्नीषोमौ परमाङ्काष्ठा मगच्छतां य एव विद्वान्दर्शपूर्णमासौ यजते परमामेव काष्ठाङ्गच्छति ।

உரை.

முன் கற்பத்தில், வேள்வித் தலைவனாகிய பிரமனிடத்திலிருந்து தரிசபூரணமாச வேள்விகள் தோன்றின. பிரமன் ஈசுரார்ப்பணமாக இவ் வேள்விகளைச் செய்து இதனுடைய முடிந்த பயனாகினாகிய படைப்புத் தொழிலைப் பெற்றுக் கொண்டனன். முன், பிரசாபதி, இவ் வேள்வியைச் செய்யும்படி எவி

னன், அங்ஙனமே, இந்திரன், தரிசபூரணமாத வேள்வியை செய்து முடித்து அதன் பயனை யடைந்தனன் என்று இவ்வாறுணர்ந்து தரிசபூரணமாச வேள்வியைச் செய்கின்றவன் அதனது முடிந்த பயனை யடைகின்றான் என்பது.

---

துவந்துவ சம்பாதனத்தை விதிப்பதற்குப் புகழ்கின்றது,

பிராமணம்—4

**योवै प्रजातेन यज्ञेन यजतेप्र प्रजया पशुभिर्मिथुनैर्जायते द्वादशमासास्सं वत्सरो द्वादश द्वन्द्वानि दर्शपूर्णमासयोस्तानि सम्पाद्यानीत्याहुः ।**

உரை.

ஒருவருடத்தின் பன்னிரண்டு மாதங்களுள் ஒவ்வொரு மாதத்திற்கும் அமாவாசை பௌர்ணிகள் இரட்டைப்படுதலின் பன்னிரண்டு துவந்துவம் (இரட்டை) ஆயிற்று. இவ்வாறு மிகவிரிந்த தரிசபூரணமாச யாகங்களைச் செய்கின்றவன், புத்திரன், பசு, முதலானவைகளின் இரட்டைகளை யடைகின்றான். எனவே, இரட்டித்த பயனை யடைகின்றான் என்பது.

---

துவந்துவம் விதிக்கப்படுகின்றது

பிராமணம்—5

**वत्सञ्चोपावसृजत्युखाञ्चाधिश्रयत्यवचहन्ति दृषदौच समाहन्त्यधिच वपते कपालानि चोपदधाति पुरोडाशञ्चाधिश्रयत्याज्यञ्च स्तम्बयजुश्च हरत्य-भिच गृह्णाति वेदिञ्च परिगृह्णाति पत्नीञ्च सन्नह्यति प्रोक्षणीश्चा साद-यत्याज्यञ्च ।**

உரை.

பால் கறப்பதன்பொருட்டு, வேட்போன் (அத்வரியு) 'அயக்ஷ்மாவ:' என்னும் மந்திரத்தால், கன்றை அவிழ்த்துவிடல் வேண்டும். பாலைச் சுடவைத்தற்கு, 'மாதரிஸ்வனோகர்ம:' என்னும் மந்திரத்தால் உகாவை (பால் காய்ச்சும் பானையை) காருகபத்தியத் தீயில் வைத்தல் வேண்டும். 'அவரக்ஷோதிவ' என்னும் வேறுவகை மந்திரத்தால், நெல்லைக் குத்துக. 'இஷமாவத' என்னு மந்திரத்தால், கல்லால், அல்லது, சம்மியை என்னுந் தடியால் மாவின் பொருட்டு அம்மிக் குழவியை அடித்தல் வேண்டும். 'தேவஸ்யத்வா' என்பது முதலிய மந்திரத்தால், மாவரைப்பதற்கு அம்மியில் அரிசியைப் போடல் வேண்டும். 'துருவமஸி' என்பது முதலான மந்திரங்களால், புரோடாசங்களைச் சுடுதற் பொருட்டு, கபாலங்களைத் தீயில் வைத்தல் வேண்டும். 'கர்மோஸி' என்னு மந்திரத்தால், கபாலங்களில் புரோடாசங்களை வைத்தல்

(இரட்டைகளை யடைதல்)

வேண்டும். 'அக்கினிஸ்தே' என்னுமந்திரத்தால், நெய்யை ஆகவனீயத் தீயிற் காய்ச்சல் வேண்டும். வேதிகை செய்ய விரும்பிய இடத்தில், 'பிருதிவி தேவயஜனீ' என்னும் மந்திரத்தால், 'தம்பயசுர்' என்னும் தருப்பைக் குச்சை வெட்டல்வேண்டும். ஆக்னீத்ரன், 'அரருஸ் தே திவம்' என்னு மந்திரத்தால் உத்கரத்திற் போட்ட மண்ணுடன் கூடிய தருப்பையை, ஆக்னீத்ரன் இரண்டு கையையுஞ் சேர்த்துப் பிடித்துக் கொள்ளல் வேண்டும். 'வஸவஸ்த்வா' என்பது முதலிய மந்திரத்தால் வேதியைக் கைக்கொள்ளல் வேண்டும். 'ஆஶாஸானு' என்னு மந்திரத்தால் தருப்பைக் கயிற்றால் பத்தினியின் இடுப்பிற் கட்டல் வேண்டும். 'ருதுசதஸ்த' என்னும் வேறுவகை மந்திரத்தால், மரக்கத்தியாற் கிழித்த கோட்டில் 'புரோட்சணீ' என்னும் பாத்திரத்தை வைத்தல் வேண்டும். 'அக்னேர்ஜிஹ்வாஸி' என்னு மந்திரத்தால், மரக்கத்தியாற் கிழித்த கோட்டில் நெய்யை வைத்தல் வேண்டு மென்பது.

---

விதித்த துவந்துவத்தைப் போற்றி முடிக்கின்றது.

பிராமணம்—6

एतानि वै द्वादश द्वन्द्वानि दर्शपूर्णमासयोस्तानि य एवꣳ सम्पाद्य यजते प्रजा तेनैव यज्ञेन यजते प्रप्रजया पशुभिर्मिथुनैर्जायते ।

உரை.

இவ்வாறு துவந்துவங்களைத் தேடிக்கொண்டு தரிசபூரணமாச யாகங்களைச் செய்கின்றவன் பெரும்பயனை யடைகின்றான். அதாவது, மக்கள் புத்திரன் முதலான இரட்டித்த பயன்களை யடைகின்றான் என்பது.

ஈண்டு, கன்றை யவிழ்த்து விடல் முதலான கிரியைகள் பதினான்காமாதலின், அவை ஏழு இரண்டுகள் ஆயின. பன்னிரண்டு இல்லை. ஆயினும், முன் அநுவாகத்திற் கூறிய வேள்வி ஆயுதங்களுஞ் சேரில் பன்னிரண்டு இரட்டையும் உள்ளன என்பதை யுணர்க.

ஒன்பதாவது அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## பத்தாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் முப்பத்தாறு பதங்களைக் கொண்டது

---

அவிவைக்கும் விதியைக் கூறும் பிராமணங்கள்.

ध्रुवोऽसि ध्रुवोऽहꣳ संजातेषु भूयासमित्याह ध्रुवानेवैनान् कुरुत उग्रोऽस्युग्रोऽहꣳ संजातेषु भूयासमित्याहाऽप्रतिवादिन एवै-

नांन् कुरुतेऽभिभूरस्यभिभूरहꣳ संजातेषु भूयासमित्यांह य एवेनं प्रत्युत्पिपींते तमुपांस्यते युनज्मित्वा ब्रह्मणा दैव्येनेत्यांहैषवा अग्नेर्योगस्तेनं ॥ १ ॥ एवैनं युनक्ति यज्ञस्य वै समृद्धेन देवास्सुवर्गं लोकमांयन् यज्ञस्य व्यृद्धेनासुरान् परांभावयन् यन्में अग्ने अस्य यज्ञस्य रिष्यादित्यांह यज्ञस्यैव तत्समृद्धेन यजमानस्सुवर्गं लोकमेंति यज्ञस्य व्यृद्धेन भ्रातृव्यान् पराभावयत्यग्निहोत्रमेताभिर्व्याहृतीभिरुपसादयेद्यज्ञमुखं वा अग्निहोत्रं ब्रह्मैता व्याहृतयो यज्ञमुख एव ब्रह्म ॥ २ ॥ कुरुते संवत्सरे पर्यागंत एताभिरेवोपसादयेद्ब्रह्मणैवो भयतस्संवत्सरं परिगृह्णाति दर्शपूर्णमासौ चातुर्मास्यान्यालभमान एताभिर्व्याहृतीभिर्हवीꣳष्यासादयेद्यज्ञमुखं वै दर्शपूर्णमासौ चातुर्मास्यानि ब्रह्मैता व्याहृतयो यज्ञमुख एव ब्रह्म कुरुते संवत्सरे पर्यागंत एताभिरेवाऽऽसादयेद्ब्रह्मणैवो भयतस्संवत्सरं परिगृह्णाति यद्वै यज्ञस्य साम्ना क्रियते राष्ट्रम् ॥ ३ ॥ यज्ञस्याशीर्गच्छति यदृचा विशं यज्ञस्याशीर्गच्छत्यथ ब्राह्मणोऽनाशीर्केण यज्ञेन यजते सामिधेनीरनुवक्ष्यन्नेता व्याहृतीः पुरस्ताद्दध्याद्ब्रह्मैव प्रतिपदं कुरुते तथा ब्राह्मणस्साशीर्केण यज्ञेन यजते यङ्कामयेत यजमानं भ्रातृव्यमस्य यज्ञस्याशीर्गच्छेदिति तस्यैता व्याहृतीः पुरोऽनुवाक्यायान्दध्याद्भ्रातृव्य देवत्यावै पुरोऽनुवाक्या भ्रातृव्य मेवास्य यज्ञस्य ॥ ४ ॥ आशीर्गच्छति यान्कामयेत यजमानान्त्समावत्येनान् यज्ञस्याशीर्गच्छेदिति तेषामेता व्याहृतीः पुरोनुवाक्याया अर्धर्च एकान्दध्याद्याज्यायै पुरस्तादेकां याज्याया अर्धर्च एकान्तथैनान्त्समावती

வைத்தல்)

यज्ञस्याऽऽशीर्गच्छति यथा वै पर्जन्यस्सुवृष्टं वर्षत्येवं यज्ञो यजमानाय वर्षति स्थलयोदकं परिगृह्णन्त्याशिषा यज्ञं यजमानः परिगृह्णाति मनोऽसि प्राजापत्यम् ॥ ५ ॥ मनसा माभूतेनाऽऽविशेत्याह मनो वै प्राजापत्यं प्राजापत्यो यज्ञो मन एव यज्ञमात्मन्धत्ते वागस्यैन्द्री संपत्नक्षयणी वाचामेन्द्रियेणाऽऽविशेत्याहैन्द्री वै वाग्वाचमेवैन्द्री मात्मन्धत्ते ॥ ६ ॥

ஒன்பதாமநுவாகத்தில் துவந்துவ சம்பாதனங் கூறப்பட்டது, பத்தாவதில் அவிகளை வைத்தல் கூறப்படுகின்றது. இரண்டா மநுவாகத்தின் முற்பாதியிற் கூறியுள்ள மந்திரங்கட்கு, முதலில், உரை கூறப்படுகின்றது.

---

பருதி (விறகு) களைப் போற்றும் மந்திரங்களை எடுத்துக்கொண்டு உரை கூறுகின்றது,

பிராமணம்—1

भुवोऽसि ध्रुवोऽहꣳ सजातेषु भूयासमित्याह ध्रुवानेवैनान् कुरुत उग्रोऽस्युग्रोऽहꣳ सजातेषु भूयासमित्याहाऽप्रतिवादिन एवैनान् कुरुतेऽभिभूरस्यभिभूरहꣳ सजातेषु भूयासमित्याह य एवैनं प्रत्युत्पिपीते तमुपास्यते ।

உரை.

ஒக்கப் பிறந்தார்களுள், 'யான் நிலையாயிருப்பேனாக' என்பதினால் தனக்கு மாத்திரம் நிலையாயிருக்குந் தன்மை வேண்டப்படுவதன்று, மற்றோ, சுற்றத்தார்கட்கும் அது வேண்டப்படுகின்றதாம். தனக்குப்பராக்கிரமம் இன்மையின் தண்டிக்கப்படாத சுற்றத்தார் விரோதிகளாகின்றனர். ஆதலின் இது பராக்கிரமத்தன்மையை வேண்டப்படுகின்றது. குலத்தார்களுள் எவனாகிலுமொருவன் வேள்வித்தலைவனைக் கெடுக்க நினைப்பானேல், அவனை, யான் அடக்குகின்றவனாவேன் என்று உபாசித்தலை மேற்கொண்டதாமென்பது.

---

அக்கினி சம்பந்தமுடைய மந்திரத்திற்கு முதலில் உரை கூறப்படுகின்றது.

பிராமணம்—2

युनज्मित्वा ब्रह्मणा दैव्येनेत्याहैष वा अग्नेर्योगस्तेनैवैनं युनक्ति ।

உரை.

இம் மந்திரமே அக்கினிக்குச் சம்பந்த முடையதாம். அக்கினியே! உன்னைச் சேர்க்கின்றேன், என்று மந்திரத்திற் கூறப்பட்டிருத்தலி னென்பது.

---

வைத்துள்ள அவிகளைப் போற்றுதலுக்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—3

**यज्ञस्यैव समृद्धेन देवास्सुवर्गं लोकमायन् यज्ञस्य व्यृद्धेनासुरान् पराभावयन् यन्मे अग्ने अस्य यज्ञस्य रिष्यादित्याह यज्ञस्यैव तत्समृद्धेन यजमानस्सुवर्गं लोकमेति यज्ञस्य व्यृद्धेन भ्रातृव्यान्पराभावयति ।**

உரை.

சாத்திரமுறையி லநுட்டிப்பது 'சமிருத்தி' பாகமென்றும், சாத்திர முறையின்றி அநுட்டிப்பது, 'வியருத்தி' பாகமென்றும் வேள்விக்கு, இரண்டு கூறுகளுள்ளன. அவற்றுள், சமிருத்தி பாகத்தால் தேவர்கட்கு சுவர்க்கப் பிராப்தி என்றும், வியருத்தி பாகத்தால் அசுரர்களின் ஒழிவு என்றும் இருவகைப்படும். அவற்றுள், ஈண்டு, இம் மந்திரத்தில், 'ரிஷ்யாத்' என்று, வியருத்தி பாகத்தை எடுத்துக்கொண்டு அதனல் சத்துருவைக் கொல்லுகின்றேன் என்று, விரோதியை யடக்கும் பாகமே கூறப்படுகின்றது என்பது.

---

இனி 'பூர் புவ: சுவ:' என்னும் வியாகிருதிகளால் அக்கினிஹோத்திர அவிகளை வைத்தல் கூறப்படுகின்றது,

பிராமணம்—4

**अग्निहोत्रमेताभिर्व्याहृतीभिरुपसादयेत् ।**

உரை.

அக்கினி ஹோத்திர அவிகளை இம் மந்திரங்களால் வைத்தல் வேண்டுமென்பது.

---

வியாகிருதியின் பெருமை கூறப்படுகின்றது,

பிராமணம்—5

**यज्ञमुखं वा अग्निहोत्रं ब्रह्मैता व्याहृतयो यज्ञमुख एव ब्रह्म कुरुते ।**

உரை.

ஆதானத்தின் (அக்கினியை யுண்டாக்கிய) பின்னர் அநுட்டித்தற்குரியதாமாதலின் முக்கியமாந் தன்மைபற்றி எல்லா வேள்விகட்கும் அக்கினி

வைத்தல்)

ஹோத்திரம் முகம் எனப்படுகின்றது. வியாகிருதியும் (பூர்புவ: சுவ: என்பதும்) மூவுலகமாகிய விராட் வடிவமென்னும் பரப்பிரமத்தின் திருமேனி வாசகங்களாதலின் பிரமவடிவ மாகின்றது; ஆகையால், சிறந்த வேள்வி முகமாகியதில், சிறந்த பிரம வடிவ வியாகிருதி மூன்றுஞ் செய்யப் பெற்றிருக்கின்றது என்பது.

---

அக்கினி ஹோத்திரந் தொடங்கும்போது அவிகளை வைப்பதற்கு வியாகிருதியைக் கூறிவிட்டு, வேறு காலத்திலும் அவி வைப்பதன் பொருட்டு வியாகிருதி கூறப்படுகின்றது,

பிராமணம்—6

**संवत्सरे पर्यागत एताभिरेवोपसादयेत् ।**

உரை.

வருட முடிவிலும் இவைகளாலேயே அவிகளை வைத்தல் வேண்டுமென்பது.

---

முதலிலிலும், முடிவுத் தினங்களிலும் வியாகிருதிகளால் அவிகளை வைத்தல் புகழப்படுகின்றது,

பிராமணம்—7

**ब्रह्मणैवो भयतस्संवत्सरं परिगृह्णाति ।**

உரை.

மந்திரத்தாலேயே இருவகையாக வருடங் கொள்ளப்படுகின்றது என்பது.

---

அக்கினி ஹோத்திரத்தைப் போன்று, வேறு கருமங்களிலும் வியாகிருதிகளால் அவி வைத்தல் விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—8

**दर्शपूर्णमासौ चातुर्मास्यान्यालभमान एताभिर्व्याहृतीभिर्हवीꣳष्यासादयेद्यज्ञमुखं वै दर्शपूर्णमासौ चातुर्मास्यानि ब्रह्मैता व्याहृतयो यज्ञमुख एव ब्रह्म कुरुते संवत्सरे पर्यागत एताभिरेवाऽऽसादयेद्ब्रह्मणैवो भयतस्संवत्सरं परिगृह्णाति ।**

உரை.

தரிசபூரணமாச யாகங்களையும், சாதுர்மாசியங்களையுந் தொடங்குகின்றவன் இவ்வியாகிருதி மந்திரங்களால் அவிகளை வைத்தல் வேண்டும். சோதிட்

டோம முதலானவைகட்கு தரிசபூரணமாச யாகங்கள் முகமாம். தரிசபூரண மாச யாகங்களுக்கும் சாதுர்மாசிய யாகங்களுக்கும் வியாகிருதிகளால் அவிகளை வைத்தல் வேண்டும் என்பது.

---

ஏனைய விடங்களிலும் வியாகிருதி விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—9

**यद्वै यज्ञस्य साम्ना क्रियते राष्ट्रं यज्ञस्याऽऽशीर्गच्छति यदृचा विशं यज्ञस्याशीर्गच्छत्यथ ब्राह्मणोऽनाशीर्केण यज्ञेन यजते सामिधेनीरनुवक्ष्यन्नेता व्याहृतीः पुरस्ताद्दध्याद्ब्रह्मैव प्रतिपदं कुरुते तथा ब्राह्मणस्साशीर्केण यज्ञेन यजते ।**

உரை.

வேள்வியின், அங்கமானது சிறிது சாமப்பாடலால் தேடப்படுகின்றது. அது பகிஷ்பவமான முதலியவைகளாம். சிறிது அங்கம் இருக்குவேத மந்திரங்களாற் றேடப்படுகின்றது. அது யாஜ்யா புரோநு வாக்கிய முதலியதாம். இவற்றுள், சாமப்பாடலாற்றேடும் பலனுல் பயிர் செழிப்பு முதலியவற்ருல் இராச்சியம் நலமடைகின்றது. இருக்குமறை மந்திரத்தாற் றேடும் பலனுல், ஆயுள், நோயின்மை முதலானவைகளால் குடிகள் நலமடைகின்றன. இவ்வாருயதால், சாமிதேனி மந்திரங்களைப் படிப்பதன் முன், வேள்வியின் முகமாகிய வியாகிருதியை ஓதல் வேண்டும்; இன்றெனின்? பயனிலா வேள்வியைச் செய்கின்றவனுகின்ருன். தேவப் பிரமவடிவாகிய மூன்று வியாகிருதி (பூர்புவ: சுவ: என்பவை) களைப் படிக்கின், நற்பயனை யுடைய வேள்வியைச் செய்தவனுகின்ருன் என்பது.

---

மற்ருெருவகையால், கொள்ளத்தக்க விநியோகங் கூறப்படுகின்றது,

பிராமணம்—10

**यं कामयेत यजमानं भ्रातृव्यस्य यज्ञस्याशीर्गच्छेदिति तस्यैता व्याहृतीः पुरोऽनुवाक्यायान्दध्याद्भ्रातृव्य देवत्यावै पुरोऽनुवाक्या भ्रातृव्यमेवास्य यज्ञस्याऽऽशीर्गच्छति ।**

உரை.

ஹோதா, வேள்வித் தலைவனிடத்திலுள்ள துவேஷத்தால், 'இவனுடைய யாகபயன் இவனுடைய பகைவனை யடைக' என்றெண்ணி, வியாகிருதி மந்திரங்களை, புரோநுவாக்கியத்திற்கு முன்னர்க் கூறுவானேல், அங்ஙனமே, அப்பயன் பகைவனை யடைந்துவிடும் என்பது.

வைத்தல்)

மற்றொரு வகையால், கொள்ளத்தக்க விநியோகங் கூறப்படுகின்றது,

பிராமணம்—11

**यान्कामयेत यजमानान्त्समावत्येनान्यज्ञस्याशीर्गच्छेदिति तेषामेता व्याहृतीः पुरोनुवाक्याया अर्धर्च एकान्दध्याद्याज्यायै पुरस्तादेकां याज्याया अर्धर्च एकान्तथैनान् त्समावती यज्ञस्याशीर्गच्छति ।**

உரை.

அநேக வேள்வித் தலைவர்களைக் கொண்ட, அஹீனம், சத்திரம் முதலான யாகங்களின் அங்கங்களான இஷ்டிகளில், ஹோதா, 'எல்லா வேள்வித்தலைவர்கட்கும் சமமாகவே யாக பலன் கிடைப்பதாகுக' என்றெண்ணில், புரோநுவாக்கியத்தின் பாதி இருக்கை ஓதும்போது முதலாவது வியாகிருதியையும், (பூ: என்பதையும்) யாஜ்யா வாக்கியத்திற்கு முன் இரண்டாவது வியாகிருதியையும், (புவ: என்பதையும்) யாஜ்யா வாக்கியத்தின் பாதி இருக்கை ஓதும்போது மூன்றாவது வியாகிருதியையும் (சுவ: என்பதையும்) ஓதல் வேண்டும். இவ்வாறு ஓதில் எல்லா வேள்வித்தலைவர்களும், சமமாய் யாக பயனை யுடைவார்கள் என்பது.

---

அவ்வாறு அடைவது உவமையால் விளக்கப்படுகின்றது,

பிராமணம்—12

**यथा वै पर्जन्यस्सुवृष्टं वर्षत्येवं यज्ञो यजमानाय वर्षति स्थलयोदकं परिगृह्णन्त्याशिषा यज्ञं यजमानः परिगृह्णाति ।**

உரை.

நீர் கொண்ட மேகம், தாரதம்மியமின்றி எல்லாத் தேசங்கட்கு மழையைப் பெய்வது போல், வியாகிருதியுடன் கூடிய வேள்வி எல்லா வேள்வித் தலைவர்கட்கும் பொதுவாய்ப் பயனை யளிக்கின்றது. மழை பெய்து குளம் நிறையுமிடத்து மக்களனைவரும் நீர் எடுத்துக் கொள்வதுபோல், எல்லா வேள்வித் தலைவரும் பொதுவாய்ப் பயனையுடைய இவ்வேள்வியை ஏற்றுக் கொள்கின்றனர் என்பது.

---

சுருக், சுருவங்களாற் செய்யும் இரண்டு ஆகார ஹோமங்களுந் துதிக்கப்படுகின்றன,

பிராமணம்—13

**मनोऽसि प्राजापत्यम्मनसा माभूतेनाऽऽविशेत्याह मनो वै प्राजापत्यं प्राजापत्यो यज्ञो मन एव यज्ञमात्मन्धत्ते वागस्यैन्द्री सपत्नक्षयणी वाचामेन्द्रियेणाविशेत्याहैन्द्री वै वाग्वाचमेवैन्द्रीमात्मन्धत्ते ।**

உரை.

பிரசாபதி யென்னும் மனமாயிருக்கின்றாய். பிரசாபதி யெனப்படுவது யக்ஞமாம். மனமே முன்னர்ப் படைக்கப்பட்டது, மனது, யக்ஞத்தை ஆன்மாவினிடத்தில் நிலை நாட்டுகின்றது. இதனால், மனதும் யக்ஞமும் தன்னிடத்தில் நிலைநாட்டப்படுகின்றன. இந்திரனால் வெளிப்பட்டதால் வாக்கு ஐந்திரமெனப்படுகின்றது. அதை, மந்திரம் படிப்பதால் தனதான்மாவில் நிறுவுகின்றான் என்பது.

பத்தாவது அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

## பதினோராவது அநுவாகம்

ஆறு பஞ்சாதிக்குமேல் முப்பத்தெட்டுப் பதங்களைக்கொண்டது.

ஆச்ரவண முதலான மந்திரங்கள்.

यो वै सप्तदशं प्रजापतिं यज्ञमन्वायत्तं वेद प्रति यज्ञेन तिष्ठति
न यज्ञाद्भ्रंशत आश्रावयेति चतुरक्षरमस्तु श्रौषडिति चतुरक्षरं
यजेति द्व्यक्षरं ये यजामह इति पञ्चाक्षरं द्व्यक्षरो वषट्कार एष वै
सप्तदशः प्रजापतिर्यज्ञमन्वायत्तो य एवं वेद प्रति यज्ञेन तिष्ठति नय-
ज्ञाद्भ्रंशते यो वै यज्ञस्य प्रायणं प्रतिष्ठाम् ॥ १ ॥ उदयनं वेद
प्रतिष्ठितेनारिष्टेन यज्ञेन सꣳस्थां गच्छत्या श्रावयास्तु श्रौषड्यज ये
यजामहे वषट्कार एतद्वै यज्ञस्य प्रायणमेषा प्रतिष्ठैत दुदयनं य एवं
वेद प्रतिष्ठिते नारिष्टेन यज्ञेन सꣳस्थां गच्छति यो वै सूनृतायै दोहं
वेद दुह एवैनां यज्ञो वै सूनृताऽऽश्रावयेत्येवैनामह्वदस्तु ॥ २ ॥
श्रौषडित्युपावा स्राग्यजेत्युदनैषीद्ये यजामह इत्युपासदद्वषट्कारेण
दोग्ध्येष वै सूनृतायै दोहो य एवं वेद दुह एवैनां देवा वै सत्रमासत
तेषां दिशोऽदस्यन्त एतामार्द्रां पङ्क्तिमपश्यन्ना श्रावयेति पुरोवात-

संजनयन्नस्तु श्रौषडित्यभ्रं समप्लावयन् यजेति विद्युतम् ॥ ३ ॥
अजनयन् ये यजामह इति प्रावर्षयन्नभ्यस्तनयन्वषट्कारेण ततो वै तेभ्यो दिशः प्राप्यायन्त य एवं वेद प्रास्मै दिशः प्यायन्ते प्रजापतिन्त्वो वेद प्रजापतिस्त्वं वेद यं प्रजापतिर्वेद सपुण्यो भवत्येषवै छन्दस्यः प्रजापतिराश्रावयास्तु श्रौषड्यजये यजामहे वषट्कारोय एवं वेद पुण्यो भवति वसन्तम् ॥ ४ ॥ ऋतूनां प्रीणामीत्याहर्तवो वै प्रयाजा ऋतूनेव प्रीणाति तेऽस्मै प्रीता यथा पूर्वं कल्पन्ते कल्पन्तेऽस्मा ऋतवो य एवं वेदाग्नीषो मयो रहन्देवयज्यया चक्षुष्मान्भूयास मित्याहाग्नीषोमाभ्यां वै यज्ञश्चक्षुष्मान्ताभ्यामेव चक्षुरात्मन्धत्तेऽग्नेरहन्देवयज्ययाऽन्नादो भूयासमित्याहाग्निर्वै देवानामन्नादस्तेनैव ॥ ५ ॥ अन्नाद्यमात्मन्धत्ते दब्धिरस्यदब्धो भूयासममुन्दभेय मित्याहैतयावै दब्ध्यादेवा असुरानदभ्नुवन्तयैव भ्रातृव्यन्दभ्नोत्यग्नीषो मयो रहन्देवयज्यया वृत्रहा भूयासमित्याहाग्नीषोमाभ्यां वा इन्द्रो वृत्रमहन्ताभ्यामेव भ्रातृव्यंस्तृणुत इन्द्राग्नियोरहन्देवयज्ययेन्द्रियाव्यन्नादो भूयास मित्याहेन्द्रियाव्येवान्नादो भवतीन्द्रस्य ॥ ६ ॥ अहन्देवयज्ययेन्द्रियावी भूयास मित्याहेन्द्रियाव्येव भवति महेन्द्रस्याहन्देवयज्यया जेमानं महिमानं गमेय मित्याह जेमानमेव महिमानं गच्छत्यग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेयमित्याहायुरेवात्मन्धत्ते प्रतियज्ञेन तिष्ठति ॥ ७ ॥

பத்தாம் அநுவாகத்தில், அவிகளை வைக்குமுறை கூறப்பட்டது. பதி ஞோராவது அநுவாகத்தில், முக்கியமாகிய ஆச்ராவண மந்திர முதலாயின கூறப்படுகின்றன.

---

அவற்றுள் விதிக்கு ஐந்து மந்திரங்களின் உற்பத்தியை புகழ்ந்து கூறுகின்றது,

பிராமணம்—1

**योवै सप्तदशं प्रजापतिं यज्ञमन्वायत्तं वेद प्रतियज्ञेन तिष्ठति न यज्ञाद्भ्रंशते ।**

உரை.

இம் மந்திரத்தொகுதி பதினேழு எழுத்துக்களை யுடையதாமாதலானும், பிரசாபதியாற் படைக்கப் பெற்றதானும் 'பதினேழு பிரசாபதி' என்று வழங்கப் படுகின்ற அம் மந்திரத்தொகுதி எல்லா வேள்விகளிலுந் தொடர்ந் திருக்கின்றது. அதை யுணர்ந்த எஜமானன் எல்லா வேள்விகளாலும் பெருமை யுடையவனுகின்முன். அதாவது குறைவு பாடின்மையின் வேள்வி ல்யி வழுவுடையவனுகான் என்பது.

---

அம் மந்திரங்கள் கூறப்படுகின்றன,

பிராமணம்—2

**आश्रावयेति चतुरक्षरमस्तु श्रौषडिति चतुरक्षरं यजेति द्व्यक्षरं ये यजामहे इति पञ्चाक्षरन्द्व्यक्षरो वषट्कार एषवै सप्तदशः प्रजापतिर्यज्ञमन्वायत्तो य एवं वेद प्रतियज्ञेन तिष्ठति नयज्ञाद्भ्रंशते ।**

உரை.

ஆஶ்ராவய, என்பது நான்கெழுத்து. 'அஸ்து ஶ்ரௌஷட்' என்பது நான்கெழுத்து. 'யஜ' என்பது இரண்டெழுத்து. 'யே யஜாமஹே' என்பது ஐந்தெழுத்து. 'வஷட்' என்பது இரண்டெழுத்து. இவ்வாறு பதினேழு எழுத்துக்களாகின்றன. இவை பிரஜாபதியென வழங்கப் பெறுகின்றன என்பது.

ஈண்டு, ஆக்னீத்ர! உனக்கு யக்ஞஞ் செய்யப்படும் தேவதையை முன் னிட்டு இது கொடுக்கப்படுகின்றது; ஆகையால் ஒருமைப்பட்டு 'ஆஶ்ராவய,' என்று, அத்துவரியு சொன்னவுடன், அவ் வாக்னீத்ரன் 'அஸ்து' (ஆம்) என்று உடன்பட்டு, 'ச்ரௌஷட்' என்று, கேட்கச்செய்கின்முன். அதாவது, தேவர் களே! உங்களை முன்னிட்டு இந்த அவி யிதலைக் கேட்பீர்களாக என்பதாம். மற்றும், ஹோதாவே! நீ, 'யஜ' என்றவுடன், அதாவது யாஜ்யா வாக்கியத் தைப் படிப்பாயாக என்று அத்வரியு கூறியவுடன், 'யே யஜா மஹே' அதாவது அத்துவரியுவினல் படிப்பாயாக என்று ஏவப்பெற்ற யாம் யாஜ்யா

முதலியன)

வாக்கியத்தைப் படிக்கின்றோம் என்பதாம். 'வஷட்' என்பதற்கு அவி கொடுக்கப்படுகின்றது என்பது பொருளாம்.

---

இவ்வைந்து மந்திரங்களின் மகிமையைக் கூறுதற்குப் புகழ்கின்றது,

பிராமணம்—3

**योवै यज्ञस्य प्रायणं प्रतिष्ठामुदयनं वेद प्रतिष्ठितेनारिष्टेन यज्ञेन सꣳस्था-ङ्गच्छति ।**

உரை.

வேள்வியின், தொடக்கம், நடு, முடிவு என்பவற்றை யுணருகின்றவன், குறைவற்ற நல்ல வேள்வியால் முடிவு வரையுள்ள பயனை யடைகின்றான் என்பது.

---

மந்திரத்தின் மகிமை கூறப்படுகின்றது,

பிராமணம்—4

**आश्रावयास्तु श्रौषड्यजये यजामहे वषट्कार एतद्वै यज्ञस्य प्रायणमेषा प्रतिष्ठैत दुदयनं य एवं वेद प्रतिष्ठितेनारिष्टेन यज्ञेन सꣳस्थाङ्गच्छति ।**

உரை.

முதல் மந்திரம் வேள்வியின் தொடக்கம். மூன்று மந்திரங்கள நடுநிலை. ஈற்றிலுள்ள மந்திரம் முடிவாம். தேவதையைக் குறித்து பொருளைக் கைவிடுதல் வடிவாகிய வேள்வியின் திருமேனி இம் மந்திரங்களாற் றேற்றுதலினெ ன்க. எஞ்சிய மந்திரங்களோ, உடம்பிலுள்ள ஆடை முதலானது போன்று அங்கங்களாகின்றன என்பது.

---

மற்றொரு வகையால் அம் மகிமையைக் கூறுதற்குப் புகழ்கின்றது,

பிராமணம்—5

**योवै सूनृतायै दोहं वेददुह एवैनां ।**

உரை.

உண்மை கூறல், இனிமை கூறல் முதலிய வாக்கின் நலத்தைக் கறப்பதற்கு உணர்ந்தவன் இதைக் கறக்கின்றான். இங்கு வாக்கு, காமதேனுவாம். என்பது.

ஈண்டு, காமதேனுவைப் போன்று களிப்பிற்குக் காரணமாதலின் வாக்கு பசு வென்று கூறப்பட்டது. அதைக் கறக்க வுணர்ந்தவன் அவசியம் இதையுங் கறப்பான் என்பதை யுணர்க.

உண்மை யுரைத்தலும், அதைக் கறக்கும் வழியுங் கூறப்படுகின்றன,

பிராமணம்—6

**यज्ञोवै सूनृताऽऽश्रावयेत्येवैनामह्वदस्तु श्रौषडित्युपावा स्राग्यजेत्युदनैषीद्ये यजामह इत्युपासदद्वषट्कारेण दोग्ध्येषवै सूनृतायै दोहो यएवं वेददुह एवैनाम् ।**

உரை.

உலகில், பசுவைக் கறப்பதன் பொருட்டு அதற்குத் தீனி கொடுப்பதற்கு, யாதோ ஒரு சங்கேதப் பெயர் கூறி, கறக்கும் பசுவை அழைப்பது போல், 'ஆச்ராவய' என்னு மந்திரத்தால் வாக்காகிய பசு அழைக்கப்படுகின்றது. 'அஸ்து ச்ரௌஷட்' என்பதால் கன்று அவிழ்த்து விடப்படுகின்றது. 'யஜ' என்பதால் பால் கறக்கும் பாத்திரம் எடுக்கப்படுகின்றது. 'யே யஜாமஹே' என்பதால் பால் கறப்போன் உட்கார்ந்து கொள்கின்றான். 'வௌஷட்' என்பதால் பால் கறக்கப்படுகின்றது என்பது.

ஈண்டு உவமை கூறுதலின் பதப் பொருள் வேண்டப்படாமை காண்க.



மற்றொரு வகையைக் கற்பித்து மகிமை கூறப்படுகின்றது,

பிராமணம்—7

**देवावै सत्रमासत तेषान्दिशोऽदस्यन्त एतामार्द्रां पंक्तिमपश्यन्ना श्रावयेति पुरोवातमजनयन्नस्तु श्रौषडित्यभ्रꣳ समप्लावयन् यजेति विद्युतमजनयन्ये यजामह इति प्रावर्षयन्नभ्यस्तनयन्वषट्कारेण ततो वै तेभ्यो दिशः प्राप्यायन्त य एवं वेद प्रास्मै दिशः प्यायन्ते ।**

உரை.

கூட்டமாகக்கூடிய தேவதைகட்கு ஏதோ ஒரு குறைவு தோன்றியதால், திக்குக்களில் பயிர்கள் வாடி யழிந்தன. அதை நீக்குவதற்கு, தேவர்கள் மழைக்குக் காரணமான இவ்வைந்து மந்திரங்களையுங் கண்டு பிடித்தனர். 'ஆச்ராவய' என்பதால் காற்றுண்டாயிற்று. 'அஸ்து ச்ரௌஷட்' என்பதால் மேகங் கிளம்பியது. 'யஜ' என்பதால் மின்னலுண்டாயிற்று. 'யே யஜாமஹே' என்பதால் இடி முழங்கியது. 'வஷட்' என்பதால் திக்குக்களில் குளிராகிய மழை பரவியது என்பது.



முதலியன)

மீண்டும், மற்றொரு வகையால் மகிமையைக் கூறுதற் பொருட்டு புகழ்கின்றது,

பிராமணம்—8

**प्रजापतिन्त्वो वेद प्रजापतिस्त्वं वेद यंप्रजापतिर्वेद सपुण्यो भवति ।**

உரை.

பதினேழு எழுத்துக்களுள்ள பிரசாபதி யென்னும் இம் மந்திரம், மேல் வரும் மகிமை யுடையதென்று உணர்ந்த ஒருவனுக்கு, பிரசாபதி அருள் செய்கின்றான் என்பது.

---

அம் மகிமை கூறப்படுகின்றது,

பிராமணம்—9

**एषवै छन्दस्यः प्रजापतिराश्रावयास्तु श्रौषड्यजयेयजामहे वषट्कारोय एवं वेद पुण्यो भवति ।**

உரை.

எழுத்துக்கள் வடிவாகிய பிரசாபதி என்னும் இச் சந்தமானது வேதத்துள் மிகுந்த சாரமாயுண்டானது. இவ்வாறு, எவன், இப் பிரசாபதியை (பதினேழு எழுத்துக்கள் கொண்ட மந்திரத்தை) வேதத்தின் சாரமென்றுணர்கின்றானோ, அவன் மேம்பட்டவனாகின்றான் என்பது.

மந்திரங்கள் முன் காட்டப்பட்டுள்ளன.

---

இரண்டா மநுவாகத்திற் கூறிய பிரயாஜையைப் போற்று மந்திரங்கட்கு வடிவு கற்பித்ததின் கருத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—10

**वसन्तमृतूनां प्रीणामीत्याहर्तवो वै प्रयाजा ऋतूनेव प्रीणाति तेऽस्मै प्रीता यथा पूर्वं कल्पन्ते कल्पन्तेऽस्मा ऋतवो य एवं वेद ।**

உரை.

இருதுக்களுக்குள் வசந்த இருதுவாற் பிரியப்படுத்துகின்றேன். பிரயாஜையானது இருதுக்களைப் பிரியப்படுத்துகின்றது. பிரியமடைந்தவைகள் மாறுதலின்றி தத்தமது காலத்தில் உரிய பூக்கள் மழை முதலானவைகளை யுடையவைகளாகின்றன. அவற்றை அறிந்தவனுக்கும் அதுவே பயனாகின்றது என்பது.

---

ஆஜ்ய பாகத்தைப் போற்று மந்திரங்கட்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—11

**अग्नीषोमयो रहन्देवयज्यया चक्षुष्मान्भूयास मित्याहाग्नीषोमाभ्यां वै यज्ञश्च-क्षुष्मान्ताभ्यामेव चक्षुरात्मन्धत्ते ।**

உரை.

அக்கினி சோமன் என்பவர்களால் கண்களை யுடையவ ணுகின்றேன். என்றது அக்கினி சோமம் என்னுந் தேவதைகள் வேள்விக்குக் கண்களாயிருக்கின்றன. 'சட்சுஷீவா' என்னு மநுவாகத்தில், ஆஜ்ய பாகங்களிரண்டும் வேள்விக்குக் கண்களென நன்கு கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால், அதனுடைய தேவதைகளால் வேள்விக்குக் கண்ணுடைய தன்மையும், எஜமானனுக்கு அதன் பயனுங் கூறப்படுகின்றது என்பது.

---

அக்கினி யாகத்தைப் போற்று மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—12

**अग्नेरहंदेवयज्ययाऽन्नादो भूयासमित्याहाग्निर्वै देवानामन्नादस्तेनैवान्नाद्य-मात्मन्धत्ते ।**

உரை.

அக்கினியை ஆராதிப்பதால் யான் அன்ன முண்ணுகின்றவனுகின்றேன். அக்கினி, தேவர்களுக்குள் மிகுந்த உணவையருந்துகின்றதாம். மற்றைய தேவர்களைப்போல் சிற்றுணவையுடையதன்று. அதனுல் ஆன்மாவினிடத்தில் அன்ன முண்ணல் நிலைத்திருக்கின்றது என்பது.

---

உபாம்சு யாகத்தைப் போற்று மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—13

**दब्धिरस्यदब्धोभूयास ममुन्दभेय मित्याहैतयावै दब्ध्या देवा असुरानदभ्नु-वन्तयैव भ्रातृव्यन्दभ्नोति ।**

உரை.

நீ, பகைவனைக் கொல்லும் ஆயுதமாயிருக்கின்றாய். யான் கொல்லப்படாதவனு யிருக்கின்றேன். இவனைக் கொல்வேன். இவ்வாயுதத்தால் தேவர்கள் அசுரரைக் கொன்றனர். இதனுல் பகைவன் கொல்லப்படுகின்றான் என்பது.

பௌர்ணமி மாதத்திலுள்ள இரண்டாம் புரோடாசத்தைப் போற்று மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—14

**अग्नीषो मयो रहन्देवयज्यया वृत्रहा भूयासमित्याहाग्नीषोमाभ्यां वा इन्द्रो वृत्रमहन्ताभ्यामेव भ्रातृव्यंस्तृणुते ।**

உரை.

அக்கினி சோமர்களால் விருத்திரனை (பகைவனை)க் கொல்கின்றவனாகின்றேன் என்றது. இந்திரன், அக்கினி சோமம் என்னுமிருவரால் விருத்திரனைக் கொன்றனன். அவ் விருவராலேயே பகைவரைக் கொல்கின்றான் என்பது.

---

ஹவிர்யாஜிக்கி அமாவாசையிலுள்ள இரண்டாம் புரோடாசத்தைப் போற்று மந்திரவுரை,

பிராமணம்—15

**इन्द्राग्नियोरहन्देवयज्ययेन्द्रियाव्यन्नादो भूयास मित्याहेन्द्रियाव्येवान्नादो भवति ।**

உரை.

இந்திரன் அக்கினி என்னுமிருவருடைய ஆராதனையால், இந்திரிய முடையவனும், உணவு அருந்துகின்றவனுமாகின்றேன் என்றது. இதனால் இந்திரிய முடையவனும் அன்ன முண்போனுமாகின்றான் என்பது.

---

சாந்நாய்யத்தை (பால் தயிரை)ப் போற்றும் மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—16

**इन्द्रस्याहन्देवयज्ययेन्द्रियावी भूयास मित्याहेन्द्रियाव्येव भवति ।**

உரை.

இந்திரனை ஆராதிப்பதால் இந்திரிய முடையவனாகின்றேன் என்றது. இதனால் இந்திரிய முடையவனாகின்றான் என்பது.

---

செல்வ மிகுந்துள்ள அரசன் முதலானோரின் சாந்நாய்யத்தை (பால் தயிரை)ப் போற்றும் மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—17

**महेन्द्रस्याहं देवयज्यया जेमानं महिमानं गमेय मित्याह जेमानमेव महिमानं गच्छति ।**

உரை.

மகேந்திரனுடைய ஆராதனையால் நீண்ட வாழ்நாளையும், பெருமையையும் அடைகின்றேன் என்றது. இதனால் நீண்ட வாழ்நாளையும் பெருமையையும் அடைகின்ருன் என்பது.

---

சுவிஷ்டகிருத் அநுமந்திரண (போற்று கின்ற) மந்திரத்திற்கு உரை கூறப் படுகின்றது,

பிராமணம்—18

**अग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेयमित्याहायुरेवा- त्मन्धत्ते प्रतियज्ञेन तिष्ठति ।**

உரை.

'சுவிஷ்டகிருத்' என்னும் தேவாராதனையால், உங்களை, வேள்வியிற் பெருமை யுடையவர்களாகச் செய்கின்றேன் என்றது. ஆயுளை நிலைக்க வைக்கின்ருன். அதாவது ஒவ்வொரு வேள்வியிலும் இருக்கின்ருன் என்பது.

பதினேராம் அநுவாகம் முடிந்தது.

---

## பன்னிரண்டாவது அநுவாகம்

விடயச் சுருக்கம்

**इन्द्रं वो विश्वतोऽमुत्सिश्वरावेन्द्र क्र चोद्रयम् ।
इन्द्रीन्द्रियावद्यागेस्यादा यस्मिन्धर्मवद्यजौ ॥ १ ॥
इन्द्रंस्यादकंवद्यागे तिस्रोऽहोमुग्यजा वृचः ।
विनो (वै) मृधे चतस्रः स्युस्त्रातारं त्रातृमद्यजौ ॥ २ ॥
अनवोऽर्काश्वद्यागे मन्त्राः सप्तदशेरिताः (मन्त्रा एकोनविंशतिः) ।**

இந்திர இஷ்டியிலும், இந்திரியத்துடன் கூடிய இந்திரன் பொருட்டுச் செய்யும் இஷ்டியிலும், வேத சாஸ்திரங்களை அறிந்த இந்திரன் பொருட்டுச் செய்யும் இஷ்டியிலும், பூஜிக்கத்தக்க இந்திரன் பொருட்டுச் செய்யும் இஷ்டியிலும், பாவத்தைப் போக்குவதற்குச் செய்யும் இஷ்டியிலும், இந்திரவைமிருத இஷ்டியிலும், காப்பாற்றும் இந்திரன் பொருட்டுச் செய்யும் இஷ்டியிலும், அர்காசுவங்களுடன் கூடிய இந்திரன் பொருட்டுச் செய்யும்இஷ்டியிலும், முறையே ஒவ்வொரு தேவதைக்கு இரண்டிரண்டு இருக்குகளாக, யாஜ்யா புரோநு வாக்கியங்கள் என்பது.

---

முதற் காண்டம் ஆறும் பிரபாடகம்

பன்னிரண்டாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்கு மேல் நாற்பத்தெட்டு பதங்களைக் கொண்டது:

---

யாஜ்யா புரோநுவாக்கியங்களைக் கூறு மந்திரங்கள்,

इन्द्रं॑ वो वि॒श्वत॒स्परि॑ हवा॑महे॒ जने॑भ्यः । अ॒स्माक॑मस्तु॒ केव॑लः । इन्द्र॒न्नरो॑ने॒मधि॑ता हवन्ते॒ यत्पार्या॑ यु॒नज॑ते॒ धिय॒स्ताः । शूरो॒ नृषा॑ता॒शव॑सश्चकान आगोम॑ति व्र॒जे भ॑जा॒त्वन्नः॑ । इ॒न्द्रि॒यापि॑ शतक्रतो॒ याते॒ जने॑षु प॒ञ्चसु॑ । इन्द्र॒तानि॑त आवृ॑णे । अनु॑ते दायिमह इ॒न्द्रि॒याय॑ स॒त्राते॒ विश्व॒मनु॑वृत्र॒हत्ये॑ । अनु॑ ॥ १ ॥ क्ष॒त्रमनु॒सहो॑ य॒जत्रेन्द्र॑दे॒वेभि॒रनु॑ते नृ॒षह्ये॑ । आयस्मि॑न्त्स॒प्तवा॑स॒वास्तिष्ठ॑न्ति स्वा॒रुहो॑ य॒था । ऋषि॑र्ह दी॒र्घश्रु॑त्तम॒ इन्द्र॑स्य घ॒र्मो अति॑थिः । आ॒मासु॑ प॒क्व-मैर॑य॒ आसूर्य॑ꣳ रोहयो दि॒वि । घ॒र्मन्न साम॑न्तपता सुवृ॒क्तिभि॒र्जुष्टं॒ गिर्व॑णसे॒ गिरः॑ । इन्द्र॒मिद्गा॒थिनो॑ बृ॒हदिन्द्र॑म॒र्केभि॑र॒र्किणः॑ । इन्द्रं॒ वाणी॑-रनूषत । गाय॑न्तित्वा गाय॒त्रिणः॑ ॥ २ ॥ अर्च॑न्त्य॒र्कम॒र्किणः॑ । ब्र॒ह्माण॑स्त्वा शतक्रत॒वुद्व॑ꣳशमि॑वयेमिरे । अꣳहो॒मुचे॒ प्रभ॑रेमा मनी॒षा मो॑षिष्ठ॒दाव्ने॑ सु॒म॒तिं गृ॒णा॒नाः । इ॒दमि॑न्द्र प्रति॑ह॒व्यं गृ॑भाय स॒त्या-स्स॑न्तु॒ यज॑मानस्य॒ कामाः॑ । वि॒वेषय॒न्माधि॒षणा॑ ज॒जान॒स्तवै॑ पु॒रा-पार्या॒दिन्द्र॒मह्नः॑ । अꣳह॑सो॒ यत्र॒ पीपर॒द्यथा॑नो ना॒वेव॒यान्त॑ मु॒भये॑ हवन्ते । प्रस॒म्राजं॑ प्र॒थम॑म॒ध्वरा॒णाम् ॥ ३ ॥ अ॒ꣳहो॒ मुचं॑ वृ॒षभं॑ य॒ज्ञियाना॑म् । अपान्न॒पात॑मश्वि॒ना हय॑न्तम॒स्मिन्न॑र इन्द्रि॒यन्ध॑त्त॒मोजः॑ । विन॑ इन्द्र॒मृधो॑ जहि॒नीचाय॑च्छ पृत॒न्य॒तः । अ॒ध॒स्प॒दन्त॒मीं कृ॒धि

यो अस्मा॑ꣳ अ॒भि॒दास॑ति । इन्द्र॑क्ष॒त्रम॒भि॒वा॒मम्रोजो॒ऽजा॑यथा वृषभ चर्षणी॒नाम् । अपा॑नुदो॒जन॑मऽमित्र॒यन्त॑ मु॒रुन्दे॒वेभ्यो॑ अकृणोरुलो॒कम् । मृगोनभी॒मः कु॑च॒रो गि॑रि॒ष्ठाः प॑रा॒वतः ॥ ४ ॥ आजंगामा॒ पर॑स्याः । सृ॒कꣳ स॒ꣳशाय॑ प॒विमि॑न्द्रति॒ग्मं विशत्रू॑न्ताढि॒विमृ॒धो॑नुदस्व । विश॒त्रून् विमृ॒धो॑नुद॒विवृ॒त्रस्य हनू॑रुज । विम॒न्युमि॑न्द्रभामि॒तो॑ऽमित्र॑स्याऽभि॒दास॑तः । त्रातार॒मिन्द्र॑मवि॒तार॒मिन्द्र॒ꣳ हवे॑हवे सु॒हव॒ꣳ शूर॒मिन्द्र॑म् । हुवेनुश॒क्रं पु॑रुहू॒तमिन्द्र॒ꣳ स्व॒स्तिनो॑ म॒घवा॑धात्विन्द्रः॑ । मा॒ते॑ अ॒स्याम् ॥ ५ ॥ स॒ह॒सा॒वन्परि॑ष्टाव॒वार्य॑ भूमहरिवः परादै॒ । त्राय॑स्वनोऽवृ॒केभि॒र्वरू॑थैस्तव॑ प्रि॒यास॑स्सू॒रिषु॒स्याम । अन॑वस्ते॒ रथ॒मश्वा॑यतक्ष॒न्त्वष्टा वज्रं॑ पुरुहूतद्युमन्तम् । ब्र॒ह्माण॒ इन्द्रं॑ म॒हय॑न्तो अ॒र्कैरव॑र्धयन्नहये॒हन्तवा उ॑ । वृष्णेय॒त्ते वृष॒णो अ॒र्कमर्चा॒निन्द्र॒ग्रावा॑णो॒ अदि॑तिस्स॒जोषाः॑ । अ॒न॒श्वासो॒ ये प॒वयो॑ऽरथा इन्द्रे॑षिता अ॒भ्यव॑र्तन्त॒ दस्यू॑न् ॥ ६ ॥

இப்பிரபாடகத்தின் அநுவாகத் தொகை

संत्वा ध्रुवोऽस्यग्निर्मा बर्हिषोऽहमा प्यायतामगन्म यथावै योवै श्रद्धां प्रजापतिर्यज्ञान्ध्रुवोऽसीत्याह योवै सप्तदशमिन्द्रं वो द्वादश ॥ १२ ॥

பஞ்சாதிகளின் தொகை

संत्वा बर्हिषोऽहं यथावा एवं विद्वाञ्श्रौषट् सहसावन्नेकपञ्चाशत् ॥ ५१ ॥

ஏழாம் அநுவாகந் தொடங்கி பன்னிரண்டாவது அநுவாகம் வரை ஐந்து அநுவாகங்களில் யாஜமான பிராமணத் தொடர்புபற்றி அத்துவர்யுவின் பிராமணங்களுஞ் சில கூறப்பட்டுள்ளன. பன்னிரண்டாம் அநுவாகத்தில் யாஜ்யா புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

---

அவற்றுள், ஈண்டு, சங்-கா-2, பிர-2, அநு-7ல், 'ऐन्द्रं चरुं निर्वपेत् पशुकामः' என்பது முதலிய மந்திரத்தால் சில இஷ்டி கூறப்பட்டிருக்கின்றது; அந்த இந்திர இஷ்டியின் புரோநுவாக்கியம் :—

மந்திரம்—1

**इन्द्रं वो विश्वतस्परि हवामहे जनेभ्यः। अस्माकमस्तु केवलः।**

உரை.

வேட்போர்காள்! வேள்வித் தலைவர்காள்? உங்களுக்கு, மக்கள் ஏவற்காரர்கள் கிடைத்தற் பொருட்டு, உலகப் பெரியோனுயுள்ள இந்திரனை யழைக்கின்றேன். அவ் விந்திரன், எங்களுக்கு, ஏனைய வேள்வித் தலைவர்களை நோக்க, மிகுந்த அருள் புரிகின்றவனுகுக என்பது.

அதன் யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—2

**इन्द्रन्नरो नेमधिता हवन्ते यत्पार्या युनजते धियस्ताः। शूरो नृषाताशवसश्च-कान आगोमति व्रजे भजात्वन्नः।**

உரை.

அக்கினி சயனத்தை அநுட்டிக்கின்றவன், அக்கினி முதலிய தேவர்களுடன் அவியை ஏற்றுக்கொள்ளுதற் பொருட்டு இந்திரனை யழைக்கின்றான். ஆதலின், அக்கினிட்டோம முதலானவைகளை அநுட்டிக்கின்றார்கள். அத்தகைய இந்திரனே! நீ, இராக்கதர்களால் தாழ்த்தப்படாதவனும், மக்களுக்குப் பொருளை யளிக்கின்றவனும், எமக்கு வன்மையைக் கொடுக்கின்றவனுமாகி, பசு மந்தைகளைக் கொடுப்பாயாக என்பது.

அங்ஙனமே 'इन्द्रायेन्द्रियावते' என்றற் றொடக்கத்து மந்திரத்தால், சங்-கா-2' பிர-2 அநு–7ல் மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அதனுடைய புரோநுவாக்கியம் :—

மந்திரம்—3

**इन्द्रियाणि शतक्रतो याते जनेषु पञ्चसु। इन्द्रतानित आवृणे।**

உரை.

நூற்றுக்கணக்கான வேள்விகளை யுடையோய்! (இந்திர!) வேடரை ஐந்தாவதாகக் கொண்ட மக்களிடத்து, உனது அநுக்கிரகத்தால் இருக்கப்பட்ட வன்மைகளை முழுதுங் கவர்ந்து கொள்கின்றேன் என்பது.

அதன் யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—4

**अनुते दायिमह इन्द्रियाय सत्राते विश्वमनुवृत्रहत्ये। अनु क्षत्रमनुसहो यजत्रेन्द्रदेवेभिरनुते नृषह्ये।**

உரை.

வேள்வியாற் பூசிக்கத்தக்க இந்திர ! உனக்கு, விருத்திரனைக் கொல்வதில் வன்மை யுண்டாதற் பொருட்டும், அரசனுயிருத்தலை முன்னிட்டும், உனது வன்மையைக் குறித்தும், பகைவரை யடக்கு மியல்பை நோக்கியும் மீண்டும் மீண்டும் சத்திரங்க (யாகங்க)ளில், அக்கினி முதலானோர்களால் அவிகளைத் தாங் கொடுக்கப்படுகின்றது என்பது.

மற்றும், சங், கா-2, பிர-2, அநு-7ல், 'इन्द्राय घर्मवते' என்பது முதலிய மந்திரத்தால் மற்றொருவகை இஷ்டி விதிக்கப்பட்டிருக்கிறது ; அதில் புரோநு வாக்கியம் :—

மந்திரம்—5

**आ यस्मिन्त्सप्तवासवास्तिष्ठन्ति स्वारुहो यथा। ऋषिर्ह दीर्घश्रुत्तम इन्द्रस्य घर्मो अतिथिः।**

உரை.

ஒரு சக்கரத்தையுடைய தேரில் ஏழு குதிரைகள் பூட்டப்பெற்றவனும், தாமே பூட்டிக் கொள்ளுகின்ற குதிரைகளை யுடையவனும், மூன்று மறைகளையு முணர்ந்த பேரறிவை யுடையவனும், பேரொளியை யுடையவனுமாகிய சூரியன், ஒருகாலத்தில், வேண்டியவற்றை இரத்தற் பொருட்டு இந்திரனிடஞ் சென்றனன். இவ்வண்ணமிருக்கில், இந்திரன் பெருமை சொல்லுதற் கெளி தோ ? என்பது.

அதன் யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—6

**आमासु पक्कमैरय आसूर्यꣳ रोहयो दिवि। घर्मन्न सामन्तपता सुवृक्तिभिर्जुष्टं गिर्वणसे गिरः।**

உரை.

இந்திரனே ! நீ, பழுக்காத கொடி செடிகளை, மழையால் பழம் பழுக்கு மாறு செய்கின்றாய். இரவி, சுற்றிவருமாறு வன்மையை யளித்து வானில் அதை நிறுத்தி வைத்தனை. ஹூம் என்பதோடு கூடிய சாமங்களால் பிரவர்க் கிய ஆகுதி இனிது செய்வதுபோன்று, வேள்வித் தலைவர்கள், புரோடாச முத லிய அவிகளை, இந்திர துதியைச்செய்துவிட்டு ஆகுதி செய்கின்றார்கள் என்பது.

மற்றும் அவ்வாறே, சங்-கா-2, பிர-2, அநு-7ல், 'इन्द्रायाऽर्कवते पुरोडाशमेकादश कपालं निर्वपेत्' என்று, மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அதில் புரோநு வாக்கியம்:—

மந்திரம்—7

**इन्द्रमिद्गाथिनो बृहदिन्द्रमर्केभिरर्किणः । इन्द्रं वाणीरनूषत ।**

உரை.

சாமமறை பாடுவோர், பிருகத் என்னும் கீதப்பாட்டால் இந்திரனையே துதிக்கின்றார்கள். இருக்கோதுவோரும் இருக்கு மந்திரத்தால் இந்திரனையே போற்றுகின்றார்கள். மற்றைய எசுர் மந்திரத்தாலும் இந்திரனே துதிக்கப் பெறுகின்றான் என்பது.

அதன் யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—8

**गायन्तित्वा गायत्रिणोऽर्चन्त्यर्कमर्किणः । ब्रह्माणस्त्वा शतक्रतवुद्वꣳशमिवयेमिरे ।**

உரை.

இந்திரனே! உன்னை, உத்காதாக்கள் என்னும் சாமபாடகர்கள் காயத்ரம் என்னுஞ் சாமத்தைப் பாடித் துதிக்கின்றார்கள். இருக்கு வேதிகளும் உன்னைப் போற்றுகின்றனர். அத்துவரியுக்களும் எசுர்மறை மந்திரங்களால், குலமரபுப்படி மூங்கிலை யுயர்த்துவது போன்று உன்னை உயர்த்திக் கூறுகின்றார்கள் என்பது.

---

மற்றும் சங்,கா-2, பிர-2, அநு-7ல், 'इन्द्रायाꣳहोमुचे पुरोडाश मेकादश कपालं निर्वपेत्' என்பது முதலான மந்திரங்களால், ஒரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது. அதில் இது புரோநு வாக்கியம்:—

மந்திரம்—9

**अꣳहोमुचे प्रभरेमा मनीषा मोषिष्ठदाव्ने सुमतिं गृणानाः । इदमिन्द्र प्रतिहव्यं गृभाय सत्यास्सन्तु यजमानस्य कामाः ।**

உரை.

துதிக்கின்ற யாம், மழை காலத்தில், பாவத்திலிருந்து நீக்குகின்ற உன்னைக் களிப்படைவிக்கின்றோம் என்னுஞ் சிந்தனையோடு கூடிய புத்தியுடையவர்களாவோமாக. இந்திரனே! நீ, கொடுக்கின்ற அவியை யேற்றுக் கொள்வாயாக. அதனால், வேள்வித் தலைவனுடைய விருப்பங்கள் முடிவனவாகுக என்பது.

---

அதில் யாஜ்யா வாக்கியம்

மந்திரம்—10

**विवेषयन्माधिषणा जजानस्तवै पुरापार्यादिन्द्रमह्नः । अꣳहसो यत्र पीपरद्यथानो नावेवयान्त मुभये हवन्ते ।**

உரை.

எவ்விதமாகிய புத்தியிருக்கின் இந்திரன், பாவத்தினின்றுங் கடைத்தேற்றுவானோ, அத்தகைய புத்தி எம்மைக் கலந்திருத்தலின், யான், நற்புத்தியுடையவனானேன். ஆகையால், இறக்கும் வரை, இந்திர! உன்னைத் துதிப்பேன். கரையிலுள்ளவர், எம்மை அக்கரையிற் சேர்த்து விடுவாயாக என்று ஓடுந் தோணியைக் கூப்பிடுவது போன்று, பாவத்தினின்றுங் கரையேற வேண்டியவர்கள் உன்னைக் கூப்பிடுகின்றனர் என்பது.

---

அதிலேயே விகற்பத்தால் மற்றொரு யாஜ்யா வாக்கியங் கூறப்படுகின்றது,

மந்திரம்—11

**प्रसम्राजं प्रथममध्वराणामꣳहो मुचं वृषभं यज्ञियानाम्। अपान्नपातमश्विना हयन्तमस्मिन्नर इन्द्रियन्धत्तमोजः ।**

உரை.

வேட்போர்களே! நீவிர், இனிது விளங்குகின்றவனும், அக்கினிட்டோம முதலானவைகட்கு முக்கியமாகிய தேவனும், வேள்விப்பயனை நிறையக் கொடுக்கின்றவனும், மழையைக் கெடுக்காதவனும், செல்வத்தை யளிக்கின்றவனுமாகிய இந்திரனை நன்கு போற்றுவீர்களாக. அசுவினிகாள்! இவ்வேள்வித்தலைவனுக்கு இந்திரிய வன்மையைக் கொடுப்பீர்களாக என்பது.

---

மற்றும், அவ்வாறே, சங்,கா 2-பிர,2-அநு,7ல், 'इन्द्राय वैमृधाय पुरोडाशमेकादश कपालं निर्वपेत्' என்பது முதலிய மந்திரத்தால் மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது அதில் இது புரோநு வாக்கியம்,

மந்திரம்—12

**विन इन्द्रमृधो जहिनीचायच्छ पृतन्यतः । अधस्पदन्तमीं कृधि यो अस्माꣳ अभिदासति ।**

உரை.

இந்திர! எமது பகைவரை முழுதும் வெற்றி கொள்வாயாக. அன்றியும், எம்மைக் கொல்வதற்குச் சேனைகளை விரும்பும் பகைவனையும் தாழும்படி செய்வாயாக. எம்மை மெலிக்கின்ற சத்துருவையும், எம்மை வணங்கும்படி செய்வாயாக என்பது.

---

அதில் யாஜ்யா வாக்கியம்,

மந்திரம்—13

**इन्द्रक्षत्रमभिवाममोजोऽजायथा वृषभ चर्षणीनाम्। अपानुदोजनममित्रयन्तमुरुन्देवेभ्यो अकृणोरुलोकम्।**

உரை.

இந்திரனே! நீ, எமது வன்மையைத் தேடுதற் பொருட்டு உண்டாயிருக்கின்றாய். மற்றும், மக்கட்கு பயனை யளிக்கின்றவனே! நீ, பகைமை கொண்டவனைக் கொல்கின்றவனாயும், தேவர்கட்கு அவி கொடுத்த வேள்வித் தலைவர்கட்கு போகத்திற்குரிய இடத்தைச் செய்கின்றவனாகவு மிருக்கின்றாய் என்பது.

---

அவ்விஷ்டியிலேயே விகற்பமாகிய புரோநுவாக்கியம்,

மந்திரம்—14

**मृगोनभीमः कुचरो गिरिष्ठाः परावत आजगामा परस्याः । सृकꣳ सꣳशाय पविमिन्द्रतिग्मं विशत्रून्तािढविमृधोनुदस्व ।**

உரை.

இந்திர! நீ, கொல்லுதல் முதலான பயங்கரச் செயலையுடைய சிம்ம முதலிய விலங்குகள் போன்று, மிகத் தூரத்திலிருந்து, எமது பகைவரைக் கொல்லுதற் பொருட்டு ஓடிவருகின்றவனாயிருக்கின்றாய். மிகக் கூரிய வச்சிராயுதத்தால் பகைவரைக் கொல்வாயாக, போரிடும் பகைவரைத் தூரத்தி விடுவாயாக என்பது,

---

விகற்பித யாஜ்யா வாக்கியம்,

மந்திரம்—15

**विशत्रून् विमृधोनुदविवृत्रस्य हनूरुज । विमन्युमिन्द्रभामितोऽमित्रस्याऽभिदासतः ।**

உரை.

இந்திரனே! நீ, பகைவரை முழுது மொழிப்பாயாக. போரிடுவோரையும் வெருட்டி விடுவாயாக. விருத்திராசுரனைக் கொல்வாயாக. முனிவால் எம்மை மெலிக்கின்ற விரோதியை இனிது ஒழிப்பாயாக என்பது.

---

மற்றும், சங், கா-2, பிர-2, அநு-7ல், 'इन्द्रायत्रात्रे पुरोडाश मेकादशकपालं निर्वपेत्' என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது அதில் இது புரோநுவாக்கியம் :—

மந்திரம்—16

**त्रातारमिन्द्रमवितारमिन्द्रꣳ हवेहवे सुहवꣳ शूरमिन्द्रम् । हुवेनुशक्रं पुरुहूतमिन्द्रꣳ स्वस्तिनो मघवाधात्विन्द्रः ।**

உரை.

சங்கிலிக் கட்டிலிருந்து விடுவிப்பவனும், காலாட்படையின் தடையிலிருந்து பாதுகாப்பவனும், கட்டுவோர்களைத் தள்ளிவிடுவதில் வல்லுநனும், எல்லா ஓமங்களிலும் அன்போடு அழைக்கத்தக்கோனும், எல்லாஞ் செய்வதில் வன்மை யுடையவனும், வேள்வித்தலைவர்கள் பலர்களால் அழைக்கத் தக்கோ

னுமாகிய இந்திரனை அழைப்பேனாக. ஈண்டு, உலகில், அப்பா! வாடா, அண்ணா! வாடா என்று, குழந்தைகளை விளையாட்டாய் அழைத்தல் காணப்படுகின்றது போன்றதாம். இந்திரன், எமக்குக் கேடின்மையைத் தருவானாக என்பது.

---

அதில் யாஜ்யா வாக்கியம்,

மந்திரம்—17

**माते अस्याᳫ सहसावन्परिष्टावघाय भूमहरिवः परादै । त्रायस्वनोऽवृकेभिर्वं- रूथैस्तव प्रियासस्सूरिषुस्याम ।**

உரை.

இந்திர! நீ பரிபாலனத்தின் பொருட்டுச் செய்யப்படும் இவ்வேள்வியில் குறைவு வாராதொழிப்பாயாக. ஹரி யென்னும் பரிகளை யுடையோய்! ஒருபோதும் உன்னை அவமதித்தில்லேன். நீ, துன்பில்லாத வீட்டைத் தருவாயாக. வேள்வித் தலைவர்களுள் யான் உனது சிறந்த அன்பனாயிருக்கின்றேன் என்பது.

---

மற்றும், சங், கா-2, பிரா2, அநு-7ல், 'इन्द्रायार्काश्वमेधवते पुरोडाशमेकादश कपालं निर्वपेत्' என்பது முதலிய மந்திரத்தால், மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கின்றது, அதில் இது புரோநுவாக்கியம் :—

மந்திரம்—18

**अनवस्ते रथमश्वाय तक्षन्त्वष्टा वज्रं पुरुहूतद्युमन्तम् । ब्रह्माण इन्द्रं महयन्तो अर्कैरवर्धयन्नहयेहन्तवा उ ।**

உரை.

இந்திர! உன்னுடைய தேரை, குதிரைகள் பூட்டுவதற்கு மக்கள் சுத்தப் படுத்துவார்களாக. துவஷ்டா என்னும் சில்பி வச்சிரத்தைக் கூர்மையாக்குவானாக. வேட்போர்கள், ஆராதனைக் கருவிகளான மந்திரங்களால் பாவங்களை நீக்குதற்குக் கீர்த்தியை வளர்ப்பார்களாக என்பது.

---

அதில் இது யாஜ்யா வாக்கியம்.

மந்திரம்—19

**वृष्णेयत्ते वृषणो अर्कमर्चानिन्द्रग्रावाणो अदितिस्सजोषाः । अनश्वासो ये पवयोऽरथा इन्द्रेषिता अभ्यवर्तन्त दस्यून् ॥**

உரை.

வேண்டியவற்றை யளிக்கும் இந்திர! உன்னைப்பற்றிய பயன்தரும் யாகம், சோமக்கொடியை யிடிக்கும் கல் முதலானவைகளால் அலங்காரஞ் செய்யப் பெறுகின்றன. வேதிகையாகிய அதிதி உனக்கு ஒத்த அன்புடையவளாகுக. இந்திரன் விடும் வச்சிராயுதங்கள், தேர் குதிரைகளை வேண்டாமலே பகைவரைக் கொல்வதற்குச் செல்க என்பது.

பன்னிரண்டாம் அநுவாகம் முற்றிற்று.

ஆறும் பிரபாடகமும் முடிந்தது.



# கிருஷ்ண எசுர்வேத தைத்திரீய சங்கிதை.

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

———

### விடயச் சுருக்கம்

प्रपाठके सप्तमेऽस्मिन्ननुवाकास्त्रयो दश ।
याजमान ब्राह्मणस्य शेषः षट्स्वादि मे ब्रुहि ॥ १ ॥
वाजपेयस्य मन्त्रास्तु षट्स्वन्येष्वथ याज्यकाः ।
इडानुमन्त्रणं तस्या इडायाश्च प्रशंसनम् ॥ २ ॥
अन्वाहार्योऽथ मन्त्रानुवाकत्रयाख्या त्रिपुस्मृता ।
रथमन्त्रा धावनंच रोहणं वाजहोमकः ॥ ३ ॥
उज्जित्यतिग्राह्ययाज्या इत्यर्था अनुवाकगाः ।

இப் பிரபாடகத்தில் பதின்மூன்று அநுவாகங்கள் உள்ளன. அவற்றுள் முதல் ஆறு அநுவாகங்களில் யாஜமானப் பிராமண சேஷங்கள் கூறப்படுகின்றன. பிற்பாதி ஆறு அநுவாகங்களில் வாஜபேய மந்திரங்களும் 13 வது அநுவாகத்தில் யாஜ்யாவுஞ் சொல்லப்பட்டிருக்கிறது. அதாவது இடாநு மந்திரணம், இடாவின் பெருமை அன்வாஹாரியம் மூன்றநுவாகவுரை, ரத மந்திரங்கள் ஆஜிதாவனம் ஆரோகணம், வாச ஹோமம், உஜ்ஜிதி, அதிக்கிராகியம், யாஜ்யாநு வாக்கியங்கள் என்பது.

———

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## முதல் அநுவாகம்

ஆறு பஞ்சாதிகட்கு மேல் பத்தொன்பது பதங்களைக் கொண்டது.

———

### இடாவைப் போற்று மந்திரங்களின் உரை

पाकयज्ञं वा अन्वाहिताग्नेः पशव उपतिष्ठन्त इडा खलु वै पाकयज्ञस्सैषाऽन्तरा प्रयाजानूयाजान् यजमानस्य लोकेऽवहितातामा ह्रियमाणामभिमन्त्रयेत सुरूपवर्ष वर्ण एहीति पशवोवा इडा पशूने-

वोपह्वयते यज्ञं वै देवा अदुहन् यज्ञोऽसुराꣳ अदुहत्तेऽसुरा यज्ञ
दुग्धाः पराऽभवन् योवै यज्ञस्य दोहं विद्वान् ॥ १ ॥ यजतेऽप्यन्यं
यजमानन्दुहे सामे सत्याऽऽशीरस्य यज्ञस्यं भूयादित्याहैषवै
यज्ञस्य दोहस्तेनैवैनन्दुहे प्रत्तावै गौर्दुहे प्रत्तेडा यजमानाय
दुह एतेवा इडायैस्तना इडोपहूतेति वायुर्वत्सो यर्हिहोतेडा मुप-
ह्वयेत तर्हि यजमानो होतारमीक्षमाणो वायुं मनसाध्यायेत् ॥ २ ॥
मात्रे वत्समुपावसृजति सर्वेण वै यज्ञेन देवास्सुवर्गं लोकमायन्पाक-
यज्ञेन मनुरश्राम्यत्सेडा मनुमुपावर्तत तान्देवासुराव्यह्वयन्त प्रती-
चीन्देवाः परांचीमसुरास्सा देवानुपावर्तत पशवोवै तद्देवानवृणत
पशवोऽसुरानजहुर्यङ्कामयेताऽपशुस्स्यादिति परांचीन्तस्येडामुपह्व-
येताऽपशुरेव भवति यम् ॥ ३ ॥ कामयेत पशुमान्त्स्यादिति प्रती-
चीन्तस्येडा मुपह्वयेत पशुमानेव भवति ब्रह्मवादिनो वदन्ति
सत्वा इडामुपह्वयेत य इडामुपहूयाऽऽत्मान मिडायामुपह्वयेतेति सानः
प्रिया सुप्रतूर्तिर्मघोनीत्या हेडामेवोपहूयाऽऽत्मानमिडाया मुपह्वयते
व्यस्तमिववा एतद्यज्ञस्य यदिडा सामिप्राश्नन्ति ॥ ४ ॥ सामिमा-
र्जयन्त एतत्प्रतिवा असुराणां यज्ञो व्यच्छिद्यत ब्रह्मणा देवास्सम-
दधुर्बृहस्पतिस्तनुतामिमन्न इत्याह ब्रह्मवै देवानां बृहस्पतिर्ब्रह्मणैव
यज्ञꣳ सन्दधाति विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधात्वित्याह सन्तत्यै
विश्वे देवा इहमादयन्तामित्याह सन्तत्यैव यज्ञन्देवेभ्योऽनुदिशति
यां वै ॥ ५ ॥ यज्ञे दक्षिणान्ददाति तामस्य पशवोऽनुसंक्रामन्ति
स एष ईजानोऽपशुर्भावुको यजमानेन खलुवै तत्कार्यमित्याहुर्यथा

முதலியன)

देवत्रादत्तं कुर्वीताऽऽत्मन्पशून्नमयेतेति ब्रध्न पिन्वस्वेत्याह यज्ञो वै ब्रध्नो यज्ञमेव तन्महयत्यथो देवत्रैव दत्तं कुरुत आत्मन्पशून्नमयते ददतो मे माक्षायीत्याहाक्षितिमेवोपैति कुर्वतो मे मोप दसदित्याह भूमानमेवोपैति ॥ ६ ॥

இம் முதலநுவாகத்தில் இடாவை (புரோடாசத்தை)ப் போற்றுதல் கூறப்படுகின்றது. அத்தகைய இதை விதிக்க வேண்டியதன் பொருட்டு முன்னர் அது துதிக்கப்படுகின்றது,

---

பிராமணம்—1

पाकयज्ञं वा अन्वाहिताग्नेः पशव उपतिष्ठन्त इडा खलु वै पाकयज्ञस्सैषान्तरा प्रयाजानूयाजान्यजमानस्य लोकेऽवाहिता ।

உரை.

எழுவிதமான பாக யக்ஞங்களுள் (இடாபக்ஷணத்துள்) எதாவது ஒன்றை, தீவேட்டலிற் செய்தவன் பசுக்களை யடைகின்முன். ஈண்டு பாகயக்ஞமென்பது இடாபக்ஷணமாம். இப் பாக யக்ஞமானது, வேள்வித் தலைவனுடைய பயனுக்குச் சாதனமாகிய பிரயாஜ அநுயாஜ யாகங்கட் கிடையில் இருக்கின்றது. அதாவது அங்கு விதிக்கப்பட்டிருக்கின்றது என்பது.

---

விதிக்கப்படுகின்றது

பிராமணம்—2

तामाह्रियमाणामभिमन्त्रयेत सुरूपवर्षवर्ण एहीति पशवो वा इडा पशूनेवोपह्वयते ।

உரை.

ஹோதாவின் சமீபத்திற் கொண்டு வந்து வைத்த இடாவை (புரோடாசத்தை) நான்காய், அல்லது, ஐந்தாய்ப் பாகித்து வைத்து அதைப் போற்றுக. இடாதேவதையே! நீ வருவாயாக என்றழைக்கவும். இடாதேவதை பசுவானதால் 'ஏஹி' என்னு மூலபதத்தால் பசு கூப்பிடப் பெறுகின்றது என்பது.

---

'ஸாமேசத்யா' என்பது முதலிய மந்திர பாகத்தை விரித்துரைப்பதன் பொருட்டுத் துதிக்கப்படுகின்றது,

பிராமணம்—3

यज्ञं वै देवा अदुहन् यज्ञोऽसुराꣳ अदुहत्तेऽसुरा यज्ञदुग्धाः पराऽभवन्यो वै यज्ञस्य दोहं विद्वान् यजतेऽप्यन्यं यजमानन्दुहे ।

உரை.

முதலில், தேவர்கள், வேள்வியைக் கறந்தனர். அதாவது அதன் சாரமாகிய பயனைக் கொண்டதால் வேள்வியைத் தள்ளதக்க தாக்கிவிட்டனர். வேள்வி, அசுரர்களின் சாரத்தைக் கவர்ந்து கொண்டதாலும் அசுரர் தள்ளத் தக்கவராகிவிட்டனர். எவ் வேள்வித் தலைவன் இதை யுணர்ந்து வேள்வி செய்கின்றானோ, அவன் பிற வேள்வித் தலைவனையுங் கறக்கின்றான், அதாவது தள்ளத்தக்கவனாக்குகின்றான் என்பது.

---

அதன் உரை கூறப்படுகின்றது

பிராமணம்—4

**सामे सत्याऽऽशीरस्य यज्ञस्य भूयादित्याहैषवै यज्ञस्य दोहस्तेनैवैनन्दुहे ।**

உரை.

அழைக்கப்பெற்ற இவ் வேள்வித்தலைவன், வடக்குத் தேவாராதனையில் அழைக்கப் பெற்றனன் என்றது முதலிய இவ்வாசீர்வாத வடிவ அழைப்பு, மந்திரத்திலுள்ளதாம். அந்த இத்தகைய வேள்விச் சம்பந்தமாகிய ஆசீர்வாதம், எனக்கு இப்போது உண்டாகுக என்பது, யக்ஞதோஹமாம். அதனாலேயே ஏனைய எஜமானனைக் கறக்கின்றான் என்பது.

---

வாயுவின் தியானத்தை விதிக்கப் புகழ்கின்றது,

பிராமணம்—5

**प्रत्तावै गौर्दुहे प्रत्तेडा यजमानाय दुह एतेवा इडायैस्तना इडोपहूतेति वायुर्वत्सः ।**

உரை.

கன்றை யடைந்த பசு, மடியில் பால் சுரப்புடையதாய் பாலை ஒழுக விடுவது போன்று, இடாவானது, பால் சுரப்புடையதாய் வேள்வித் தலைவனுடைய பயனைக் கறக்கின்றது. அந்த இடாவிற்கு, 'இடாவுபஹூதா' என்பது முதலிய மந்திரம் தனங்கள். வாயு கன்று என்பது.

---

விதிக்கின்றது

பிராமணம்—6

**यर्हिहोतेडा मुपह्वयेत तर्हि यजमानो होतारमीक्षमाणो वायुं मनसाध्यायेन्मात्रे वत्समुपावसृजति ।**

உரை.

ஹோதா, இடாவை அழைக்கும்போது வேள்வித் தலைவன் ஹோதாவை நோக்குகின்றவனாய் வாயுவை மனதால் தியானித்தல் வேண்டும். உடனே கன்றைக் குறித்து பாலைப் பொழிகின்றது என்பது.

---

இடா அழைக்கப் பெற்றது (இடாவுபஹூதா) என்பது முதலிய மந்திர பாக பிரயோகத்திற் கொள்ளற்பாலது தள்ளற்பாலது என்பவற்றை விதித்தற் பொருட்டுப் புகழ்கின்றது,

பிராமணம்—7

**सर्वेण वै यज्ञेन देवास्सुवर्गं लोकमायन्पाकयज्ञेन मनुरश्राम्यत्सेडा मनुमुपावर्तत तान्देवासुराव्यह्वयन्त प्रतीचीन्देवाः पराचीमसुरास्सा देवानुपावर्तत पशवोवैतद्देवानवृणत पशवोऽसुरानजहुः ।**

உரை.

மநுவுடன் கூட தேவர்களனைவரும் தரிசபூரணமாத யாகத்தால் சுவர்க்கத்தை யடைய முயன்றனர். அவர்களுள் மநு, பாகயக்ஞம் செய்கின்றவராயினர். பாகயக்ஞம் என்பது இடாவாம். இதனால் மநுவானவர் ஹோதாவாயிருந்து இடாவை ஆவாஹனஞ் செய்யுங் கருத்துடையராயிருந்தனர் என்பது பெற்றும். இடா தேவதையும், அக் கருத்துடைய மநுவை யடைந்தது. தேவர்களும் அசுரர்களும் அதைப் பார்த்து தனித்தனி அழைத்தனர். அங்கு, தேவர்கள் மேற்கு முகமாய் அழைத்தனர். அசுரர் பராக் முகமாய் அழைத்தனர். இடா அழைக்கப்பெற்றது என்பது அதை நேர்முகப்படுத்தலாம். பின், இடா அழைக்கப் பெற்றது என்பது அதை பராக் முகமாக்கலாம். இதில், இடாவென்னும் பசு வடிவமான தேவதை, தேவர்கள் நேர்முகமா யழைத்ததால் அவர்களை யடைந்தது. பராக்முகமா யழைத்தலால் களிப்பின்றி அசுரர்களை யடையவில்லை என்பது.

---

பிராமணம்—8

அதில் தள்ளத்தக்க பக்ஷம் விதிக்கப்படுகின்றது,

**यङ्कामयेताऽपशुस्स्यादिति पराचीन्तस्येडामुपह्वयेताऽपशुरेव भवति ।**

உரை.

எவன், பசுக்களற்றவனாக விரும்புகின்றானோ, அவன் இடா தேவதையை பாராக்முகமாய் அழைப்பானாக என்பது.

கொள்ளும் பக்ஷத்தை விதிக்கின்றது,

பிராமணம்—9

**यङ्कामयेत पशुमान्त्स्यादिति प्रतीचीन्तस्येडा मुपह्वयेत पशुमानेव भवति ।**

உரை.

எவன் பசுக்கள் வேண்டுமென்று விரும்புகின்றனோ, அவன், மேற்கு முகமாய் இடா தேவதையை அழைக்கின்றான். அவன் பசுக்களை யுடையவனாகின்றான் என்பது.

---

ஸாந : பிரியா, என்னும் மந்திர பாகத்திற்கு உரை கூறுவதன் பொருட்டுப் புகழ்கின்றது,

பிராமணம்—10

**ब्रह्मवादिनो वदन्ति सत्वा इडा मुपह्वयेत य इडामुपहूयाऽऽत्मानमिडायामुप- ह्वयेतेति ।**

உரை.

மறை ஓதியுணர்ந்த அறிஞர்கள், எவ்வறிஞன், மந்திரத்தால், 'இடாவே நீ வருவாயாக' என்று, அழைக்கின்றனோ, அவனே இடாவின் ஆன்மாவை அழைக்கின்றான்; அவனே நூல் முறைப்படி அழைத்துச் சேர்க்கின்றவன் என்கின்றனர் என்பது.

---

மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—11

**सानः प्रिया सुप्रतूर्तिर्मघोनीत्याहेडापहूयाऽऽत्मानमिडाया मुपह्वयते ।**

உரை.

எந்த இடா, எங்களால், 'இடாவே! வா, என்று அழைக்கப் பட்டதோ, அந்த இடா, நீ எமது பிரியமுடையாய், என்னும் வாக்கியத்தால் ஆன்மாவிற் சேர்க்கப்பட்டது என்பது.

---

துடைத்தற் பொருட்டு, 'மனோஜ்யோதி' என்பது முதலிய இருக்கு மந்திரத்திற்கு உரை கூறுதற் பொருட்டுப் புகழப்படுகின்றது,

பிராமணம்—12

**व्यस्तमिव वा एतद्यज्ञस्य य दिडासामिप्राश्नन्ति सामिमार्जयन्त एतत्प्रतिवा असुराणां यज्ञो व्यच्छिद्यत ब्रह्मणा देवास्समदधुः ।**

முதலியன)

உரை.

இடாவால் யாகம் நடுவில் விடுபட்டுப் போகின்றது; என்னே? புரோடாசத்தின் கூறு, அதாவது இடாபாகவடிவம் இருத்துவிக்குகளால் அருந்தப்படுகின்றது. நீரின் துளி தலையில் தெளித்துக் கொள்ளப்படுகின்றது. அப்போது பிரதான யாகம் முன்னரே ஆகுதியாகி விட்டது. அநுயாஜை முதலிய யாகம் இனிமேல் வேட்கத் தக்கது. இதற்கு நடுவில் இடாவை யருந்தலும், தண்ணீரைத் தெளித்துக் கொள்ளுதலு நடக்கின்றன. இவ்விரண்டும், யாக வடிவமாகாமையின் யாகம் விடுபட்டுப் போகின்றது. இவ் வண்ணமாகியபோது, அசுரர்கள், மேல் வேட்கத்தக்க அநுயாஜ யாகங்களை மறந்து விட்டனர்; ஆதலின், அசுரர்களுடைய யாகத்தில், இடா அருந்தல் தண்ணீர் தெளித்துக் கொள்ளுதல் இரண்டும் விடுபட்டுப் போயின. தேவர்கள், மறக்காதவர்களாய் ஒருவனால் அவ் விரண்டும் விடுபட்டுப் போனதை நினைத்து கொண்டு செய்தனர் என்பது.

---

அந்த இருக்கின் மூன்றாவது பாதத்திற்கு உரை கூறுகின்றது,

பிராமணம்—13

**बृहस्पतिस्तनुता मिमन्न इत्याह ब्रह्म वै देवानां बृहस्पतिर्ब्रह्मणैव यज्ञꣳ सन्दधाति ।**

உரை.

பிருகற்பதி இதை விரிப்பாராக என்றது. பிருகற்பதி தேவர்களுக்குள் பிரமனாகின்றான். பிரமனால் யக்ஞம் இனிது தாங்கப்படுகின்றது என்பது.

---

மந்திரத்தின் இரண்டாவது சொல்லுக்குப் பொருள் கூறப்படுகின்றது,

பிராமணம்—14

**विच्छिन्नं यज्ञꣳ समिमन्दधात्वित्याह सन्तत्यै ।**

உரை.

இவ் வேள்வியை, இடையில் விட்டுப் போகாதபடி இனிது கொண்டு செலுத்துவாயாக என்பது.

---

மந்திரத்தின் நான்காவது பாதம் (சொல்) விரித்துரைக்கப்படுகின்றது,

பிராமணம்—15

**विश्वेदेवा इहमादयन्तामित्याह सन्तत्यैव यज्ञन्देवेभ्योऽनुदिशति ।**

உரை.

விசுவ தேவர்கள் (தேவர்களனைவரும்) இதில் களிப்புறுவார்களாக. இடைவிடாது நடக்கின்ற யாகம் தேவர்கட்கு அருப்பணமாகின்றது என்பது.

---

'ப்ரத்ன பின்வஸ்வ, என்பது முதலிய புரோடாசத்தைப் போற்று மந்திரத்திற்கு உரை கூறுதற்குப் புகழ்கின்றது,

பிராமணம்—16

**यां वै यज्ञेदक्षिणान्ददाति तामस्य पशवोऽनुसंक्रामन्ति स एष ईजानोऽपशुभावुको यजमानेन खलु वै तत्कार्यमित्याहुर्यथा देवत्रादत्तं कुर्वीताऽऽत्मन्पशूत्रमयेतेति ।**

உரை.

வேள்வித் தலைவனால் வேள்விச் செயலாளர்கட்குக் கொடுக்கப் பெற்ற, பசு முதலான தெட்சிணைப் பொருள்கள் அவனுக்கு இல்லாமற் போய்விடுகின்றன. ஆதலின், தேவர்களுக்குள், இருத்துவிக்குக்கள் வாழும்படியாகவும், பசுக்கள் தன்னிடத்திலேயே களிப்புற்றிருக்கும் படியாகவும் வேள்வித் தலைவன் செய்தல் வேண்டும் என்று அறிஞர்கள் கூறுகின்றனர் என்பது.

---

மந்திரத்தின் முதலாங் கூற்றிற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—17

**प्रत्न पिन्वस्वेत्याह यज्ञोवै प्रत्नो यज्ञमेव तन्महयत्यथो दैवत्रैव दत्तं कुरुत आत्मन्पशूत्रमयते ।**

உரை.

'எக்ஞமே! ப்ரீணீஹி, என்றது, எக்ஞமாகிய உற்சாக பூசையால் முறையாய்க் கூறிய இரண்டு பயன்களுங் கிடைக்கின்றன என்பது. இருவகை இலாபமுண்டு என்பது கருத்து.

---

மந்திரத்தின் இரண்டாம் பாகத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—18

**ददतो मे माक्षायीत्याहाक्षिति मेवोपैति ।**

உரை.

எனது அளிக்கப் பெற்ற பொருள்கள் கெடாதிருக்குக, என்றது வேண்டுகோளால் கேடு நீக்கப்படுகின்றது என்பது.

---

மந்திரத்தின் மூன்றும் பாகத்திற்கு உரை,

பிராமணம்—19

**कुर्वतो मे मोपदसदित्याह भूमानमेवोपैति ।**

உரை.

கேடாகாதபடி முன்னர் வேண்டிக் கொள்ளப் பட்டதால் ' மாவுபதஸத்' என்றது, வளர வேண்டு மென்று வேண்டிக் கொள்ளப் படுகின்றது என்பது.

முதலாவது அநுவாகம் முடிந்தது.

---

**முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்**

**இரண்டாவது அநுவாகம்**

**நான்கு பஞ்சாதிக்குமேல் இருபது பதங்களைக் கொண்டது**

---

இடாவின் புகழைக் கூறும் பிராமணங்கள்.

सꣳश्रवाहसौवर्चनसस्तुमिञ्जमौपोदिति मुवाच यत्सत्रिणाꣳ होताऽभूः कामिडामुपाह्वथा इति तामुपाह्व इति होवाचया प्राणेन देवान्दाधारव्यानेन मनुष्यानपानेन पितृनिति छिनत्तिसानाछि- नत्ती ३ इति छिनत्तीति होवाच शरीरं वा अस्यैतदुपाह्वथा इति होवाच गौवै ॥ १ ॥ अस्यै शरीरङ्गां वावतौ तत्पर्यवदतां या यज्ञे दीयते साप्राणेन देवान्दाधार यया मनुष्या जीवन्ति सा व्यानेन मनुष्यान्यां पितृभ्योघ्नन्ति साऽपानेन पितॄन् यएवं वेद पशुमान् भवत्यथवैता मुपाह्व इति होवाच या प्रजाः प्रभवन्तीः प्रत्या भव- तीत्यन्नं वा अस्यैतत् ॥ २ ॥ उपाह्वथा इति होवाचौषधयोवा अस्या अन्नमोषधयोवै प्रजाः प्रभवन्तीः प्रत्याभवन्ति यएवं वेदा- न्नादो भवत्यथवै तामुपाह्व इति होवाचया प्रजाः पराभवन्तीरनु- गृह्णाति प्रत्याभवन्तीर्गृह्णातीति प्रतिष्ठां वा अस्यै तदुपाह्वथा

इतिं होवाचेयं वा अस्यै प्रतिष्ठा ॥ ३ ॥ इयं वै प्रजाः पराभवं-
न्तीरनुगृह्णाति प्रत्याभवन्तीर्गृह्णाति यएवं वेद प्रत्येव तिष्ठत्यथ
वैतामुपांह्व इतिं होवाच यस्यैं निक्रमंणे घृतं प्रजास्सञ्जीवन्तीः
पिबन्तीतिं छिनत्ति सानछिंनत्ती ३ इति न छिंनत्तीति
होवाच प्रतु जनयतीत्येषवा इडामुपांह्वथा इतिं होवाच वृष्टिर्वा
इडावृष्ट्यैवै निक्रमंणे घृतं प्रजास्सञ्जीवन्तीः पिबन्ति यएवं वेद
प्रैवजांयतेऽन्नादो भंवति ॥ ४ ॥

• இடா முதலானவற்றைப் போற்று மந்திரங்களுக்கு, முதலா மநுவாகத்தில் உரை கூறப்பட்டது. அந்த இடாவே இங்கும் இரு முனிவர்களின் கடா விடைகளாற் புகழப்படுகின்றது.

---

அதில், வினவைத் தொகுக்கின்றது,

பிராமணம்—1

सश्रवाह सौवर्चनसस्तुमिञ्जमौपोदिति मुवाच ।

உரை.

சுவர்ச்சனசரின் புத்திரராகிய சம்சிரவர் என்னும் இருடியானவர், உபோதிதருடைய புத்திரராகிய துமிஞ்சரை கீழ்வருமாறு வினவினர் என்பது.

---

வினவு இன்னதென்று கூறுகின்றது,

பிராமணம்—2

यत्सत्रिणाꣳ होताऽभूः कामिडामुपाह्वथा इति ।

உரை.

நீர் சத்திரிகட்கு ஹோதா ஆகுவீரேல், அப்போது, எத்தகைய இடாவை அழைப்பீர்! என்பது.

---

விடை கூறல்,

பிராமணம்—3

तामुपाह्व इति होवाच या प्राणेन देवान्दाधारव्यानेन मनुष्यानपानेन पितृनिति ।

முதலியன)

உரை.

பிராணனைத் தேவ வடிவையும், வியானனைய் மனித வடிவையும், அபானனைப் பித்திருவடிவையுந் தாங்குகின்ற தன்மையுடைய இடாவை அழைக்கின்றவனா யிருக்கின்றேன் என்பது.

---

மீண்டும் வினவை விளக்குகின்றது,

பிராமணம்—4

छिनत्ति सानछिनत्ती ३ इति ।

உரை.

உன்னால் அழைக்கப்பெற்ற இடா, பசு வடிவாய், வாங்குங் குற்றத்தால் தட்சிணையாகப் பெற்றுக் கொள்ளுவோரை, கொல்கின்றதா? இல்லையா? என்பது.

---

விடை கூறுகின்றது,

பிராமணம்—5

छिनत्तीति होवाच ।

உரை.

கொல்கின்றது என்று கூறினர் என்பது.

---

அற்றேல், 'இது நல்ல இடா அன்று' என்று வினவுவோரின் குற்றத்தை விளக்குகின்றது,

பிராமணம்—6

शरीरं वा अस्यैतदुपाह्वथा इति होवाच ।

உரை.

இந்த இடாவின் உடம்புதான் உன்னால் அழைக்கப் பெற்ற தேயலாது அத் தேவதை அழைக்கப் பெறவில்லை என்பது.

---

இப்போது, கதையைத் தழுவாது, சுருதி தானே கூறுகின்றது,

பிராமணம்—7

गौर्वा अस्यै शरीरं गां वावतौ तत्पर्यवदताम् ।

உரை.

இந்த இடாவின் உடம்பு பசுவேயாகும். இது, 'மானவிக்ருத பதீ' என்னும், இடாவையழைக்கும் மந்திரத்தின் பிராமணத்தில் 'மநு: பிருதிவ்யா

என்னு மனுவாகத்தில் வெளிப்படையாகக் கூறப்பட்டிருக்கின்றது. ஆகையால் இடாவின் உடம்பாகிய பசுவையே உணர்ந்து கொண்டவர்களாய் வினவிடை கூறத் தொடங்னர்கள் ஆதலின் இதிற் குற்றமில்லை என்பது.

---

தேவர் முதலான வடிவெடுத்ததை விளக்குகின்றது,

பிராமணம்—8

**या यज्ञे दीयते सा प्राणेन देवान्दाधार यया मनुष्या जीवन्ति सा व्यानेन मनुष्यान्यां पितृभ्योघ्नन्ति साऽपानेन पितॄन् ।**

உரை.

வேள்வியில், தட்சிணையாகக் கொடுத்த பசுவை, தேவர்கள் எள்ளளவுந் துன்புறுத்துவதில்லை, பால் கறப்பதுமில்லை, ஆதலின் சிறந்த பிராண விருத்தியால் தேவத் தன்மையை யடைந்தது. மனிதர்கள் பால் கறத்தலின், முழுதுந் துன்புறுத்தலில்லை, ஆனல் துன்புறுத்தாமலுமில்லை; ஆதலின், நடுப்பட்ட வியானவாயு விருத்தியால் மனிதற்றன்மையை யடைந்தது. அஷ்டகா சிராத்தத்தில் பிதிர்க்களின் பொருட்டுப் பசுவைக் கொல்கின்றனர், அப் பசு தாழ்ந்த அபானவாயுவிருத்தியால் மரண வடிவாய்ப் பிதிர்த் தன்மையை யடைகின்றது என்பது.

---

கூறிய, தேவர் முதலிய வடிவின் உணர்ச்சியைப் புகழ்கின்றது,

பிராமணம்—9

**य एवं वेद पशुमान्भवति ।**

உரை.

இவ்வாறு, தேவ வடிவ இடாவை யுணர்ந்தவன் பசுவுடையவனுகின்றுன் என்பது.

---

துமிஞ்சி, என்னும் இருடி, தன்னுலழைக்கப்பெற்ற இடாவின் முக்கியமாந்தன்மையைத் தேடுதற் பொருட்டு வேறு குணத்தால் இடாவைச் சிறப்பிக்கின்ருர் என விளக்குகின்றது,

பிராமணம்—10

**अथवैतामुपाह्व इति होवाच या प्रजाः प्रभवन्तीः प्रत्याभवतीति ।**

உரை.

வா, இதி, என்னும் இரண்டு சொற்களால் மற்றெருரு பக்ஷம் பெறப் படுகின்றது. இந்த இடா பிரபுத் தன்மை யுடையது, பிரஜைகளிடத்தில் நன்னேக்க முடையதாயிருக்கின்றது. அத்தகைய இடாவை யான் அழைக்கின்றவனுயிருக்கின்றேன் என்பது.

முதலியன)

சம்சிரவ முனிவர், இடா சம்பந்தமாகிய முதன்மையாந் தன்மை இன்றேன விளக்குகின்றார்,

பிராமணம் – 11

अन्नं वाअस्यैतदुपाह्वथा इति होवाच ।

உரை.

இந்த இடாவின், சம்பந்தமுடைய அன்னத்தைக் கூப்பிட்டவனாக இருக்கின்றாய் முக்கியமாகிய இடாவையன்று என்றனர் என்பது.

---

இத்தகைய வுணர்வின் பொருத்தம்,

பிராமணம்—12

ओषधयो वा अस्या अन्नमोषधयो वै प्रजाः प्रभवन्तीः प्रत्याभवन्ति ।

உரை.

கொடி செடிகள், பசுக்கட்கு அன்னமாமென்பது வெளிப் படையாம். பிரபுத்தன்மையோ, பிரஜைகளின் வீடுகளில் பல்வகை மக்களின் உணவிற்கு நெல் முதலான கொடி செடிகளாய் வந்திருத்தலாம் என்பது.

---

இதன் உணர்வைப் புகழ்கின்றது,

பிராமணம்—13

य एवं वेदान्नादो भवति ।

உரை.

இவ் வாறுணர்ந்தவன் அன்னத்தை நன்கு அருந்துவோனாகின்றான் என்பது.

---

மீண்டும், துமிஞ்ச முனிவர் கூறிய, மற்றொரு குணமுடையதாந் தன்மை முக்கியமா மேன்பதை யெடுத்துரைக்கின்றது,

பிராமணம்—14

अथवैता मुपाह्व इति होवाचया प्रजाः पराभवन्तीरनुगृह्णाति प्रत्याभवन्तीर्गृह्णातीति ।

உரை.

இந்த இடா, நோய் முதலியவைகளாற் பீடிக்கப்பட்ட மக்களை, தன்னிடத்தில் வைத்து அருள் செய்கின்றது. அதாவது, நோய் வாயுண்ட பிரஜைகளை தாம் தாம் வேண்டிய இடத்தை யளித்தலால் ஏற்றுக் கொள்கின்றது என்பது.

இந்த இடாவும் முக்கியமான தன்றெனக் கூறுவதை விளக்குகின்றது,

பிராமணம்—15

**प्रतिष्ठां वा अस्यै तदुपाह्वथा इति होवाच ।**

உரை.

இடாவின் ஆதாரமாகிய பூமி அழைக்கப்பெற்றதேயன்றி முக்கியமாகிய இடா அன்று என்றனர் என்பது.

---

அத்தகைய இதன் உணர்ச்சி கூறப்படுகின்றது,

பிராமணம்—16

**इयं वा अस्यै प्रतिष्ठेयं वै प्रजाः पराभवन्तीरनुगृह्णाति प्रत्याभवन्तीर्गृह्णाति ।**

உரை.

இப்பூமி இதற்கு ஆதாரமாம். இது பிரஜையாம். துன்புறுவனவற்றிற்கு அருள் செய்கின்றது என்பது.

---

உணர்ச்சியைப் புகழ்கின்றது,

பிராமணம்—17

**य एवं वेद प्रत्येवतिष्ठति ।**

உரை.

இவ்வாறுணர்ந்தவன் நிலம்போல் நிலைத்திருக்கின்முன் என்பது.

---

முக்கியமாந் தன்மையைத் தேடுதற் பொருட்டு மற்றெரு குணத்தைக் கூறுவது விளக்கப்படுகின்றது,

பிராமணம்—18

**अथवैतामुपाह्व इति होवाच यस्यै निक्रमणे घृतं प्रजास्सञ्जीवन्तीः पिबन्तीति ।**

உரை.

மழை வடிவ இடா, வெவ்வேறுய் விழுந்தவிடத்து, தண்ணீராய்ப் பெருகுகின்றது; அதனால் மக்கள் பிழைக்கின்முர்கள். அத்தகைய இடாவை அழைக்கின்றவனு யிருக்கின்றேன் என்பது.

---

சம்சிரவ முனிவர், இந்த இடாவின் குற்றம், குற்றமின்மைகளை வினவுகின்முர்,

பிராமணம்—19

**छिनत्ति सानछिनत्ती ३ इति ।**

உரை.

கொல்கின்றதா? இல்லையா? என்பது.

---

மழை, அன்னம், பசு, பூமி முதலானவைகளைப்போல் கொடுத்தல் வாங்கிக் கொள்ளல் முடியாமையின், துமிஞ்சனுக்கு, வாங்கிக் கொள்வதில் தோஷ மின்மையையும், மற்றொரு குணமுடைமையையும் விளக்குகின்றது,

பிராமணம்—20

**न छिनत्तीति होवाच प्रतु जनयतीति ।**

உரை.

மழை வடிவாகிய இடா, ஒருவரையுங் கொல்கிறதுமில்லை, பழிப்பது மில்லை. மற்றோ, பயிர் முதலானவைகளை நன்கு வளர்க்கின்றது என்பது.

---

சம்சிரவர் முக்கியமாகிய இடாவை உடன்படல்கூறப்படுகின்றது,

பிராமணம்—21

**एष वा इडामुपाह्वथा इति होवाच ।**

உரை.

இடாவையே, மழை யென்னும் வாதியே உள்ளவாறு இடாவை அழைத் தவனுகின்றான் என்பது.

---

இந்த இடாவில் முற்கூறிய இலக்கணத்தின் அறிவை விளக்குகின்றது,

பிராமணம்—22

**वृष्टिर्वा इडा वृष्ट्यैवै निक्रमणे घृतं प्रजास्सञ्जीवन्तीः पिबन्ति य एवं वेदप्रैव जायतेऽन्नादो भवति ।**

உரை.

இடா, மழையாயிருக்கின்றது. மழை பெய்யில் எல்லா உயிர்களும் பிழைக்கின்றன; அருந்துகின்றன என்றிவ்வாறுணர்ந்தவன், பிரஜை யுடையவனும், அன்ன முண்கின்றவனுமாகின்றான். இவ்வாறு, பசு, அன்னம், பூமி, மழை வடிவுகளாக இடா புகழப்பெற்றது என்பது.

இரண்டாம் அநுவாகம் முடிந்தது.

முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

மூன்றாவது அநுவாகம்

நான்கு பஞ்சாதிக்கு மேல் பதினைந்து பதங்களைக் கொண்டது

---

அன்வாஹாரியத்தைக் கூறுகின்ற பிராமணங்கள்.

परोक्षं वा अन्ये देवा इज्यन्ते प्रत्यक्षमन्ये यद्यजंते यएव देवाः परोक्षमिज्यन्तेतानेव तद्यंजति यदंन्वाहार्यमाहरंत्येतेवै देवाः प्रत्यक्षं यद्ब्राह्मणास्तानेव तेनं श्रीणात्यथो दक्षिणैवास्यैषाऽथो यज्ञस्यैव छिद्रमपिं दधाति यद्वै यज्ञस्यं क्रूरं यद्विलिष्टन्तदंन्वाहार्येण ॥ अन्वाहंरति तदंन्वाहार्यस्यान्वाहार्यत्वन्देवदूतावा एते यदृत्विजो यदंन्वाहार्यमाहरंति देवदूतानेव श्रीणाति प्रजापंतिर्देवेभ्यो यज्ञान्व्यादिंश्त्सरिंरिचानोऽमन्यत स एतमंन्वाहार्यमभक्तमपश्यत्तमात्मन्नंधत्त सवा एष प्राजापत्यो यदंन्वाहार्यो यस्यैवं विदुषोऽन्वाहार्य आह्रियते साक्षादेव प्रजापंति मृध्नोत्यपरिमितो निरुप्योऽपरिमितः प्रजापंतिः प्रजापंतेः ॥ २ ॥ आप्त्यैं देवावै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा एतं प्राजापत्यमंन्वाहार्यमपश्यन्त मन्वाहरन्त ततो देवा अभवन्पराऽसुरा यस्यैवं विदुषोऽन्वाहार्य आह्रियते भवंत्यात्मना पराऽस्य भ्रातृव्यो भवति यज्ञेन वा इष्टीपकेनं पूर्ती यस्यैवं विदुषोऽन्वाहार्य आह्रियते सत्वेवेष्टा पूर्ती प्रजापंतेर्भागोऽसि ॥ ३ ॥ इत्याह प्रजापंतिमेव भागधेयेन समर्धयत्यूर्जस्वान्पयंस्वानित्याहोर्जमेवास्मिन्पयोदधाति प्राणापानौमे पाहि समानव्यानौमे पाहीत्याहाशिषमेवैता माशास्तेऽक्षितोऽस्यक्षित्यैत्वामा मेक्षेष्ठा अमुत्रामुष्मिं-

लोक इत्याह क्षीयतेवा अमुष्मिल्लोकेऽन्नं मितः प्रदानꣳ ह्यमुष्मि-
ल्लोके प्रजा उपजीवन्ति यदेव मभिमृशत्यक्षिति मेवैनद्गमयति
नास्यामुष्मिल्लोकेऽन्नक्षीयते ॥ ४ ॥

இரண்டாமநுவாகத்தில் இடாவின் புகழ் கூறப்பட்டது. மூன்றுமநுவாகத்தில் அன்வாஹார்யம் (இருத்துவிக்குக்களுக்குப் பொங்கும் அன்னம்) கூறப்படுகின்றது; அதில், அதனுடைய தானத்தை (ஈகையை) விதித்தற்பொருட்டுப் புகழ்கின்றது.

பிராமணம்—1

परोक्षं वा अन्ये देवा इज्यन्ते प्रत्यक्षमन्ये यद्यजते यएव देवाः परोक्षमिज्य-
न्तेतानेव तद्यजति ।

உரை.

அக்கினி, இந்திரன் முதலான தேவதை பரோட்சங்கள் (முன்னிலையின்றியன.) இருத்துவிக்குக் (வேட்போர்)கள் அபரோக்ஷம் கண்ணுக்குப் புலப்படுகின்றவர்கள், ஆதலின் தேவர்களைக் குறித்த யாகம் கட்புலப்படாதது. வேட்போர்களைக் குறித்த அன்வாஹார்ய மென்னப்படும் அன்னமளித்தல் கண்ணுக்குப் புலப்படுவது என்பதாம்.

அன்வாஹார்யஅன்னதானம்,

பிராமணம்—2

यदन्वाहार्यमाहरत्येते वै देवाः प्रत्यक्षं यद्ब्राह्मणास्तानेव तेन प्रीणाति ।

உரை.

தக்ஷிணக்கினியிற் பக்குவஞ் செய்த அன்னத்தை இருத்துவிக்குக்கட்கு அளித்தல் வேண்டும். இது கண்ணுக்குப் புலப்படுவது என்பதாம்.

அன்வாஹார்யம், தக்ஷிணை வடிவானதாலும், வேள்வியின் ஓட்டையை யடைப்பதாலும் புகழப்படுகின்றது.

பிராமணம்—3

अथो दक्षिणैवास्यैषाऽथो यज्ञस्यैव छिद्रमपि दधाति ।

உரை.

இது தட்சிணை யாதலின் வேள்வியின் துவாரத்தை அடைக்கின்றது. அதாவது, குற்றத்தைப் போக்குகின்றது என்பதாம்.

அன்வாஹார்யம், என்னுஞ் சொற்குப் பொருள் கூறப்படுகின்றது.

பிராமணம்—4

यद्वै यज्ञस्य क्रूरं यद्विलिष्टन्तदन्वाहार्येणाऽन्वाहरति तदन्वाहार्यस्यान्वाहार्यत्वम् ।

உரை.

'அதிரிக்தம் கர்மண: யச்சஹீனம், என்னும் மந்திரத்திற் கூறப்பட்ட மிகுந்த யக்ஞாங்களின் குரூரம் குறைவு, என்னுமிரண்டையும் இந்த அன்னதானத்தால் அநுகூலமாகும்படி நன்கு கொண்டு வருகின்றது ஆகையால் இது அன்வாஹார்ய மெனப்படுகின்றது. அதாவது அநுகூல மாய்ச் சாந்த மாக்கலின் அன்வாஹாரிய மென்பதாம்.

---

இருத்துவிக்குக்களின் பிரியத்திற்குக் காரணமாயிருத்தலின் மீண்டும் அதைப் புகழ்கின்றது,

பிராமணம்—5

देवदूतावा एते यदृत्विजो यदन्वाहार्यमाहरति देवदूतानेव प्रीणाति ।

உரை.

அன்வாஹார்ய மென்னும் பக்குவான்னத்தை இருத்துவிக்குக்கட்கு அளித்தல், தேவதூதுவர்களைப் பிரியப்படுத்துகின்றது என்பதாம்.

---

அது பிரசாபதியின் பாகமாதலின் மீண்டும் புகழப்படுகின்றது.

பிராமணம்—6

प्रजापतिर्देवेभ्यो यज्ञान्व्यादिशात्सरिरिचानोऽमन्यत स एतमन्वाहार्यमभक्तमपश्यत्तमात्मन्नधत्त सवा एष प्राजापत्यो यदन्वाहार्यो यस्यैवं विदुषोऽन्वाहार्य आह्रियते साक्षादेव प्रजापति मृध्नोति ।

உரை.

ஆக்னேய புரோடசம், அக்கினி ஷோமீய புரோடாசங்களை, யாக தேவதையான அக்கினி முதலானவர்கட்குப் பங்கிட்டுக் கொடுத்துவிட்டு, தனக்கொரு யாக மில்லாமையால் தன்னை விருக மதித்துக்கொண்டு பிரசாபதியானவன், தேவர்கட்குப் பங்கிடாததைத் தன்பால் வைத்துக்கொண்டனன். ஆகையால் அன்வாஹார்யம் பிராசாபத்ய மெனப்படும் என்பதாம்.

---

ஹார்யம்)

இந்த அன்வாஹார்ய பசன அன்னம் மிகுதியானது என்று விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—7

अपरिमितो निरुप्योऽपरिमितः प्रजापतिः प्रजापते राप्त्यै ।

உரை.

எல்லாத் தேவதைகட்கும் இறைவனாதலின் வியாப்தி மிகுதியாதல் பற்றி பிரசாபதிக்கும் அளவிலாத் தன்மையாம் என்பதாம்.

---

தனது, வெற்றிக்கும், பகைவரைவெல்வதற்குங் காரணமாதலின் மீண்டும் புகழ்கின்றது.

பிராமணம்—8

देवा वै यद्यज्ञेऽकुर्वत तदसुरा अकुर्वत ते देवा एतं प्राजापत्यमन्वाहार्यमपश्यन्त मन्वाहरन्त ततो देवा अभवन्पराऽसुरा यस्यैवं विदुषोऽन्वाहार्य आह्रियते भवत्याऽऽत्मना पराऽस्य भ्रातृव्यो भवति ।

உரை.

தேவர்கள் வேள்வி செய்தனர். அதை அசுரர்களுஞ் செய்தனர். ஆதலின், தேவர்கள், பிராசாபத்தியமாகிய இத்தகைய அன்வாஹார்யத்தைக் கண்டு கொண்டனர். இதனால் தேவர்கட்கு வெற்றியும், அசுரர்கட்குத் தோல்வியுமாம், இத்தகைய அன்வாஹார்ய பசன அன்னத்தைக் கொண்ட அறிஞன், தான் வெல்கின்றான் அதாவது பகைவரைத் தோற்கடிக்கின்றான் என்பதாம்.

---

இஷ்ட, (யாக முதலியன) பூர்த்த, (குளம், கிணறு கல்லல்) கருமங்களை முடித்து வைக்கின்றதால் மீண்டும் புகழப்படுகின்றது,

பிராமணம்—9

यज्ञेन वा इष्टीपक्केनि पूर्ती यस्यैवं विदुषोऽन्वाहार्य आह्रियते सत्वेवेष्टा पूर्ती ।

உரை.

தீ வேட்டல் முதலிய வைதிக கருமம் இஷ்டம், குளம், கிணறு வெட்டல் முதலிய மிருதிகூறிய கருமம் பூர்த்தம். இவற்றுள், தீவேட்டல் முதலியவைகளால் இஷ்டங் கிடைக்கின்றது. பக்குவான்னத்தால் (அன்வாஹார்யத்தால்) பூர்த்தங் கிடைக்கின்றது என்பதாம்.

அதைத் தோடும் மந்திரத்தின் முதலாவது பாகத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—10

**प्रजापतेर्भागोऽसीत्याह प्रजापतिमेव भागधेयेन समर्धयति ।**

உரை.

'பிரஜாபதியின் பாகமாக இருக்கின்றாய் என்றது, பாகத்தை யளித்ததால் பிரசாபதியைக் களிப்பிக்கின்றது என்பதாம்.

---

இரண்டாவது பாதத்தின் உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—11

**ऊर्जस्वान्पयस्वानित्याहोर्जमेवास्मिन्पयोदधाति ।**

உரை.

இதில் பால்கலத்தலால் சுவையுண்டாகின்றது என்பது.

---

மூன்றும் பாக மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—12

**प्राणापानौमे पाहि समानव्यानौमे पाहीत्याहाशिषमेवैता माशास्ते ।**

உரை.

இருத்துவிக்குக்கள் அன்வாஹார்ய அன்னத்தைக் கொள்ள வேண்டியிருத்தலின், அதனால், தனது பிராணன் முதலிய வற்றைப் பாதுகாத்தலே ஆசிர்வாதமாம் என்பதாம்.

---

நான்காம் பாக மந்திரத்திற்கு உரை கூறி, அபிமரிசனம் (தொடுதல்) விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—13

**अक्षितोऽस्यक्षित्यैत्वामा मेक्षेष्ठा अमुत्रामुष्मिँल्लोक इत्याह क्षीयतेवा अमुष्मिं-ल्लोकेऽन्न मितः प्रदानꣳ ह्यमुष्मिल्लोके प्रजा उपजीवन्ति यदेव माभिमृ-शत्यक्षिति मेवैनद्गमयति नास्यामुष्मिंल्लोकेऽन्नंक्षीयते ।**

உரை.

சுவர்க்கம், கரும பூமியாகாமையின் அதனுடைய சாதனத்தை ஆசரித்தலால் அன்னங்தேட முடியாது. சுவர்க்கத்தை யடைந்த உயிர்கள் இங்குத் தேடிய உணவுப் பொருளால் ஆண்டு வாழ்ந்து வருகின்றது. 'அட்சிதோஸி' என்னு மந்திரத்தால் அன்னத்தைத் தொடுதலால் சுவர்க்கத்தில் உணவுப் பொருள் குறைவு ஆகாது என்பதாம்.

மூன்றாவது அநுவாகம் முடிந்தது.

---

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்
## நான்காவது அநுவாகம்

ஆறு பஞ்சாதிக்கு மேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.

---

சேஷாகுதியைப் போற்றும் மந்திரங்களின் உரை

बर्हिषोऽहन्देवयज्यया प्रजावान्भूयासमित्याह बर्हिषा वै प्रजापतिः प्रजा असृजत तेनैव प्रजास्सृजते नराशꣳसस्याहन्देवयज्यया पशुमान्भूयासमित्याह नराशꣳसेन वै प्रजापतिः पशूनसृजत तेनैव पशून्त्सृजतेऽग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेय मित्याहायुरेवात्मन्धत्ते प्रति यज्ञेन तिष्ठति दर्शपूर्णमासयोः ॥ वै देवा उज्जितिमनूदजयन्दर्शपूर्णमासाभ्यामसुरानपानुदन्ताग्ने रहमुज्जितिमनूज्जेषमित्याह दर्शपूर्णमासयोरेव देवतानां यजमान उज्जितिमनूज्जयति दर्शपूर्णमासाभ्यां भ्रातृव्यानपनुदते वाजवतीभ्यां व्यूहत्यन्नं वै वाजोऽन्नमेवावरुन्धे द्वाभ्यां प्रतिष्ठित्यै यो वै यज्ञस्य द्वौ दोहौ विद्वान् यजत उभयतः ॥ २ ॥ एव यज्ञन्दुहे पुरस्ताच्चोपरिष्टाच्चैषवा अन्यो यज्ञस्य दोह इडायामन्यो यर्हि होता यजमानस्य नाम गृह्णीयात्तर्हि ब्रूयादेमा अग्मन्नाशिषो दोहकामा इति

सꣳस्तुता एव देवता दुहेऽथो उभयत एव यज्ञन्दुहे पुरस्ताच्चोपरि-
ष्टाच्चरोहितेनत्वाऽग्निर्देवताङ्गमयत्वित्याहैतेवै देवाश्वाः ॥ ३ ॥
यजमानः प्रस्तरो यदेतैः प्रस्तरं प्रहरति देवाश्वैरेव यजमानꣳ सुवर्गं
लोकङ्गमयति विते मुञ्चामि रशना विरश्मी नित्याहैषवा अग्नेर्विमो-
कस्तेनैवैनं विमुञ्चति विष्णोश्शंयो रहन्देवयज्यया यज्ञेन प्रतिष्ठाङ्गमेय-
मित्याह यज्ञोवै विष्णुर्यज्ञ एवान्ततः प्रतितिष्ठति सोमस्याहन्देव-
यज्यया सुरेताः ॥ ४ ॥ रेतोधिषीयेत्याह सोमोवै रेतोधास्तेनैव
रेत आत्मन्धत्ते त्वष्टुरहन्देवयज्यया पशूनाꣳ रूपं पुषेयमित्याह
त्वष्टावै पशूनां मिथुनानाꣳ रूपकृत्तेनैव पशूनाꣳ रूपमात्मन्धत्ते
देवानां पत्नीरग्निर्गृहपतिर्यज्ञस्य मिथुनन्तयो रहन्देवयज्यया मिथुनेन
प्रभूयास मित्याहै तस्माद्वै मिथुनात्प्रजापतिर्मिथुनेन ॥ ५ ॥ प्रजा-
यत तस्मादेव यजमानो मिथुनेन प्रजायते वेदोऽसि वित्तिरसि
विदेयेत्याह वेदेन वैदेवा असुराणां वित्तं वेद्यमविन्दन्त तद्वेदस्य
वेदत्वं यद्यद्भ्रातृव्यस्याभिध्यायेत्तस्य नामगृह्णीयात्तदेवास्य सर्वं
वृङ्क्ते घृतवन्तं कुलायिनꣳ रायस्पोषꣳ सहस्रिणं वेदो ददातु वाजि-
नमित्याह प्रसहस्रं पशूनाप्नोत्याऽस्य प्रजायां वाजीजायते य एवं
वेद ॥ ६ ॥

மூன்றுவது அநுவாகத்தில் அன்வாஹாரியங் கூறப்பட்டது நான்காவதில் சேஷாகுதிகளைப் போற்றும் மந்திரங்கட்கு உரை கூறப்படுகின்றது. அவற்றுள் முதலில் அநுயாஜ மந்திரங்கட்கு உரை கூறப்படுகின்றது

——

போற்றுதல்)

பிராமணம்—1

बर्हिषोऽहन्देवयज्यया प्रजावान्भूयासमित्याह बर्हिषा वै प्रजापतिः प्रजा असृजत तेनैव प्रजास्सृजते नराशंसस्याहन्देवयज्यया पशुमान्भूयासमित्याह नराशंसेन वै प्रजापतिः पशूनसृजत तेनैव पशून्त्सृजतेऽग्नेस्स्विष्टकृतोऽहन्देवयज्ययाऽऽयुष्मान् यज्ञेन प्रतिष्ठाङ्गमेय मित्याहायुरेवाऽऽत्मन्धत्ते प्रतियज्ञेन तिष्ठति ।

உரை.

' தருப்பையாகத்தைப் போற்றுவதால் பிரசையை யுடையவனுயிருக்கின்றேன் என்றது, தருப்பையாகத்தைப் போற்றுவதால் பிரசாபதி பிரசையைப் படைத்தார் என்பதாம். இவ்வாறே, நராசம்சம், சுவிஷ்ட கிருத் என்பவைகட்கும், பசுக்கள், நீண்ட ஆயுக்கள் உண்டாக்கின என்னும் முறைகளையுணர்க என்பது.

---

பிராமணம்—2

दर्शपूर्णमासयोर्वै देवा उज्जितिमनूदजयन्दर्शपूर्णमासाभ्यामसुरानपानुदन्ताग्ने रहमुज्जितिमनूज्जेषमित्याह दर्शपूर्णमासयोरेव देवतानां यजमान उज्जितिमनूज्जयति दर्शपूर्णमासाभ्यां भ्रातृव्यानपनुदते ।

உரை.

ஆசரித்த தரிச பூரணமாதயாகங்கட்கு, உஜ்ஜிதி மந்திரத்தை ஓதுதலால் நிறைவுடைமை யுண்டாகின்றது. அத்தகைய வேள்வி மேம்பாட்டின் பின்னர் தேவதைகளும் நிறைவுடைமையை யடைகின்றனர். இவ் விருவகையாலும் நிறைவை யடைந்த தரிசபூரணமாதயாகங்களால் அசுரர்கள் நீக்கப் படுகின்றனர் என்பது.

---

சுருக்வ்யூஹனத்தை (கை மாற்றுதலை)ப் போற்றுதல் விதிக்கப்படுகின்றது,

பிராமணம்—3

वाजवतीभ्यां व्यूहत्यन्नं वै वाजोऽन्नमेवावरुन्धे ।

உரை.

அன்ன முடையவைகளால் கைமாற்றப் படுகின்றது. அன்னம் அடையப் படுகின்றது. அத்துவரிவுவினுற் செய்யப்படும் சுருக் வ்யூகத்தை (கை மாற்றலை)த் துதித்தல் வேண்டு மென்பது.

---

(சேஷாகுதியைப்

இரண்டு கால்களால் நிற்பது போன்று நிலைத்திருத்தற் பொருட்டு இரண்டு மந்திரங்கள் எனப்படுகின்றது,

பிராமணம்—4

**द्वाभ्यां प्रतिष्ठित्यै ।**

உரை.

*இரண்டு மந்திரங்களாற் செய்வது நிலைத்திருத்தற் பொருட்டு என்பதாம்.*

---

காலத் தோடுகூடிய, 'ஏமா அக்கன்' என்னும் மந்திர பாடத்தை விதித்தற் பொருட்டுத் துதிக்கின்றது,

பிராமணம்—5

**यो वै यज्ञस्य द्वौ दोहौ विद्वान् यजत उभयत एव यज्ञन्दुहे पुरस्ताच्चोपरिष्टा-च्चैषवा अन्यो यज्ञस्य दोह इडायामन्यः ।**

உரை.

*வேள்வியின், இருமுறை கறத்தலையுணர்ந்தவன் முன்னும் பின்னுமாக இரண்டு முறை கறக்கின்றான். இது வேறு, இடாவில் வேறு என்பது.*

---

விதிக்கின்றது,

பிராமணம்—6

**यर्हि होता यजमानस्य नाम गृह्णीयात्तर्हि ब्रूयादेमा अग्मन्नाशिषो दोहकामा इति सꣳस्तुता एव देवता दुहेऽथो उभयत एव यज्ञन्दुहे पुरस்ताच्चोपरिष्टाच्च।**

உரை.

*ஹோதா, சூக்தவாகம் (தருப்பையைத் தீயிற் போடும் மந்திரத்தை) ஓதிக்கொண்டு, வேள்வித் தலைவன் பெயரைக் கூறுங்கால், ஏமா 'அக்மன்' என்னு மந்திரத்தை ஓதல் வேண்டுமென்று விரும்புகின்றனன். 'अग्निमग्न आवह अग्निरिदं हविꣳजुषत' என்பது முதலான மந்திரங்களால் பல்வேறு வகையாய்த் துதிக்கப்பெற்ற தேவதைகளனைத்தும், இம் மந்திரத்தால், வேள்வித் தலைவனுற் கறக்கப் படுகின்றன. இதனுல், இடா காலத்திலுள்ள தோஹனமும், இக் காலத்திலுள்ள தோஹன முமென இரண்டுந் தேடப்பட்டன என்பது.*

---

பிரஸ்தரத்தை (தருப்பை முடிச்சை)ப் போற்றும் மந்திரத்தின் உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—7

**रोहितेनत्वाऽग्निर्देवताङ्गमयत्वित्याहैतेवै देवाश्वा यजमानः प्रस्तरो यदेतैः प्रस्तरं प्रहरति देवाश्वैरेव यजमानꣳ सुवर्गं लोकङ्गमयति ।**

உரை.

*எஜமானனைப் போன்று வேள்விக்குச் சாதனமாதலின் பிரஸ்தரத்தை (தருப்பை முடிச்சை) எஜமானன் என்பது உபசாரமாம் என்பது.*

---

பரிதி போடுவதைப் போற்றும் மந்திரவுரை கூறப்படுகின்றது,

பிராமணம்—8

**विते मुञ्चामि रशना विरश्मी नित्याहैषवा अग्नेर्विमोकस्तेनैवैनं विमुञ्चति ।**

உரை.

*'ते रशना विमुञ्चामि' என்று, அக்கினியை முன்னிட்டுக் கூறுதலின் இது அக்கினியைச் சாந்தப் படுத்தும் மந்திரம் என்பது.*

---

சம்யு வாகத்தைப் (பரிதிகளைத் தீயிற்போடுதலை) போற்றும் மந்திரவுரை,

பிராமணம்—9

**विष्णोश्शंयो रहन्देवयज्यया यज्ञेन प्रतिष्ठाङ्गमेय मित्याह यज्ञोवै विष्णुर्यज्ञ एवान्ततः प्रतितिष्ठति ।**

உரை.

*வேள்வியானது, பயனின்சம்பந்தத்தால் விஷ்ணு வெனப்படுகின்றது. முடிவு காலத்தில் அதுவாய் நிலைக்கின்றான் என்பது.*

---

முதலாவதின், பத்னிசம்பாஜத்தைப் போற்றும் மந்திரத்தின் உரை,

பிராமணம்—10

**सोमस्याहन्देवयज्यया सुरेता रेतोधिषीयेत्याह सोमोवै रेतोधास्तेनैव रेत आत्मन्धत्ते ।**

உரை.

*கருப்பைப்பையில் சுக்கிலந்தரித்தல் சோமத்தின் அருளாலுண்டாகின்றது. ஆதலின் சோமம் சுக்கிலத்தைத் தாங்குவது என்பது.*

---

இரண்டாவதின், பத்னிசம்யாஜத்தைப் போற்றும் மந்திரவுரை,

பிராமணம்—11

**त्वष्टुरहन्देवयज्यया पशूनाꣳ रूपं पुषेयमित्याह त्वष्टा वै पशूनां मिथुनानाꣳ रूपकृत्तेनैव पशूनाꣳ रூपमात्मन्धत्ते ।**

உரை.

மனிதர், பசு, குதிரை முதலான ஆண் பெண்களின் கூட்டுறவு வடிவத்தை துவஷ்டா செய்கின்றான். ஆதலின் பசுக்களின்வடிவம் தன்னிடத்தில் தரித்திருக்கின்றது என்பது.

---

மூன்றாவது நான்காவது பத்னிசம்யாசங்களை ஒன்றாய்ப் போற்றும் மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது,

பிராமணம்—12

**देवानां पत्नीरग्निर्गृहपतिर्यज्ञस्य मिथुनन्तयो रहन्देवयज्यया मिथुनेन प्रभूयास मित्याहै तस्माद्वै मिथुनात्प्रजापतिर्मिथुनेन प्राजायत तस्मादेव यजमानो मिथुनेन प्रजायते ।**

உரை.

இக் கூட்டுறவால் (மிதுனத்தால்) பிரசாபதி யுண்டாகின்றான். ஆதலின் வேள்வித் தலைவன் கூட்டுறவையடைகின்றான் என்பதாம்.

---

வேதாபிமர்சன (தனத்தின் உணர்ச்சி) மந்திரவுரை.

பிராமணம்—13

**वेदोऽसि वित्तिरसि विदेयेत्याह वेदेन वै देवा असुराणां वित्तं वेद्यमविन्दन्त तद्वेदस्य वेदत्वं ।**

உரை.

முன்னர்ப் பெறப்பட்ட தனம் வித்தமெனப்படும், மேல் பெற வேண்டியது வேத்திய மெனப்படும், அவ்விரண்டும் அசுரர்களால் எங்கேயோ புதைத்து வைக்கப்பட்டிருந்தன. அவற்றை, தேவர்கள் ஒருகால் பூமியைக் கல்லியெடுத்துக் கொண்டனர். இதுபற்றியே, வித்தமடையச் செய்வதால் வேதமென வழங்கப் பெற்றது என்பது.

---

விதிக்கின்றது,

பிராமணம்—14

**यद्यद्भ्रातृव्यस्याभिध्यायेत्तस्य नामगृह्णीयात्तदेवास्य सर्वं वृङ्क्ते ।**

போற்றுதல்)

உரை.

பகைவர்களுடைய எவ்வீடு, நில முதலானவைகளை, வேள்வித் தலைவன் எனக்கிவைகள் கிடைப்பனவாகுக, என்று வேண்டுகின்றானோ, அவைகளின் பெயர்களை மந்திரத்தின் நடுவிற் சேர்த்துக் கொண்டு 'விதேய, என்னும் பதத்தை ஓதுதல் வேண்டும் என்பது.

---

இம்மந்திரத்தின் ஈற்றில் உள்ள ஆயிரம் என்னுஞ் சொல்லை ஓதுதலைப் புகழ்கின்றது.

பிராமணம்—15

**घृतवन्तं कुलायिनꣳ रायस्पोषꣳ सहस्रिणं वेदो ददातु वाजिनमित्याह प्रसहस्रं पशूनाप्नोति ।**

உரை.

'கிருதவந்தம்' என்பது முதல் 'வாஜினம்' என்பதிறுய்க் கூறியது ஆயிரக் கணக்கான பசுக்களை யடைக்கின்றான் என்பது.

---

மந்திரப் பொருளுணர்ச்சியைப் புகழ்கின்றது.

பிராமணம்—16

**आऽस्य प्रजायां वाजी जायते य एवं वेद ।**

உரை.

பிரஜைகள் தொடர்ந்திருக்கு மிடத்து எவ்வகையானும், புத்திரன், உணவுப் பொருளுமுண்டாகின்றன என்பது.

நான்கா மநுவாகம் முடிந்தது.

---

**முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்**

**ஐந்தாவது அநுவாகம்**

**நான்கு பஞ்சாதிகட்கு மேல் ஏழு பதங்களைக் கொண்டது.**

---

நெய்யால் நனைத்தல் (ஆப்யாயன்) முதலான மந்திரங்கட்கு உரை கூறும் பிராமணம்.

ध्रुवां वैरिच्यमानां यज्ञोऽनुरिच्यते यज्ञं यजमानो यजमानं प्रजा ध्रुवामाप्यायमानां यज्ञोऽन्वाप्यायते यज्ञं यजमानो यजमानं प्रजा आप्यायतान्ध्रुवा घृतेनेत्याह ध्रुवामेवाऽऽप्याययति तामाप्याय-

मानां यज्ञोऽन्वाप्यायते यज्ञं यजमानो यजमानं प्रजाः प्रजापते
विभान्नामलोकस्तस्मिंस्त्वा दधामि सह यजमानेनेति ॥ १ ॥
आहायं वै प्रजापतेर्विभान्नामलोकस्तस्मिन्नेवैनन्दधाति सह यजमानेन
रिच्यत इव वा एतद्यद्यजते यद्यजमानभागं प्राश्नात्यात्मानमेव
प्रीणात्येतावान् वै यज्ञो यावान् यजमानभागो यज्ञो यजमानो यद्य-
जमानभागं प्राश्नाति यज्ञ एव यज्ञे प्रतिष्ठापयत्येतद्वै सूयवसꣳसोदकं
यद्बर्हिश्चापश्चैतत् ॥ २ ॥ यजमानस्यायतनं यद्वेदिर्यत्पूर्णपात्रमन्त-
र्वेदिनिनयतिस्व एवायतने सूयवसꣳसोदकं कुरुते सदसि सन्मे भूया
इत्याहापोवै यज्ञ आपोऽमृतं यज्ञमेवामृतमात्मन्धत्ते सर्वाणिवै
भूतानि व्रतमुपयन्तमनूपयन्ति प्राच्यान्दिशि देवा ऋत्विजो मार्ज-
यन्तामित्याहैषवै दर्शपूर्णमासयोरवभृथः ॥ ३ ॥ यान्येवैनं भूतानि
व्रत मुपयन्तमनूपयन्तितै रेव सहाऽवभृथ मवति विष्णु
मुखावै देवाश्छन्दोभिरिमान्लोकाननप जय्यमभ्य जयन्य
द्विष्णु क्रमान्क्रमते विष्णु रेव भूत्वा यजमान श्छन्दोभिरिमान्लो
का ननपजय्य मभिजयति विष्णोः क्रमोऽस्यभिमातिहेऽत्याह
गायत्री वै पृथिवी त्रैष्टुभमन्तरिक्षं जागती द्यौरानुष्टुभीर्दिशश्छन्दो-
ऽभिरेवेमान् लोकान्यथा पूर्वमभि जयति ॥ ४ ॥

நான்காமநுவாகத்தில் சோஷ்ாகுதியைப் போற்றும் மந்திரங்களின் உரை கூறப்பட்டது. ஐந்தாமநுவாகத்தில் ஆப்யாயன முதலிய மந்திரங்கட்கு உரை கூறப்படுகின்றது. அதில், முதலில் உரை கூறுவான் அந்வய வியதிரேகங்களாற் புகழ்கின்றது.

பிராமணம்—1

**ध्रुवां वैरिच्यमानां यज्ञोऽनुरिच्यते यज्ञं यजमानो यजमानं प्रजा ध्रुवामाप्यायमानां यज्ञोऽन्वाप्यायते यज्ञं यजमानो यजमानं प्रजाः ।**

உரை.

துருவா வெறிதாயிருக்கில் வேள்வி இனிது முடியாமை, வேள்வித்தலைவனுக்குப் பயனின்மையால், அவனைச் சேர்ந்த பிரசைகட்கு உணவுப் பொருளின்மை என்னும் இது வியதிரேகமாம். துருவா அப்படி யில்லையேல் உணவுப் பொருளுண்டு என்பது அங்வயம் என்பதாம்.

---

மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது

பிராமணம்—2

**आप्यायतां ध्रुवा घृतेनेत्याह ध्रुवामेवाऽऽप्याययति तामाप्यायमानां यज्ञोऽन्वाप्यायते यज्ञं यजमानो यजमानं प्रजाः ।**

உரை.

நெய்யால் துருவா என்னும் பாத்திரம் நனைக்கப்படுகின்றது. அது, வேள்வியை நனைக்கின்றது, வேள்வியை வேள்வித்தலைவனை நனைக்கின்றது, வேள்வித்தலைவன் தனது பிரசைகளை நனைக்கின்றான் என்பதாம்.

---

எஜமான பாகத்தை யருந்துவதற்குரிய மந்திரவுரை கூறப்படுகின்றது

பிராமணம்—3

**प्रजापतेर्विभान्नामलोकस्तस्मिंस्त्वा दधामि सह यजमानेनेतित्याहायं वै प्रजापतेर्विभान्नामलोकस्तस्मिन्नेवैनन्दधाति सह यजमानेन ।**

உரை.

மண்ணுலகில் எஜமானனுடன் உன்னை வைக்கின்றேன் என்பதாம்.

---

எஜமானனை வெறிதாக்குவதை நீக்குகின்றதால், பாகத்தைப் புகழ்கின்றது,

பிராமணம்—4

**रिच्यत इव वा एतद्यद्यजते यद्यजमानभागं प्राश्नात्यात्मानमेव प्रीणाति ।**

உரை.

புரோடசம், நெய், பால் தயிர் முதலான ஹோமங்களால் எஜமானன் தள்ளப்பட்ட மனிதன் போலாகி விடுகின்றான். தனது பாகத்தை யுண்ணுவதால் பிரியமுண்டாகி அத் துன்பத்தை நீக்குகின்றான் என்பதாம்.

வேள்வி நிலைப்பதற்குக் காரணமாதலானும் அதுவே புகழப்படுகின்றது,

பிராமணம்—5

**एतावान् वै यज्ञो यावान् यजमानभागो यज्ञो यजमानो यद्यजमानभागं प्राश्नाति यज्ञ एव यज्ञं प्रतिष्ठापयति ।**

உரை.

எஜமானன் பொருட்டு எவ்வளவு பாகமுண்டோ, அதுவே ஈண்டு அவனால் அருந்தப் படுகின்றது. வேள்வியின் பரிசேடத்தை, தேவர்களும், இருத்துவிக்குக்களும் அருந்துவார்களாதலின், தானும் வேள்விக்குத் தலைவனாதலின் யக்ஞவடிவன், அவ்வாறாதலின் எஜமானன் தனது பாகத்தை யருந்திய போது யக்ஞத்தில் யக்ஞம் நிறுவியதாகின்றது என்பதாம்.

---

பூரண பாத்திர நீரைக் கவிழ்த்தலை விதிப்பதற்குப் புகழ்கின்றது.

பிராமணம்—6

**एतद्वै सूयवसꣳसोदकं यद्बर्हिश्चापश्चैतद्यजमानस्यायतनं यद्वेदिः ।**

உரை.

வேதியானது, அவியைத் தாங்குதலால் எஜமானனுடைய இடமாம், இதுவும், தருப்பையைப் பரப்பி யிருத்தலின் புற்களுடன் கூடியது. 'பிரணீதா' என்னும் தண்ணீர்ப்பாத்திர மிருத்தலின் நீருடன் கூடியதுமாம் என்பதாம்.

---

விதிக்கின்றது

பிராமணம்—7

**यत्पूर्णपात्रमन्तर्वेदि निनयति स्व एवायतने सूयवसꣳसोदकं कुरुते ।**

உரை.

பூரண பாத்திரத்தை அந்தர் வேதியில் ஊற்றினவன் நிறைந்த புல்லுகளையும், நிறைந்த நீரையுமடைகின்றான் என்பதாம்.

---

நீரைக் கவிழ்த்தற்குரிய மந்திரத்தின் உரை,

பிராமணம்—8

**सदसि सन्मे भूया इत्याहापो वै यज्ञ आपोऽमृतं यज्ञमेवामृतमात्मन्धत्ते ।**

உரை.

தண்ணீர் வேள்விக்குச் சாதனமாதலின் யக்ஞமாம். வாழ்தலுக்குக் காரணமாதலால் அமுதமாம். ஆதலின், நீரை நோக்கி 'சந்மேபூயாத்' என்று கூறிய விடத்து யக்ஞ வடிவ அமுதத்தைத் தன்பால் நிலைக்க வைக்கின்றது என்பதாம்.

கீழே நீர் தெளிக்கும் மந்திரவுரை,

பிராமணம்—9

**सर्वाणिवै भूतानि व्रतमुपयन्तमनूपयन्ति प्राच्यान्दिशि देवा ऋत्विजो मार्जयन्तामित्याहैषवै दर्शपूर्णमासयोरवभृथः यान्येवैनं भूतानिव्रतमुपयन्तमनूपयन्ति तै रेव सहाऽवभृथ मवैति ।**

உரை.

எந்த எஜமானன் யக்ஞ விரதத்தை யடைகின்றனே, அவனைத் தழுவி, தேவர்கள் பிதிர்க்கள் முதலானோர்களும் விரதத்தை யடைகின்றனர். ஆகையால், தேவ பிதிரு முதலானோர்களுக்கு நீர் தெளித்தலைக் கூறும் இம் மந்திரத்தால் அப் பூதங்களுடனே (அவ்வுயிர்களுடன் கூடி) அவபிருதம் (முடிவு நீராடல்) என்பதை அடைகின்றான் என்பதாம்.

---

விஷ்ணுக் கிரமங்களை (காலடி யெடுத்து வைத்தலை) விதிக்கின்றது,

பிராமணம்—10

**विष्णु मुखा वै देवाश्छन्दो भिरिमाल्लो काननपजय्यमभ्य जयन्य द्विष्णु क्रमान्क्रमते विष्णु रेव भूत्वा यजमान श्छन्दोभिरिमान्लो काननपजय्य मभिजति ।**

உரை.

முன், தேவர்கள், தமக்குள் விஷ்ணுவே முக்கியம் என்று செய்து, சந்தங்களை யபிமானிக்கும் தேவதையுடன் கூட ஏனைய தேவர்களால் வெல்ல முடியாத உலகங்களைப் படைத்தனன். ஆகையால் வேள்வித் தலைவன் விஷ்ணுக் கிரமங்களைச் செய்கின்றனன். அவன், விஷ்ணுவாகி இவ்வுலகங்களை வெல்கின்றான் என்பதாம்.

அங்குள்ள மந்திரங்கட்கு உரை கூறுகின்றது,

---

பிராமணம்—11

**विष्णोः क्रमोऽस्यभिमाहेऽत्याह गायत्री वै पृथिवी त्रैष्टुभमन्त रिक्षंजागतीद्यौ रानुष्टुभीर्दिशश्छन्दोऽभिरेवेमान् लोकान्यथा पूर्वमभि जयति ।**

உரை.

காயத்திரி முதலான சந்தம், தேவர்கட்கு பூமி முதலான வுலகமாம் அவைகட்கு இறைவனுந் தன்மையால் அவர்களுடன் உலகங்களை வெல்ல முடியுமாதலின் மந்திரங்களுள் காயத்திரிச் சந்தத்தால் என்பது முதலாகக் கூறப்பட்டிருக்கின்றன என்பது கருத்து என்பதாம்.

ஐந்தாவது அநுவாகம் முடிந்தது.

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

### ஆறுவது அநுவாகம்

ஆறு பஞ்சாதிக்குமேல் இருபத்துநான்கு பதங்களைக் கொண்டது

---

உபஸ்தான (போற்றல்) முதலான மந்திர வுரை,

अगन्म सुवस्सुवरगन्मेत्याह सुवर्गमेव लोकमेति सन्दृशस्ते
मा छित्सियत्ते तपस्तस्मै ते माऽऽवृक्षीत्याह यथा यजुरेवैतद्भु
भूरसि श्रेष्ठो रश्मीनामायुर्धा अस्यायुर्मे धेहीत्याहाशिषमेवैतामा-
शास्ते प्रवा एषोऽस्माल्लोकाच्च्यवते यः ॥ १ ॥ विष्णुक्रमान्क्रमते
सुवर्गाय हि लोकाय विष्णुक्रमाः क्रम्यन्ते ब्रह्मवादिनो वदन्ति
सत्वै विष्णुक्रमान्क्रमेतय इमान्लोकान्भ्रातृव्यस्य संविद्य पुन-
रिमं लोकं प्रत्यवरोहेदित्येषवा अस्य लोकस्य प्रत्यवरोहो यदाहेद
महममुं भ्रातृव्यमाभ्यो दिग्भ्योऽस्यैदिव इतीमानेव लोकान्भ्रातृ-
व्यस्य संविद्य पुनरिमं लोकं प्रत्यवरोहति सम् ॥ २ ॥ ज्योतिषा-
ऽभूव मित्याहास्मिन्नेव लोके प्रतितिष्ठत्यैन्द्रीमावृतमन्वावर्त इत्या-
हासौ वा आदित्य इन्द्रस्तस्यैवावृतमनुपर्यावर्तते दक्षिणा पर्यावर्तते
स्वमेव वीर्यमनुपर्यावर्तते तस्माद्दक्षिणोऽर्ध आत्मनो वीर्यावत्तरोऽथो
आदित्यस्यैवावृत मनुपर्यावर्तते समहं प्रजया संमया प्रजेत्याहाशि-
षम् ॥३॥ एवैतामाशास्ते समिद्धो अग्नेमे दीदिहि समेद्धाते अग्ने दीद्या-
समित्याह यथा यजुरेवैतद्वसुमान् यज्ञो वसीयान्भूयास मित्याहा-
शिषमेवैतामाशास्ते बहुवै गार्हपत्यस्यान्ते मिश्रमिव चर्यत आग्नि-
पावमानीभ्याङ्गार्हपत्य मुपतिष्ठते पुनात्येवाग्निं पुनीत आत्मानन्द्वाभ्यां

प्रतिष्ठित्या अग्ने गृहपत इत्याह ॥ ४ ॥ यथा यजुरेवैतच्छतꣳ
हिमा इत्याह शतं त्वा हेमन्तानिन्धिषीयेति वावै तदाह पुत्रस्य
नाम गृह्णात्यन्नादमेवैनङ्करोति तामाशिषमाशासे तन्तवे ज्योति-
ष्मतीमिति ब्रूयाद्यस्य पुत्रोऽजातस्स्यात्तेजस्व्येवास्य ब्रह्मवर्चसी
पुत्रो जायते तामाशिषमाशासेऽमुष्मै ज्योतिष्मतीमिति ब्रूयाद्यस्य
पुत्रः ॥ ५ ॥ जातस्स्यात्तेज एवास्मिन्ब्रह्मवर्चसन्दधाति योवै यज्ञं
प्रयुज्य न विमुञ्चत्यप्रतिष्ठानो वै सभवति कस्त्वा युनक्ति सत्वा
विमुञ्चत्वित्याह प्रजापतिर्वैकः प्रजापतिनैवैनं युनक्ति प्रजापतिना
विमुञ्चति प्रतिष्ठित्या ईश्वरं वै व्रतमविसृष्टं प्रदहोऽग्ने व्रतपते व्रत-
मचारिषमित्याह व्रतमेव ॥ ६ ॥ विसृजते शान्त्या अप्रदाहाय
पराङ्वावयज्ञ एति न निवर्तते पुनर्यो वै यज्ञस्य पुनरालंभं विद्वान्
यजते तमभिनिवर्तते यज्ञोबभूवस आबभूवेत्याहैष वै यज्ञस्य पुन-
रालंभस्तेनैवैनं पुनरालभतेऽनवरुद्धा वा एतस्य विराड्य
आहिताग्निस्सन्नसभः पशवः खलु वै ब्राह्मणस्य सभेष्ट्वा प्राङु-
त्क्रम्य ब्रूयाद्गोमाꣳ अग्नेऽविमाꣳ अश्वी यज्ञ इत्यव सभाꣳ रुन्धेप्र
सहस्रं पशुनाप्नोत्याऽस्य प्रजायां वाजीजायते (७) ॥

ஐந்தாமநுவாகத்தில் ஆப்யாயன முதலான மந்திரங்கட்கு உரை கூறப்பட்டது. ஆறுமநுவாகத்தில், போற்றுகின்ற மந்திர முதலானவைகட்கு உரை கூறப்படுகின்றது. அதில், முதலில் ஆகவனீயத் தீயைப் போற்றும் மந்திரத்தின் முற்பகுதிக்கு உரை கூறப்படுகின்றது.

பிராமணம்—1

अगन्म सुवस्सुवरगन्मेत्याह सुवर्गमेव लोकमेति ।

உரை.

சுவர்க்கத்தையே யடையப் படுகின்றது என்றது, ஈண்டுச் சுவர்க்கம் சுவர்க்கம் என்றது எல்லாவகையானும் அன்பிருத்தற் பொருட்டு என்பதாம்.

---

பிற்பகுதி மந்திரவுரை.

பிராமணம்—2

सन्दृशस्ते मा छित्सियत्ते तपस्तस्मै ते माऽऽवृक्षीत्याह यथा यजुरेवैतत् ।

உரை.

இந்த எசுர்மந்திரத்தில், 'தப:, என்னுஞ் சொல் காணப்படுதலின் 'தவத்திலிருந்து விடுபடமாட்டேன் என்றது, இது, எசுரிலுள்ளபடியே வேண்டப் படுகின்றது என்பதாம்.

---

இரவியைப் போற்றும் மந்திரவுரை.

பிராமணம்—3

सुभूरसि श्रेष्ठो रश्मीनामायुर्धा अस्यायुर्मे धेहीत्याहाऽऽशिषमेवैतामा शास्ते ।

உரை.

'ஆயுர்மேதேஹி, (ஆயுளை எனக்களிப்பாயாக) என்றது, ஆசீர்வாத மென்பது வேண்டப்படுகின்றது என்பதாம்.

---

இதம் அஹம், என்பதுமுதலியன. பகைவரை நீக்கும் மந்திரங்கட்கு உரை கூறுதற் பொருட்டுப்புகழப்படுகின்றது.

பிராமணம்—4

प्र वा एषोऽस्माल्लोकाच्च्यवते यो विष्णुक्रमान्क्रमते सुवर्गाय हि लोकाय विष्णुक्रमाः क्रम्यन्ते ब्रह्मवादिनो वदन्ति स त्वै विष्णुक्रमान्क्रमेत य इमाँल्लोकान्भ्रातृव्यस्य संविद्य पुनरिमं लोकं प्रत्यवरोहेदिति ।

உரை.

விஷ்ணுக் கிரமம் (காலடி யெடுத்து வைத்தல்) சுவர்க்கத்தின் பொருட்டா மாதலின். விஷ்ணுக் கிரமத்தால், இவ்வுலகிலிருந்து நீங்குந் தன்மையுண்டா கின்றது; அதற்குப் பரிகாரம் எது வென்று ஆன்ம ஞானிகள் ஆராய்ந்தனர்.

முதலியவற்றின் உரை)

அது, எவ் வேள்வித்தலைவன், பகைவரை நீக்கி அவர்களால் தேடப்பட்ட வுலகையடைந்து விஷ்ணுக் கிரமத்தால் சுவர்க்க மேறுவதன்முன் மீண்டும் மக்களுலகத்தைக் குறித்து இறங்குகின்றானே, அவனே விஷ்ணுக் கிரமத்தில் வல்லுனன் என்பதாம்.

---

மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது.

பிராமணம்—5

एषवा अस्य लोकस्य प्रत्यवरोहो यदाहेदमहममुं भ्रातृव्यमाभ्यो दिग्भ्यो ऽस्यैदिव इतीमानेव लोकान्भ्रातृव्यस्य संविद्य पुनरिमं लोकं प्रत्यवरोहति।

உரை.

இம் மந்திரமே மண்ணுலகசம்பந்தி பிரத்யவரோஹணவிடயம் என்பதாம்.

---

தன்னைத் தொடும் மந்திரவுரை

பிராமணம்—6

संज्योतिषाऽभूव मित्याहास्मिन्नेव लोके प्रतितिष्ठति ।

உரை.

'இவ்வுலகை அடைவிக்கும் ஒளியுடன் கூடிய யான் என்றது, மந்திரத்திற் காணப்படுதலின், இவ்வுலகிலேயே கீர்த்தியை யடைகின்றான் என்பதாம்.

---

வலஞ்சுற்றும் மந்திரவுரை

பிராமணம்—7

ऐन्द्रीमावृतमन्वावर्त इत्याहासौ वा आदित्य इन्द्रस्तस्यैवावृतमनु पर्यावर्तते ।

உரை.

மிகுந்த செல்வ முடைமையின் இரவி இந்திரன் எனப்பட்டது என்பதாம்.

---

வலஞ் சுற்றுதல் விதிக்கப்படுகின்றது

பிராமணம்—8

दक्षिणा पर्यावर्तते स्वमेव वीर्यमनुपर्यावर्तते तस्माद्दक्षिणोऽर्ध आत्मनो वीर्यावत्तरोऽथो आदित्यस्यैवाऽऽवृतमनु पर्यावर्तते ।

உரை.

தென்புறத்தினின்று சுற்றலின் பிரதக்ஷிணம், ஆண்மக்கட்கு வலது பக்கம் வன்மை மிகுதியாருக்தலின், அதைத் தழுவியே சுற்றுதல் தென்புறமாய் உண்டாகிறது. மறைகளில், வலதுபக்கம் வீரியமுடையதென்று கூறப்பட்டிருக்கின்றது. அவ்வண்ணமே, எல்லாச் செயல்களிலும் வலது பக்கத்தில் வன்மை மிகுதி காணப்படுகின்றது. மற்றும், சூரியன், மேருமலையை வலம் வருகின்றது அதுவும் ஈண்டுக் கொள்ளப்பட்டது என்பதாம்.

---

மாருகச் சுற்றும் மந்திரவுரை

பிராமணம்—9

**समहं प्रजया संमया प्रजेत्याहाऽऽशिषमे वैतामास्ते ।**

உரை.

தான், பிரசை முதலியவற்றுடன் சேர்கின்றான். அவ்வண்ணமே, பிரசா முதலியதும் தன்னுடன் சேர்கின்றது என்றது, இவ்விரண்டும் இரண்டாவது. சுற்றால் வேண்டப் படுகின்றது என்பதாம்.

---

சமித்தைத் தேடும் மந்திரவுரை

பிராமணம்—10

**समिद्धो अग्ने मे दीदिहि समेद्धा ते अग्ने दीद्यासमित्याह यथा यजुरेवैतत् ।**

உரை.

சமித்தே! நீ, எமக்கு அக்கினியை நன்கு வளர்ப்பாயாக. அக்கினியே உன்னை ஒளிவிடச் செய்கின்றேன் என்றது, எசுர் மந்திரப் பொருளேயாம் என்பதாம்.

---

ஆகவனீயத் தீயைப் போற்றும் மந்திரவுரை.

பிராமணம்—11

**वसुमान् यज्ञो वसीयान्भूयासमित्याहाऽऽशिषमे वैतामाशास्ते ।**

உரை.

மிகுந்த தனமுடையவனாகின்றேன் என்றது ஆசீர்வாதம் என்பதாம்.

---

விதிக்கின்றது

பிராமணம்—12

**बहुवैगार्हपत्यस्यान्ते मिश्रमिव चर्यत आग्निपावमानीभ्यां गार्हपत्य मुपतिष्ठते पुनात्येवाग्निं पुनीत आत्मानन्द्वाभ्यां प्रतिष्ठित्यै ।**

முதலியவற்றின் உரை)

உரை.

கார்கபத்தியத் தீயானது எப்போது மிருத்தலின், அதன் சந்நிதியில் பல்வகை யுயிர்கள் விழுகின்றன வென்பது எண்ணப்படுகின்றது. ஆகையால் எஜமானன், காருகபத்தியத்திற் கருகில் பாவக் கலப்புப் போன்று ஹோம முதலான கருமங்கள் ஆசரிக்கப் படுகின்றன. ஆதலின், 'அக்ன ஆயூம்ஷி, என்பது முதலானவைகளும், அக்கினி பவமான தேவதைகளை யுடையவை களும், சுத்திக்குக் காரணங்களுமான இருக்கு மந்திரங்களால் வன்னியைப் போற்றில் வன்னி புநிதமாகிறது என்பதாம்.

காருகபத்தியத்தைப் போற்றும் மற்றொரு மந்திர உரை,.

பிராமணம்—13

**अग्ने गृहपत इत्याह यथायजुरेवेतच्छतꣳ हिमा इत्याह शतं त्वा हेमन्ता निन्धिषीयेति वावेतदाह पुत्रस्य नाम गृह्णात्यन्नादमेवेनं करोति तामाशिषमा शासे तन्तवे ज्योतिष्मतीमिति ब्रूयाद्यस्य पुत्रोऽजात स्यात्तेजस्व्येवाऽस्य ब्रह्मवर्चसी पुत्रो जायते तामाशिषमा शासेऽमुष्मै ज्योतिष्मतीमिति ब्रूयाद्यस्य पुत्रो जातस्स्यात्तेज एवास्मिन्ब्रह्मवर्चसं दधाति ।**

உரை.

இந்த மந்திரப் பிராமணங்கட்கு முன் பிரபாடகத்தில் விளக்கமாய் உரை கூறப்பட்டிருக்கிறது. அதில், பெயரைக் கொள்ளல் வேண்டு மென்பது விதி யாம். ஈண்டு, மகற் பேறிலாதவனுக்கு விசேடமாகிய பெயர் இல்லாததால் 'தந் தவ' என்னும் பொதுப்பெயர் கொள்ளற்பாலது. மகற்பேறு உண்டான வனுக்கு 'அமுஷ்மை' என்பதால் சிறப்புப் பெயர் கூறுதல் கருத்தாம் என்பதாம்.

யக்ஞவிமோக (விடுதல்) மந்திரவுரை

பிராமணம்—14

**यो वै यज्ञं प्रयुज्य न विमुञ्चत्य प्रतिष्ठानो वै स भवति कस्त्वा युनक्ति स त्वा वि मुञ्चत्वित्याह प्रजापतिर्वै कः प्रजापतिनैवैनं युनक्ति प्रजा पतिना वि मुञ्चति प्रतिष्ठित्यै ।**

உரை.

யக்ஞத்தை முடிவு செய்து விடாதவன் பெருமை யில்லாதவனாகின்றான் என்றது, பிரசாபதியால் இது விடுவிக்கப் படுகின்றது என்பதாம்.

விரதத்தை விடும் மந்திரவுரை

பிராமணம்—15

**ईश्वरं वै व्रतमविसृष्टं प्रदहोऽग्ने व्रतपते व्रतमचारिषमित्याह व्रतमेव वि सृजते शान्त्या अप्रदाहाय ।**

உரை.

விரதத்தை முடித்து விடாவிட்டால், அது வேள்வித் தலைவனைக் கொளுத்தி விடுகின்றது. 'அக்னே விரதபதே, என்பது முதலிய மந்திரமே விரதத்தை விடுதற் குரியமந்திரம், இதனால் குளிர்ச்சியாகி அவனைச் சுடுகிற தில்லை என்பதாம்.

---

புநராலம்ப மந்திரவுரை

பிராமணம்—16

**पराङ्वाव यज्ञ एति न नि वर्तते पुनर्यो वै यज्ञस्य पुनरालम्भं विद्वान्य जते तमभि नि वर्तते ।**

உரை.

வெளிமுகமாய் இருப்பவனுக்கு மீண்டும் நிவிருத்தியில்லை. புநராலம்ப மந்திரத்தை ஓதுகின்ற யஜமானனுக்கு மீண்டு நிவிருத்தியாகிறது, அதாவது மீண்டும் அது இருக்கின்றது என்பதாம்.

---

மந்திரத்திற்கு உரை கூறப்படுகின்றது

பிராமணம்—17

**यज्ञो बभूव स आ बभूवेत्याहैष वै यज्ञस्य पुनरालम्भस्तेनैवैनं पुनरा लभते ।**

உரை.

இம் மந்திரத்தை ஓதுதலே எக்ஞத்தை மீண்டும் அடைதல் என்பதாம்.

---

கோமதி மந்திரத்திற்கு உரை கூறுதற்குப் புகழ்கின்றது

பிராமணம்—18

**अनवरुद्धा वा एतस्य विराडय आहिताग्निस्सन्नसभः पशवः खलु वै ब्राह्मणस्य सभा ।**

உரை.

தீ வேட்போனயிருப்பினும் சபையின்றிய வேள்வித் தலைவன் உலக வழக்கிலும் சபையை யிழந்தவனே யாகின்றான். அரசனுக்கிருப்பது, மந்திரி

காலாள் முதலான சபை ஈண்டு இவனுக்கில்லை. மற்றொருவேள்வியை முடித்து வைக்கும், நாற்கால் பிராணி, இருகாற் பிராணி, பசுக்கள் என்னு மிவை இவனுடையசபையாகும் என்பதாம்.

மந்திரத்தை விதிக்கின்றது

பிராமணம்—19

इष्वा प्राङुत्क्रम्य ब्रूयाद्गोमाꣳ अऽग्नेविमाꣳ अश्वी यज्ञ इत्यव सभाꣳ रुन्धे प्र सहस्रं पशूनाप्नोत्याऽस्य प्रजायां वाजी जायते॥

உரை

'கோமதி, என்பது, ஆயிரக் கணக்கான அடைவைக் கூறுகின்றது. 'இடாவான், பிரசாவான், என்றுமந்திரத்திற் கூறியிருத்தலின், இவனுடைய பிரசையைக் கூறு மிடத்து உணவுப் பொருள், புதல்வரைப் பெறுதலுங் கூறப்பட்டிருக்கின்றன என்பதாம்.

ஆறும் அநுவாகம் முற்றிற்று.

---

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

ஏழாம் அநுவாகத் தோடக்கம்

ஈண்டு, உக்த்யம், அத்யாக்னிஷ்டோமம் சோடசி, அதிராத்திரம், அப்தோர்யாமம் என்னும் ஐந்தையும், அக்கினிட்டோமத்தையும் தனித்தனி சோதிட்டோமம் என்று வழங்குகின்றனர். ஏனெனின்? இவைகட்கெல்லாம் சோதி: என்னும் ஸ்தோமம் (கீதத்துதிமஞ்சரி) முறையே, 9, 15, 17, 21, என்னும் நான்குமாம். இவை முறையே இவ் வெக்ஞங்க ளெல்லாவற்றிற்கும் ஒத்து வருகின்றன வாதலினென்க. இவ்வாறாயினும், இது முதற்கொண்டு ஏழு அநுவாகங்களாற் கூறப்படும், 'வாஜபேயம்' என்னுஞ் சோமயாகத்திற்கோ, ஸ்தோமங்கள் பதினேழாகின்றன. ஆகையால் வாஜபேயம் சோதிட்டோமமன்று. அங்ஙனமாயினும், வாஜபேயத்தையுஞ் சேர்த்து சோமயாகம் ஏழு சமஸ்தைகளை யுடையது என்று வழங்குகின்றனர்.

வாஜபேய முன்னுரை

இது, சரத் இருதுவிற் செய்யப்படுவது சரத்வாஜபேயம் என்றும், ஏனைய இருதுக்களிற் செய்யப்படுவது குருவாஜபேய மென்றும் இருவகைப்படும். இதை நித்தியமென்பர் சிலர். காமிய மென்பர் மற்றையோர் சிலர்.

இந்த வேள்வியில், ஒவ்வொருவகைப் பொருளும் பதினேழு, பதினேழாக இருத்தல் வேண்டும். முதலாவது, தீட்சை நாட்கள் பதினேழாகின்றன

மூன்று உபசத்துக்கள் செய்யிலோ, பத்தொன்பதாவது தினம் சுத்தியாஹஸாம் (சோமரசம் பிழியும் நாள்.) பதினைந்து நாட்கள் தீட்சை நாட்களெனின் மூன்று உபசத்க்கள் செய்யும் பட்சத்தில், பதினேழாம் நாள் சுத்தியாஹஸாம். (சோமரசம் பிழியும் நாளாம்.) எவ்வாற்றாலானும் பதினேழு எண் வரல் வேண்டும்.

மற்றும், தக்ஷிணைகளும், பதினேழு பதினேழாகக் கொடுத்தல் வேண்டும். யூபமும் பதினேழு முழம் அளவுள்ளதாகவும், வில்வம், அல்லது, கருங்காலியாற் செய்யப்பட்டதும், நாற்சதுரமாகவும், கோதுமை மாவாற் சஷாலம் வைக்கப் பெற்றதாகவும் இருத்தல் வேண்டும்.

யாகசங்கற்பம்

யாகஞ் செய்வதாக நிச்சயிக்கப்பட்ட நாளில், காலையிற் செய்யவேண்டிய அக்கினி ஹோத்திரத்தை முடித்துக் கொண்டு, காருகபத்திய மென்னுந் தீக்கு மேற்குப் பக்கமாய் பத்தினியோடு உட்கார்ந்து கொண்டு, ஆசமனம் பிராணாயாமம் முதலான கருமக்கடன்களை முடித்துக் கொண்டு,

सोमेनयक्ष्ये कुरुवाजपेयेन (शरद्वाजपेयेन) रथन्तर साम्ना एकहायन प्रभृत्या पञ्चहायनेभ्यो वयसो वयसस्सप्तदश सप्तदश दक्षिणेन तेन श्रीपरमेश्वरम् प्रीणयानि ।

(ரதந்தரம், என்னுஞ் சாமப் பாட்டுடனும், ஒருவயது முதற் கொண்டு ஐந்து வயதுக்கு உட்பட்ட பதினேழு எண்ணுள்ள தட்சிணைகளுடனுங் கூடிய குரு (சரத்) வாஜபேயம் என்னுஞ் சோமயாகத்தால் பரமேசுரனைப் பிரியப் படுத்துவேனாக ,, என்று எண்ணிக் கொண்டு, 'विद्युदसि' என்பது முதலிய மந்திரத்தால் கையலம்புதல், சோமப் பிரவாக (சோமத்தைக் கொண்டு வருவோ)னை அழைத்தல் முதலான கிரியைகளையெல்லாம் சோமயாகத்திற் செய்தது போன்றே செய்து கொண்டு வரல் வேண்டும்.

நூற்றுக் கணக்கான பொருள்களைக் கொடுத்துச் சோமத்தை வாங்கல் வேண்டும்.

யூபத்துடன், இருபத்து மூன்று சுவருக் (மரக்கத்தி) களைச் செய்து கொள்ளல் வேண்டும்.

வேதிகையை, இருபது அங்குலம் அளவுகொண்ட பிரக்கிரமத்தால் அளத்தல் வேண்டும்.

சதசை (சபையை)க் கட்டும் போது, 'ऐन्द्रमसि' என்னு மந்திரத்தால், நடுவில் ஐந்து தடுக்குக்களையும், 'विश्वजनस्य छाया' என்னும் மந்திரத்தால் தெற்குப் பக்கத்தில் ஐந்து தடுக்குக்களையும், 'इन्द्रस्य सदोसि' என்னு மந்திரத்தால், வடபுறமாய் ஏழு தடுக்குக்களையும் வேய்ந்து பதினேழு தடுக்குக்களாய்ச் செய்தல் வேண்டும்.

உபரவங்களை, ஒருமை மந்திரங்களாலேயே செல்லல் முதலான கிரியைகளைச் செய்தல் வேண்டும்,

கரம் (மேடை) செய்த பிறகு, பிரதிப் பிரஸ்தாதா தென்புறவண்டியின் இருசுக்கு மேற்கில் சுராக்கிரகங்களை (கள்ளெடுத்து வைக்கும் பாத்திரங்களை) வைப்பதற் பொருட்டு மற்றொரு மேடை செய்தல் வேண்டும்.

யூபத்தில் கயிற்றைக் கட்டிய பிறகு, அதில், பதினேழு துணிகளையுஞ் சுற்றி வைத்தல் வேண்டும்.

சோமரசம் பிழியுநாள் அதிகாலையிலெழுந்து வேள்விக் கிரியைகளைச் செய்யத் தொடங்குமுன், மேல் வரும், 'देव सवितः प्रसुव' என்பது முதலிய மந்திரத்தால் ஆகவனீயத்தில் ஹோமஞ் செய்தல் வேண்டும். பிறகு, 'अग्नेनय' என்பது முதலிய மந்திரத்தால் ஆக்னீத்ர மண்டபத்தைத் தொடுதல் முதலான கிரியைகளைத் தொடங்கி, சோமயாகத்திற் செய்தது போலவே செய்தல் வேண்டும்,

மற்றும், மேடையின் மீது பாத்திரங்களை வைக்கும் போது, இந்திர தேவதையின் பொருட்டு அதிக்கிராகிய மென்னும் பாத்திரத்தை வைத்து, மீண்டும் ஐந்து பாத்திரங்களையும் வைத்தல் வேண்டும். சோடசி என்னும் பாத்திரத்தை வைத்துவிட்டு, அதற்கருகில் பிரசாபதியின் பொருட்டு, சோமரசப் பாத்திரங்கள் பதினேழையும் வைத்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, மேற்குப் பக்கத்திலுள்ள மேடைமீது, கள்ளெடுப்பதன் பொருட்டு பதினேழு பாத்திரங்களை வைத்தல் வேண்டும்.

ஆகவனீயத்திற்கு வடக்கில், பசுயாகத்தின் பொருட்டுப் பாத்திரங்களை வைக்கும் போது, பசுவைச் சமைக்கின்ற பாத்திரங்கள், 23-ம், இருதய சூலங்கள், 23-ம், வபாசிரபணிகள் 23-சோடியும், பசுவைக் கட்டுங் கயிறுகள் 23-ம், சுவருக்குகள் 23-ம், பால் கறத்தற்குரிய பாத்திரங்களும் வைத்தல் வேண்டும். பாத்திரங்களின் மேல் புரோக்ஷித்த (நீரைத் தெளித்த)வுடன் காலையில், பிரசாபதியின் பொருட்டுப் பால் கறத்தல் வேண்டும். ஆகவனீயத்திற்கு மேற்கில் நெய்ப் பாத்திரங்களை வைத்த பிறகு, பாலை இறக்கி வைத்தல் வேண்டும். கிருது கரண ஹோமம் இல்லை. மந்திரத்தை ஓதுவது மாத்திரந்தான்.

இனி சோமரசத்தை, அவ்வப் பாத்திரத்திற் பிடித்தல், இந்திர தேவதையின் பொருட்டு, அதிக்கிராகியம் என்னும் பாத்திரத்தில் சோமரசத்தையெடுத்த பிறகு,

(1) சங்-கா-1 பிர-7, அநு-12 'उपयामगृहीतोसि नृषदन्त्वा......गृह्णामि' இந்திர தேவதையின் பொருட்டு வைக்கப்பட்ட முதலாவது அதிக்கிராகிய

பாத்திரத்திற் சோமரசத்தை யெடுத்து, 'एषते योनिरिन्द्रायत्वा' என்பதால் அதனிடத்திலேயே வைத்துவிடல் வேண்டும்.

(2) 'उपयामगृहीतोस्यप्सुषदम्' ......गृह्णामि' என்று, இரண்டாவது அதிக்கிராஹிய பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்து, 'एषतेयोनिः' என்பதால் அதனிடத்திலேயே வைத்தல் வேண்டும்.

(3) 'उपयामगृहीतोसि पृथिविषदं'......गृह्णामि' என்பதால், மூன்றுவது பாத்திரனுஞ் சோமரசத்தை யெடுத்து, 'एषतेयोनिः' என்பதால் அதனிடத்தில் வைத்தல் வேண்டும்.

(4) 'येग्रहाः पञ्चजनिनाः......समग्रभीं' 'उपयाम गृहीतोसि' என்று, நான்காவது பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்து, 'एषते योनिः' என்பதால், அதனிடத்தில் வைத்தல் வேண்டும்.

(5) 'अपां रसं......उत्तमं उपयामगृहीतोसि' என்பதால் ஐந்தாம் பாத்திரத்திலும் சோமரசத்தை யெடுத்து, 'एषतेयोनिः' என்பதால் அதனிடத்தில் வைத்துவிடல் வேண்டும்.

சூரிய தேவதையின் பொருட்டுச் சோமரசத்தை எடுக்கத் தொடங்கி துருவஸ்தாலியிலெடுத்து வைத்த பிறகு, சங்-கா1-பிர-4, அநு-37ல், கூறிய படி, 'आतिष्ठ वृत्रहन्रथं' என்பது முதலிய மந்திரத்தால் சோடசிக்கிரக பாத்திரத்தில் சோமரசத்தை யெடுத்துக் கொண்டு, 'यस्मान्नजातः' என்பது முதலிய நான்கு மந்திரங்களாலும் அதைப் போற்றல் வேண்டும்.

பிறகு, 'अयाविष्ठाः ......गृह्णामि' என்பதால், பிரசாபதி தேவதையின் பொருட்டுச் சோமரசத்தை யெடுத்து, தசாபவித்திரத்தால் துடைத்துவிட்டு, 'एषतेयोनिः' என்பதால் அதனிடத்தில் வைத்தல் வேண்டும். மற்றும், 'यस्मान्नजातः' என்பது முதலான நான்கு மந்திரங்களால் அதைப் போற்றல் வேண்டும்.

பிறகு, பிரதிப்பிரஸ்தாதா 'पुनातुते' என்பது முதலிய மந்திரத்தால், குதிரைவால் புல்லாற் செய்த ஒரு பவித்திரத்தால், கள்ளைக் கலக்கிவிட்டு 'कुविदङ्गयवमन्तः' என்பது முதலிய மந்திரத்தால், மட்பாத்திரத்தில் கள்ளை யெடுத்து மேற்கேயுள்ள மேடைமீது வைத்தல் வேண்டும். கள்ளையெடுத்து வைக்கும்போது 'उपयामगृहीतोसि' என்பதையும், 'एषते योनिः' என்பதையும் ஓதுதல் இல்லை. இவ்வாறு, அத்வரியு பதினேழு பாத்திரங்களிலும், பிரதிப்பிரஸ்தாதா பதினேழு பாத்திரங்களிலுஞ் சோமரசத்தையும் கள்ளையும் எடுத்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, தாரையை நிறுத்தல் முதலான கிரியைகளைச் செய்து கொண்டு, அக்கினி தேவதையின் பொருட்டும், இந்திராக்கினி தேவதையின் பொருட்டும் ஒவ்வொரு வெள்ளாடும், இந்திரன் பொருட்டு ஒரு செம்மறியாடும், மருத்துக்

களுக்கு, ஈனாத வெள்ளாடும், சரசுவதியின் பொருட்டு பற்போடாத பெண் செம்மறியாடும், சரஸ்வானின் பொருட்டு ஒரு வெள்ளாடும், பிரசாபதியின் பொருட்டு சாம்பர் நிறைமுடையதும், கொம்பில்லாததும், ஒரு வடிவாயுள்ளதுமாகிய பதினேழு வெள்ளாடுகளுமாக இருபத்துமூன்று பசுக்(ஆடு)களையும் மந்திரத்துடன் கொன்று வபைகளை (ஈரல் சவ்வுகளை)யெடுத்து, ஓமஞ்செய்து காலைச் சவனத்தை (சோமரசம் பிழிவதை) முடித்துக் கொண்டு, மத்தியான சவனத்தை (சோமரசம் பிழிவதை) செய்யத் தொடங்கி சவனீய புரோடசங்களுள் பசுதேவதையின் பொருட்டும் அக்கினியின் பொருட்டும் எட்டுக் கபாலங்களையும், இந்திராக்கினி, இந்திரன், மருத்துக்கள் என்னு மூவருக்கும் பதினொரு கபாலங்களையும், சரசுவதிக்கு எட்டுக் கபாலங்களையும், சரஸ்வானுக்கு எட்டுக் கபாலங்களையும் வைத்துப் புரோடாசங்களையுஞ் செய்து கொண்டு பிரசாபதிக்கு நீவார (மலைநெல்)த்தால் பொங்கலையுஞ் செய்துவிட்டு, சரஸ்வான் பிரசாபதி என்பவர்களின் அவிகளை மாத்திரம் நிறுத்திவிட்டு, ஏனைய தேவதைகட்கு ஓமஞ் செய்தல் வேண்டும். மற்றும், தட்சிணை கொடுக்க வேண்டிய போது செய்யத்தக்க ஓமங்களையுஞ் செய்துவிடல் வேண்டும்.

இவ் வாஜபேயத்தைச் செய்ய வேண்டியவன், இரத மீதேறி ஓடச் செய்வதில் வெற்றி யடைதல் வேண்டும். எதனாலெனின்? முன்னொருகால், தேவர்களுக்குள் யார் முதலில் வாஜபேய யாகத்தைச் செய்வது என்று கலகம் உண்டானபோது இரதத்தின் மீதேறி ஓடுவதில் வெற்றி பெற்றவர் அதைச் செய்தல் வேண்டும் என்று உறுதிப்பாடு கொண்டதில், பிருகற்பதியே அவ்வாறு வென்று இந்த யாகத்தை முதலிற் செய்தனர். பிறகு, பிருகற்பதியை வழிபட்டு இந்திரனும் அவ்வாறு செய்து தேவர்கட்குத் தலைவனுந் தன்மை பெற்றனன்; ஆதலின், இப்போதும் இவ்வேள்வி செய்ய வேண்டிய வேள்வித் தலைவன், குதிரைகள் பூட்டிய இரதத்தின் மீதேறி ஓடிச் செல்வதில் வெற்றி யடைதல் வேண்டும். இதுபற்றியே, இவ்வநுவாகத் தொடக்கத்தில் இரத விடயங் கூறப்பட்டிருக்கின்றதென்பது உணரற்பாலது.

இனி, முந்திய ஆறு அநுவாகங்களில் தர்சயாகசம்பந்தமான எஜமானனுடைய பிராமணங்கள் கூறப்பட்டன. இது முதல் ஏழு அநுவாகங்களால் வாஜபேய சம்பந்தமான அத்துவர்யுவின் மந்திரங்கள் கூறப்படுகின்றன. அதில் இரத விஷயம் இவ்வேழாம் அநுவாகத்திற் கூறப்படுகின்றது.

முன்னுரை முற்றிற்று.

ஏழாம் அநுவாகவிடயச் சுருக்கம்.

देवहोमोऽत्र कर्मादाविन्द्रस्य रथमाहरेत् ।
वाजस्य वेदिमध्ये तमभ्यावर्तयते रथम् ॥ १ ॥
अप्स्वश्वान्प्लावये द्वायुर्युनक्ति तुरगं रथे ।
अपां तदश्वपृष्ठानि मार्ष्टि विष्णो रथं व्रजेत् ॥ २ ॥
अङ्कौ रथे मृशेत्पक्षावष्टौ मन्त्रा इहेरिताः ।

ஓமஞ் செய்தல், இரதத்தை யெடுத்தல், வேதிகைக்கருகில் இரதத்தைக் கொண்டு வந்து நிறுத்தல், குதிரைகளை நீராட்டல், தேரில் குதிரைகளைப் பூட்டல், குதிரைகளின் முதுகில் தட்டிக் கொடுத்தல், இரதத்திலேறச் செல்லல், இரதத்தின் சக்கரங்களைத் தொடுதல் என்பது.

---

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

### ஏழாம் அநுவாகம்

---

இரதவிஷய மந்திரங்கள்.

देवं सवितः प्र सुव यज्ञं प्र सुव यज्ञपतिं भगाय दिव्यो गन्धर्वः । केतपूः केतं नः पुनातु वाचस्पतिर्वाचमद्य स्वदाति नः । इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्त्वयाऽयं वृत्रं वध्यात् । वाजस्य नु प्रसवे मातरं महीमदितिं नाम वचसा करामहे । यस्यामिदं विश्वं भुवनमाविवेश तस्यां नो देवस्सविता धर्म साविषत् । अप्सु ॥१॥ अन्तरमृतमप्सु भेषजमपामुत प्रशस्तिष्वश्वा भवथ वाजिनः । वायुर्वा त्वा मनुर्वा त्वा गन्धर्वास्सप्तविंशतिः । ते अग्रे अश्वमायुञ्जन्ते अस्मिञ्जवमाऽदधुः । अपां नपादाशुहेमन्य ऊर्मिः ककुद्मान्प्रतूर्तिर्वाज सातं

मस्तेनायं वाजꣳ सेत् । विष्णोः क्रमोऽसि विष्णोः क्रान्तमसि विष्णो विक्रान्तमस्यङ्कौन्यङ्कावभितो रथं यौ ध्वान्तं वाताग्रमनु संचरन्तौ दूरे हेतिरिन्द्रियावान्पतत्री ते नोऽग्नयः पप्रयः पारयन्तु (२) ॥

---

முதலாம் விநியோகம்.

தொடக்க ஓமங்கள்.

மந்திரம் :

**देव सवितः प्र सुव यज्ञं प्र सुव यज्ञपतिं भगाय दिव्यो गन्धर्वः । केतपूः केतं नः पुनातु वाचस्पतिर्वाचमद्य स्वदाति नः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे सवितर्देव !** | உள்ளிருந்தியக்குந் தெய்வமே ! |
| **यज्ञं** | வாஜபேய யக்ஞத்தை |
| **प्रसुव** | இனிது நடத்திவைப்பாயாக. |
| **यज्ञपतिं** | வேள்வித்தலைவனை |
| **भगाय** | அநுட்டானமாகிய செல்வத்தின் பொருட்டு |
| **प्रसुव** | நன்கு ஏவுவாயாக. |
| **दिव्यः गन्धर्वः** | வானிற்றோன்றும் சவிதா |
| **केतपूः** | அருளால், மக்களின் அறிவைச் சோதிக்கின்றோன். (அவன்) |
| **नः** | எமது |
| **केतं** | வாஜபேயவுணர்ச்சியைச் |
| **पुनातु** | சோதிப்பானாக. |
| **वाचस्पतिः** | சவிதாவின் அருள்பெற்ற வாசற்பதி |
| **नः** | எம்முடைய |
| **वाचं** | வாஜபேய மந்திரத்தை |
| **अद्य** | இக்கருமத்தில் |
| **स्वदाति** | நன்கு ஓதுவிப்பானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தின் முடிவில் ' ஸ்வாஹா ' என்பதைச் சேர்த்துக் கொண்டு சவிதா தேவதையின் பொருட்டு, வாஜபேயத்தை முன்னிட்டு மூன்று ஓமங்கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்.

தேரைக்கொண்டுவந்து நிறுத்தல்.

மந்திரம் :

**इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्त्वयाऽयं वृत्रं वध्यात् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे रथ! | தேரே ! நீ |
| वार्त्रघ्नः | பகைவரைக்கொல்லுகின்ற |
| इन्द्रस्य | இந்திரனுடைய |
| वज्रः | வச்சிராயுதமாக |
| असि | இருக்கின்றாய் |
| त्वया | நினது உதவியால் |
| अयं | இவ்வேள்வித் தலைவன் |
| वृत्रं | பகைவனைக் |
| वध्यात् | கொல்வானாக. |

சாயணபாடியக் கருத்து.

தட்சிணையை முன்னிட்டு இரண்டு ஹோமங்கள் செய்து முடிந்த பிறகு இம் மந்திரத்தால் முன்னர் இரதத்தை வைத்திருந்த மரப் பீடத்திலிருந்து இரதத்தைக் கீழே இறக்குதல் வேண்டும் என்பதாம்.

---

மூன்றும் விநியோகம்.

தேரைக் கொண்டுவந்து வைத்தல்.

மந்திரம் :

**वाजस्य नु प्रसवे मातरं महीमदितिं नामवचसा करामहे । यस्यामिदं विश्वं भुवनमाविवेश तस्यां नो देवस्सविता धर्म साविषत् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजस्यनु | உணவுப்பொருள் உண்டாதற்பொருட்டு |
| मातरं | நிமித்தகாரணமாகிய |
| महीं | வேதிகையென்னும் பூமியை |
| वचसा | மந்திரத்தால் |
| अदितिं नाम | உறுதிப்பாடுடையதாகச் |
| करामहे | செய்வேஞக. |
| यस्यां | எப்பூமியில் |
| इदंविश्वं भुवनं | உயிர்த்தொகுதிகளனைத்தும் |
| आविवेश | புகுந்திருக்கின்றனவோ, |
| तस्यां | அப்பூமியின்கண் |
| नः | எமது |
| धर्म | இருப்புத்தன்மையை |
| (सवितादेवः) | சவிதாதேவன் |
| साविषत् | உணர்ந்துகொள்வாஞக. |

சாயணபாடிக்கருத்து.

இம் மந்திரத்தால், தென்புறத்து வேதிகையின் கோடியில் இறக்கி வைத்திருக்கின்ற தேரை. சோம சம்பந்தமாகிய வேதிகையின் நடுவில், வலமாகச் சுற்றிக் கொண்டு வந்து நிறுத்தி வைத்தல் வேண்டும் என்பதாம்.

———

நான்காம் விநியோகம்.

குதிரைகளை நீராட்டல்.

மந்திரம் :

अप्स्वन्तरमृतमप्सु भेषजमपामुत प्रशस्तिष्वश्वा भवथ वाजिनः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अप्सु अन्तः | நீருக்குள் |
| अमृतं | அமுதமும் |

(தேரைப் பற்றிய

| | |
|---|---|
| अप्सु | தண்ணீருக்குள் |
| भेषजं | மருந்தும், இருக்கின்றன. |
| हे वाजिनः ! | குதிரைகளே ! நீங்கள் |
| उत | மற்றும் |
| अपां प्रशस्तिषु | தண்ணீர் சம்பந்தமான சிறந்த குணமுடையவைகளுள் |
| अश्वा भवथ | சம்பந்தமுடையவர்களாவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குதிரைகளைக் குளிப்பாட்டல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு :— நீருக்குள், அவமிருத்துவையும், பிணியையும் நீக்கும் சாரமிருத்தலின், குதிரை, அத்தகைய நீராற் கழுவப்படின் புநிதமடைந்து வேள்வியுங்கமாகி விடுகின்றதென்பது.

---

ஐந்தாம் விநியோகம்.

தேரில் குதிரைகளைப் பூட்டுதல்.

மந்திரம் :

वायुर्वा त्वा मनुर्वा त्वा गन्धर्वास्सप्तविंशतिः । ते अग्रे अश्वमायुञ्जन्ते अस्मिन्जवमाऽदधुः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अश्वं | தேரிற்பூட்டத்தக்க குதிரையை |
| वायुः | வாயுவும் |
| मनुः | மனுவும் |
| गन्धर्वाः | கந்தருவர்கள் என்னும் |
| सप्त विंशतिः | இருபத்தேழுபேர்களும் |
| अग्रे | எனக்கு முன்னரே |
| आयुञ्जन्ते | இரதத்திற்பூட்டியுள்ளார்கள். |
| (पुनः)ते | மீண்டும் அவர்கள் |
| अस्मिन् | இக்குதிரை(யில்)க்கு |

जवं வேகத்தையும்

आदधुः தேடியுள்ளார்கள். (யான் அதைப் பூட்டுகின்றேன்.)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், குதிரைகளைத் தேரிற் பூட்டல் வேண்டுமென்பதாம். ஈண்டு, ஒவ்வொரு குதிரையைப் பூட்டும்போதும் மந்திரத்தை ஓதிக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், மந்திரம் ஓதுதலின்றி பதினாறு இரதங்களைச் செய்து ஆகவனீயத்தின் முன், வடக்கில், அல்லது, கிழக்கில் வரிசையாய் நிறுத்திவிட்டு, மந்திரத்துடன் செய்த இரதத்தை மாத்திரம் எல்லா இரதங்கட்குந் தெற்கில் நிறுத்தல் வேண்டும்.

பிறகு பேராற்றலையுடைய ஒரு அரசன், ஆக்னீத்ர மண்டபத்திற்கு முன்னர் நின்றுகொண்டு, பதினேழு அம்புகளைப் போட்டுக் கொண்டு போதல் வேண்டும்; கடைசியாய்ப் போய் அம்பு வீழ்கின்ற இடத்தில் அத்திமரத்தால் உருவஞ்செய்து அங்கு நாட்டல் வேண்டும். பிறகு, பதினேழு இரதங்களையும் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும். அவற்றுள், மந்திரத்துடன் செய்த இரதத்தைமாத்திரம் அத்வரியுக்குத் தட்சணையாகக் கொடுத்தல் வேண்டும்.

பிறகு, மாஹேந்திர ஸ்தோத்திரத்தைத் (இருக்குத் துதியை) தொடங்கும் வரை சோமயாகஞ் செய்தது போன்றே செய்து கொண்டுபோய், நீவாரப் (மலைநெல்) பொங்கல் செய்து நெய் விட்டு சாத்வாலத்தில் வைத்தல் வேண்டும். அதை அரசன் பாதுகாத்தல் வேண்டும்.

சாத்வாலத்தில் கட்டைகளைப் பரப்பி அதன்மீது பதினேழு இலைகளையுடைய அத்திக் கொம்பாற் செய்த சக்கரத்தை வைத்தல் வேண்டும்.

வேதிகையின் வடகோடியில் ஏழு துந்துபிகளைக் கட்டி வைத்தல் வேண்டும்.

---

ஆறும் விநியோகம்.

குதிரைகளின் பின்புறத்தைத் தட்டிக்கோடுத்தல்.

மந்திரம் :

अपांनपादाशुहेमन्य ऊर्मिः ककुद्मान्प्रतूर्तिर्वाज सातमस्तेनायं वाजꣳ सेत् ।

என்பது.

பதவுரை.

अपांनपात् குளிப்பாட்டுங்கால் நீரைக் கலக்கிவிடாததும்

(தேரைப்பற்றிய

| | |
|---|---|
| आशुहेमन् | விரைவில் ஓடுவதுமாகிய |
| (अश्व!) | (குதிரையே!) நீ ஓடும்போது |
| ककुद्मान् | மேலே கிளம்பியிருக்கின்றதும் |
| प्रतूर्तिः | மூழ்குவதாலுண்டாகும் வருத்தத்தைப் போக்குவதும் |
| वाजसातमः | பயிர்கட்கு உதவிசெய்வதால் அன்னமுடையது மாகிய |
| यःऊर्मिः | யாதொரு தூளியுண்டோ. |
| तेन | அதனல் |
| अयंवाजं | எமது அன்னத்தைத் (உணவுப் பொருளை) |
| सेत् | தேடுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், குதிரைகளின் பின்புறத்தைத் தட்டிக்கொடுத்தல் வேண்டு மென்பதாம்

குறிப்பு:— இது பதினேழு பாணவீழ்ச்சித் தூரம்வரை குதிரை, ஓடுவதற்கு உற்சாகப்படுத்தலாம்.

---

ஏழாம் விநியோகம்.

இரதத்தில் ஏறுவதற்கு அடியெடுத்துவைத்தல்.

**विष्णोः क्रमोऽसि विष्णोः क्रान्तमसि विष्णोर्विक्रान्तमसि।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे प्रथम प्रक्रम!) | (முதலாவது எனது காலடியே! நீ,) |
| विष्णोः | நிறைந்த பரமேசுரனுடைய |
| क्रमःअसि | காலடியாக வளந்த பூமியாக இருக்கின்றாய். |
| (हे द्वितीय प्रक्रम!) | இரண்டாவது காலடியே நீ! |
| विष्णोः | நிறைந்த பரமேசுரனுடைய |
| क्रान्तमसि | { இரண்டாம் பாதத்தாலளந்த வானுலகமாக் இருக்கின்றாய். |
| (हे तृतीयप्रक्रम!) | மூன்றாவது காலடியே! நீ |

| | |
|---|---|
| विष्णोः | நிறைந்தபரமேசுரனுடைய பராக்கிரமத்தாலளந்த |
| विक्रान्तमसि | சுவர்க்க லோகமாக இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன், இம் மந்திரத்தால், இரதத்தின் மீதேற வேண்டியதற்கு மூன்றடி யெடுத்து வைத்தல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்.

இரதத்தின் சக்கரங்களைத் தொடுதல்.

மந்திரம் :

**अङ्कौन्यङ्कावभितो रथं यौ ध्वान्तं वाताग्रमनु संचरन्तौ दूरे हेति-रिन्द्रियावान्पतत्री ते नोऽग्नयः पप्रयः पारयन्तु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| रथं अभितः | இரதத்திற்கு அழகாகிய |
| यौ अङ्कौ | இருபக்கத்திலுமுள்ள |
| (यौ) न्यङ्कौ | இரண்டு சக்கரங்கள் (இவை எவ்வண்ணமானவைகளெனின் ?) |
| ध्वान्तं | ஒலியுடையவைகள் |
| वाताग्रमनुसंचरन्तौ | மற்றும், வாயுவினும் விரைவாய்ச்செல்கின்றவைகள் |
| | (அத்தகைய இண்டு சக்கரங்களாலும்) |
| पप्रयः अग्नयः | வேண்டியதையளிக்கும் |
| दूरेहेतिः | தூரஹேதி என்னும் அக்கினிகள் |
| पारयन्तु | குறித்தவிடத்திற்குக் கொண்டுபோய்ச் சேர்ப்பார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரதத்தின் இரண்டு பக்கங்களையுந் தொடல் வேண்டு மென்பதாம்.

ஏழாமநுவாகம் முடிந்தது.

---

எட்டாமநுவாக விடயச்சுருக்கம்.

देवारोहे द्रथं स्वामी ब्रह्मारोहणमन्त्रणम् ॥
देवेतीन्द्रादुन्दुभीनां घोषोऽश्वाजकशाग्रहः ॥ १ ॥
अर्वाऽसीति त्रिभिर्मन्त्रैर्युनक्त्यश्वत्रयं रथे ॥
वाजीत्येतैर्मन्त्रयेत चतुर्भि र्धावतो रथान् ॥२॥
मितेत्याभिश्चतसृभिस्ताम्प्रत्या धावतो रथान् ॥
आमा रथविमुक्त्याख्यं जुहुया द्वाजिनद्वयात् ॥
गतेः पुरोपरिष्टाच्च घ्रापयेच्चरु मश्वकान् ॥
बृहादि जिघ्रतेत्यन्तो द्वतीयेऽप्यनुषज्यते॥
बृहेति मार्ष्टि घोणायामियं तु रथमन्त्रणम् ॥
अजी दुन्दुभि मन्त्रस्स्यादेकविंशति रीरिताः ॥ ५ ॥

வேள்வித்தலைவன் இரதத்திலேறல், பிரமன் வண்டிச் சக்கரத்தின் மீதேறுதல், துந்துபிப்பறையை அடித்தல், சாட்டையை யெடுத்துக் கொள்ளல், மூன்று மந்திரங்களால் மூன்று குதிரைகளைப் பூட்டுதல், ஓடு மிரதத்தை நான்கு மந்திரங்களாற் போற்றுதல், நான்கு மந்திரங்களால் திரும்பிவந்த இரதங்களைப் போற்றுதல், இரதத்தை அவிழ்த்து விடுவதற்கு ஹோமஞ் செய்தல், வனநெற் பொங்கலை குதிரை முகந்து பார்த்தல், துடைத்தல், இரதத்தைப் போற்றுதல், துந்துபியை அவிழ்த்தற்கு ஹோமஞ்செய்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்
### எட்டாம் அநுவாகம்

இரதம் ஓடுகின்றதைக் கூறுகின்ற மந்திரங்கள்.

देवस्याहꣳ सवितुः प्रसवे बृहस्पतिना वाजजिता वाजं जेषं देवस्याहꣳ सवितुः प्रसवे बृहस्पतिना वाजजिता वर्षिष्ठं नाकꣳ रुहेयमिन्द्राय वाचं वदतेन्द्रं वाजं जापयतेन्द्रो वाजमजयित्। अश्वाजनि वाजिनि वाजेषु वाजिनीवत्यश्वान्त्समत्सु वाजय। अर्वाऽसि

ஓடுதல்)

सप्तिरसि वाज्यसि वाजिनो वाजं धावत मरुतां प्रसवे जयत वि
योजना मिमीध्वमध्वनः स्कभ्नीत ॥ १ ॥ काष्ठां गच्छत वाजेवाजे-
ऽवत वाजिनो नो धनेषु विप्रा अमृता ऋतज्ञाः । अस्य मध्वः
पिबत मादयध्वं तृप्ता यात पथिभिर्देवयानैः । ते नो अर्वन्तो हवन
श्रुतोहवं विश्वे शृण्वन्तु वाजिनः । मितद्रवस्सहस्रसा मेधसाता
सनिष्यवः । महो ये रत्नꣳ समिथेषु जभ्रिरे शं नो भवन्तु वाजिनो
हवेषु । देवताता मितद्रवः स्वर्काः । जम्भयन्तोऽहिं वृकꣳ रक्षाꣳसि
सनेम्यस्मद्युयवन् ॥ २ ॥ अमीवाः । एष स्य वाजी क्षिपणिं तुर-
ण्यति ग्रीवायां बद्धो अपिकक्ष आसनि । क्रतुं दधिक्रा अनु संतवी-
त्वत्पथामङ्काꣳस्यन्वापनीफणत् । उत स्मास्य द्रवतस्तुरण्यतः पर्णं
न वेरनु वाति प्रगर्धिनः । श्येनस्येव ध्रजतो अङ्कसं परि दधि-
क्राव्णस्सहोर्जा तरित्रतः । आ मा वाजस्य प्रसवो जगम्यादा
द्यावापृथिवी विश्वशंभू । आ मा गन्तां पितरा ॥ ३ ॥ मातरा
चाऽऽ मा सोमो अमृतत्वाय गम्यात् । वाजिनो वाजजितो वाजꣳ
सरिष्यन्तो वाजं जेष्यन्तो बृहस्पतेर्भागमव जिघ्रत वाजिनो वाज-
जितो वाजꣳ ससृवाꣳसो वाजं जिगिवाꣳसो बृहस्पतेर्भागे नि मृ-
ड्ढ्वमियं वस्सासत्या संधाऽभूद्यामिन्द्रेण समधध्वमजीजिपत
वनस्पतय इन्द्रं वाजं वि मुंचध्वम् ॥ ४ ॥

ஏழாமநுவாகத்தில் இரத மந்திரங்கள் கூறப்பட்டன. எட்டாமநுவாகத்தில் இரதம் ஓடவேண்டிய வகை கூறப்படுகின்றது.

முதலாமநுவாகம்.

வேள்வித்தலைவன் இரதத்தின்மீதேறுதல்.

மந்திரம் :

**देवस्याहꣳ सवितुः प्रसवे बृहस्पतिना वाजजिता वाजं जेषम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सवितुः देवस्य | சவிதா தேவனுடைய |
| प्रसवे | அருளிருக்குமிடத்து |
| वाजजिता | அன்னத்தை வெல்கின்ற |
| बृहस्पतिना | பிருகற்பதியால் |
| वाजं | அன்னத்தை |
| अहं जेषं | வெல்வேனாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், இரதத்தின்மீது ஏறல்வேண்டு மென்பதாம்.



இரண்டாம் விநியோகம்.

பிரமன் வண்டிச் சக்கரத்திலேறுதல்.

மந்திரம் :

**देवस्याहꣳ सवितुः प्रसवे बृहस्पतिना वाजजिता वर्षिष्ठं नाकꣳ रुहेयम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सवितुः देवस्य | சவிதா தேவனுடைய |
| प्रसवे | ஏவலிருக்குமிடத்து |
| वाजजित्ता | அன்னத்தை வெற்றிகொள்ளும் |
| बृहस्पतिना | பிருகற்பதியால் |
| वार्षिष्ठं | வேண்டியவற்றை நிறையக் கொடுக்கும் |
| नाकं | சுவர்க்கத்தில் |
| अहंरुहेयं | நான் ஏறுகிறேன். |

ஓடுதல்)

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன் வண்டியிலேறும்போது, பிரமன், ஒரு கொம்பை யூன்றி அதன்மேல் வைக்கப்பட்ட வண்டிச்சக்கரத்தின் மீது ஏறல் வேண்டும். ஏறி மும்முறை சுற்றும்போது आविर्मर्यः, என்பது முதலிய சாமத்தைப் பாடல் வேண்டும் என்பதாம்.

---

மூன்றாம் விநியோகம்.

துந்துபி வாத்தியத்தை முழங்கல்.

**इन्द्राय वाचं वदतेन्द्रं वाजं जापयतेन्द्रो वाजमजयित् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हेसभ्याः !) | சபையிலுள்ளவர்களே! நீவிர் |
| **इन्द्राय** | எஜமானன் பொருட்டு |
| **वाचं** | ஆசீர்வாதவாக்கைக் |
| **वदत** | கூறுவீர்களாக. |
| **इन्द्रं** | இந்திரனை, (எஜமானனை) |
| **वाजं** | அன்னவிஷயத்தில் |
| **जापयत** | வெற்றியடையச் செய்வீர்களாக |
| **इन्द्रः** | இவ்வேள்வித் தலைவன் |
| **वाजं** | உனவுப்பொருளை |
| **अजयित्** | வெல்வானாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், துந்துபி என்னும் வாத்தியத்தை முழங்கல் வேண்டு மென்பதாம்.

---

நான்காம் விநியோகம்.

சாட்டையை எடுத்துக்கொள்ளல்.

மந்திரம் :

**अश्वाजनि वाजिनि वाजेषु वाजिनीवऽत्यश्वान्त्समत्सु वाजय ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अश्वाजनि** | குதிரையைச் செலுத்துவதும் |
| **वाजिनि** | வேகத்திற்குக் காரணமானதும் |
| **वाजिनीवति** | வெற்றியால் அன்னத்தையளித்தலின் அன்னமுடையதுமாகிய |
| **(हे कशे !)** | சாட்டையே! நீ |
| **वाजेषुसमत्सु** | உணவுப்பொருள்களான நிமித்தங்களிருக்குமிடத்து |
| **अश्वान्** | குதிரைகளை |
| **वाजय** | போரிற் செலுத்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அத்வரியு குதிரையை ஓட்டுஞ் சாட்டையைக் கையில் எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

கடிவாளங்களைப் பிடித்து மூன்று குதிரைகளையும் சரியாய் நிற்கவைத்துக் கொள்ளலும்வேண்டும்.

ஐந்தாம் விநியோகம்.

இது மூன்று விநியோகங்களையுடையது

**अर्वाऽसि सप्तिरसि वाज्यसि।**

மந்திரம் :

என்பது,

பதவுரை.

| | |
|---|---|
| **अर्वा** | அக்கினியாக |
| **असि** | இருக்கின்றாய் |
| **सप्तिः** | வாயுவாக |
| **असि** | இருக்கின்றாய். |
| **वाजी** | இரவியாக |
| **असि** | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

தெற்கில் ஒன்றும், வடக்கில் ஒன்றும், நடுவில் ஒன்றுமாக மூன்று குதிரைகளையும் வலமிடமாக மாற்றி ஒழுங்காய்த் தேரிற்பூட்டல் வேண்டுமென்பதாம்.

ஓடவிடல்)

குறிப்பு :— கந்தருவர், மனிதர், அசுரர் என்பவர்களைத் தாங்குகின்றவைகளும் தீ, கால், இரவி என்னும் மூன்று தேவதைகளை யுடையவைகளும், தெற்கு, வடக்குஅதனடு என்னு மூன்றிடத்திற் பூட்டத்தக்கவைகளுமாகின்றன இக் குதிரைகள் என்பது.

---

எட்டாம் விநியோகம்.

ஓடுங் குதிரைகளைப் போற்றுதலில் முதல் மந்திரம்.

மந்திரம் :

**वाजिनो वाजं धावत मरुतां प्रसवे जयत वि योजना मिमीध्वमध्वनः स्कभ्नीत काष्ठां गच्छत ।**

என்பது,

பதவுரை,

| | |
|---|---|
| हे वाजिनः ! | குதிரைகளே! நீங்கள் |
| वाजं | அன்னத்தைத் தேடுதற் பொருட்டு |
| धावत | ஓடுவீர்களாக. |
| मरुतां | மருத்துக்களின் |
| प्रसवे | அருளிருக்குமிடத்து |
| जयत | வெல்வீர்களாக. |
| वियोजना | அநேகம் யோசனை தூரமுள்ளவழிகளைய |
| मिमीध्वं | கொஞ்சதூர வழியாய்ச் செய்வீர்களாக. |
| अध्वनः | வழிகளை |
| स्कभ्नीत | விரைவிற் செல்லுதலால் துன்புறுத்துவீர்களாக. |
| काष्ठां | ஓடவேண்டிய இடத்தின் (ஆஜியின்) எல்லையை |
| गच्छत | அடைவீர்களாக. |

---

ஒன்பதுபத்தாம் விநியோகங்கள்.

ஓடுங் குதிரைகளைப் போற்றும் இரண்டாமந்திரம் மூன்றுமந்திரங்கள்.

**वाजेवाजेऽवत वाजिनो नो धनेषु विप्रा अमृता ऋतज्ञाः । अस्य मध्वः पिवत मादयध्वं तृप्ता यात पथिभिर्देवयानैः ।**

என்பது,

பதவுரை.

| | |
|---|---|
| हेवाजिनः ! | குதிரைகளே ! நீங்கள், |
| वाजेवाजे | அவ்வவ்வன்னத்தின் பொருட்டும் |
| धनेषु | தனங்களின் நிமித்தமாகவும் |
| नः | எங்களைப் |
| अवत | பாதுகாப்பாற்றுவீர்களாக. |
| विप्राः | நீங்கள், பரிசுத்தமாகிய |
| अमृताः | அமுதம்போன்றவர்கள் |
| ऋतज्ञाः | உண்மையாகிய அடையவேண்டிய இடங்களையுணர்ந்தவர்கள் குரைகளின் அபிமானிகளான அத்தகைய தேவர் காள் ! நீவிர், |
| मध्वः पिबत | மதுவையருந்துவீர்களாக. |
| तृप्ताः | அருந்திக், களிப்புறுவீர்களாக |
| देवयानैः | தேவமார்க்கமாகிய |
| पथिभिः | வழிகளால் |
| यात | 'ஆஜி' என்னும் இடத்திற்குச் செல்வீர்களாக. |

குறிப்பு : ஈண்டு மதுவை யருந்தல் என்றது, வனநெற் பொங்கற் கஞ்சியை யருந்தலாம்.

---

பதினோராம் விநியோகம்.

ஓடுங் குதிரைகளைப்போற்றும் நான்கா மந்திரம்.

மந்திரம் :

**ते नो अर्वन्तो हवन श्रुतो हवंविश्वे शृण्वन्तु वाजिनः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| ते अर्वन्तः | விரைவிற் செல்லுகின்றவைகளும் |
| हवनश्रुतः | யாம் அழைப்பதைக் கேட்பவைகளும் |
| वाजिनः | உணவுப் பொருள்களையுடையவைகளுமான |
| विश्वे | எல்லாக் குதிரைகளும் |
| नःहवं | எமது வார்த்தையைக் |
| श्रृण्वन्तु | கேட்பனவாகுக |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால் இரதத்தை யிழுத்துக்கொண்டு ஓடுங் குதிரைகளைப் போற்றல் வேண்டுமென்பதாம்,

ஈண்டு, இரதம் ஆசி முடிவுரைபோய் வடக்கு முகமாய்த் திரும்பி வலமாக யாகசாலைக்கு வரல்வேண்டு மென்பதை யுணர்க,

பன்னிரண்டாம் விநியோகம்.

இரதந் திரும்பி வருவதைப் போற்று முதலாமந்திரம்

மந்திரம் :

**मितद्रवस्सहस्रसा मेधसाता सनिष्यवः । महो ये रत्न॰ समिथेषु जभ्रिरे शं नो भवन्तु वाजिनो हवेषु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| मितद्रवः | நீண்டவழியையுங் குறுகிய வழிபோற் செய்கின்றவைகளும் |
| सहस्रसाः | ஆயிரக்கணக்கான அன்னக்குவியல்களையுடையவைகளும் |
| मेधसाताः | எக்ஞங்களைக்கொடுக்கின்றவைகளும் |
| सनिष्यवः | எமக்குத் தனங்களைக்கொடுக்க விரும்புகின்றவைகளுமான இக்குதிரைகள் |
| समिथेषु | போர்களுள் |
| महोरत्नं | மிகுந்த, பகைவரின் தனத்தைக் |
| जभ्रिरे | கவர்ந்துகொள்கின்றன. |

| | |
|---|---|
| ये,ते-वाजिनः | எவைகள் இத்தன்மைத்தானவைகளோ, அவைகள் |
| हवेषु | போர்களில் |
| नः | எமக்கு |
| शं | இன்பங் கொடுப்பனவைகள் |
| भवन्तु | ஆகுக, |

---

இதுவுமது.

இரண்டாமந்திரம்.

பதின்மூன்றும் விநியோகம்.

மந்திரம் :

देवताता मितद्रवꣳस्वर्काः। जम्भयन्तोऽहिं वृकꣳ रक्षाꣳसि सने॰
म्यस्मद्युयवन्नमीवाः।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| देवताता | தேவர்களைப் பூசிக்கின்றவைகளும் |
| मितद्रवः | பெரும் வழியையுஞ் சிறியதாய்ச் செய்கின்றவைகளும் |
| स्वर्काः | இனிது ஆராதிக்கத் தக்கவைகளுமான குதிரைகள் |
| अहं वृकं | மலைப்பாம்புகள், செந்நாய்கள் போன்று |
| रक्षांसि | இராக்கதர்களைக் |
| जम्भयन्तः | கொல்கின்றவைகளாய் |
| सनेमि | விரைவில் |
| अमीवाः | நோய்களை |
| अस्मत् | எம்மிலிருந்து |
| युयवन् | வெளிப்படுத்துகின்றன. |

இதுவுமது

மூன்றும் மந்திரம்

பதினுன்காம் விநியோகம்.

மந்திரம் :

एष स्य वाजी क्षिपणिं तुरण्यति ग्रीवायां बद्धो अपिकक्ष आसनि । क्रतुं दधिक्राअनु संतवीत्वपथामङ्काᳫँ स्यन्वापनीफणत् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| एषस्यवाजी | இக் குதிரை |
| क्षिपणिं | சாட்டைக் கொம்பை |
| तुरण्यति | விரைவாக்குகின்றது, |
| ग्रीवायां | (இது) கழுத்திலும் |
| अपिकक्षे | பக்கத்திலும் |
| बद्धः आसनि | கட்டப்பட்டிருக்கின்றன் வாதலினென்க. |
| दधिक्रा | மற்றும், வழியைத் தடுக்கின்ற கல் முதலானவைகளின் |
| अनुक्रतुं | நோக்கங்களை யுணர்ந்து |
| संतवीत्वत् | ஆராய்ந்து கொண்டு |
| पथां | வழிகளின் |
| अङ्कांसि | மேடு பள்ளங்களையும் |
| अन्वापनी फणत् | ஒழுங்கு படுத்திக்கொண்டு |
| (तुरण्यति) | (நன்கு ஓடுகின்றன.) |

குறிப்பு :—கழுத்து முதலானவைகளை வாரால் இறுகக் கட்டியிருத்தலின், தேரைக் கவிழ்த்து விடுமாறு அலைக்காமலும் வழிகளின் முரண்பாடுகளையுணர்ந்து நேராய்ச் செல்லுதலால் தேர் அசையாமலும் குதிரைகள் ஓடிவருகின்றன என்பது. ஆசரிப்பவர்களின் வழக்கைத் தழுவி இவை நான்கு மந்திரங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. போதாயனர், நான்கா மந்திரத்தைமூன்றும் மந்திரத்துடன் சேர்த்து மூன்றுகப்பிரித்துள்ளார் என்பது.

(தேரின்மீதேறி

இதுவுமது

நான்காமந்திரம்.

பதினைந்தாம் விநியோகம்.

மந்திரம் :

उत स्मास्य द्रवतस्तुरण्यतः पर्णं न वेरनुवाति प्रगर्धिनः । श्येनस्येव ध्रजतो अङ्कसंपरि दधिक्राव्णस्सहोर्जा तरित्रतः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| द्रवतः | செல்கின்றதும் |
| तुरण्यतः | மிகவிரைவாய் ஓடுகின்றதும் |
| प्रगर्धिनः | குறித்த எல்லையை யடைய விரும்புவதுமாகிய |
| अस्य | இக் குதிரையின் |
| अङ्कसं | ஆடைமுதலிய அலங்காரம் |
| परि | எல்லா வுடம்பினுமிருந்து |
| वेः | பறவையின் |
| पर्णं | சிறகுகளைப் போன்று |
| वाति | மேலெழும்பியவைகளாய்க் காணப்படும்படி |
| श्येनस्यइव | பருந்தைப்போல் |
| दधिक्राव्णः | வழியிலுள்ள கற்கள் முதலானவைகளை நோக்குவதும் |
| ऊर्जासह | மிகுந்த வன்மையுடன் |
| तरित्रः | ஓடுகின்றதுமாய் |
| ध्रजतः | தேரை இழுத்துக் கொண்டு செல்கின்றது |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால் திரும்பிவரும் இரதத்தைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு: பருந்துபோல் மிக வேகமாய்ச் செல்கின்ற குதிரைகளின் ஆடை முதலான அலங்காரங்கள், பறக்கும் பறவையின் சிறகுகளைப்போல் மேலெழுந்து நன்கு காணப்படுகின்றன என்பதாம்.

ஓடவிடல்)

பதினாறும் விநியோகம்.

இரதத்தை அவிழ்த்து விடுதற்கு ஹோமம்

மந்திரம் :

आ मा वाजस्य प्रसवो जगम्यादा द्यावा पृथिवी विश्वशंभू । आ मा गन्तां पितरा मातरा चाऽऽ मा सोमो अमृतत्वाय गम्यात् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजस्य | உணவுப் பொருள்களின் |
| प्रसवः | உற்பத்தி |
| मा | எனக்கு |
| आजगम्यात् | வருக. |
| विश्वशंभू | உலக நலத்தை யுண்டாக்கும் |
| द्यावा पृथिवी | வானும் மண்ணும் |
| आगन्तां | எனக்கு வருவன ஆகுக. |
| पितरा मातरा | எமது பிதாமாதாக்களும் |
| मा | எம்மைக் குறித்து |
| आगन्तां | வருவார்களாக. |
| सोमः | சோமமும் |
| अमृतत्वाय | யான் தேவதையாதற் பொருட்டு |
| आगम्यात् | வருக. |

சாயணபாடியகருத்து.

யாகசாலைக்கு வந்த இரதத்தை அவிழ்த்துவிட்டுவிட வேண்டியதற்கு ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம். ஈண்டு, த்யாவாப்ருதுவீப்யா மிதம், என்று வேள்வித்தலைவன் தியாகஞ்செய்தல் வேண்டும்.

பதினேழாம் விநியோகம்.

குதிரை, வனநேற் சோற்றை முகர்ந்து பார்த்தல்.

மந்திரம் :

वाजिनो वाजजितो वाजं सरिष्यन्तो वाजं जेष्यन्तो बृहस्पतेर्भागमव जिघ्रत ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजजितः | அன்னங்களை வென்றுகொள்ள முயன்ற |
| हेअश्व ! | குதிரைகளே ! நீங்கள் |
| वाजं | அன்னத்தை வெல்வதற்கு |
| सरिष्यन्तः | ஓடுகின்றவர்களும் |
| वाजं जेष्यन्तः | அன்னத்தை வெல்கின்றவர்களுமாய் |
| बृहस्पतेः भागं | பிருகற்பதியின் பாகத்தை |
| अवजिघ्रत | முகந்து பார்ப்பீர்களாக |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தேரை இழுத்துக்கொண்டுஓடுங் குதிரைகளை, வனநெற் சோற்றை முகர்ந்து பார்க்கும்படி செய்தல் வேண்டும் என்பதாம்.

---

பதினெட்டாம் விநியோகம்.

திரும்பிவந்த குதிரை வனநெற் பொங்கலை முகந்துபார்த்தல்.

**वाजिनो वाजजितो वाजꣳ ससृवाꣳसो वाजं जिगिवाꣳसः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (यजुर्युजः) | மந்திரங்களால் பூட்டத் தக்கவைகளும் |
| ससृवांसः | ஓடினவைகளும் |
| जिगिवांसः | வெற்றியடையச் செய்தவைகளுமான |
| वाजिनः | குதிரைகளே ! நீங்கள் முகந்து பார்ப்பீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வந்து சேர்ந்த குதிரைகளை, வனநெற் சோற்றை முகந்துபார்க்கும்படி செய்தல் வேண்டுமென்பதாம்.

---

பத்தோன்பதாம் விநியோகம்.

குதிரையின் கடிவாள முதலிய சாமான்களிலுள்ள தூசுகளைத் துடைத்தல்.

மந்திரம் :

**बृहस्पतेर्भागे नि मृड्ढम् ।**

என்பது.

ஓடவிடல்)

பதவுரை.

| | |
|---|---|
| (हे वाजिनः) | குதிரைகளே ! நீங்கள் |
| बृहस्पतेर्भागे | பிருகற்பதியின் பாகத்தில் |
| निमृढ्वम् | புகிதமாவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், குதிரையின் கடிவாள முதலான சாமான்மீதுள்ள தூசுகளைத் துடைத்தல் வேண்டுமென்மென்பதாம்.

---

இருபதாம் விநியோகம்.

அவிழ்த்துவிட்ட இரதத்தைப் போற்றுதல்

மந்திரம் :

**इयं वस्सासत्या संधाऽभूद्यामिन्द्रेण समधध्वम्।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे रथाः ! | இரதங்களே ! |
| वः | உங்களுடைய |
| इयं संधा | ஆஜீ என்னும் இடம் வரை ஓடல் வேண்டுமென்னும் அப்பிரதிக்ஞை |
| सा सत्या | உண்மையுடையதாக |
| अभूत् | ஆகுக. (எதனாலெனின்?) |
| इन्द्रेण | இந்திரனுடைய அநுகிரகத்தால் |
| समधध्वम् | ஏற்றுக் கொண்டீர்கள் ஆதலினென்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அவிழ்த்த இரதத்தைப் போற்றல் வேண்டும் என்பதாம். ஈற்றில் ஸ்வாஹா என்பதைச் சேர்க்கவும்.

---

இருபத்தோராம் விநியோகம்.

துந்துபியை அவிழ்த்தற் பொருட்டு ஹோமம்.

மந்திரம் :

**अजीजिपत वनस्पतय इन्द्रं वाजं वि मुच्यध्वम् ॥**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हेवनस्पतयः ! | வனஸ்பதிகளின் விகாரங்களான துந்துபி களே ! நீங்கள் |
| इन्द्रं | வேள்வித்தலைவன் |
| वाजं | உணவுப்பொருளைக் குறித்து |
| अजीजिपत | வெற்றியடையும்படி செய்துவிட்டீர்கள். (அத்தகைய நீங்கள்) |
| विमुच्यध्वं | கட்டிவைத்திருந்த இடத்திலிருந்து விடுபடு வீர்களாக. |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், துந்துபிகளைக் கட்டிவைத்திருந்த இடத்திலிருந்து அவிழ்த்துவிட்டு ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம். வேள்வித் தலைவன் 'வனஸ்பதய இதம் என்று' தியாகஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

எட்டாமநுவாகம் முடிந்தது.

ஒன்பதாம் அநுவாகவிடச்யச்சருக்கம்.

क्षत्र ताभ्यं क्षत्र दाभ्यं परि धत्तोऽन्नदंपती ॥
जाये स्वाम्या ह्वये द्वार्यां रोहातं प्रति वक्तिसा ॥ २ ॥
अहं स्वाम्याह वाजश्च जुहुया द्वादशाऽऽहुती:
आयुर्दशभिरारोहेत्स्वयं बाहूद्रहस्सुवः ॥
संभुवं प्रेक्षतेऽन्नाय चतुर्भिस्तु महर्त्विजः ॥
दिग्भ्यो ध्नन्त्यासपुटकैरमृपुष्टिद्वयास्पदे ॥
स्वर्णं बस्तत्वचोर्दद्यात्पञ्चत्रिं शरित्रहोदिताः । ३ ॥

நெய்யில் நனைத்த ஆடையை அணிந்து கொள்ளல், பத்தினி தருப்பைப் பாயை யணிதல். வேள்வித்தலைவன் பத்தினியை அழைத்தல், ஆகுதிகளைச் செய்தல் யூபத்திலேறுதல், யூபத்திலேறி கைகளைத் தூக்குதல். பூமியைப் பார்த்தல். வேள்வித் தலைவனை ருத்விக்குகள் மண்ணால் அடித்தல் பொன் னின்மேலும் ஆட்டுத் தோலின்மேலும் அடி வைத்தல் என்பது.

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

### ஒன்பதாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் ஒன்பது பதங்களை கொண்டது
வாஜபேய யூபத்திலேறுவதைக்கூறும்
மந்திரங்கள்

क्षत्रस्योल्बमसि क्षत्रस्य योनिरसि जाय एहि सुवो रोहाव
रोहाव हि सुवरहं नावुभयोस्सुवो रोक्ष्यामि वाजश्च प्रसवश्चापिजश्च
क्रतुश्च सुवश्च मूर्धा च व्यश्नियश्चाऽऽन्त्यायनश्चान्त्यश्च भौवनश्च भुव
नश्चाधिपतिश्च। आयुर्यज्ञेन कल्पतां प्राणो यज्ञेन कल्पतामपानः ॥१॥
यज्ञेन कल्पतां व्यानो यज्ञेन कल्पतां चक्षुर्यज्ञेन कल्पताꣳ श्रोत्रं
यज्ञेन कल्पतां मनो यज्ञेन कल्पतां वाग्यज्ञेन कल्पतामात्मा यज्ञेन
कल्पतां यज्ञो यज्ञेन कल्पताꣳ सुवर्देवाꣳ अगन्मामृता अभूम
प्रजापतेः प्रजा अभूम समहं प्रजया सं मया प्रजा समहꣳ रायस्पो
षेण सं मया रायस्पोषोऽन्नाय त्वाऽन्नाद्याय त्वा वाजाय त्वा
वाजजित्यायै त्वाऽमृतमसि पुष्टिरसि प्रजननमसि ॥ २ ॥

எட்டாமநுவாகத்தில் இரதமோடுதல் கூறபட்டது. ஒன்பதாமநுவாகத்தில் யூபாரோஹணம் (யூபத்திலேறுதல்) கூறப்படுகின்றது.

---

முதலாம் விநியோகம்.

நெய்யிற்றோய்த்த துணியையணிந்து கொள்ளல்.

மந்திரம் :

क्षत्रस्योल्बमसि ।

என்பது,

பதவுரை.

(हे तार्प्य !) நெய்யிற் றோய்த்த துணியே நீ !

(யூபத்தில்

| | |
|---|---|
| क्षत्रस्य | அரசன் போன்ற வேள்வித் தலைவனுடைய |
| उल्बम् | கருப் பையாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

மகேந்திர தேவதையின் பொருட்டுச் சோமரசத்தைப் பிடித்துக் கொண்டு, துதியின் பொருட்டு பிரஸ்தோதாவினிடம் தருப்பையைக் கொடுத்தபிறகு, இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், நெய்தடவிய ஒரு ஆடையை யணிந்து கொள்ளல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு: நெய்தடவியதுணி தார்ப்பியம் எனப்படுகின்றது.

---

இரண்டாம் விநியோகம்.

பத்னி தருப்பைப்பாயை யணிந்துகொள்ளல்

மந்திரம் :

क्षत्रस्योनिरसि ।

என்பது

பதவுரை.

| | |
|---|---|
| (हे दर्भमयपट !) | தருப்பையால் நெய்த ஆடையே நீ ! |
| क्षत्रस्य | இராணி போன்ற வேள்வித் தலைவனுடைய பத்தினியின் |
| योनिः | குளிரைப் போக்குவதற்குக் காரணமாக |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தருப்பையால் நெய்த ஆடையை பத்தினி அணிந்து கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம். இது மூன்று விநியோகங்களையுடையது.

வேள்வித்தலைவன் பத்தினியைக் கூப்பிடுதல்.

மந்திரம்:

जाय एहि सुवो रोहाव रोहाव हि सुवरहं नावुभयोस्सुवोरोक्ष्यामि ।

என்பது.

ஏறுதல்)

பதவுரை.

| | |
|---|---|
| हे जाये | பத்தினியே ! நீ |
| सुवः | சுவர்க்கத்தில் |
| रोहाव | ஏறுவோம் |
| एहि | வருவாயாக. |
| सुवः रोहाव हि | வருகின்றேன் என்னைச் சுவர்க்கத்தில் ஏற்றி வைப்பீராக. |
| अहं नौ उभयोः | நான் நம்மிருவரையும் |
| सुवः | சுவர்ககம் |
| रोक्ष्यामि | ஏற்றிவைப்பேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித்தலைவன், தனது பத்தினியை, யூபத்தி லேறுதற் பொருட்டு அழைத்ததற்கு அவள் ஒப்புக்கொண்ட பிறகு தான் உறுதிகூறல் வேண்டு மென்பதாம்.

---

ஆறும் விநியோகம். இது பன்னிரண்டு விநியோகங்களையுடையது,

பன்னிரண்டு ஆகுதிகளைச் செய்தல்,

மந்திரம் :

**वाजश्च प्रसवश्चापिजश्चक्रतुश्च सुवश्च मूर्धा च व्यश्नियश्चाऽऽन्त्यायनश्चान्त्य श्च भौवनश्चभुवनश्चाधिपतिश्च ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजः | அன்னம் (உணவுப்பொருள்) |
| प्रसवः | அன்னவுற்பத்தி |
| अपिजः | மீண்டும் மீண்டும் உற்பத்தி |
| क्रतुश्च | போகவிடயம், அல்லது, யாகம். |
| सुवः | அதன் உற்பத்தி காரணமாகிய இரவி |
| मूर्धा | சுவர்க்க தேவதை. |
| व्यश्नियः | வான்தேவதை |
| अन्त्यायनः | பிரளய தேவதை |
| अन्त्यः | முடிவான தேவதை |

| | |
|---|---|
| भौवनः | உலக தேவதை |
| भुवनः | உலக வடிவதேவதை |
| अधिपतिः | பரமேசுரன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், யூபத்தில் எறுதற் பொருட்டு ஆகவனீயத்தில் பன்னிரண்டு ஆகுதிகள் செய்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு : வாஜ முதலானவைகள் சித்திரை முதலிய பன்னிரண்டு மாதங்களின் பெயர் விசேடங்கள் எனவுங் கொள்ளலாம்.

ஈண்டு, இப்போது, இவைகளனைத்தும், பிரியமடைவனவாக என்பது எஞ்சி நின்றது. 6...17

---

பதினெட்டாம் விநியோகம். இது, பத்து விநியோகங்களையுடையது.

யூபத்திலேறுதல்.

மந்திரம் :

आयुर्यज्ञेन कल्पतां प्राणो यज्ञेन कल्पतामपानोयज्ञेन कल्पतां व्यानो यज्ञेन कल्पतां चक्षुर्यज्ञेन कल्पताꣳ श्रोत्रं यज्ञेन कल्पतां मनो यज्ञेन कल्पतां वाग्यज्ञेन कल्पतामात्मा यज्ञेन कल्पतां यज्ञो यज्ञेन कल्पताम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आयुः | ஆயுள் |
| प्रणः | பிராணன் |
| अपानः | அபானன் |
| व्यानः | வியானன் |
| चक्षुः | கண் |
| श्रोत्रं | செவி |
| मनः | மனம் |
| वाक् | வாக்கு |
| आत्मा | சீவன் |
| यज्ञः | வேள்வி என்னு மிவைகள், |

ஏறுதல்)

| | |
|---|---|
| यज्ञेन | வேள்வியிலுள்ள யூபத்தி லேறுதலால் |
| कल्पतां | தத்தமது செயலில் வன்மையுடையன |
| | வாகுக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால் பத்துப்படிகளில் முறையாக யூபத்திலேறல் வேண்டுமென்பதாம்.



இருபத்தெட்டாம் விநியோகம்.

யூபத்தின் மேலேறிக் கைகளை யுயர்த்தல்;

மந்திரம் :

सुवर्देवा२ऽ अगन्मामृता अभूम प्रजापतेः प्रजा अभूम ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सुवः | சுவர்க்கத்திலுள்ள |
| देवान् | தேவர்களை |
| अगन्म | அடைந்தவராயிருக்கின்றோம். |
| अमृताः अभूम | அடைந்ததால், தேவர்களாகி விட்டனம், |
| प्रजापते | பிரசாபதியின் பிரியமானமக்களுலகில் |
| प्रजाःअभूम | செய்வதை மேற் கொண்டவர்களாவோம். |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், யூபத்தின் நுனியிலேறிக் கைகளையுயர்த்திக் கொண்டு சுவர்க்கத்தை யடைவதாக அபிநயங்காட்டிக்கொண்டு இவ்வாறு வேள்வித் தலைவன் கூறல் வேண்டும் என்பதாம்.



இருபத்தொன்பதாம் விநியோகம்.

இந்த உலகை (வீட்டை) நோக்குதல்.

மந்திரம் :

समहं प्रजया सं मया प्रजा समहँ रायस्पोषेण सं मया रायस्पोषः।

என்பது.

பதவுரை,

| | |
|---|---|
| अहं | யான் |
| प्रजया | புத்திரப்பேற்றுடன் |
| सं | கூடுவேனாக, |
| प्रजा | பிரசை |
| मया | என்னுடன் |
| सं | கூடுக, |
| अहं | (யான்) |
| रायस्पोषेण | தனத்துடன் |
| सं | கூடுவேனாக. |
| मया | என்னுடன் |
| रायस्पोष: | தனமானது |
| सं | கூடுக, |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்வித் தலைவன் இவ்வுலகைப் (தனது வீட்டைப்) பார்த்தல் வேண்டுமென்பதாம்.

---

முப்பதாம் விநியோகம்.

யூபத்திலிருந்து இறங்கும் வேள்வித் தலைவனை மண்ணால் அடித்தல்.

இது நான்கு விநியோகங்களை யுடையது.

மந்திரம் ;

**अन्नायत्वाऽन्नाद्याय त्वा वाजाय त्वा वाजजित्यायै त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अन्नाय | அன்னத்தின் பொருட்டும் |
| त्वा | உன்னை (எஜமானனை) |
| (हन्मि) | அடிக்கின்றேன். |
| अन्नाद्याय | அன்னமுண்பதன் பொருட்டும் |
| त्वा | உன்னை |
| (हन्मि) | அடிக்கின்றேன். |

எழுதல்)

| | |
|---|---|
| वाजाय | வன்மையின் பொருட்டும் |
| त्वा | உன்னை |
| (हन्मि) | அடிக்கின்றேன். |
| वाजजित्यायै | வன்மையை வெல்வதன் பொருட்டும் |
| त्वा | உன்னை |
| (हन्मि) | (அடிக்கின்றேன்.) |

சாயணபாடிய கருத்து.

யூபத்திலிருந்து கீழேயிறங்கும் வேள்வித்தலைவனை, உவர்ப்பூமி மண்ணை அரசிலையாற் கட்டிக்கொண்டு, அத்வர்யு, பிரமன், ஹோதா, உத்காதா என்னும் நால்வரும் முறையே நான்கு திசைகளிலும் இருந்துகொண்டு இம்மந்திரத்தால் அடித்தல் வேண்டுமென்பதாம்.

---

முப்பத்துநான்கு முப்பத்தைந்தாம் விநியோகங்கள்.

பொன்மேலும் ஆட்டுத்தோலின்மேலுங் கால்வைத்தல்.

மந்திரம் :

अमृतमसि पुष्टिरसि प्रजननमसि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे हिरण्य !) | பொன்னே ! நீ |
| अमृतं | கெடாததாக |
| असि | இருக்கின்றாய். |
| (हे बस्ताजिन !) | ஆட்டுத் தோலே ! நீ |
| पुष्टिः | உறுதியுடையதாக |
| असि | இருக்கின்றாய். |
| प्रजननं | உண்டுபண்ணுவதாகவும் |
| असि | இருக்கின்றாய். |

சாயணபாடிய கருத்து.

வேள்வித்தலைவன், இம்மந்திரத்தால், யூபத்திற்குக் கிழக்கில் தலைகிழக்காய் விரித்துள்ள ஆட்டுத்தோலின் மேல் இடதுகாலையும், அதன் மேல் வைத்துள்ள நூறு குன்றியிடைப் பொன்னின் மேல் வலதுகாலையும் வைத்தல் வேண்டும் என்பதாம்.

குறிப்பு: பிறகு அத்திமர நாற்காலியை வைத்து வேள்வித் தலைவன் அதன்மீது ஏறல் வேண்டும், ஏறுங்கால், ' दिवंप्रोष्टानि, என்பது முதலியதால் அத்வரியு போற்றல் வேண்டும் என்பது.

ஒன்பதாமநுவாகம்

முற்றிற்று.

---

பத்தாம் அநுவாக விடயச்சுருக்கம்.

वाजसप्तभिरन्नस्य होमोदेवयजुस्त्रयात् ।
अभिषिंचेत्स्वामिनन्तंदशमन्त्रा इहेरिताः ॥

ஏழு மந்திரங்களால் ஏழு ஹோமங்களும் வேள்வித்தலைவனுக்கு அபிஷேகமுஞ் சொல்லப்படுகிறது.

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பத்தாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்தாறு பதங்களைக் கொண்டது.

அன்ன உற்பத்தி ஹோமங்களைக் கூறு மந்திரங்கள்.

वाजस्येमं प्रसवस्सुषुवे अग्रे सोमꣳ राजान मोषधीष्वप्सु । ता अस्मभ्यं मधुमतीर्भवन्तु वयꣳ राष्ट्रे जाग्रियाम पुरोहिताः । वाज-स्येदं प्रसव आबभूवेमाच विश्वा भुवनानि सर्वतः । सविराजं पर्येति प्रजानन्प्रजां पुष्टिं वर्धयमानो अस्मे । वाजस्येमां प्रसवश्शिश्रिये दिवमिमा च विश्वा भुवनानि सम्राट् । अदित्सन्तं दापयतु प्रजानन्रयिम् ॥१॥ च नस्सर्ववीरां नि यच्छतु । अग्ने अच्छा वदेह नः प्रति नः सुमना भव । प्र णो यच्छ भुवस्पते धनदा असि नस्त्वम् । प्र णो यच्छत्वर्यमा प्र भगः प्र बृहस्पतिः । प्र देवाः प्रोत सूनृताः प्र वाग्देवी ददातु नः । अर्यमणं बृहस्पतिमिन्द्रं दानाय चोदय ।

वाचं विष्णुꣳ सरस्वतीꣳ सवितारम् ॥२॥ च वाजिनम् । सोमꣳ राजानं वरुणमग्निमन्वारभामहे । आदित्यान्विष्णुꣳ सूर्यं ब्रह्माणं च बृहस्पतिम् । देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्याꣳ सरस्वत्यै वाचो यन्तुर्यन्त्रेणाग्नेस्त्वा साम्राज्येनाभि षिञ्चामीन्द्रस्य बृहस्पतेस्त्वा साम्राज्येनाभि षिञ्चामि ॥३॥

ஒன்பதாமநுவாகத்தில் யூபாரோஹணம் (ஏறுதல்) கூறப்பட்டது. பத்தாமநுவாகத்தில் அன்னங்கள் உண்டாதற்குரிய ஹோமங்கள் கூறப்படுகின்றன. இது, வாஜப்ரஸவீய ஹோமமெனப்படும்.

---

முதல் ஹோமம்,

மந்திரம் :

वाजस्येमं प्रसवस्सुषुवे अग्रे सोमꣳ राजानमोषधीष्वप्सु । ता अस्मभ्यं मधुमतीर्भवन्तु वयꣳ राष्ट्रे जाग्रियाम पुरोहिताः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजस्य | அன்னத்தை |
| प्रसवः | உண்டுபண்ணும் பரமேசுரன், |
| अग्रे | சிருட்டிகாலத்தில் |
| ओषधीषु | கொடிசெடிகளிலும் |
| अप्सु | நீரிலும் (சாரமாயுள்ள) |
| राजानं | விளக்கமுடைய |
| सोमं इमं | சோமக்கொடியாகிய இதை |
| सुषुवे | உண்டாக்கியருளினன். |
| ताः | அத்தகைய ஓஷதிகளும் நீரும் |
| अस्मभ्यं | எமக்கு |
| मधुमतीः | இன்சுவையுடையவைகள் |
| भवन्तु | ஆகுக. |
| राष्ट्रे | இவ்விராச்சியத்தில் |

| | |
|---|---|
| पुरोहिताः वयं | வேள்வியில் முன்செல்வோர்களான யாம் |
| जाग्रियाम | ஞாபகமுடையவர்களாவோமாக. |

சாயணபாடியக் கருத்து.

கிராமத்திலுள்ள எள் முதலான எழுவகைத் தானியங்களைத் தனித்தனி கஞ்சி காய்ச்சி ஒன்றாய்க் கலக்கிக் கொண்டு, அத்திமரச் சுருவத்தால் முதன் முறை வேள்வித் தலைவனுக்கு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது அன்ன ஹோமம்.

மந்திரம் :

वाजस्येदं प्रसव आ बभूवेमा च विश्वा भुवनानि सर्वतः। सविराजं पर्येति प्रजानन्प्रजां पुष्टिं वर्धयमानो अस्मे।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजस्य | அன்னத்தை |
| प्रसवः | உண்டுபண்ணிய பரமேசுரன், |
| इदं | ஆசரிக்கின்ற இக்கருமத்தை |
| आबभूव | உண்டாக்கினன். |
| इमा | இந்தப் |
| विश्वाभुवनानि | புவனங்களனைத்தையும் |
| सर्वतः | முழுதும் உண்டாக்கினன். |
| सः | அப்பரமேசுரன் |
| अस्मे | எம்பொருட்டு |
| प्रजां | பிரசையையும் |
| पुष्टिंचं | வன்மையையும் |
| वर्धयमानः | வளர்க்கின்றவனாய் |
| प्रजानन् | எனது கருத்தை நன்கு உணர்ந்து |
| विराजं | ஹோமஞ் செய்யப்பெற்ற இவ்வன்னத்தை |
| पर्येति | யாண்டும் பரப்புவனாக. |

சாயணபாடியக் கருத்து.

முன்போலவே அக் கஞ்சியால் இரண்டாமுறையும் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றுவது அன்ன ஹோமம்

மந்திரம் :

**वाजस्येमां प्रसवश्शिश्रिये दिवमिमा च विश्वा भुवनानि सम्राट् । अदित्सन्तं दापयतु प्रजानन्रायिं च नस्सर्ववीरां नि यच्छतु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| वाजस्य | அன்னத்தை |
| प्रसवः | உண்டுபண்ணுகின்ற பரமேசுரன் |
| इमां दिवं | இவ் வானையும் |
| इमाच विश्वा भुवनानि | இப்புவனங்களனைத்தையும் |
| शिश्रिये | தொடர்ந்திருக்கின்றனன். |
| सम्राट् | அனைத்திற்கும் அரசனுய் |
| अदित्सन्तं | அவிகொடுக்க விரும்பாத |
| मां | என்னை |
| प्रजानन् | உணர்ந்து |
| दापयतु | கொடுக்கச் செய்வானுக. |
| नः | எமக்கு |
| सर्ववीरां | மக்கள், ஏவலாள் முதலான வீரர்களுடன் |
| रयिंच | தனத்தையும் |
| नियच्छतु | நன்கு அளிப்பானுக. |

சாயணபாடியக் கருத்து.

முன்போன்றே மூன்றுமுறையும் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

நான்காவது அன்ன ஹோமம்

மந்திரம் :

**अग्ने अच्छा वदेह नः प्रति नस्सुमना भव। प्र णो यच्छ भुवस्पते धनदा असि नस्त्वम्।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **हे अग्ने !** | அக்கினியே ; நி |
| **इह** | இக்கருமத்தில் |
| **नः** | எமக்கு |
| **अच्छ** | ஒருமைப்பாடாக |
| **वद** | நலத்தைக் கூறுவாயாக. |
| **नः** | எமக்கு |
| **सुमना भव** | அருளுடைய மனத்தனுவாயாக. |
| **हे भुवस्पते** | புவனபதியே ! |
| **नः** | எமக்கு |
| **प्रयच्छ** | மிகுதியாய்த்தனங் கொடுப்பாயாக. (எனெனின் ?) |
| **नः** | எமக்கு நீ |
| **त्वं** | தனமளிப்போனுக |
| **धनदा** | இருக்கின்ருய் |
| **असि** | ஆதலினென்க. |

சாயணபாடியக் கருத்து.

முன்போன்றே நான்காமுறையும் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

ஐந்தாவது அன்ன ஹோமம்

மந்திரம் :

**प्र णो यच्छत्वर्यमा प्र भगः प्र बृहस्पतिः। प्र देवाः प्रोत सूनृताःप्र वाग्देवी ददातु नः।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अर्यमा | அரியமன் |
| भगः | பகன் |
| बृहस्पतिः | பிருகற்பதி, என்னுமிவர்கள் |
| नः | எமக்கு |
| प्रयच्छतु | தனத்தைக் கொடுப்பார்களாக, மற்றும் |
| देवाः | ஏனைய தேவர்களும் |
| (ददातु) | (தனங் கொடுப்பார்களாக.) |
| सूनृता | மற்றும், பிரியமுள்ள தேவியும் |
| वाग्देवी | கலைமகளும் |
| ददातु | தனங் கொடுப்பார்களாக. |

சாயணபாடியக் கருத்து.

முன்போன்றே ஐந்தாமுறையும் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

ஆறுவது அன்ன ஹோமம்

மந்திரம் :

अर्यमणं बृहस्पति मिन्द्रं दानाय चोदय। वाचं विष्णु॰ सरस्वती॰ सवितारं च वाजिनम्।

என்பது,

பதவுரை,

| | |
|---|---|
| (हे ईश्वर!) | (ஈசுரனே! மீண்டும்) |
| दानाय | தனத்தை யளித்தற் பொருட்டு |
| अर्यमणं | அரியமனையும் |
| बृहस्पतिं | பிருகற்பதியையும் |
| इन्द्रं | இந்திரனையும் |
| वाचं | வாக்கையும் |
| विष्णुं | விஷ்ணுவையும் |
| सरस्वतीं | சரசுவதியையும் |
| सवितारं | சவிதாவையும் |

| | |
|---|---|
| वाजिनं | அன்னத்திற்குத் தலைவனையும் |
| चोदय | ஏவுவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

முன்போன்றே ஆறுமுறையும் ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

ஏழாவது அன்ன ஹோமம்

மந்திரம் :

**सोमꣳ राजानं वरुणमग्निमन्वारभामहे। आदित्यान्विष्णुꣳ सूर्यं ब्रह्माणं च बृहस्पतिम्।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सोमंराजानं | சோமராசனையும் |
| वरुणं | வருணனையும் |
| अग्निं | அக்கினியையும் |
| आदित्यान् | ஆதித்தர்களையும் |
| विष्णुं | விஷ்ணுவையும் |
| सूर्यं | சூரியனையும் |
| ब्रह्माणं | பிரமனையும் |
| बृहस्पतिं | பிருகற்பதியையும் ஆதரித்துக்கொண்டு |
| अन्वारभामहे | கருமத்தைத் தொடங்குகின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

முன்போன்றே ஏழாமுறையும் ஹோமஞ் செய்தல் வேண்டு என்பதாம்.

குறிப்பு : முன்னர், சோமராசனை ஆதரித்துக்கொண்டு, பிறகு, கருமத்திற்குரிய தேவர்களையும் ஆதரித்துச்கொண்டு கருமத்தைத் தொடங்குகின்றேனுதலின் அவர்கள் இதற்கு அநுக்கிரகஞ் செய்வார்களாக என்பது உட்கிடை.

ஏழு ஹோமங்களுஞ் செய்து மீந்த கஞ்சியை ஒன்றாய்ச் சேர்த்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

வேள்வித் தலைவனுக்கு அபிடேகஞ் செய்தலில்
முதலாம் அபிடேகம்

மந்திரம் :

देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्याᳪ सरस्वत्यै वाचो यन्तुर्यन्त्रेणाग्नेस्त्वा साम्राज्येनाभि षिञ्चामि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| देवस्य सवितुः | சவிதா தேவனுடைய |
| प्रसवे | ஆணை யிருக்குமிடத்து |
| अश्विनोः | அசுவினிகளின் |
| बाहुभ्यां | தோள்களாலும் |
| पूष्णः | பூஷாவின் |
| हस्ताभ्यां | கைகளாலும் |
| सरस्वत्यै | சரசுவதி |
| वाचः | வாக்கு |
| यन्तुः अग्नेः | ஏவும் அக்கினி என்னும் இவர்களுடைய |
| यन्त्रेण | நியமத்தால் |
| त्वा | உன்னை (உனக்கு) |
| साम्राज्येन | சாம்ராச்சியத் தன்மையின்பொருட்டு |
| अभिषिञ्चामि | அபிஷேகஞ் செய்கின்றேன் |

சாயணபாடியக் கருத்து.

பிறகு, உத்காதாக்கள், பிரமனுடைய ஆணையால் சாமமறைபாடும்போது அத்திமரநாற்காலியை ஆகவனீயத்திற்குத் தெற்கில் போட்டு, அதில் எஜமானனை உட்காரவைத்து அக்கினியைத் தொட்டுக்கொண்டிருக்கும்படி செய்து விட்டு அக்கஞ்சியை அபிடேகஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாம் அபிடேகம்

மந்திரம்:

इन्द्रस्यत्वा साम्राज्येनाभि षिञ्चामि ।

என்பது.

இதில், இந்திரனுடைய என்பது விசேடம், மற்றவை முன்போல்.

சாயணபாடியக் கருத்து.

இரண்டாமுறையும் முன்போன்றே வாயிலிருந்து அக்கஞ்சி ஒழுகுமாறு அபிடேகஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

மூன்றும் அபிடேகம்

மந்திரம் :

**बृहस्पतेस्त्वा साम्राज्येनाभिषिञ्चामि॥**

என்பது.

இதில், பிருகஸ்பதியின், என்பது விசேடம், மற்றவை முன்போல்.

சாயணபாடியக் கருத்து.

மூன்றுமுறையும் அவ்வாறே அபிடேகஞ் செய்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுப்பல்வகைப் பச்சிலைச் சாறுகளைச் சேர்த்து முகத்திலிருந்து வழியுமாறு அபிடேகஞ் செய்தலும் உண்டு.

---

பதினேழாமநுவாகவிடயச் சுருக்கம்.

अग्निस्सदशाऽऽन्नाता उज्जितीर्वाचयेदमूः ॥
यजमानं रथेष्वेषु धावत्स्वध्वर्युरादरात् ॥

இப் பதினேழு மந்திரங்களை வேள்வித்தலைவன், இரதத்தின்பேரில் ஏறி ஓடுங்கால் வேட்போன் ஓதும்படி செய்வித்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பதினேழாமநுவாகம்

வாஜபேயத்திற்கு உரிய இரதத்தின் மேலேறி ஓடும்போது ஓதிவைக்கும் ஜய மந்திரங்கள்.

अग्निरेकाक्षरेण वाचमुदंजयदश्विनौ द्व्यक्षरेण प्राणापानावुदं
जयतां विष्णुस्त्र्यक्षरेण त्री ल्लोकानुदंजयत्सोमश्चतुरक्षरेण चतुष्पदः
पशूनुदंजयत्पूषा पञ्चाक्षरेण पङ्क्तिमुदंजयद्धाता षडक्षरेण षड् तूनुदं

जयन्मरुतः सप्ताक्षरेण सप्तपदा॑ँ शक्करीमुदजयन्बृहस्पतिं रष्टाक्षरेण गायत्रीमुदजयन्मित्रो नवाक्षरेण त्रिवृत॑ँ स्तोममुद जयत् ॥ १ ॥ वरुणो दशाक्षरेण विराजमुदजयदिन्द्र एकादशाक्ष रेण त्रिष्टुभमुदजयद्विश्वेदेवा द्वादशाक्षरेण जगतीमुदजयन्वसवस्त्रयो दशाक्षरेण त्रयोदश॑ँ स्तोममुदजयन्रुद्राश्चतुर्दशाक्षरेण चतुर्दश॑ँ स्तोममुदजयन्नादित्याः पञ्चदशाक्षरेण पञ्चदश॑ँ स्तोममुदजयन्नदि तिष्षोडशाक्षरेण षोडश॑ँ स्तोममुदजयत्प्रजापतिः सप्तदशाक्षरेणसप्त दश॑ँ स्तोममुदजयत् ॥ २ ॥

பத்தாம் அநுவாகத்தில், அன்ன ஹோமங்கள் சொல்லப்பட்டன இதில் உஜ்ஜிதி மந்திரங்கள் சொல்லப்படுகின்றன.

---

மந்திரம் :

अग्निरेकाक्षरेण वाचमुदजयदश्विनौ द्व्यक्षरेण प्राणापानावुदजयतां विष्णु स्त्र्यक्षरेण त्रीँल्लोकानुदजयत्सोमश्चतुरक्षरेण चतुष्पदः पशूनुदजयत्पूषा पञ्चाक्षरेण पङ्क्तिमुदजयद्धाता षडक्षरेण षडृतूनुदजयन्मरुतः सप्ताक्ष रेण सप्तपदा॑ँ शक्करीमुदजयन्बृहस्पति रष्टाक्षरेणगायत्रीमुदजयन्मित्रो नवाक्षरेण त्रिवृत॑ँ स्तोममुदजयद्वरुणो दशाक्षरेण विराजमु दजयदिन्द्र एकादशाक्षरेण त्रिष्टुभमुदजयद्विश्वेदेवा द्वादशाक्षरेण जग तीमुदजयन्रुद्राश्चतुर्दशाक्षरेण चतुर्दश॑ँ स्तोममुदजयन्नदितिः षोड शाक्षरेण षोडश॑ँ स्तोममुदजयत्प्रजापतिस्सप्तदशाक्षरेण सप्तदश॑ँ स्तोममुदजयत् ॥ २ ॥

என்பது.

உரை.

ஆஶ்ராவய, என்பது முதலிய பதினேழு எழுத்துக்களுள் ஒவ்வொரு எழுத்தைக் கூட்டிக் கூட்டிக்கொண்டு அம்மந்திரத்தை ஓதி, அதன் வலியால் அக்கினி முதலான பதினேழு தேவதைகள், வாக்கு முதலியவைகளை எழுப்பி விட்டன. அல்லது, வேறுவிதியில், ஒரு எழுத்து மந்திரநூல் விளக்கத்தால் அக்கினி பீஜமாம், அவ்வொரு எழுத்தால் அக்கினியினின்று வாக்கு எழுந் தது. இரண்டெழுத்தாகிய பேசாமந்திரத்தால், பிராணனும் அபானனும்

எழும்புகின்றன. இவ்வாறே, மூவெழுத்து முதலான மந்திரங்களையும் யூகித்துக்கொள்க. இனி, மந்திர எழுத்துக்களின் எண்ணால் மூன்றுலக வெற்றி கூறப்பட்டதென்றுணர்க. திரிவிருத் (மும்முறை திருப்பல்) ஸ்தோமத்தில் (கீதமுடைய துதிமஞ்சரியில்) உள்ள இருக்குக்களுக்கு ஒன்பது எண்ணுடன் கூடியிருக்கின்றதால் வெற்றியாமென்பது உணரற்பாலது. ஈண்டு, ஜெயம் பெற்றமை, அதிட்டானமாய் நின்று தோற்றுவித்தலாம். இரதத்தில் ஏறிப் போகும் விதி முன் கூறப்பட்டுள்ளது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தை, வேள்வித்தலைவன் இரதத்தின்மீது ஏறி ஓடவிடும் போது ஓதுவித்தல் வேண்டும். இது உஜ்ஜிதி மந்திரமெனப்படும் என்பதாம்.

பதினோராமநுவாகம் முடிந்தது.

---

பன்னிரண்டாமநுவாக விடயச்சுருக்கம்

उपेत्यति ग्राह्यमैन्द्रं गृहीत्वैषेति सादयेत् ॥

उत्तरेषु चतुर्ष्वेवमया सप्तदश ग्रहान् ॥

प्राजापत्यान् प्रगृह्णाति मन्त्राद्वादशर्णिताः ॥ १ ॥

ஐந்து அதிக்கிராஹியக் கிரஹணம், அதன் சாதனம், பதினேழு பிராசாபத்ய கிரஹங்களைக் கிரஹித்தல் என்பது.

---

## முதற் காண்டம் ஏழாம்பிரபாடகம்
## பன்னிரண்டாமநுவாகம்

இவ்வநுவாக விநியோகங்கள் முன்னர்ச் செய்யப்படுகின்றவைகள். இரண்டு பஞ்சாதிக்குமேல் பதின்மூன்று பதங்களைக் கொண்டது.

அதிக்கிராகியம் என்னும் மரப்பாத்திரங்களில் சோமரசத்தைப்பிடித்து வத்தற்குரிய மந்திரங்கள்.

उपयामगृहीतोऽसि नृषदं त्वा द्रुषदं भुवनसदमिन्द्राय जुष्टं गृह्णा
म्येष ते योनिरिन्द्राय त्वोपयामगृहीतोऽस्यप्सुषदं त्वा घृतसदं व्यो
मसदमिन्द्राय जुष्टं गृह्णाम्येष ते योनिरिन्द्राय त्वोपयामगृहीतोऽसि

पृथिविषदं त्वाऽन्तरिक्षसदं नाकसदमिन्द्राय जुष्टं गृह्णाम्येष ते योनिरिन्द्राय त्वा । ये ग्रहाः पञ्चजनीना येषां तिस्रः परमजाः । दैव्यः कोशः ॥१॥ समुब्जितः । तेषां विशिप्रियाणामिषमूर्जꣳ समग्रभीमेष ते योनिरिन्द्राय त्वा । अपाꣳ रसमुद्वयसꣳ सूर्यरश्मिꣳ समाभृतम् । अपाꣳ रसस्य यो रसस्तं वो गृह्णाम्युत्तममेष ते योनिरिन्द्रायत्वा । अया विष्ठा जनयन्कर्वराणि स हि घृणिरुरुर्वराय गातुः । स प्रत्युदैद्धरुणो मध्वो अग्रꣳ स्वायां यत्तनुवां तनूमैरयत । उपयामगृहीतोऽसि प्रजापतये त्वा जुष्टं गृह्णाम्येष ते योनिः प्रजापतये त्वा ॥ २ ॥

பதினோராமநுவாகத்தில் உச்சிதிகள் கூறப்பட்டன. இவ்வநுவாக மந்திரங்களால் ஆக்கிராயணபாத்திரத்திற் சோமரசத்தை நிறைத்துவைத்துவிட்ட பின்னர், இந்திரதேவதைக்குரிய அதிக்கிராகிய பாத்திரங்கள் ஐந்திலும் சோமரசத்தை நிறைத்து அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டுமென்பது.

---

முதலாவது இரண்டாவது விநியோகங்கள்

முதலாவது சோமரசத்தைப் பிடித்துவைத்தல்.

மந்திரம் :

उपयामगृहीतोऽसि नृषदं त्वा द्रुषदं भुवनसदमिन्द्राय जुष्टं गृह्णाम्येष ते योनिरिन्द्राय त्वा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे प्रथमातिग्राह्य !) | முதலாவதெடுக்குஞ் சோமரசமே ! நீ |
| उपयामेन | மண்மயமாகிய பாத்திரத்தினுல் |
| गृहीतः असि | எடுத்துக்கொள்ளப்பட்டிருக்கின்றுய். |

| | |
|---|---|
| नृषदं | மக்கட்குள்ளும் |
| द्रुषदं | கொடி செடிகட்குள்ளும் |
| भुवनसदं | புவனங்கட்குள்ளும் தலைவனு யிருக்கின்றவனும் |
| इन्द्राय | இந்திரனுக்கு |
| जुष्टं | பிரியனுமாகிய |
| त्वा | உன்னை |
| गृह्णामि | எடுத்துக் கொள்கின்றேன். |
| एषः | இது |
| ते | உனது |
| योनिः | இடம் |
| इन्द्राय | இந்திரன் பொருட்டு |
| त्वा | உன்னை (இங்கு) |
| (सादयामि) | வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முதலாவது அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரசத்தை நிறைத்து அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டுமென்பதாம்.

---

மூன்றுவது நான்காவது விநியோகங்கள்.
இரண்டவது சோமரசத்தை யெடுத்துவைத்தல்

மந்திரம் :

उपयामगृहीतोऽस्यप्सुषदं त्वा घृतसदं व्योमसदमिन्द्राय जुष्टं गृह्णा म्येष ते योनिरिन्द्राय त्वा ।

என்பது.

பதவுரை.

முன் மந்திரத்திற் கூறியவாறே கொள்க. ஈண்டு, தண்ணீர்க்குள்ளும், நெய்க்குள்ளும், ஆகாயத்திலும் இருக்கின்ற உன்னை என்பது விசேடம் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் இரண்டாம் அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரசத்தை நிறைத்துவைத்தல் வேண்டும் என்பதாம்.

ஐந்தாவது ஆறுவது விநியோகங்கள்.

மூன்றவது சோமாசத்தை யெடுத்துவைத்தல்

மந்திரம் :

**उपयामगृहीतोऽसि पृथिविषदं त्वाऽन्तरिक्षसदं नाकसदमिन्द्राय जुष्टं गृह्णाम्येष ते योनिरिन्द्रायत्वा ।**

என்பது.

பதவுரை.

முன்போலவே கொள்க. ஈண்டு மண்ணுலகிலுள்ளதும், வானிலுள்ளதும், சுவர்க்கத்திலுள்ளதும் என்பது விசேடம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், மூன்றுவது அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரசத்தை நிறைத்துவைத்தல் வேண்டுமென்பதாம்.



ஏழாவது எட்டாவது விநியோகங்கள்

நான்காமுறை சோமரசத்தைப் பிடித்துவைத்தல்

மந்திரம் :

**ये ग्रहाः पञ्चजनीना येषां तिस्रः परमजाः । दैव्यः कोशः समुब्जितः । तेषां विशिप्रियाणामिषमूर्जं समग्रभीमेष ते योनिरिन्द्राय त्वा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **येग्रहाः** | எந்த அதிக்கிராகியபாத்திரங்கள் |
| **पञ्चजनीना** | ஐந்து பிராணிகட்கு இனியவைகளோ, |
| **येषां** | எவைகட்கு |
| **तिस्रः** | தீ, இந்திரன், இரவி மூன்றும் |
| **परमजाः** | காரணங்களோ, |
| **(येषां)** | (மற்றும், எவைகளின் மகிமையால்) |
| **दैव्यः** | வானிலுண்டாகும் |

कोश: மேகம்

समुब्जित: மழை பெய்கின்றதோ,

तेषांविशिप्रियाणां பல்வகைக் கழுத்துக்களையுடைய அவ் வதிக்கிராகிய பாத்திரங்கள் நிறையும்படி

ऊर्जं வன்மைதருஞ் சோமரசத்தை

समग्रभीं நன்கு வார்க்கின்றேன்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் நான்காவது அதிக்கிராகிய பாத்திரத்தில் சோமரத்தை நிறைத்து அதனிடத்திலேயே வைத்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு: ஈண்டு, ஐந்துயிர்கள் என்றது, தேவர், மனிதர், அசுரர், ரக்ஷர், கந்தருவர்களாவர். அல்லது, வேடரை ஐந்தாவதாகக் கொண்ட மனிதர் எனப்படுவார்கள்.

---

ஒன்பதாவது பத்தாவது விநியோகங்கள்

ஐந்தாமுறை சோமரசத்தைப் பிடித்து வைத்தல்

மந்திரம் :

अपाꣳ रसमुद्वयसꣳ सूर्यरश्मिꣳ समाभृतम् । अपाꣳ रसस्ययोरसस्तं
वो गृह्णाम्युत्तममेष ते योनिरिन्द्राय त्वा ।

என்பது

பதவுரை.

(हे अतिग्रह्य !) அதிக்கிராகியங்களே !

व: உங்களுக்குள்

उत्तमं மிகச்சிறந்ததும்

अपां रसं தண்ணீரின் சாரமும்,

उद्वयसं அன்னமும், உயிர் வாழ்தற்குக் காரணமும்,

सूर्यरश्मिं பரிபக்குவத்திற்குக் காரணமுமாகிய வெய்யிலும்,

समाभृतं வானிலிருந்துகொண்டு வரப்பெற்றதும்

பிடித்தல்)

| | |
|---|---|
| अपांरसस्य | நீர்களின் சாரத்தின் |
| योरसः | சாரமுமாகியது எதுவோ, |
| तं | அத்தகைய சோமரசத்தை |
| गृह्णामि | நிறைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஐந்தாவது அதிக்கிரகிய பாத்திரத்தில் சோம ரசத்தை நிறைத்து, முற்கூறிய மந்திரத்தால் அங்கேயே வைத்துவிடல் வேண்டு மென்பதாம்.

---

பதிமூன்றாவது பன்னிரண்டாவது விநியோகங்கள்

பிரஜாபதிக்குச் சோமரசம் பிடித்து வைத்தல்.

மந்திரம் :

अया विष्ठा जनयन्कर्वराणि स हि घृणिरुरुर्वराय गातुः । स प्रत्युदैद्धरुणो
मध्वो अग्रꣳ स्वायां यत्तनुवां तनूमैरयत । उपयामगृहीतोऽसि प्रजा
पतयेत्वाजुष्टं गृह्णास्येष ते योनिः प्रजापतये त्वा ॥

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अया | இப்பிரசாபதி |
| कर्वराणि | கருமங்களைத் |
| जनयन् | தேடிக்கொண்டு |
| विष्ठा | சிறப்பாயிருக்கின்றார். |
| सः | அவர் |
| घृणिः | ஒளியுடையவராய் |
| वराय | சிறந்த கருமபயனின் |
| उरुःगातुः | பெரும்வழியாக இருக்கின்றார். |
| सः | ஆதலின், அப் பிரசாபதி |
| मध्वः | கருமபயனைத் |
| धरुणः | தாங்குகின்றவராய் |
| अग्रं | எனக்கு முன் |
| प्रत्येतु | வருவாராக. |

| | |
|---|---|
| स्वायां तनुवां | தனது உடம்பில் |
| तनूं | எனது தேகத்தைச் |
| यतूऐरयत | சேர்க்கின்றார் |
| | ஆதலின், யான் பலனை யடைவேன். |

சாயணபாடியக் கருத்து.

சோமரசத்தைப் பிடித்துவைக்கும் மந்திரம் முன்போன்றதேயாம்.

பன்னிரண்டாம் அநுவகாம்
முற்றிற்று.

வாஜபேய பரிசேடம்.

இவ்வாறு செய்தபிறகு, மகேந்திர சஸ்திரத்தை ஓதுதல் முதலிய கிரியைகளை, சோமயாகத்திற் செய்ததுபோலவே தொடங்கிச் செய்து கொண்டு, அதிக்கிராகியங்களை, அதாவது அதிக்கிராகிய மென்னும் பாத்திரத்திலுள்ள சோமரசங்களை ஓமஞ்செய்தல் வேண்டும். இந்த மத்தியானசவன காலத்திலே, இரண்டாவது பரியாய சஸ்திரத்தின் பொருட்டு, பிரமசாமத்தை (சாமப்பாடலை)ப்பாடல் வேண்டும்.

பிறகு, அத்வரிவு, சாரசுவத பிரசாபதி தேவதைகளின் சருக்களை (பொங்கல்களை)க் கொண்டுவந்து அந்தர் வேதியில் வைத்துவிட்டு, இஷ்டியிற் செய்ததுபோன்றே அவதானம் செய்து (பகுந்து) கொண்டு ஆகவனீயத்தில் ஓமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, எஞ்சிய கிரியைகளை, சோமயாகத்திற் செய்ததுபோற் செய்து வரல் வேண்டும்.

மூன்றாவது சவனத்தில், எல்லாப் பசுக்களின் அங்கங்களையும் ஓமஞ் செய்துவிட்டு, ஆக்கினி மாருத சஸ்திரம் ஓதும்வரை சோகமயாகம் போலவே செய்தல் வேணடும். இதிலும் மூன்று பரியாய சஸ்திரங்களையும் ஓதல் வேண்டும். சூரிய னுடுங்கும்போது, ஷோடசி சஸ்திர முதலாயுள்ள தோத்திரங்களை ஓதுதற் பொருட்டு, பொன்னால் உபாகரணஞ் (நியமனம்) செய்தல் வேண்டும்.

இவ்வாறு, தோத்திரமும், சஸ்திரமுமுடிந்தபிறகு, ஷோடசிக் கிரகத்தை (சோமரசத்தை) ஓமஞ் செய்துவிட்டு எஞ்சியதை அருந்தல் வேண்டும்.

பிறகு, எஞ்சிய சோமரசத்தையும் ஓமஞ் செய்துவிட்டு பிரசாபதியின் தோத்திரத்தின்பொருட்டு, உபாகரணஞ் செய்தல் (தருப்பை கொடுத்தல்)

வேண்டும். தோத்திரமும், சஸ்திரமும் ஆனபிறகு, ஓமஞ் செய்வதன் பொருட்டுச் செல்லுங்கால், ஹோதாவின் சமசத்தை அத்வரியும், ஏனைய சமசங்களைச் சமசாத்துவரியுக்களும், பிரசாபதியின் பொருட்டு நிறைத்து வைத்திருக்கின்ற சோமரசப் பாத்திரங்களை ஏனைய இருத்துவிக்குக்களும் எடுத்துக் கொண்டு ஆகவனீயத்திற்குச் செல்லுதல் வேண்டும். அக்கால், கள்ளிருக்கும் முதலாவது பாத்திரத்தை பிரதிப்பிரஸ்தாதாவும், ஏனைய கள்ளிருக்கின்ற பாத்திரங்களை இரதத்தைச் செலுத்தியவர்களும் எடுத்துக் கொண்டு மார்ச்சாலத்திற்கு அருகிற்போய் நிற்றல் வேண்டுல்.

பிறகு, சோமரசமுள்ள பாத்திரத்தையும், தட்டுகளையும், அதாவது அவைகளிலுள்ள சோம ரசங்களையும் இரண்டு வஷட்காரங்களில் ஓமஞ் செய்தல் வேண்டும். அப்போது சுராக்கிரகங்களை (கள்ளிருக்கும் பாத்திரங்களை) அசைத்துவிடல் வேண்டும்.

சோமயாகம்போல், சோமரசத்தை யருந்திவிட்டு, प्रजापतिश्वसम्राद् என்பது முதலிய மந்திரத்தால் கள்ளை முகந்துபார்த்தல் வேண்டும். அநுயாச முதலானவைகளைச் சோம யாகம்போற் செய்தல் வேண்டும்.

வாஜபேய முடிவின் பொருட்டு, மூன்று பசுக்களையுடைய சௌத்திராமணியையுஞ் செய்தல் வேண்டும். ஆமிக்ஷா இஷ்டியையுஞ் செய்தல் வேண்டும்.

பரிசேடம் முற்றும்.

பதின்மூன்றும் அநுவாக விடயச் சருக்கம்

अन्वहान्वृजुमत्यैन्द्र इन्द्राणीति (मिति) तच्चरौ ॥
योजातो मन्युमत्यैन्द्रे मानोदातृमदैन्द्रके ॥ १ ॥
प्रदाप्रदातृ मत्यैन्द्रे इन्द्रस्सुत्रामसंयुते ॥
रेवतीश्श्रीप्रदैन्द्रेस्या दत्रमन्त्राश्चतुर्दश ॥ २ ॥

இவை, கிராமத்துக்குத் தலைவனுகை விரும்பிச் செய்யும் இஷ்டி, சேனையை வசப்படுத்திக்கொள்ளுவதற்குச் செய்யும் இஷ்டி, போரில் வெற்றி பெறுவதின் பொருட்டுச் செய்யும் இஷ்டி, பொருளை விரும்பிச் செய்யும் இஷ்டி என்னும் இஷ்டிகளில் யாஜ்யா புரோநு வாக்கியங்கள் என்பது.

## முதற் காண்டம் ஏழாம் பிரபாடகம்

## பதின்மூன்றுமநுவாகம்

நான்கு பஞ்சாதிக்குமேல் ஒரு பதத்தைக் கொண்டது. காமிய இஷ்டிகளின் புரோநுவாக்கிய, யாஜ்யா வாக்கியங்களைக் கூறுமந்திரங்கள்.

अन्वह मासा अन्विद्वनान्यन्वोषधीरनु पर्वतासः । अन्विन्द्रꣳ रोदसी वावशाने अन्वापो अजिहत जायमानम् । अनु ते दायि मह इन्द्रियाय सत्रा ते विश्वमनु वृत्रहत्ये । अनु क्षत्रमनु सहो यजत्रेन्द्र देवेभिरनु ते नृषह्ये । इन्द्राणीमासु नारिषु सुपत्नीमहमश्रवम् । नह्यस्याअपरं चन जरसा ॥ १ ॥ मरते पतिः । नाऽहमिन्द्राणि रारण सख्युर्वृषाकपेर्ऋते । यस्येदमप्यꣳ हविः प्रियं देवेषु गच्छति। यो जात एव प्रथमो मनस्वान्देवो देवान्क्रतुना पर्यभूषत् । यस्य शुष्माद्रोदसी अभ्यसेतां नृम्णस्य मह्ना स जनास इन्द्रः । आ ते मह इन्द्रोत्युग्रसमन्यवो यत्समरन्त सेनाः । पताति दिद्युन्नर्यस्य बाहुवोर्मा ते ॥ २ ॥ मनो विष्वद्रियग्वि चारीत् । मा नो मर्धीरा भरा दद्धि तन्नः प्र दाशुषे दातवे भूरि यत्ते । नव्ये देष्णे शस्ते अस्मिन्त उक्थे प्र ब्रवाम वयमिन्द्र स्तुवन्तः । आ तू भर माकिरेतत्परि ष्ठाद्विद्मा हि त्वा वसुपतिं वसूनाम् । इन्द्र यत्ते माहिनं दत्रमस्त्यस्मभ्यं तद्धर्यश्व ॥ ३ ॥ प्र यन्धि । प्रदातारꣳ हवामह इन्द्रमा हविषा वयम् । उभा हि हस्तावसुना पृणस्वाऽऽ प्र यच्छ दक्षिणादोत सव्यात् । प्रदाता वज्री वृषभस्तुराषाट्छुष्मी राजा वृत्रहा सोमपावा । अस्मिन्यज्ञे बर्हिष्या निषद्याथा भव यजमानाय शं योः । इन्द्रस्सुत्रामा स्ववाꣳ अवोभिस्सुमृडीको भवतु विश्ववे

दाः । बाधतां द्वेषो अभयं कृणोतु सुवीर्यस्य ॥ ४॥ पतयस्स्याम। तस्यवयश्सुमतौ यज्ञियस्यापि भद्रे सौमनसे स्याम । स सुत्रामा स्ववाश् इन्द्रो अस्मे आराच्चिद्द्वेषस्सनुतर्युयोतु । रेवतीर्नस्सधमाद इन्द्रे सन्तु तुविवाजाः । क्षुमन्तो याभिर्मदेम । प्रो ष्वस्मै पुरोरथ मिन्द्राय शूषमर्चत । अभीके चिदु लोककृत्सङ्गे समत्सु वृत्रहा । अस्माकं बोधि चोदिता नभन्तामन्यकेषाम् । ज्याका अधि धन्वसु ॥ ५ ॥

இப்பிரபாடகத்தின் அநுவாகங்கள் பதின்மூன்று அவைகள்:

அவை :—

पाक यज्ञश् सश्श्रवाः परोक्षं बर्हिषो ध्रुवामगन्मेत्याह देव सवितर्देव स्याहं क्षत्रस्योल्बं वाजस्याग्निरेकाक्षरेणोपयाम गृहीतो ऽसि नृषदमन्वह त्रयोदश । १३

பஞ்சாதிகள் ஐம்பத்தொன்று:

அவை:

पाक यज्ञं परोक्षं ध्रुवां विसृजते च नः सर्वं वीरां पतयः स्यामेकं पञ्चाशत् ॥ ५१

என்பன.

பன்னிரண்டாமநுவாகத்தில் வாஜபேய மந்திரங்கள் முடிந்தன. பதின் மூன்றுமநுவாகத்தில் காமிய யாஜ்ய புரோநுவாக்கியங்கள் கூறப்படுகின்றன.

சங். கா-2 பிர-2 அநு-8-ல், "इन्द्रायान्त्रजवेपुरोडाश मेकादशकपालं निर्वपेद्ग्रामकामः । என்பது முதலிய மந்திரத்தால் ஒரு காமிய இஷ்டி, கிராமத்திற்குத் தலைவனாதற் பொருட்டு விதிக்கப்பட்டுள்ளது,

அதில் இது புரோநுவாக்கியமாம்.

மந்திரம் :

**अन्वह मासा अन्विद्वनान्यन्वोषधीरनु पर्वतासः। अन्विन्द्रं रोदसी वावशाने अन्वापो अजिहत जायमानम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अह मासा:** | சித்திரை முதலிய மாதங்கள் |
| **जायमानं** | உண்டாகின்ற |
| **अनु इन्द्रं** | இந்திரனைத் தழுவிக்கொண்டு |
| **अजिहत** | அருள் செய்வதற்கு வந்து அடைந்தன. |
| **वनानि ओषधीः** | வனத்திலுள்ள கொடி செடிகள் |
| **पर्वतास:** | மலையிலுள்ளவைகள் |
| **वावशाने** | யான் விரும்பியபோது |
| **रोदसी** | வான் மண் |
| **आपः** | நீர், என்னுமிவைகளும் |
| **अजिहत** | அருள் செய்யவந்தடைந்தன. |

குறிப்பு: ஈண்டு, சமரச (தொகை) வாக்கியங்களைப் பிரிப்பதற்கு, ஆறு, அறு, என்னுஞ் சொற்களாம், அதுவும் ஆதரவின்பொருட்டாம் என்பதை யுணர்க.

---

அதில் யாஜ்யா வாக்யம்.

மந்திரம் :

**अनु ते दायि मह इन्द्रियाय सत्रा ते विश्वमनु वृत्रहत्ये । अनु क्षत्रमनु सहो यजत्रेन्द्र देवेभिरनु ते नृषह्ये ।**

என்பது.

பதவுரை,

| | |
|---|---|
| **यजत्र इन्द्र !** | ஆராதிக்கத்தக்க இந்திர ! |
| **महे ते** | தேவர்களுட் பெரியோனாகிய உனக்கு |
| **वृत्रहत्ये** | விருத்திரவதையை முன்னிட்டும் |
| **इन्द्रियाय** | வன்மையுண்டாதற் பொருட்டும் |
| **क्षत्रं** | அரசர்களிடத்துள்ள அபிமானத்தை |

புரோநு வாக்கியங்கள் )

| | |
|---|---|
| अनु | தழுவியும், |
| सहः अनु | உனது வன்மையை நோக்கியும் |
| नृषह्ये | பகைவரை யடக்குஞ் சீலத்தைத் |
| अनुदेवेभिः | தழுவியும் |
| सत्रा | சத்திரயாகங்களில் |
| विश्वं | எல்லா அவிகளும் |
| अनु | அக்கினி தேவதை முதலிய முறையாகக் |
| दायि | கொடுக்கப்படுகின்றன. |

மற்றும், சங்-கா-2. பிர-2. அநு-8-ல், “ इन्द्राण्यैचरुं निर्वपेद्यस्यसेनाऽसꣳशितेव स्यात्” என்பது முதலியதால் சேனையை வசப்படுத்துதற் பொருட்டு ஒரு இஷ்டியும்,

சங்–கா-2. பிர–2. பிர–2 அநுவாகம் 8-ல், ‘वह्ववजानपीध्मे संनह्येत् गौर्यत्राधिष्कन्ना’ என்பது முதலியதால் பசுவை வசப்படுத்துதற் பொருட்டு ஒரு இஷ்டியும் விதிக்குப்பட்டுள்ளன,

---

அதில் இது புரோநுவாக்கியம்,

மந்திரம் :

**इन्द्राणीमासु नारिषु सुपत्नीमहमश्रवम्। नह्यस्या अपरं चन जरसा मरते पतिः।**

என்பது,

பதவுரை.

| | |
|---|---|
| आसु नारिषु | தெய்வப் பெண்களுட் சிறந்தவளும் |
| सुपत्नीं | கற்புடையவளுமாகிய |
| इन्द्राणीं | இந்திராணியை |
| अहं अश्रवं | யான் உணர்வேன். |
| अस्याः | இவளுக்கு |
| अपरंचन | ஒரு கணவன் உளன் |
| अस्याः पतिः | இவளுடைய கணவன் |
| जरसा | கிழத்தன்மையால் |
| नमरते | இறக்கவேமாட்டான் |

அதில் யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

**नाहमिन्द्राणि रारण सख्युर्वृषाकपेर्ऋते । यस्ये दमप्यꣳ हविः प्रियं देवेषु गच्छति ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे इन्द्राणि | இந்திராணியே! |
| यस्य | எந்த எனது |
| अप्यं इदं हविः | நீராலுண்டாகும் சோமரசமுதலிய இந்த அவி |
| प्रियं | விருப்பமாய்த் |
| देवेषु | தேவர்களை |
| गच्छति | அடைகின்றதோ, |
| अहं | அத்தகைய யான் |
| सख्युः | உனது நண்பனாகிய |
| वृषाकपेः ऋते | இந்திரனைத் தவிர்த்து |
| नरारण | வேறு தேவதைகளைப் புகழமாட்டேன். |

மற்றும், சங்-கா-2. பிர-2. அநு-8ல், "इन्द्राय मन्युमते मनस्वते पुरोडाशमेकादश कपालं निर्वपेत्" என்பது முதலிய மந்திரத்தால், போரில் வெற்றி பெறுவதன் பொருட்டு ஒரு இஷ்டி விதிக்கப்பட்டுள்ளது,

---

அதில் இது புரோநுவாக்கியம்,

மந்திரம் :

**यो जात एव प्रथमो मनस्वान्देवो देवान्क्रतुना पर्यभूषत् । यस्य शुष्माद्रोदसी अभ्यसेतां नृम्णस्य मह्ना स जनास इन्द्रः ।**

என்பது.

உரை.

எவன் தோன்றிய மாத்திரையானே, பேராற்றலுடையவனும், நுண்ணறிவுடையவனுமாகி விருத்திரனைக் கொல்லுதல் முதலிய செயல்களால் அக்கினி முதலான தேவதைகளுக்கு மேலாயினனோ, மற்றும், எவனுடைய வன்மை

யால் வானுலக மண்ணுலகங்கள் பயமடைகின்றனவோ, மக்களே! அத்தகைய இந்திரன், உங்களை, தனது வன்மை மகிமையாற் பாதுகாப்பானாக என்பதாம்.

---

அதில் யாஜ்யா வாக்கியம்.

மந்திரம் :

**आ ते मह इन्द्रोत्युग्रसमन्यवो यत्समरन्त सेनाः। पतातिदिद्युन्नर्यस्य बाहुवोर्मा ते मनो विष्वद्र्यग्वि चारीत्।**

என்பது.

உரை.

இந்திரனே! எனது சேனைகள், விளையாட்டாகவே பகைவரின் சேனைகளை வெல்லும்படி, உனது பாதுகாப்பு மிகுதியாயிருந்து வருகின்றது. மக்களுக்கு இனியவை செய்கின்ற உனது கையில் தாங்கியுள்ள ஆயுதங்களின் ஒளி எங்கும் பரவிநிற்கின்றது என்பதாம்.

इन्द्रायदात्रे पुरोडाशमेकादशकपालं निर्वपेत् என்பது முதலிய மந்திரத்தால், மற்றுமொரு இஷ்டி, சங்-கா-2. பிர-2. அநு-8ல் கூறப்பட்டிருக்கின்றது,

---

அதற்குப் புரோநுவாக்கியம்.

மந்திரம் :

**मा नो मर्धीराभरा दद्धि तन्नः प्र दाशुषे दातवे भूरि यत्ते। नव्ये देष्णे शस्ते अस्मिन्त उक्थे प्र ब्रवाम वयमिन्द्र स्तुवन्तः।**

என்பது.

உரை.

இந்திரனே! யாமும், எமது பிரசைகளும் கலகத்தை விரும்பியவர்களாகச் செய்யாதொழிவாய். மற்றும், நன்கு அவியையீந்த வேள்வித்தலைவனுக்கு அளித்தற் பொருட்டு உனது பொருளைக் கொண்டுவருவாயாக. இந்திர! உனது கொடையின் பெருமையை இத்தோத்திரத்திற் புகழ்வோமாக என்பதாம்.

அதில் யாஜ்யா வாக்கியம்,

மந்திரம் :

**आ तू भर माकिरे तत्परि ष्ठाद्विद्मा हि त्वा वसुपतिं वसूनाम्। इन्द्र यत्ते माहिनं दत्रमस्त्यस्मभ्यं तद्धर्यश्व प्र यन्धि।**

என்பது.

உரை.

இந்திர! நீ, எல்லாத் தனங்கட்கும் இறைவனுயிருத்தலின் தனத்தைக் கொண்டுவந்து கொடுப்பாயாக. கொடுத்த பொருள் பிறர்பால் இருக்காததாகுக. அரி, என்னும் குதிரைகளையுடைய இந்திர! உன்னிடத்தில் அளிப்பதன் பொருட்டாயுள்ள மிகுந்த தனத்தை எனக்குக் கொண்டுவந்து கொடுப்பாயாக என்பதாம்.

மற்றும், சங்-கா-2. பிர-2. அநு-8ல், "इन्द्राय प्रदात्रे पुरोडाशमेकादशकपालं निर्वपेत्" என்பது முதலிய மந்திரத்தால் மற்றொரு இஷ்டி விதிக்கப்பட்டுள்ளது,

---

அதற்கு இது புரோநு வாக்கியம்.

மந்திரம் :

**प्रदातार९ हवामह इन्द्रमा हविषा वयम्। उभा हि हस्तावसुना पृणस्वा प्र यच्छ दक्षिणादोत सव्यात्।**

என்பது,

உரை,

பெருங் கொடையாளியாகிய இந்திரனை, அவிகளுடன் கூடிய யாம் அழைக்கின்றோம். இந்திரனே! நீ, எமக்கு இரண்டு கைகளாலுந் தனத்தை யளிப்பாயாக என்பதாம்.

---

அதற்கு யாஜ்யை வாக்கியம்.

மந்திரம் :

**प्रदाता वज्री वृषभस्तुराषाट्छुष्मी राजा वृत्रहा सोमपावा। अस्मिन्यज्ञे बर्हिष्या निषद्याथा भव यजमानाय शं योः।**

என்பது.

உரை.

பெருங் கொடையாளியும், வச்சிரமுடையவனும், வேண்டிய தனங்களை நிறையப் பெய்கின்றவனும், பகைவரை யடக்குகின்றவனும், வன்மை மிகுந்தவனும், விளக்கமுடையவனும், விருத்திரனைக் கொன்றவனும், சோமரசத்தை யருந்துகின்றவனுமாகிய இந்திரனே! நீ, இவ்வேள்வியில் விரித்துள்ள தருப்பையின் மீது வந்து உட்கார்ந்த பின்னர், சுகங்கொடுப்பவனும், துன்பத்தைப் போக்குகின்றவனுமாவாயாக என்பதாம்.

மற்றும், சங்-கா-2, பிர-2. அநுவாகம் 8-ல் "इन्द्राय सुत्राम्णे पुरोडाशमेकादश कपालं निर्वपेत् " என்பது முதலிய மந்திரத்தால், இராச்சியத்திலிருந்து விலகியவனுக்கு ஒரு இஷ்டி விதிக்கப் பட்டுள்ளது,

---

இதற்கு இது புரோநு வாக்கியம்

மந்திரம் :

इन्द्रस्सुत्रामा स्ववा२ँ अवोभिस्सुमृडीको भवतु विश्ववेदाः। बाधतां द्वेषो अभयं कृणोतु सुवीर्यस्य पतयस्स्याम।

என்பது.

உரை

இவ்விந்திரன், சுற்றமுடையாரையும், தனமுடையாரையுஞ் சுகப்படுத்துகின்றவன். உலகத்தை யுணர்ந்தவன். இவன், எமது வழிபாடுகளனைத்தையு முணர்வானாக. பகைவர்களுக்குப் பகைவனாகிய இவ்விந்திரன், எமக்குப் பயமில்லாமற் செய்வானாக. இவனுடைய அருளால் யாம் பகைவரையடக்கி நன்மைகட்குத் தலைவர்களாவோமாக என்பதாம்.

---

இதற்கு யாஜ்யா வாக்கியம்

மந்திரம் :

तस्यवय२ँ सुमतौ यज्ञियस्याऽपि भद्रे सौमनसेस्याम। स सुत्रामा स्ववा२ँ इन्द्रो अस्मे आराच्चिद्द्वेषस्सनुतर्युयोतु।

என்பது.

உரை

இவ் வேள்விக்குரிய யாங்கள், இவ்விந்திரனுடைய அநுக்கிரகத்தோடு கூடிய புத்தியில் நிலைத்திருப்போமாக. மற்றும், மனது குளிர்ந்துள்ள நிலையிலிருப்போமாக. தனமுடைய இவ்விந்திரன், அவிகொடுக்கின்ற எமது பகைவரை வேறுபடுத்துவானாக என்பதாம்.

அஃதன்றியும், சங்-கா-2. பிர-2. அநு-8ல், "इन्द्रोवै सदृङ् देवताभिरासीत्" என்பது முதலிய மந்திரத்தால், இந்திரபதவியை யடைதற்பொருட்டுச் செய்யப் பெற்ற இஷ்டியில், சக்வரி, என்னுஞ் சந்தத்தில் இரண்டு இருக்குக்கள் செய்யப்பட்டுள்ளன. அவற்றுள்,

---

இதில் இது புரோநு வாக்கியமாகிய ரேவதி வாக்கியம்

மந்திரம் :

**रेवतीर्नस्सधमाद इन्द्रे सन्तु तुविवाजाः । क्षुमन्तो याभिर्मदेम ।**

என்பது.

உரை

தனமுடையதும், எம்முடன் களிப்புறுவதும், மிகுந்த உணவுப் பொருளையுடையதும், இந்திரனோடு துதித்துக் களிப்புறுவதுமாகிய தண்ணீரானது எமது தலைவனாகிய இந்திரனிடத்து இருக்குக என்பதாம்.

---

இதில் யாஜ்யா வாக்கியமாகிய சக்வரி

மந்திரம் :

**प्रो ष्वस्मै पुरोरथ मिन्द्राय शूषमर्चत । अभीके चिदु लोककृत्सङ्गे समत्सु वृत्रहा । अस्माकं बोधि चोदिता नभन्तामन्यकेषां । ज्याका अधि धन्वसु ।**

என்பது

உரை

இவ்விந்திரனுடைய இரதத்தின் முன்பக்கத்தில் வன்மை நன்கு பூசிக்கப் படுகின்றது. வன்மை பூசிக்கப்படுவ தெவ்வாறெனின்? இவ்விந்திரன், போரில் போரிடும் காலாள் முதலானோருடன் கூடியபோது ஒருவரைக் கொல்ல நினைக்கின் பகைவரிடத்தில் உலகத்திற் செய்யுஞ் செயலைச் செய்தேதிருவான். ஓடமாட்டான், என்பதுவே வன்மையைப் பூசித்த லென்க. இவ்வாறு பூசிக்கப் பெற்ற இந்திரன், எம்மை, ஏனையோரினும் வேறுக்குவதற்கு ஏவியவனாய்ச் சாவதானமா யிருப்பானாக. ஏனைய தீய பகைவரின் தனுக்களிலுள்ள அம்புகள் கெட்டுப்போவனவாக என்பதாம்.

குறிப்பு:— ஈண்டு, ஒருபோது இந்திரன், ஏனைய தேவர்கட்குத் தலைவனாகாதிருந்தனன். அக்கால், தேவர்கள், இந்திரனுக்கு ஏவலாளாக

புரோநுவாக்கியங்கள்)

ஆவதற்கு உடன் பட்டிலர். அதனல் மனவெறுப்புற்ற இந்திரன், பிரசாபதியி னிடம் போயினன், பிரசாபதி, இந்திரனைத் தேவதையாகக் கொண்ட பதி னொரு கபால புரோடாசயாகஞ் செய்தனன் அதனல் பெரும்வலி பெற்று இந்திரன் தேவர்கட்கு இறைவனுந் தன்மையைப் பெற்றுக் கொண்டனன். அப்போது, அதுமுடித்தற் பொருட்டு, சக்வரி என்னும் வடமொழிச்சந்தத்தால் இரண்டு இருக்குக்கள் செய்யப்பட்டன. அவை யாஜ்யாபுரோநுவாக்கியங்க ளாயின என்பது.

பதின்மூன்றுமநுவாகம்

முற்றிற்று.

முதற்காண்டம் ஏழாம் பிரபாடகமும்

முடிந்தது.

---

இராசசூயம்.

இவ்வேள்வி, சுயராச்சியத்தை விரும்பிய அரசனல், உத்திரநட்சத்திரங் கூடிய பங்குனிமாதப் பௌர்ணமியிற் செய்யப்படுவதாம். இலட்சக்கணக்கான பசுக்கள் இதற்குத் தட்சிணைகள். மற்றும், கோடுபோட்ட ஆடையும் தட்சிணையாம்.

மற்றும், இது ஒருவகை யாகமன்று, மற்றே, பல்வகை இஷ்டிகளையும், இரண்டு பசு யாகங்களையும், ஆறுவிதமான சோமயாகங்களையுந் தன்னுட் கொண்டுள்ள ஒரு கருமத் தொகுதியாம்.

அஃதன்றியும், முதலில் அக்கினிஷ்டோம மென்னும் யாகத்தை, தீட்சை நாள் முறையாய்ச் செய்து முடித்துவிட்டு, மறுநாள் தொடங்கி எட்டு விதமான இஷ்டிகளைச் செய்தல் வேண்டும்.



எட்டாம் பிரபாடக விடயச் சுருக்கம்

प्रपाठकेऽथाष्टमेऽस्मिन्राजसूयो निगद्यते ॥
द्वाविंशत्यनुवाकेषु विंशत्याराजसूयके ॥
अनेकानि प्रधानानि कर्माणि विहि तान्यथ ॥
द्वाभ्यां सौत्रामणीमन्त्राः काम्यायाज्याश्च वर्णिताः
अष्टमे मन्त्रकाण्डस्थे कर्मणां बहुलत्वतः ॥
तत्तत्सन्निधये प्रोक्ता मन्त्राविधि पुरस्सराः ॥

இராசசூய யாகம்

अनूद्य तान्विधीनर्थ वादो ब्राह्मण ईरितः ॥
संप्रदायविदोऽतोऽत्र ब्राह्मणद्वयमूचिरे ॥
ब्राह्मणं मन्त्रकाण्डस्यविधि जातमितीरितम् ॥
अनुब्राह्मणमन्यत्तु कथितं सार्थवादकम् ॥

இவ்வெட்டாம் பிரபாடகத்தில், இராசசூயம் என்னும் யாகஞ் சொல்லப் படுகிறது. இப்பிரபாடகத்தில், அநுவாகங்கள் இருபத்திரண்டு. அவற்றுள் முதலில் இருபது அநுவாகங்களால், இராசசூயயாகத்தின் அனேக பிரதான கருமங்களையும், இருபத்தோராவதில், "சௌத்திராமணி" என்னும் யாகத்தின் மந்திரங்களையும், இருபத்திரண்டாவதில் காமிய யாஜ்யைகளையும், சொல்லுகிறது. மற்றும், இப்பிரபாடகத்தில், மந்திரங்கள் எல்லாம் அதனுடைய பிராமணத்துடனும், அநுப்பிராமணத்துடனுங்கூடி இருக்கின்றன.

பிராமணம் என்பது, விதியைக் கூறுதல், அநுப்பிராமணம் என்பது அர்த்த வாதத்தைக் கூறுவது என்று பெரியார்கள் கூறியுள்ளார் என்பது.

---

முதலநுவாகவிடயச் சுருக்கம்

आदा वानुमतं तस्य मध्ये नैर्ऋत मन्त्रच ॥
वीहीत्याद्यास्त्रयोमन्त्रा विनियोगस्तुवर्ण्यते
वीह्येषनम इत्स्यमि प्रदराग्निषु हूयते ॥
सहैवाऽनुमतेनाष्टौ यागाः प्रथम ईरिताः ॥ २ ॥

முதலில் அநுமதி இஷ்டி, அதன் நடுவில், நிருதிஇஷ்டி, இவ்விரண்டையும் விதித்த பிறகு, நிருதி இஷ்டியில், மூன்று மந்திரங்களையுங் கூறுகின்றது என்பது.

---

## முதலாங்காண்டம்.

## எட்டாம் பிரபாடகம்

### முதலவாநுகம்.

இது ஒரு பஞ்சாதிக்குமேல் முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

அநுமதி முதலான எட்டு இஷ்டிகளையும், நைருதி மந்திரங்களையுங் கூறு மந்திரங்கள்.

ஓம்,

अनुमत्यै पुरोडाशमष्टाकपालं निर्वपति धेनुर्दक्षिणा ये प्रत्यञ्चः
शम्याया अवशीयन्ते तं नैर्ऋतमेककपालं कृष्णं वासः कृष्णतूषं
दक्षिणा वीहि स्वाहाऽऽहुतिं जुषाण एष ते निर्ऋते भागो भूते
हविष्मत्यसि मुञ्चेममꣳहसः स्वाहा नमो य इदं चकाराऽऽदित्यं
चरुं निर्वपति वरो दक्षिणाऽऽग्नावैष्णवमेकादशकपालं वामनो वही
दक्षिणाऽग्नीषोमीयमृं ॥ १ ॥ एकादशकपालꣳ हिरण्यं दक्षिणैन्द्र
मेकादशकपालमृषभो वही दक्षिणाऽऽग्नेयमष्टाकपालमैन्द्रं दध्यृषभो

वही दक्षिणैन्द्राग्नं द्वादशकपालं वैश्वदेवं चरुं प्रथमजो वत्सो दक्षिणा सौम्यꣳ श्यामाकं चरुं वासो दक्षिणा सरस्वत्यै चरुꣳ सरस्वते चरुं मिथुनौ गावौ दक्षिणा ॥ २ ॥

எட்டு யாகங்களும் நைருதி மந்திரங்களும்

ஈண்டு, முதலில், இரண்டு பிராமணங்களால் இரண்டு கருமங்கள் விதிக்கப்படுகின்றன,

முதுலாவது இஷ்டியில் முதல் விதி
அநுமதிதேவதைக்குப் புரோடாசஞ் செய்தல்

மந்திரம் :

अनुमत्यै पुरोडाशमष्टाकपालं निर्वपति धेनुर्दक्षिणा।

என்பது.

உரை

| | |
|---|---|
| अनुमत्यै | 'அநுமதி' என்னுந் தேவதையின் பொருட்டு |
| अष्टाकपालम् | எட்டு மண் அகல்களில் |
| पुरोडाशं | மாவடை |
| निर्वपति | செய்யப்படுகின்றது. |
| धेनुः | (இதில்) பசு |
| दक्षिणा | தட்சிணையாம். |

சாபணபாடியக் கருத்து.

இப் பிராமணத்தால், அநுமதி யென்னுந் தேவதையின் பொருட்டு எட்டுக்கபாலங்களை வைத்து புரோடாசஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு : அநுமதி என்பது, சதுர்த்தசியுடன் கூடிவரும் பௌர்ணமியின் அபிமானி தேவதையாம். அமாவாசை யபிமாநிதேவதை சினீவாலியாம்.

ஈண்டு, நெல்லெடுத்துக் குத்தி அவ்வரிசியை அம்மியின்கீழ் ஒரு தடியைவைத்து அவ்வம்மியில் மாவாக்கல் வேண்டும் அப்போது, சம்மியை என்னும் அத் தடிக்கு மேற்குப் பக்கத்திலும், வடக்குப் பக்கத்திலும் விழும் மாவை எடுத்து வைத்துக்கொண்டு, மீந்தமாவால் புரோடாசஞ் செய்தல் வேண்டுமென்பதையுணர்க.

முதலாவது இஷ்டியில் இரண்டாவது விதி

நைருதி தேவதையின் புரோடாசம்

மந்திரம் :

ये प्रत्यञ्चश्शम्याया अवशीयन्ते तं नैर्ऋतमेककपालं कृष्णं वासः कृष्णतूषं दक्षिणा ।

என்பது.

சாயணபாடியக் கருத்து.

| | |
|---|---|
| शम्यायाः | 'சம்மியை, என்னுந் தடியின் |
| प्रत्यञ्चः | மேற்குப் பக்கத்தில் |
| ये अवशीयन्ते | எம் மாவு விழுகின்றதோ, |
| तं | அந்த மாவையெடுத்து |
| नैर्ऋतं | நிருதிதேவதைக்கு |
| एककपालं | ஒரு அகல் வைத்து |
| (पुरोडाशं निर्वपति) | (புரோடாசத்தைச் செய்கின்றான்.) |
| कृष्णतूषं | கறுப்புக்கறையிட்ட |
| कृष्णं वासः | உடல் கறுத்த ஆடை |
| दक्षिणा | தட்சிணையாம். |

சாயணபாடியக் கருத்து.

இப் பிராமணத்தால், முற்கூறிய சம்மியையின் மேற்குப் பக்கத்தில் விழுந்த மாவைக்கொண்டு நிருதி தேவதைக்கு ஒரு புரோடாசஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

குறிப்பு : ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, அம்மியின் வடபுறத்தில் விழுந்த மாவை எடுத்துக் கொண்டு வடதிசையை நோக்கிச் சென்று, இயற்கையாயுள்ள உவர்மண்ணிலேனும், அல்லது பூமியின் வெடிப்பிலேனும்,

" इदमह ममुमामुष्या मुष्या यणस्य क्षेत्रियमवयज ",

என்னும் மந்திரத்தால், முத்துச் சிப்பியா லெடுத்து ஆகுதி செய்தல் வேண்டும்.

பிறகு, ' इदमहममु ......... मपिदधामि ' என்னும் மந்திரத்தை ஒதி அம் மண்ணில் அதை மூடி வைத்துவிட்டு வந்துவிடல் வேண்டும்.

பிறகு, அநுமதிக்குச் செய்த புரோடாசத்தை எடுத்துக் கொண்டுவந்து அந்தர்வேதியில் வைத்துவிட்டு, நிருதி(பாவ) தேவதையின் புரோடாசத்தை ஹோமஞ் செய்யத் தொடங்கல் வேண்டும்.

## இரண்டாம் விநியோகம்.

தொடக்க ஹோமம்

மந்திரம்:

**वीहि स्वाहाऽऽहुतिं जुषाणः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे गार्हपत्य !) | காருகபத்தியத் தீயே ! |
| स्वाहा | நினக்கு அளித்த |
| आहुतिं | ஆகுதியை |
| जुषाणः | அருந்துகின்றவனாய். |
| वीहि | தென்றிசை செல்லும் எம்மைத் துன்புறுத் தாதே. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அத்வரியு(வேட்போன்) சுருவத்தில் நெய்யை யெடுத்துக் கொண்டு ஹோமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, தட்சிணத் தீயில் எரிந்துகொண்டிருக்கின்ற ஒரு கொள்ளியையும், நிருதி தேவதையின் புரோடாசத்தையும் எடுத்துக் கொள்வதுடன், பிரமன், வேள்வித் தலைவன் என்பவர்களையும் அழைத்துக் கொண்டு நிருதி மூலைக்குச் சென்று இயல்பாயுண்டாகிய வளையிலேனும், நிலவெடிப்பிலேனும் அக் கொள்ளியை வைத்துத் தீ மூட்டல் வேண்டும் என்பதையு முணர்க.

---

## மூன்றாம் விநியோகம்.

நிருதி ஹோமம்

மந்திரம் :

**एष ते निर्ऋते भागो भूते हविष्मत्यसि मुञ्चेममंहसस्स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे निर्ऋते ! | பாவதேவதையே ! |
| एषः | ஒரு அகலிற் செய்த புரோடாசம் |
| ते | உனது |
| भागः | பாகமாம், |

| | |
|---|---|
| हे भूते! | தன்னுடைய பாகமே! நீ |
| हविष्मति | அவிகளையுடையதாய் |
| असि | இருக்கின்றாய். |
| इमं | இவ்வேள்வித் தலைவனை |
| अंहसः | வறுமை யென்னும் பாவத்தினின்று |
| मुञ्च | நீக்குவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், விரல்களால் அப் புரோட ரசத்தை யெடுத்து மீத மின்றி அத்தியில் ஹோமஞ் செய்துவிடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், "நிருத்யா இதம்" என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, அனைவரும் திரும்பிப்பார்க்காமல் வேள்வி செய்யுமிடத்திற்கு வந்துவிடல் வேண்டும்.

இவ் வேள்வியில், அத்துவரியுக்கு, கறுப்புக்கோடிட்ட ஆடையைத் தானஞ் செய்தல் வேண்டும்.

---

நான்காம் விநியோகம்.

காநகபத்தியத்தில் ஹோமம்

மந்திரம் :

**नमो य इदं चकार स्वाहा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| यः | யாதொன்று காருகபத்தியத் தீயோ, அது |
| इदं | 'வீஹி, என்னுஞ் சொல்லாற் செய்யப்பட்ட இவ்வநுட்டானத்தை |
| चकार | அவ்வாறே செய்தது. |
| स्वाहा | அதன் பொருட்டு, அவிபளித்து வணக்கஞ் செய்யப்பட்டது. |

சாயணபாடியக் கருத்து

பிறகும், இம் மந்திரத்தால், காருகபத்தியத் தீயில் சுருவத்தால் நெய் யெடுத்து ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

அதன் பிறகு, இஷ்டியிற் செய்ததுபோன்றே சாமிதேனி முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கிச் செய்து முடித்துவிட்டு, அநுமதி தேவதையின் புரோடாசத்தையும் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

இவ் வேள்வியில் பசுவைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்

முதல் இஷ்டி முடிந்தது.

---

இரண்டாவது இஷ்டி.

மந்திரம் :

**आ दित्यं चरुं निर्वपतिवरो दक्षिणा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आदित्यं | ஆதித்ய தேவதையின் |
| चरुं | பொங்கலைப் |
| निर्वपति | பொங்குகின்றான். |
| वरः | பசு |
| दक्षिणा | தட்சிணையாம். |

சாயணபாடியக் கருத்து.

ஆதித்ய தேவதையின் பொருட்டுப் பொங்கலன்னஞ் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

இதற்குப் பசுமாடு தட்சிணையாகும் என்பதாம். 2.

---

மூன்றாவது இஷ்டி.

மந்திரம் :

**आग्ना वैष्णवमेकादशकपालं वामनो वही दक्षिणा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| आग्नावैष्णवं | அக்கினி, விஷ்ணு என்னுங் தேவதைகட்கு உரிய |
| एकादशकपालं | பதினொரு கபாலங்களிற் செய்யப்படும் |

| | |
|---|---|
| (पुरोडाशं निर्वपति) | (புரோடாசங்களைச் செய்கின்முன்.) |
| वामनोवही | பொலி எருது |
| दक्षिणा | தட்சிணையாம். |

சாயணபாடியக் கருத்து.

இப் பிராமணத்தால், அக்கினி, விஷ்ணு (யக்ஞம்) என்னுந் தேவதைகட்கு, பதினொரு அகல்களை வைத்துப் புரோடாசங்களைச் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு, பளுவை சுமக்கும் எருதைத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

---

நான்காவது இஷ்டி.

மந்திரம் :

अग्नीषोमीयमेकादशकपालं (निर्वपति) हिरण्यं दक्षिणा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अग्नीषोमीयं | அக்கினி, சோமம் என்னும் இரண்டு தேவதைகட்கு உரிய |
| एकादशकपालं | பதினொரு அகல்களிற் செய்யும் புரோடாசத்தைச் |
| (निर्वपति) | (செய்கின்முன்.) |
| हिरण्यं | பொன் |
| दक्षिणा | தட்சிணையாம். |

சாயணபாடியக் கருத்து

இப் பிராமணத்தால், அக்கினி சோம தேவதைகட்கு, பதினொரு அகல்களை வைத்து அதில் புரோடாசஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

இதில், பொன்னை, தானமாய்க் கொடுக்க வேண்டும் என்பதாம்.

---

ஐந்தாவது இஷ்டி.

மந்திரம் :

ऐन्द्रमेकादशकपालं (निर्वपति) ऋषभोवही दक्षिणा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **ऐन्द्रं** | இந்திர தேவதைக்கு உரிய |
| **एकादशकपालं** | பதினோரு அகல்கள் வைத்துச் செய்யும் |
| **(निर्वपति)** | புரோடாசத்தைச் (செய்கின்றான்.) |
| **वही ऋषभः** | சுமைதாங்கும் எருது |
| **दक्षिणा** | தட்சிணை. |

சாயணபாடியக் கருத்து.

இப் பிராமணத்தால், இந்திர தேவதையின் பொருட்டு பதினொரு கபாலங்களை வைத்துப் புரோடாசஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

சுமையை யிழுப்பதும் பசுக்களைச் சினைப் படுத்துவதுமாயுள்ள எருதை இதற்குத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

---

ஆறுவது இஷ்டி.

மந்திரம் :

**आग्नेय मष्टाकपाल मैन्द्रं दध्यृषभो वही दक्षिणा ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **आग्नेयं** | அக்கினி தேவதைக்கு |
| **अष्टाकपालं** | எட்டுக் கபாலங்களிற் செய்யும் புரோடாசத்தையும் |
| **ऐन्द्रं** | இந்திர தேவதைக்குரிய |
| **दधि** | தயிரையுஞ் செய்கின்றான் |
| **वहीऋषभः दक्षिणा** | வலிய எருது தட்சிணை. |

சாயணபாடியக் கருத்து.

இப் பிராமணத்தால், எட்டுக் கபாலங்களில் அக்கினிக்குரிய புரோடாசத்தையும், இந்திரனுக்குரிய தயிரையுஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும். பெரிய எருது தட்சிணை என்பதாம்.

ஏழாவது இஷ்டி.

மந்திரம் :

ऐन्द्राग्नं द्वादशकपालं वैश्वदेवं चरुं प्रथमजो वत्सो दक्षिणा सौम्यश्श्यामाकं चरुं वासो दक्षिणा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| ऐन्द्राग्नं | இந்திரன், அக்கினி என்னும் தேவதைகட்குரிய |
| द्वादशकपालं | பன்னிரண்டு அகல்களில் புரோடாசங்களையும் |
| वैश्वदेवं | வைசுவ தேவதைக்குரிய |
| चरुं | பொங்கலையும் |
| (निर्वपति) | (செய்கின்றான்,) |
| प्रथमजः | முதலில் ஈன்ற |
| वत्सः | பசுங்கன்று |
| दक्षिणा | தானம். |
| सौम्यं | சோம தேவதைக்குரிய |
| श्यामाकं | சாமை அரிசியாற் செய்யும் |
| चरुं | பொங்கலையும் |
| (निर्वपति) | (செய்கின்றான்.) |
| वासः | வஸ்திரம் |
| दक्षिणा | தட்சிணை. |

சாயணபாடியக் கருத்து.

இப் பிராமணத்தால், பன்னிரண்டு அகல்களில், இந்திராக்கினி தேவதைகட்குப் புரோடாசங்களையும், வைசுவதேவதைக்குப் பொங்கலையும், சோமதேவதைக்குச் சாமை அரிசிப் பொங்கலையுஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

முதலாவது ஈன்ற பசுங்கன்றையும், ஆடையையும் தட்சிணை கொடுத்தல் வேண்டும் என்பதாம். 7.

எட்டாவது இஷ்டி.

மந்திரம் :

सरस्वत्यै चरुꣳ सरस्वते चरुं मिथुनौ गावौ दक्षिणा ।

என்பது.

சாயணபாடிய கருத்து.

இப்பிராமணத்தால், சரஸ்வதிக்கும், சரத்வான் என்னுந் தேவதைக்கும் பொங்கல்கள் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும். எருதும் பசுவும் தட்சிணை என்பதாம்.

முதலநுவாகம் முற்றும்.

---

இரண்டாமநுவாகம்.

இதில் மந்திர விசேடங்களின்மையால் மந்திரகாண்டத்தில் மூக்கியமான விதிகள் மாத்திரங் கூறப்படுகின்றன. ஆகையால் விடயச்சுருக்கம் இல்லை.

சாதுர்மாஸ்ய (நான்கு நான்கு மாதங்களிற் செய்யும்) யாகங்கள். ஈண்டு, இவை, இராசசூயப் பிரகாணத்திற் கூறப்பட்டிருப்பினும், எவருஞ் செய்யலாம். இது, நான்கு பருவங்களையுடையது. அவற்றுள், முதலாவது வைசுவதேவம், அதுவும் எட்டு யாகங்களைக் கொண்டதாம்.

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

இரண்டாமநுவாகம்.

இது பதினெட்டுப் பதங்களைக் கொண்டது.

முதற் பருவத்தின் எட்டு அவிகளைக் கூறும் மந்திரங்கள்.

आग्नेयमष्टाकपालं निर्वपति सौम्यं चरुꣳ सावित्रं द्वादशकपालꣳ सारस्वतं चरुं पौष्णं चरुं मारुतꣳ सप्तकपालं वैश्वदेवीमामिक्षां द्यावापृथिव्यमेककपालम् ॥ १ ॥

முதலநுவாகத்தில், பிராயணீய இஷ்டி செய்யும் நாட்குப் பிறகு செய்யப்படும் அநுமதி முதலான எட்டு யாகங்களும் நைருதி மந்திரங்களுங் கூறப்பட்டன. இவ்விரண்டா மநுவாகத்தில் சாதுர் மாசியங்களுக்குள் முதலாவது பருவமாகிய எண்வகை அவிகள் கூறப்படுகின்றன.

வைசுவதேவ பநவம்)

மற்றும், இந்த இஷ்டியில் எட்டுத் தேவதைகளைக் குறித்துச் சங்கற்பஞ் செய்துகொண்டு, ஆகவனீயத்தின் பொருட்டு அக்கினியை யெடுத்து ஆகவனீயத்திற் சேர்க்கும்போது, ஹோதா, காருகபத்தியத்திற்கு மேற்கில் உட்கார்ந்துகொண்டு பசுயாகத்தில் ஓதுவதுபோன்று அக்கினிப் பிரணயன மந்திரங்களை ஓதுதல் வேண்டும். வேண்டாமென்பர் சிலர். எஞ்சிய கிரியைகளை இஷ்டியிற் செய்ததுபோன்றே செய்துகொண்டுவந்து, பூவுள்ள தருப்பையும், இருபத்துமூன்று விறகுகளையுந் தேடிக் கொள்ளல் வேண்டும். இவ்வாறு அந்வாதானம் (மீண்டுந் தீயுண்டாக்கல்வரை) முதலான எல்லாக் கிரியைகளையுஞ் செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

வைசுவ தேவதையின் பொருட்டு, இரவில் பால் கறந்து தயிர் செய்து வைத்துக் கொள்ளுதலும் வேண்டும்.

பிறகு, காலையிற் கருமங்களைச் செய்யத்தொடங்கல் வேண்டும்.

---

முதலாவது அவி.

அக்கினிக்குப் புரோடாசஞ் செய்தல்.

மந்திரம் ;

आग्नेयमष्टाकपालं निर्वपति ।

என்பது.

உரை.

அக்கினி தேவதையின் பொருட்டு எட்டு மண் அகல்களைத் தீயில் வைத்து புரோடாசங்களை (மாவடைகளை)ச் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது அவி.

சோமதேவதைக்குப் பொங்கல்.

மந்திரம் :

सौम्यं चरुं (निर्वपति)

என்பது.

உரை.

சோம தேவதைக்குப் பொங்கல் செய்ய வேண்டுமென்பதாம். 2.

---

மூன்றுவது அவி.

சவிதாவிற்குப் புரோடாசஞ் செய்தல்

மந்திரம் :

**सावित्रं द्वादशकपालं (निर्वपति)**

என்பது.

உரை.

சவிதா தேவதையின் பொருட்டுப் பன்னிரண்டு மண் அகல்கள் வைத்துப் புரோடாசங்க(மாவடைக)ளைச் செய்தல் வேண்டு மென்பதாம்.

---

நான்காவது அவி.

சரசுவதி தேவதைக்கு பொங்கல்.

மந்திரம் :

**सारस्वतं चरुं (निर्वपति)**

என்பது.

உரை.

'சரசுவதி, என்னுந் தேவதைக்குப் பொங்கலைச் செய்தல் வேண்டு மென்பதாம். 4.

---

ஐந்தாவது அவி.

பூஷா தேவதைக்குப் பொங்கல்.

மந்திரம் ;

**पौष्णं चरुं (निर्वपति)**

என்பது.

உரை.

'பூஷா, என்னுந் தேவதையின் பொருட்டுப் பொங்கல் செய்தல் வேண்டு மென்பதாம். 5.

---

ஆறுவது.

மருத்தேவதைக்கு புரோடாசம்

மந்திரம் :

**मारुतꣳ सप्तकपालं (निर्वपति)**

என்பது.

உரை.

மருத், என்னுந் தேவதைக்கு, ஏழு மண் அகல்களை வைத்துப் புரோடாசங்களை (மாவடைகளை)ச் செய்தல் வேண்டுமென்பதாம். 6.

---

ஏழாவது அவி.

வைசுவதேவ ஆமிட்சை. (முறிந்தபால்)

மந்திரம் :

वैश्वदेवीमामिक्षां ।

என்பது.

உரை.

வைசுவ தேவதையின் பொருட்டு காலைப்பாலையும் தயிரையும் கலந்து ஆமிக்ஷை(முறிந்தபால்) செய்து வைத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம் 7.

---

எட்டாவது அவி.

வான் மண்களுக்குப் புரோடாசம்.

மந்திரம் :

द्यावापृथिव्यमेककपालम् (निर्वपति) ।

என்பது.

உரை.

வான் மண் தேவதைகளுக்கு ஒரு மண் அகலை வைத்து ஒரு புரோடாசஞ் செய்து கொள்ளல் வேண்டு மென்பதாம். 8.

இனி, பிருஷத் ஆச்சியம், என்னும் தயிர் கலந்த நெய்யைக் கொண்டு வந்து சுருக்குக்களில் நான்கு நான்குமுறை நிறைத்து எடுத்துக் கொள்வதுடன், பிருஷத் ஆச்சியத் தாலியி(தட்டி)ல இரண்டு முறை நெய்யையும் இரண்டு முறை தயிரையும், மற்றும் ஒரு முறை நெய்யையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும். சாமிதேனிகளுக்கு சமித்து மந்திரங்களை ஓதி சமித்துக்களைத் தீயிலிடுவதற்கு முன், தீக்கடைந்து அத்தீயை ஆகவனீயத்திற் சேர்த்துக்கொள்ளல் வேண்டும்.

பிரயாசை என்னும் ஒன்பது ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

பிரதான ஹோமத்தின் பொருட்டு, ஹோதா என்போன்கூறும் யாச்யை புரோநு வாக்கியங்களுள் இதை ஏக கபாலத்திற்கும் சாவித்ரத்துக்கும் மெதுவாகச்சொல்லுதல் வேண்டும.

'मधुश्च' என்னும் நான்கு ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

பிருஷ தாச்சியத்தால் ஒன்பது அநுயாச ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

எஞ்சிய கிரியைகளெல்லாம் இஷ்டியிற் செய்ததுபோற் செய்து கொள்ளற்பாலது.

வருடமாகிய பிரசாபதி வேள்வி யென்னும் இதைச் செய்கின்றவனுக்கு வருடத்தில் பிரசை உண்டாகின்றது.

இத் தேவதைகளின் கதையை பிராமண மந்திரத்திற் காண்க.

இரண்டாமநுவாகம் முற்றிற்று.

---

மூன்றும் அநுவாக விடயச்சுருக்கம்.

पत्न्याह्वानं प्रघास्येति प्रतिप्रस्थातृकर्मतत् ॥
स्वामी मो षित्यनुब्रूयाद्यद्ग्रामइति दंपती ॥
अक्रन्नित्यपि तावेव मन्त्राश्चत्वार ईरिताः ॥

பத்தினியை அழைத்துவருதல், இது பிரதி பிரஸ்தாதா செய்வதாம், வேள்வித் தலைவன் ஓதுதல், வேள்வித் தலைவனும் பத்தினியுஞ் சேர்ந்து ஓதுதல், மீண்டும் அவ்விருவர்களும் ஓதுதல் என்பது.

---

**முதற் காண்டம் எட்டாம்பிரபாடகம்**

மூன்றுமநுவாகம்.

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபது பதங்களைக் கொண்டது.

இராச சூயத்தில் சாதுர்மாசிய வருணப் பிரகாச மென்னும் இரண்டாம் பருவ மந்திரம்.

ऐन्द्राग्नमेकादशकपालं मारुतीमामिक्षां वारुणीमामिक्षां काय
मेककपालं प्रघास्यान्हवामहे मरुतो यज्ञवाहसः करम्भेण सजोषसः।
मो षू ण इन्द्र पृत्सु देवास्तु स्म ते शुष्मिन्नवया। मही ह्यस्य
मीढुषो यव्या। हविष्मतो मरुतो वन्दते गीः। यद्ग्रामे यदरण्ये
यत्सभायां यदिन्द्रिये। यच्छूद्रे यदर्य एनश्चकृमा वयम्। यदेक-

स्याधि धर्मणि तस्यांऽव्ययजंनमसि स्वाहा । अक्रन्कर्म कर्मकृतस्सह वाचा मयोभुवा । देवेभ्यः कर्म कृत्वाऽस्तं प्रेत सुदानवः ॥ १ ॥

இரண்டாம் அநுவாகத்தில் வைசுவ தேவம் என்னும் முதலாம் பருவங் கூறப்பட்டது. மூன்றும் அநுவாகத்தில் வருணப்பிரகாசம் என்னும் இரண்டாம் பருவங் கூறப்படுகின்றது. அதிலும் விசேடமாகிய அவிகள் நான்கு கூறப்படுகின்றன.

இவ் வேள்வி ஆடி மாதத்திற் றொடங்கவேண்டியது. இதற்கு, ஐந்தாவது இருத்துவிக்காக பிரதிப்பிரஸ்தாதாவையுங் கூட்டிக் கொள்ளல்வேண்டும். காருகபத்தியத்திலிருந்து இரண்டு வேதிகைகள் போடல் வேண்டும். இரண்டு வேதிகைகட்கு இடையில் பதின்மூன்று அங்குலம் வெளியிருத்தல் வேண்டும். இவற்றுள், வடபுற வேதிகை அத்துவரியுவிற்காம், தென்புறத்து வேதிகை பிரதிப்பிரஸ்தாதாவிற்காம். வடபுறத்து வேதியில் உத்தர வேதிகையின் மண்ணைக் கொண்டுவந்து செய்தல் வேண்டும் அது ஆகவனீயத்திற்கு இடமாம். தென்புறத்து வேதிகை உத்தர வேதிகை இல்லை. அத்துவரியு முக்கிய தேவதைக்குரிய வேள்விக் கிரியையைச் செய்த பிறகு பிரதிப்பிரஸ் தாதா கிரியைகளை தனது வேதிகையிற் செய்தல் வேண்டும். அங்ஙனமாயினும், மருத்துத் தேவதையின் யாகங்களைப் பிரதிப்பிரஸ் தாதா செய்த பிறகு, அத்வரியு, வருண தேவதையின் யாகங்களைச் செய்தல் வேண்டும்.

மற்றும், வைசுவ தேவ பருவத்திற் செய்தது போன்றே பிரணயனஞ் செய்யும் அக்கினியை எடுத்து வைக்கும் போதும் மந்திரங்களை ஓதல் வேண்டும்.

அன்வாதானஞ்செய்த (மீண்டும் தீயை உண்டாக்கிய) நாள் இரவில், அத்வரியு, வருண தேவதையின் பொருட்டும், பிரதிப்பிரஸ்தாதா மருத்தேவதையின் பொருட்டும் பாலைக்கறந்து தயிர் செய்து வைத்துக்கொள்ளல் வேண்டும். இனி, பிரயோகங்களை முன்னிட்ட எசுர் மந்திரங்களாதலின் பதவுரையும் எழுதப்படும்.

---

முதலாவது அவி.

இந்திராக்கினிக்குப் புரோடாசஞ் செய்தல்.

மந்திரம் :

ऐन्द्राग्नमेकादशकपालं मारुतीमामिक्षां वारुणीमामिक्षां कायमेककपालं ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| ऐन्द्राग्नं | இந்திரன் அக்கினி என்பவர்கட்குரிய புரோடாசத்தை |
| एकादशकपालं | பதினொரு மண் அகல்களிற் செய்தல் வேண்டும். |
| मारुतीं | மருத்(வாயு) என்னும் தேவதைக்குரிய |
| आमिक्षां | முறிந்த பாலே(ஆமிட்சையை)ச் செய்தல் வேண்டும். |
| वारुणीं | வருண தேவதைக்குரிய |
| आमिक्षां | ஆமிட்சையைச் செய்தல் வேண்டும். |
| कायं | பிரசாபதிக்குரிய |
| एककपालं | ஒரு கபாலம் வைத்துப் புரோடாசஞ் செய்ய வேண்டும். |

சாயணபாடியக் கருத்து.

புரோடசத்திற்கு மாவைத் தேடுங்கால், அத்வரியு, முன் அநுவாகத்திற் கூறிய முதலாவது ஐந்து தேவதைகளின் பொருட்டு நெல்லே யெடுத்துக் கொண்டு, அதன் பிறகு இந்திராக்கினி தேவதைகளின் பொருட்டு நெல் லெடுத்தல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா 'मारुत्यैजुष्टं निर्वपामि' என்னுமந்திரத்தால் மாவால் பெண் ஆட்டு வடிவஞ் செய்வதன் பொருட்டு வாற்கோதுமையை எடுத்துக் கொள்ளுதலும் வேண்டும்.

அதன் பிறகு, அத்வரியு, 'वरुणायजुष्टं निर्वपामि' என்னு மந்திரத் தால், மாவால் ஆண் ஆட்டுவடிவஞ் செய்வதற்கும் நெல்லெடுத்தல் வேண்டும்.

அத்வரியு, அதன் பிறகு, கः (பிரசாபதி) தேவதையின் பொருட்டும் நெல் லெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

அக்காலத்தில் பிரதிப்பிரஸ்தாதா கரம்ப பாத்திரங்களுக்கு (விளக்குப் போன்ற மாரப்பாத்திரங்கட்கு) வாற்கோதுமையையும் எடுத்தல் வேண்டும்.

பிறகு, இஷ்டியிற் செய்தது போன்று, வனேய கிரியைகளேச் செய்யத் தொடங்கி மாவரைக்கும்வரை செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், பாத்திரஞ் செய்தற் பொருட்டு எடுத்த வாற்கோதுமை மாவைப் பத்தினியிடங் கொடுத்தல் வேண்டும். பத்தினியானவள் அம்மாவை தனக் குள்ள மக்களின் எண்ணினும் ஒன்று மிகுதியாம்படி விளக்குப்போன்ற பாத்திரங்களாகச் செய்தல் வேண்டும்.

வநணப்பிரகாசம்)

பிறகு, ப்திநொரு கபாலங்க(மண் அகல்க)ளின் மேல் புரோடாசங்களை வைத்த பிறகு பிரதிப்பிரஸ்தாதா அவைகளின் மேலும் அதற்குரிய மாவால் பெண் ஆடுபோற் செய்து தெற்கு ஆகவனீயத்தில் வைத்தல் வேண்டும்.

அத்வரியு, வடக்கு ஆகவனீயத்தில் அதற்குரிய மாவால் ஆண் ஆட்டைப் போன்று செய்து எட்டுக் கபாலங்களின்மேல் வைத்தல் வேண்டும். ஏனைய கிரியைகளை இஷ்டியிற் செய்ததுபோன்று செய்து கொண்டுவரல் வேண்டும்.

முன்போன்றே தயிர் நெய்களையுங் கொண்டுவந்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

அத்வரியு, சுருக்குக்களில் நெய்யையும், பிருஷத் ஆச்சியத்தையும் வைசுவ தேவ பருவத்தில் எடுத்துக் கொண்டது போலன்றி, ஒரு முறை நெய், இரு முறை தயிர், இரு முறைக்கு நெய்யும் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, வன்னிமரத்தாற் செய்யப் பெற்றது, அல்லது, பழக்கத்தில் வைத்துக் கொள்வதாகிய சுருக்குக்களைத் தேடி, அவைகளில், அத்வரியு எடுத்துக் கொண்டது போலவே, நெய்யையும், பிருஷ தாச்சியத்தையும் பிரதிப்பிரஸ்தாதாவும் எடுத்துக் கொள்ளுதல் வேண்டும்.

புரோடாசங்களை இறக்கிவைக்கும்போது ஆடுகள் போன்ற உருவங்களை தருப்பை நுனிகளிலை மயிர்கள் முளைத்திருப்பதுபோற் செய்து அவ் வத் தேவதைகளின் ஆமிட்சை (முறிந்தபால்)யுடன் வைத்தல் வேண்டும்.

மற்றும், வன்னி இலைகளையும் இலந்தைப்பழங்களையும். மாவாற் செய்துள்ள ஆட்டு வடிவங்களுடன் கூட சிறிது சேர்த்து, கரம்ப பாத்திரங்களென்னும் விளக்குப் போன்ற மாப்பாத்திரங்களில் நிரப்பல் வேண்டும்.

அத்வரியு, ஹோமஞ் செய்யப்போகும் எட்டு அவிகளையும் வடக்கு வேதிகையின்மீது வைத்தல் வேண்டும்.

ஹோமஞ் செய்யும் ஒரு அவியைத் தெற்கு வேதிகையின் மீது வைத்தல் வேண்டும். மற்றும், மந்திரத்தை ஓதாமலே கரம்ப பாத்திரங்களையும் அதன் பக்கத்தில் வைத்தல் வேண்டும். எஞ்சிய கிரியைகளை இஷ்டியிற் செய்ததுபோன்று செய்து கொள்ளல் வேண்டும். வைசுவ தேவ பருவத்திற் செய்ததுபோன்றே அக்கினிகளைக் கடைந்து சேர்த்தல் வேண்டும். தருப்பைக் கயிறு சுத்தியுள்ள மரக்கத்தியால் பரிதிக(விறகுக)ளையுந் துடைத்து வைத்தல் வேண்டும்.

இரண்டாவது விநியோகம்.

பிரதிப்பிரஸ்தாதா பத்தினியைக் கூப்பிடுதல்.

மந்திரம் :

**प्रघास्यान्हवामहे मरुतो यज्ञवाहसः करम्भेण सजोषसः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| प्रघास्यान् | வருணனுடைய பாசக்கட்டை யொழிக்கின்றவர்களும் |
| यज्ञवाहसः | வேள்வியை இனிது நடாத்துகின்றவர்களும் |
| करंभेण | மாப்பாத்திரத்தால் அழைக்கப்பெற்று |
| सजोषसः | ஒருவர்க்கொருவர் பிரியமுடையவர்களுமான |
| मरुतः | மருத்துக்களை |
| हवामहे | அழைக்கின்றோம், |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், பிரதிப்பிரஸ்தாதா பத்தினியை அழைத்துக் கொண்டுவரல் வேண்டும். மற்றும், இம் மந்திரத்தை பத்தினி செபிக்கும் படியுஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இங்கு, பத்தினி பிற புருடனைப் புணர்ந்திருப்பாளேல், அக் கள்ள புருடனது பெயரையுங் கூறுதல் வேண்டு மென்பதையு முணர்க. 2.

மற்றும், ஆக்னீத்ரன், 'அக்னேர்வாஜசித்' என்பது முதலிய மந்திரத்தால் வடக்கிலுள்ள தீயை, ஸ்ப்யம் என்னும் மரக்கத்தியால் துடைத்தல் வேண்டும். துடைத்தல் போன்று தீயிற் காட்டுதலே துடைத்தலாம்.

வேள்வித் தலைவனும் பத்தினியும், இரண்டு வேதிகைகளுக்கும் இடையிற் போய், தெற்கிலுள்ள வேதியின் வடபுறமாய் வந்து மாப்பாத்திரங்களை ஒரு மூங்கில் முறத்தில் வைத்து வேள்வித் தலைவன் தனது தலையின்மீது வைத்துக் கொண்டு ஆகவனீயத்திற் கருகில் வந்து மேற்கு முகமாய் நிற்றல் வேண்டும். அப்போது, பத்தினி அவனைத் தொட்டுக் கொண்டிருத்தல் வேண்டும்.

———

## மூன்றுவது விநியோகம்.

### புரோநு வாக்கியம்

மந்திரம் :

मो षू ण इन्द्र पृत्सु देवास्तु स्म ते शुष्मिन्नवया। मही ह्यस्यमीढुषो यव्या। हविष्मतो मरुतो वन्दते गीः।

என்பது.

### பதவுரை.

| | |
|---|---|
| हे इन्द्र ! | இந்திரனே ! நீ |
| नः | எம்மை, |
| पृत्सु | போர்களிற் |
| माएव | செலுத்தவே வேண்டாம். (பகைவரின்மை யின் என்க.) |
| हे शुष्मिन् ! | வன்மைமிக்கோய் ! |
| ते | உனது அருளால் |
| अवया | தீமை நீங்கல் |
| अस्तु स्म | எக்காலுமிருக்குக. |
| हि | (எதனுலெனின் ?) |
| मीढुषः | மழை பெய்விக்கும் வன்மையுடைய நினதருளால் |
| मही | எமது நிலம் |
| यव्या | வாற்கோதுமை முதலான தானியங்கட்கு உரியதாமோ, அதனுலென்க. |
| गीः | துதியாகிய எமது வாக்கு |
| हविष्मतः | மாப்பாத்திரமாகிய அவியையுடைய |
| मरुतः | மருத்துக்களைத் |
| वन्दते | துதிக்கின்றது. |

### சாயணபாடியக் கருத்து.

வேள்வித் தலைவன் மாத்திரம், அங்கு நின்றபடியே இப்புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும் என்பதாம்.

நான்காம் விநியோகம்
மாப்பாத்திர ஹோமம்

மந்திரம் :

**यद्ग्रामे यदरण्ये यत्सभायां यदिन्द्रिये। यच्छूद्रे यदर्य एनश्चकृमा वयम्। यदेकस्याऽधि धर्मणि तस्याऽवयजनमसि स्वाहा।**

என்பது

பதவுரை.

| | |
|---|---|
| ग्रामे | கிராமத்திலும் |
| अरण्ये | காட்டிலும் |
| सभायां | சபையிலும் |
| इन्द्रिये | இந்திரியத்திலும் |
| शूद्रे | பணியாளனிடத்தும் |
| अर्ये | வணிகனிடத்தும் |
| एकस्य | தம்பதிகளான எமக்குள் ஒருவர் |
| धर्मणि | நல்லறத்தில் |
| वयं | யாம் (மனைவி, ஏவலாள் முதலானோர்கள்) |
| यत् एनश्च | எப்பாவம் |
| अधि चकृम | மிகுதியாய்ச் செய்தனமோ, |
| तस्य | அப்பாவத்தைக் |
| अवयजनं | கெடுப்பவன் |
| त्वं असि | மாப்பாத்திரமே! நீயா யிருக்கின்றாய் ஆதலின் |
| स्वाहा | உன்னை அருப்பிக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை தம்பதிகளிருவரும் ஓதி, மாப்பாத்திரத்தை முறத்தாலேயே ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

———

ஐந்தாவது விநியோகம்
சேபம்

மந்திரம் :

**अक्रन्कर्म कर्मकृतस्सह वाचा मयोभुवा। देवेभ्यः कर्म कृत्वाऽस्तं प्रेत सुदानवः।**

என்பது.

| | |
|---|---|
| कर्मकृत: | வேள்வித்தலைவன் முதலானோர்கள் அனை வரும் |
| मयोभुवा | நலங் கொடுக்கும் மந்திரமோதும் |
| सहवाचा | வாக்குடன்கூட |
| कर्म | மாப்பாத்திர ஹோமவரையுள்ள கருமத்தை |
| अक्रन् | செய்தனர். |
| हेसुदानवः ! | நல்ல அவிகளையளிக்கும் அத்வரியு முதலா னோர்களே! நீவிர் |
| देवेभ्य: | தேவர்களின் பொருட்டுச் |
| कर्म | செய்யவேண்டிய கருமத்தைச் |
| कृत्वा | செய்து முடித்துவிட்டு |
| अस्तं प्रेत | தமது இல்லத்தை அடைவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

தம்பதிகள் தங்கள் இடங்களுக்குச் செல்லும்போது இம் மந்திரத்தைச் செபித்தல் வேண்டும் என்பதாம்.

இனி, ஆக்னீத்ரன், தட்சிணத்தீயைத் துடைத்தல் முதலான கிரியை களைச் செய்யத் தொடங்கி, இந்திராக்கினியின் புரோடாசத்தை ஹோமஞ் செய்யும்வரை, வைசுவதேவபருவத்திற் செய்ததுபோலவே செய்துகொள்ளல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, மருத் தேவதையின் பொருட்டு முதன் முறை ஆமிட்சையை (முறிந்தபாலை) எடுக்கும்போது மாவாற் செய்த பெண் ஆட்டு வடிவத்தையும் எடுத்துக்கொள்ளல் வேண்டும். இரண்டாமுறை எடுக்கும் போது முன்னர் மாவிற்செய்துள்ள ஆட்டின் முன் போட்டுள்ள வன்னி இலையையும் எடுத்துக்கொள்ளுதல் வேண்டும்.

பிறகு, ஹோதாவை ஏவுதல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி ஹோமஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, வருணதேவதையின் பொருட்டு அவியைப்பகுத்து ஹோமஞ் செய்த பிறகு, பிரசாபதி தேவதையின் புரோடாசத்தையும் ஹோமஞ்செய்து விட்டு, 'नभश्च' என்பது முதலான மாதங்களின் பரியாயப் பெயர்களா யுள்ள மந்திரத்தால் ஹோமங்கள் செய்தல் வேண்டும்.

மற்றும், இடாபாத்திரப் புரோடாசமருந்தல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி, பூரணபாத்திரத்தின் நீரை ஊற்றுதல் ஒழிந்த ஏனைய

கிரியைகளை இஷ்டியிற் செய்தது போன்று செய்து கொண்டுவந்து முடிவில் சோமயாகத்தைப் போலவே அவபிருத் என்னுங்கிரியையுஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டுப் புரோடாசம் இல்லையென்பார் சிலர். மற்றுஞ்சிலர், நெற்குத்தும் போது விழுந்த உமியாற் செய்தல் வேண்டுமென்பர்.

மூன்றுமநுவாகம்

முற்றிற்று.

நான்காம் அநுவாக விடயச்சுருக்கம்

पूर्णास्यनूच्यदेहीति याज्यामध्वर्युरीरयेत् ॥

ஒருமந்திரத்தை ஓதி இரண்டாவது மந்திரத்தால் அத்துவரியு ஹோமஞ் செய்தல் என்பது.

---

முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

நான்காம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பது பதங்களைக் கொண்டது.

अग्नयेऽनीकवते पुरोडाशमष्टाकपालं निर्वपति साकꣳ सूर्येणोद्यता मरुद्भ्यस्सान्तपनेभ्यो मध्यन्दिने चरुं मरुद्भ्यो गृहमेधिभ्यस्सर्वासान्दुग्धे सायञ्चरुं पूर्णा दर्वि परापत सुपूर्णा पुनरापत। वस्नेव विक्रीणावहा इषमूर्जꣳ शतक्रतो । देहि मे ददामि ते नि मे धेहि नि ते दधे। निहारमिन्नि मे हरा निहारम् ॥ १ ॥ निहरामि ते। मरुद्भ्यः क्रीडिभ्यः पुरोडाशꣳ सप्तकपालं निर्वपति साकꣳ सूर्येणोद्यताऽऽग्नेयमष्टाकपालं निर्वपति सौम्यं चरुꣳ सावित्रं द्वादश कपालꣳ सारस्वतञ्चरुं पौष्णञ्चरु मैन्द्राग्न मेकादश कपाल मैन्द्रञ्चरुं वैश्वकर्मण मेककपालम् ॥

மூன்றுமநுவாகத்தில், வருணப்பிரகாசமென்னும், சாதுர் மாசியத்திற் செய்யப்படும் இரண்டாம் பருவங் கூறப்பட்டது. நான்கு, ஐந்து, ஆறுவது அநுவாகங்களில் 'சாகமேதம் என்னும் மூன்றும்பருவம் கூறப்படுகின்றது. சாகமேதம் சூரியனுடன்கூடிய யக்ஞம். இது இரண்டு நாளில் ஆசரிக்கத் தக்கது.

கார்த்திகைமாதச் சுக்கில சதுர்த்தசியின் விடியற்போதில் சங்கற்பித்துக் கொண்டு இதைத் தொடங்கல் வேண்டும்.

---

முதல் விநியோகம்

அக்கினிக்கு நெல்லெடுத்தல்

மந்திரம் :

**अग्नयेऽनीकवते पुरोडाश मष्टाकपालं निर्वपति साकꣳ सूर्येणोद्यता ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अनीकवते** | வெயிலாகிய சைன்யத்தையுடைய |
| **सूर्येण साकं** | சூரியனுடன் |
| **उद्यता** | எழுந்த |
| **अग्नये** | அக்கினியின் பொருட்டு |
| **अष्टा कपालं** | எட்டு அகல்களில் |
| **निर्वपति** | புரோடாசஞ் செய்கின்றான். |

சாயணபாடியக் கருத்து.

வெயில் என்னும் சைன்யத்துடன் கூடிய அக்கினிதேவதையின் பொருட்டு நெல்லை யெடுத்து வேதிகையின்மீது வைத்தல் வேண்டு என்பதாம்.

ஈண்டு, அக்கினி ஹோத்திரத்தை செய்து முடித்துக் கொண்டு, ஏனைய கிரியைகளைச் செய்தல் வேண்டும். எழுந்த சூரியனுடன் என்றதால் இது விடியற் போதுள்ள விதியாம்.

---

இரண்டாம் விநியோகம்

பொங்கலின் பொருட்டு நெல்லெடுத்தல்

மந்திரம் :

**मरुद्भ्यस्सान्तपनेभ्यो मध्यन्दिने चरुम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सांतपनेभ्यः | மிகச்சுடுகின்றவர்களான |
| मरुभ्द्यः | மருத்துக்களின் பொருட்டு |
| मध्यंदिने | உச்சிப்போதில் |
| चरुं (निर्वपति) | பொங்கல் செய்யப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

உச்சிப்போதில், மிகக் கொளுத்துகின்ற மருத்துத் தேவதைகளின் பொருட்டு பொங்கல் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டு மென்பதாம்.

குறிப்பு: ஈண்டு, இதைச் செய்யவேண்டிய முறை முழுதும் பௌர்ணமி இஷ்டியைப் போன்றதேயாம். ஆனால், முடிவில், வேதிகைமீது விரித்திருந்த தருப்பைகளை, ஆகவனீயத் தீயிற் கொளுத்திவிடாமல் மாலை வேள்வியின் பொருட்டு வைத்துக்கொள்ளல் வேண்டும்.

ஈண்டு மிகக் கொளுத்துகின்றவர்கள் என்பதால் வேண்டாதவைகளை விலக்குகின்றவர்கள் என்பது பெறப்படுகின்றது.

---

மூன்றும் விநியோகம்
பாற்பொங்கல் செய்தல்

மந்திரம் :

**मरुद्भ्यो गृहमेधिभ्यस्सर्वासान्दुग्धे सायञ्चरुम् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| साय | மாலையில் |
| गृहमेधिभ्यः | இல்லையும், யக்ஞத்தையும் பாதுகாக்கின்ற |
| मरुभ्यः | மருத்துக்களின் பொருட்டு |
| सर्वासांदुग्धे | எல்லாப்பாலினும் |
| चरुं (निर्वपति) | பொங்கல் செய்யப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

அன்றிரவில், வேள்வித் தலைவனுடைய பசுக்களனைத்தினும் பால்கறந்து கொண்டு இஷ்டியைச் செய்யத் தொடங்கி, காருகபத்தியத் தீயிலிருந்து ஏனைய அக்கினிகளிரண்டையும் உண்டாக்கிய பிறகு, வேதத்தை (தருப்பைமுடிச்சை)

சாகமேதம்)

மாத்திரஞ் செய்துகொள்ளல் வேண்டும். தருப்பையோ, உச்சிப்போதில் எடுத்துவைத்ததேயாம். விறகுகள் இல்லை. மற்றும், ஏனைய கிரியைகளை இஷ்டியிற் செய்ததுபோற் செய்துகொண்டுவந்து பாற்பொங்கலின் பொருட்டு நெல்லெடுத்தல் வேண்டும். இது கிரகமேதீய மெனப்படும்.

ஈண்டு, நெல்லெடுக்கும்போது, இருத்துவிக்குக்களும் (வேள்விச் செயலாளர்கள்.) வேள்வித் தலைவனுடைய குடும்பத்தார்களும் உண்பதற்குப் போதிய அளவு எடுத்துக்கொள்ளுதல் வேண்டும்.

ஏனைய கிரிகைகளை இஷ்டியிற் செய்தது போன்றே செய்துகொண்டு வந்து, வேள்வித் தலைவனுடைய பசுக்களின் பால் முழுதையும் விட்டு பால் பொங்கற் செய்தல் வேண்டும். துருவாவில் மாத்திரம் நெய்யை நிறைத்துக் கொள்ளுதல் வேண்டும்.

அதன்பிறகு, பொங்கியுள்ள பால்சோற்றில் பால்நுரையுடன் கலந்து நிற்கும் மேல்பாகத்தைத் தனியே எடுத்துவைத்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும் அப் பொங்கற்சோற்றில், வேள்வித் தலைவனுடைய சுற்றத்தார்கள் அருந்துதற் பொருட்டு தனித்தனியாய் வேறே எடுத்துவைத்துக் கொள்ளல் வேண்டும்.

எஞ்சிய பொங்கல் சோறு அப்பாத்திரத்திலேயே இருத்தல் வேண்டும்.

இவ்வாறு, பகுத்த பொங்கல் சோறுகளை தருப்பையால் உத்பவனம் (தருப்பையாற்றுடைத்தல்) செய்து ஒவ்வொருமுறை அபிகாரஞ் செய்து (நெய்விட்டு) வேதிகையின்மீது தனித்தனி வைத்தல் வேண்டும்.

பத்தினி, தக்ஷிணத்தீயில், 'பிரதிவேசம்' என்னும் பெயருள்ள அன்னத்தைச் சமைத்து அபிகாரஞ் செய்யாமல் (நெய்விடாமல்) முன்னர் வைத்துள்ள பொங்கல் சோறுகளுக்குத் தெற்கில் வைத்தல் வேண்டும்.

பிறகு, எல்லாப் பொங்கல் அன்னங்களின் நடுவிற் பள்ளமாக்கி அது நிறைய நெய்விடல் வேண்டும்.

சாமிதேனிக்கள், ஆகார ஹோமங்கள், பிரயாசங்கள் இதில் இல்லை.

ஆஜ்யபாகங்களை மாத்திரம் ஹோமஞ் செய்துகொண்டு, எல்லா அவிகளிலும் சிறிது எடுத்து மருத்துக்களுக்கும் கிருகமேதிகளுக்கும் ஹோமஞ் செய்துவிட்டு சுவிஷ்டகிருத் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

இடாபக்ஷணத்துடன் இவ்விஷ்டியானது முடிவுறும். பிறகு, தாலியில் (பானையில்) எஞ்சியிருக்கும் பால்சோற்றை இருத்துவிக்குகள் அருந்தல் வேண்டும். வேறாக எடுத்துவைத்திருந்த சோற்றை, வேள்வித்தலைவனுடைய சுற்றத்தார்கள் அருந்தல் வேண்டும். பிரதிவேசம் என்னுஞ் சோற்றை ஏனைய பத்தினிகள் அருந்தல் வேண்டும்.

மற்றும், வேள்வித் தலைவனுடைய குடும்பத்தார்கள் கண்ணில் மை தீட்டிக்கொள்ளுதல் முதலான எல்லா அலங்காரங்களையுஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

மற்றும், அன்றிரவு, துன்பம் வறுமை முதலானவைகளை எண்ணுதல் கூட எட்டுணையுமின்றி வசித்தல் வேண்டும். பசுங்கன்றுகளை, தமது தாய்களுடன் கூடத் திரியும்படி அவிழ்த்து விட்டுவிடல் வேண்டும்.

பொங்கல் செய்த பாத்திரத்தையும் சட்டுவத்தையும் தேய்க்காமல் சோற்றுப்பத்துடன் வைத்திருத்தல் வேண்டும். பாதி இரவிற்குமேல், பாற் பசுவின் கன்று ஒன்று இறந்துபோய்விடில், மற்றொரு பசுவின் கன்றை அணைந்து பால் கறத்தல் உண்டல்லவா? அத்தகைய கன்றையும், அக்கினி ஹோத்திரத்திற்குப் பால் கொடுக்கும் பசுவின் கன்றையும் கட்டிவைத்தல் வேண்டும்,

---

## நான்காம் விநியோகம்

### பொங்கலில் முதல் ஹோமம்

மந்திரம் :

**पूर्णा दर्वि परापत सुपूर्णापुनरापत। वस्नेव विक्रीणावहा इषमूर्जꣳ शतक्रतो। देहिमे ददामि ते निमे धेहि नितेदधे। निहारमिन्निमे हरानिहारं निहरामि ते।**

என்பது.

முதலாமந்திரத்தின்

பதவுரை.

| | |
|---|---|
| **हे दर्वि !** | கரண்டியே! நீ |
| **पूर्णा** | பொங்கலில் எழும் குமிழிச் சோற்றால் நிறையப்பெற்றதாய் |
| **परापत** | இந்திரனைக் குறித்துச் செல்வாயாக. |
| **सुपूर्णा** | அதனால்வரும் பயனால் நிறையப் பெற்றதாய் |
| **पुनरापत** | மீண்டும் எம்மிடம் வருவாயாக. |
| **हे शतक्रतो** | இந்திரனே! (உனக்கு) |
| **वस्नाइव** | பொருளால் அரிசி முதலானவற்றைப் பெற்றுக்கொள்ளுவது போன்று குமிழிச் சோற்றை யளித்து |

சாகமேதம்)

| | |
|---|---|
| इषं ऊर्जं | உணவையும் வன்மையையும் |
| विक्रीणावहै | நின்னிடத்திலிருந்து விலையாய் வாங்கிக் கொள்கின்றோம் |

---

இரண்டாமந்திரத்தின்

பதவுரை.

| | |
|---|---|
| हे इन्द्र ! | இந்திரனே! நீ |
| मे | எனக்கு வேண்டியவற்றைக் |
| देहि | கொடுப்பாயாக. |
| ते | உனக்கு வேண்டியவற்றை |
| ददामि | நான் கொடுக்கின்றேன். |
| मे | எனக்கருகில் |
| निधेहि | கொண்டுவந்து வைப்பாயாக |
| ते | நினக்கருகில் |
| निदधे | கொண்டுவந்து வைக்கின்றேன். (இது முறை யன்று மற்றோ,) |
| निहारमित् | மீண்டும் மீண்டுங் கொண்டுவந்து |
| मे निहर | என்னிடத்தில் வைப்பாயாக. |
| निहारं | யானும், மீண்டும் மீண்டுங் கொண்டுவந்து |
| ते | உன்னிடத்தில் |
| निहरामि | வைக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து.

விடியற்போதில், முன்னர் எடுத்துவைத்திருந்த பாற் பொங்கலின் மேலே யுள்ள குமிழிச் சோற்றை ஒரு சுருக்கிற் (அகப்பை விசேடத்தில்) போட்டுக் கொண்டு, வேள்வித் தலைவனுடைய ஒரு எருதைக் கொண்டுவந்து வைத்துக் கொண்டிருத்தல் வேண்டும். அது கத்தும்போது, அதை,காருகபத்தியத்தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டும். அக் காளைமாடு கத்தாவிடில், பிரமன் அதைப் போல் கத்தல் வேண்டும்; அவன் கத்துங்கால் அச் சோற்றை ஓமஞ் செய்தல் வேண்டும். அந்த எருதைத் தட்சிணையாகக் கொடுத்துவிடல் வேண்டும். இங்குவேறு தட்சிணைகிடையாது. இது நிஷ்காச ஹோமமெனப்படும்.

இனி இரண்டாநாள் செய்யவேண்டிய ஒன்பது அவிகள் விதிக்கப் படுகின்றன.

(சாதுர்மாசியத்தில்

ஐந்தாம் விநியோகம்

கிரீடைகளை (விளையாட்டுகளை) யுடைய மருத்துக் கட்குப் புரோடாசஞ் செய்தல்.

---

முதலாம் அவி

மந்திரம் :

**मरुद्भ्यः क्रीडिभ्यः पुरोडाशꣳ सप्तकपालं निर्वपति साकꣳ सूर्येणोद्यता ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| उद्यता | எழுந்த |
| सूर्येण साकं | இரவியுடன்கூட |
| क्रीडिभ्यः | விளையாட்டையுடைய |
| मरुद्भ्यः | மருத்துக்களின் பொருட்டு |
| सप्तकपालं | எழு அகல்களை வைத்துப் |
| पुरोडाशं | புரோடாசத்தைச் |
| (निर्वपति) | (செய்கின்றான்.) |

சாயணபாடியக் கருத்து.

அதன் பிறகு, விடியற் போதிற்கு முன்னர் இஷ்டியைச் செய்யத் தொடங்கி கிரீடிகள் என்னும் மருத்துக்களுக்கு எழு மண் அகல்களை வைத்துப் புரோடாசங்கள் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

இது பெரும்பான்மை பௌர்ணமி இஷ்டியைப் போன்றே செய்யுற் பாலதாம்.

---

மகா ஹவிசு என்னும் இஷ்டி

முதலாம் அவி

மந்திரம் :

**आग्नेयमष्टाकपालं निर्वपति ।**

என்பது

உரை

அக்கினி தேவதையின் பொருட்டு எட்டு அகல்கள் வைத்துப் புரோடாசங்கள் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

இரண்டாம் அவி

**सौम्यं चरुम् (निर्वपति)**

உரை

சோம தேவதையின் பொருட்டு சருச் (பொங்கல்) செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

மூன்றும் அவி

**सावित्रं द्वादशकपालं (निर्वपति)**

உரை

சவிதா தேவதையின் பொருட்டு பன்னிரண்டு மண் அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

நான்காம் அவி

**सारस्वतञ्चरुं (निर्वपति)**

உரை

சரசுவதியின் பொருட்டுப் பொங்கல் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

ஐந்தாம் அவி

**पौष्णंचरुं (निर्वपति)**

உரை

பூஷா தேவதையின் பொருட்டு பொங்கல் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

ஆறும் அவி

**ऐन्द्राग्नमेकादशकपालं (निर्वपति)**

உரை

இந்திராக்கினி தேவதையின் பொருட்டு பதினொரு மண் அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

ஏழாம் அவி

**ऐन्द्रं चरुं (निर्वपति)**

உரை

இந்திர தேவதையின் பொருட்டுப் பொங்கல் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

---

எட்டாம் அவி

**वैश्वकर्मणमेक कपालम् (निर्वपति)**

உரை

விசுவகரும தேவதையின் பொருட்டு ஒரு மண் அகல் வைத்துப் புரோடாசஞ் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, இந்த எண்வகை அவிகளைச் செய்துகொண்டு வைசுவ தேவ பருவத்திற் செய்தது போன்று கிரியைகளைச் செய்து முடித்தல் வேண்டு பென்பது கருத்து.

மற்றும், 'सहश्च सहस्यश्च' என்பது முதலிய ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு, பசு (கோ) தட்சிணையாம்.

நான்காம் அநுவாகம்

முற்றிற்று.

---

ஐந்தாம் அநுவாக விடயச் சுருக்கம்.

**एतत्त इतिदत्त्रीन्वेद्याः कोणेषु पिण्डकान् ॥**

**ब्रूयुरत्रेत्युपस्थानं पूर्वस्याग्नेःसुसन्दृशम् ॥**

**अक्षन्निति प्रतीचोऽग्नेस्तथाऽक्षन्दक्षिणानलम् ॥**

**परेतेति प्रवाह्याथ मनआद्यैरुपस्थितिः**

**अत्पश्चिमाग्न्युपस्थानं मन्त्राद्वादशवर्णिताः ॥२॥**

பிண்டங்களை வேதியின் கோணங்களில் வைத்தல். ஆகவனீய காருகபத்திய தக்ஷிணக்கினிகளைப்போற்றுதல், போகும் பிதிரு தேவதைகளை நோக்கிப் போற்றல், மீண்டும் காருகபத்தியத்தைப் போற்றல் என்பது.

முதற் காண்டம் எட்டாம்பிரபாடகம்

ஐந்தாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் நாற்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

மகா பிதுருயக்ஞத்தைக் கூறு மந்திரங்கள்.

सोमाय पितृमते पुरोडाशꣳ षट्कपालं निर्वपति पितृभ्यो बर्हिषद्भ्यो धानाः पितृभ्योऽग्निष्वात्तेभ्योऽभिवान्यायै दुग्धे मन्थमेतत्ते तत ये च त्वामन्वेतत्ते पितामह प्रपितामह ये च त्वामन्वत्र पितरो यथाभागं मन्दध्वꣳ सुसंदृशं त्वा वयं मघवन्मन्दिषीमहि। प्र नूनं पूर्णवन्धुरस्स्तुतो यासि वशाꣳ अनु । योजा न्विन्द्र ते हरी ॥ १ ॥ अक्षन्नमीमदन्तह्यव प्रिया अधूषत । अस्तोषत स्वभानवो विप्रा नविष्ठया मती । योजा न्विन्द्र ते हरी । अक्षन्पितरोऽमीमदन्त पितरोऽतीतृपन्त पितरोऽमीमृजन्त पितरः । परेत पितरस्सोम्या गम्भीरैः पथिभिः पूर्व्यैः । अथा पितृन्त्सुविदत्राꣳ अपीत यमेन ये सधमादं मदन्ति। मनो न्वा हुवामहे नाराशꣳसेन स्तोमेन पितृणां च मन्मभिः ।आ ॥ २ ॥ न एतु मनः पुनः क्रत्वे दक्षाय जीवसे । ज्योक्च सूर्यं दृशे । पुनर्नः पितरो मनो ददातु दैव्यो जनः। जीवं व्रातꣳ सचेमहि । यदन्तरिक्षं पृथिवीमुत द्यांयन्मातरं पितरं वा जिहिꣳसिम। अग्निर्मा तस्मादेनसो गार्हपत्यः प्र मुञ्चतु दुरिता यानि चकृम करोतु मामनेनसम् ॥ ३ ॥

முந்திய சாகமேத இஷ்டியைச் செய்யத் தொடங்கிய மறுதினத்தில் இரண்டு இஷ்டிகளும் முடிந்தவுடன் இந்த மகா பித்ருமேத இஷ்டியைத் தொடங்கல் வேண்டும்.

முதலில் வேதத்தை (தருப்பை முடிச்சை)ச் செய்துகொண்டு, சூத்திரங்களிற் கூறியவாறே, திக்குக்களில் மூலைகளிருக்கும் வண்ணமாக நான்கு மூலைகளுள்ளதும், வேள்வித் தலைவனுடைய அளவுகொண்டதுமாகிய வேதிகையையுஞ் செய்து முடித்துவிட்டு, வேதிகைக்குள் தருப்பையை வைத்து வெட்டுதல் முதலான கிரியைகளை, இரண்டாமுறை எல்லைகோலும் வரை இஷ்டியிற் செய்ததுபோன்று செய்துகொண்டு, தக்ஷிணாக்கினியிலிருந்து சிறிது தீயை எடுத்து இப்போது செய்துள்ள அவ்வேதியின்மீது நடுவில் வைத்தல் வேண்டும்.

மற்றும், அக்கினிகளைப் போற்றுதல் முதலான கிரியைகளை, இஷ்டியிற் செய்ததுபோன்று செய்துகொண்டுவந்து, வேரோடுள்ள தருப்பை, இஷ்டியிலுள்ள சமித்தின் பாதி அளவுகொண்ட பதினெட்டுச் சமித்துக்கள், இரண்டு பருதிகள் என்னுமிவைகளையுந் தேடிக்கொள்ளுதல் வேண்டும். பிரஸ்தரம் இல்லை. புரோட்கிப்பதன் பொருட்டு அக்கினி ஹோத்திர ஹவணிக்குப் பதிலாக ஒரு பானையை வைத்துக்கொள்ளல் வேண்டும். தென்புறப்பருதி இல்லை. சாமதேனி மந்திரத்திற்குப் பதில் பிதிர் மந்திரம். ஹோதாவை அழைத்தல் இல்லை. பிரயாச அநுயாசங்களுள் பர்ஹிஸ் என்னும் ஹோமம் இல்லை.

நான்காம் அநுவாகமாகிய சாகமேதமென்னும் மூன்றும் பருவத்தில் முக்கிய அவிகள் கூறப்பட்டன. ஐந்தாவதில் அதில் எஞ்சிய மகா பித்ரு யக்ஞங் கூறப்படுகின்றது.

---

முதல் விநியோகம்.

மூன்று அவிகள் விதிக்கப்படுகின்றன

மந்திரம் :

**सोमाय पितृमते पुरोडाशꣳ षट्कपालं निर्वपति पितृभ्यो बर्हिषद्भ्यो धानाः पितृभ्योऽग्निष्वात्तेभ्योऽभिवान्यायै दुग्धे मन्थम् ।**

என்பது.

பதவுரை.

முதல் அவி

| | |
|---|---|
| **पितृमते** | பிதிர்க்களுக்குத் தலைவனாகிய |
| **सोमाय** | சோமனுக்கு |
| **अष्टाकपालं** | எட்டு அகல்கள் வைத்து |
| **पुरोडाशं** | புரோடாசஞ் (மாவடை) |
| **निर्वपति** | செய்யப்படுகின்றது. |

இரண்டாம் அவி

| | |
|---|---|
| बर्हिषद्भ्यः | வேள்வியில் உட்காருகின்றவர்களென்னும் |
| पितृभ्यः | பிதிர்க்களின் பொருட்டு |
| धानाः | கோதுமை வறுக்கப்படுகின்றது |

மூன்றும் அவி

| | |
|---|---|
| अग्निष्वात्तेभ्यः | யக்ஞத்தில் இருக்காதவர்களான |
| पितृभ्यः | பிதிர்க்களுக்கு |
| अभिवान्यायै | கன்று இறந்துவிட்ட பசுவிற் கறந்த |
| दुग्धे | பாலில் |
| मन्थम् | கோதுமை மாவுக் கலக்கப் படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து,

பிதிருக்கட்கு எஜமானனாகிய சோமனுக்கு, ஆறு மண் அகல்களை வைத்துப் புரோடாசஞ் (மாவடை) செய்வதன் பொருட்டும், வேள்வியிலிருக்கின்ற பிதிர்க்களுக்கு கோதுமையைப் பொரிக்கவும், வேள்வியில் இராதவர்களான பிதிர்க்கட்கு, கன்று இறந்த பசுவின் பால்விட்டுப் பொரி மாவைக்கலந்து வைப்பதன் பொருட்டும், காருகபத்தியத் தீக்குத் தெற்கில் பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு, நாற்புறமும் மூடிவிட்டு வாற் கோதுமையை எடுத்தல் வேண்டும், எடுத்து, பொரிக்கும், பொரிமாவுக்கும் வேறே எடுத்து வைத்துவிட்டு எஞ்சியுதை மாவாக அரைத்தல் வேண்டும் என்பதாம்.

'பர்ஹிஷத்', என்பவர்கள் = வேள்வி செய்து பிதிர்க்களானவர்கள். 'அக்னிஷ்வாத்' என்பவர்கள் = வேள்வி செய்யாதிருந்து பிதிர்க்களானவர்கள்,

மண் அகல்களை, புரோடாசத்தின் பொருட்டு காருகபத்தியத்தீயின் தென்பாகத்தில் ஆறு அகல்களையும், தக்ஷிணாக்கினியில் பொரியின் பொருட்டு ஒரு அகலையும் வைத்துப் பக்குவஞ் செய்தல் வேண்டும்.

பத்தினியின் இடுப்பில், தருப்பைக் கயிறு கட்டுதல் இல்லை.

காருகபத்தியத்திற்கு வடபுறத்தில் நான்கு நான்குமுறை சுருக்குக்களில் நெய்யை யெடுத்தல் வேண்டும்.

நீர் தெளித்து தருப்பையை வேதிகையின்மீது விரித்துவிடும்போது மூன்று தருப்பைக் கத்தைகளையும் எடுத்துக் கொண்டுபோய் வேதிகை முழுவதும் உதறிவிட்டு மும்முறை இடமாய் வேதியைச் சுற்றிக்கொண்டு

சிறிது எஞ்சியதைக் கையிற் பிடித்துக்கொண்டே மும்முறை வலமாய்ச் சுற்றுதல் வேண்டும். அவ்வண்ணமீந்திருக்கின்ற தருப்பையை பிரஸ்தரத்திற்கு வைத்துக்கொள்ளுதல் வேண்டும். பிறகு, அதன்மீது பவித்திரத்தை வைத்து நடுவிலும் வடக்கிலு மாத்திரம் பருதிக (விறகுக)ளைப் போட்டு எஞ்சிய தருப்பைகளை அங்கு விரித்து அதன்மீது சுருக்குக்களை வைத்தல் வேண்டும்.

புரோடாசத்தை இறக்கியபிறகு, பொரியை இறக்கி அதை இரண்டாய்ப் பகுத்து ஒரு பங்கை நெய்விட்டுக் கலந்துவைத்தல் வேண்டும். இரண்டாம் பங்கை மாவாக்கி, கன்று இறந்துபோன பசுமாட்டின் பாலில் அம்மாவைப் போட்டு ஒரு கரும்புத் துண்டில் கயிற்றைக் கட்டி அக்கயிற்றைப் பிடித்துக் கொண்டு அம்மாவை நன்கு கடைதல் வேண்டுப்.

மற்றும், இவ்வாறு செய்த அவிகளை அந்தர் வேதியில் வைத்த பிறகு, மெத்தை, தலையணை, மை, நெய். சலபாத்திரம் ஆகிய இவைகளை அவிகளுக்குத் தெற்காய் தனித்தனி வைத்தல் வேண்டும்.

பிறகு, ஹோதாவை அழைத்து 'अग्नयेदेवेभ्यः पितृभ्यः समिध्यमानायाऽनुब्रूहि' என்று சாமிதேனிகளின் பொருட்டு இருக்குகளைச் சொல்லும்படி ஏவல் வேண்டும்.

ஹோதா "उशन्तस्त्वा हवामहे" என்பது முதலிய மந்திரத்தை மும்முறை மீண்டும் மீண்டும் ஓதல் வேண்டும்.

அத்வரியு, அநுயாஜத்திற்குரிய சமித்தை நிறுத்திவைத்துவிட்டு எஞ்சிய சமித்துக்கள் பதினொன்றையும் மூன்றாய்ப்பகுத்து மும்முறை தீயில் வைத்தல் வேண்டும்.

இரண்டு ஆகார ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும். பிரவரம் (குல மரபு) கூறல் இல்லை. பிரயாசங்களுள் நான்காவதாகிய 'बर्हिः' தேவதையைக் குறித்து இன்று. எஞ்சிய நான்கையுஞ் செய்தல் வேண்டும். சிவவந்த ஆஜ்யபாகங்கள் என்னும் அவற்றுள், ஹோதா (1) "आनो अग्नेसुकेतुना" (2) "त्वंसोममहे भगम्" என்பது முதலான புரோநுவாக்கிய மந்திரங்களைக் கூறுதல் வேண்டும். ஈண்டு யாஜ்யா வாக்கியங் வழக்கில் உள்ளவைகளேயாம்.

பிறகு, சுருவிற்குத் தெற்கில் உபபிருதையும், அதற்குத் தெற்கில் துருவாவையும் எடுத்து வைத்தல் வேண்டும்.

சாகமேதம்)

புரோடாசத்திற்குத் தெற்கில் பொரியையும், அதற்குத் தெற்கில் பொரி மாவையும் வைத்தல் வேண்டும்.

பிரமனும், எஜமானனும் ஆகவனீயத்திற்கு வடக்கில் உட்காரல் வேண்டும். ஆக்னீத்ரன் வேதிக்குத் தெற்கில் வடக்குமுகமாய் நிற்றல் வேண்டும் நான்கு பக்கங்களையும் மூடிவிடலும் வேண்டும். அனைவரும் பூணூலை மாற்றிப் போட்டுக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, அத்வரியு, சுருவில் உபஸ்தரணஞ்செய்து (நெய்யைச் சிந்திக்) கொண்டு புரோடாசம், பொரி, பொரிமா என்பவைகளிற் சிறிதெடுத்துச் சுருவிற் போட்டுக்கொண்டு அபிகார ஹோமஞ் செய்தல் வேண்டும். ஐந்து இருடிகளின் மரபைச் சேர்ந்த வேள்வித்தலைவனெனின்? முதல் அவிகளில் இரு முறைஎடுத்துக்கொள்ளுதல் வேண்டும்.

பிறகு ஹோதாவை, 'सोमायपितृमतेऽनुस्वधा' என்று புரோநு வாக்கியத்தின் பொருட்டு ஏவல் வேண்டும்.

ஹோதா, त्वं सोम प्रचिकितो मनीषा என்பது முதலான இரண்டு இருக்குகளையும் கூறி ஓங்காரத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வடக்கே தாண்டிவந்து, 'आस्वधा' என்று ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும்.

ஆக்னீத்ரன், "अस्तुस्वधा" என்று பதில் கூறுதல் வேண்டும்.

அத்வரியு. सोम पितृमन्तं स्वधा' என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'येस्वधामहे' என்று தொடங்கி யாஜ்யைக்குரிய மந்திரத்தை ஓதிவிட்டு, முடிவில், 'स्वधानमः' என்று வஷட்காரத்திற்குப் பதிலாய்க் கூறுதல் வேண்டும்.

'स्वधानमः' என்று ஹோதா கூறும்போது அத்வரியு ஓமஞ் செய்தல் வேண்டும்.

எஜமானன் தியாகஞ்செய்தல் வேண்டும். அநுமந்திரணமுஞ் செய்தல் வேண்டும்.

அத்வரியு, தெற்கில் தாண்டிப்போய் சுருவில் உபஸ்தரணஞ்செய்து (நெய்யைச் சிந்திக்) கொண்டு, பொரி, பொரிமா, புரோடாசம் என்பவைகளில் ஒவ்வொரு முறை சிறிது எடுத்து அதில் அபிகாரஞ்செய்து (நெய்யைச் சிந்திக்) கொண்டு ' पितृभ्यो बर्हिषद्भ्य अनुस्वधा ' என்று, புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, முன்போலவே, बर्हिषदः पितरः என்பது முதலான இரண்டு இருக்குக்களைக் கொண்ட புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

அத்வரியு, வடக்கில் தாண்டிப்போய், ‘ आस्वधा ’ என்று ஆக்னீத்ரனை ஏவுங்கால், அவன், ‘ अस्तुस्वधा ’ என்று பதிற் சொல்லல் வேண்டும்.

மற்றும், அத்வரியு ‘ पितॄन्बर्हिषदस्स्वधा ’ என்று, ஹோதாவை யாஜ்யை சொல்வதன் பொருட்டு ஏவல் வேண்டும்.

ஹோதா, முன்போல், யாஜ்யை சொல்லி, ‘ स्वधानमः ’ என்று சொல்லும் போது, அத்வரியு ஹோமஞ்செய்தல் வேண்டும்.

மீண்டும் தெற்கில் தாண்டிவந்து சுருவில் உபஸ்தரணஞ்செய்து (நெய் தெளிக்) கொண்டு. பொரிமா, புரோடசம், பொரி என்பவைகளில் முறையே ஒவ்வொரு முறை எடுத்துக்கொண்டு.

‘ पितृभ्योऽग्निष्वात्तेभ्य अनुस्वधा ’ என்று, ஹோதாவை, புரோநுவாக்கியத்தின் பொருட்டு ஏவல் வேண்டும்.

ஹோதா, முன்போல். अग्निष्वात्ताः पितरः என்பது முதலான இரண்டு இருக்குக்களடங்கிய புரோநுவாக்கியத்தைக் கூறுதல்வேண்டும்.

அத்வரியு, வடக்கில் தாண்டிவந்து, ‘ आस्वधा ’ என்று, ஆக்னீத்ரனை ஏவல் வேண்டும். ஆக்னீத்ரன், ‘ अस्तुस्वधा ’ என்று பதிற்கூறியவுடன்,

‘ पितॄनग्निष्वात्तान्स्वधा ’ என்று, யாஜ்யை கூறுதற்பொருட்டு ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா முன்போல் யாஜ்யாவாக்கியத்தைக் கூறி, முடிவில், ‘ स्वधानमः ’ என்று கூறும்போது ஹோமஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, அவிகளனைத்திலும் சிறிது சிறிது எடுத்துக்கொண்டு, அங்குச் செய்யும் சுவிஷ்டகிருதுக்குப் பதிலாக, ‘ அக்னயே கவ்யவாஹநாய, என்று ஹோமஞ்செய்தல் வேண்டும். இப் பிரதான யாகமந்திரங்களை மெதுவாய் ஓதல்வேண்டும். பொரிமாவை மாத்திரம் ‘ இடா ’ என்னும் பாத்திரத்தில் எடுத்தல் வேண்டும். மந்திரங்களை ஓதிய பிறகு அனைவரும் அம்மாவை முகர்ந்துபார்த்தல் வேண்டும். ஈண்டு முகர்ந்து பார்த்தல் அருந்தலையொக்கும்

பிறகு, வேள்வித் தலைவன், அந்தர் வேதியில் வைத்திருந்த நீர்க்குடத்தை யெடுத்துக்கொண்டு. शुन्धन्तां पितरः, என்னும் மந்திரத்தை ஓதி, அந் நீரை ஊற்றிக்கொண்டே அப்பிரதட்சணமாய் (இடமாய்) வேதியையை மும்முறை சுற்றிவரல் வேண்டும். குடத்தை வைத்துவிட்டு, ‘ अयाविष्टा जनयन्कर्वराणि ’ என்பது முதலிய மந்திரத்தை ஓதிக்கொண்டே மும்முறை மீண்டும் வலமாய்ச்சுற்றி வருதல் வேண்டும்.

பிறகு, எஞ்சிய அவிகளை ஒன்றாய்க் கலந்து மூன்று உருண்டைகளைச் செய்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

## இரண்டாம் விநியோகம்.

பிதிர்க்கட்குப் பிண்டமளித்தல்

மந்திரம் :

**एतत्ते तत ये च त्वामन्वेतत्ते पितामह प्रपितामह ये च त्वामनु ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे पितः ! | பிதிரே ! |
| ते | உனக்கு |
| एतत् | இந்த உண்டையாகிய அன்னம் |
| (दत्तं) | (அளிக்கப்படுகின்றது) |
| येच | மற்றும், எவர்கள் |
| त्वां | உன்னைப் |
| अन्वेतत् | பின்பற்றி யிருக்கின்றார்களோ, |
| ते | அவர்கட்கும் |
| एतत् (दत्तं) | இவ்வன்னம் அளிக்கப்படுகின்றது. |
| हे पितामह ! | பாட்டனாரே ! |
| ते | உமக்கு |
| एतत् . | இவ்வன்னம் |
| (दत्तं) | அளிக்கப்படுகின்றது |
| येच | எவர்கள் |
| त्वां | உன்னைப் |
| अनु | பின்பற்றி யிருக்கின்றார்களோ |
| ते | அவர்கட்கும் |
| एतत् दत्तं | இவ்வன்னம் அளிக்கப்படுகின்றது |
| हे प्रपितामह ! | முப்பாட்டனாரே ! |
| ते | உனக்கு |
| एतत् | இவ்வன்னம் |
| (दत्तं) | (அளிக்கப்படுகின்றது) |
| येच | எவர்கள் |
| त्वां | உன்னைப் |

| | |
|---|---|
| अनु | பின்பற்றி யிருக்கின்றார்களோ, |
| ते | அவர்கட்கும் |
| एतत् (दत्तं) | இவ்வன்னம் அளிக்கப் படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து

மூன்று பகுதிகளாயுள்ள இம் மந்திரங்களால், பிதா-பாட்டன், முப்பாட்டன் என்பவர்கட்கும்; மற்றும் அவர்களைப் பின்பற்றியுள்ளவர்கட்கும், அவர்களின் பெயரை முறையே கூறி, கிழக்கு மூலை, தெற்கு மூலை, மேற்கு மூலைகளில் ஒவ்வொரு உருண்டையை வைத்தல் வேண்டுமென்பதாம். (இம் மந்திரம் வருவித்துரைக்கப்பட்டிருக்கின்றது).

பிதாவுடன் ஆறுவது பாட்டனைச் சேர்த்தும், பிதாமஹனுடன் 5-வது பாட்டனைச் சேர்த்தும்; பிரபிதா மஹனுடன் 4-வது பாட்டனைச் சேர்த்து ஓதிக்கொள்ளல் வேண்டும்.

---

மூன்றாம் விநியோகம்

ஒட்டியிருந்ததை அநுப்பித்தல்

மந்திரம் :

अत्र पितरो यथाभागं मन्दध्वम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे पितरः ! | பிதிர்க்களே ! |
| अत्र | வைத்துள்ள பிண்டங்களில் |
| यथाभागं | தமது தமது பாகங்களை அருந்திக் |
| मन्दध्वं | களிப்படைவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தை ஓதிக்கொண்டு கையில் ஒட்டியிருந்தமாவையும் வடக்கு மூலையில் தட்டிவிடல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

ஆகவனீயத்தைப் போற்றுதல்

மந்திரம் :

सुसंदृशं त्वा वयं मघवन्मन्दिषीमहि । प्र नूनं पूर्णवन्धुरस्स्तुतो यासि वशाꣳ अनु । योजा न्विन्द्र ते हरी ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे मघवन् ! | மகவானே ! |
| सुसंदर्श | குளிர்ந்த கடைக்கண்ணால் எம்மைப் பார்க்கின்ற |
| त्वा | உன்னை |
| वयं | யாம் |
| मन्दिषीमहि | திருப்தி செய்கின்றோம். (நீயும்) |
| पूर्णवन्धुरः | தேரில் நிறைந்தவனும் |
| स्तुतः | எம்மால் துதிக்கப்பெற்றவனுமாகி |
| वशान् अनु | வேண்டிய இடத்தைக் குறித்து |
| यासि | வருவாயாக. |
| इन्द्र ! | இந்திரனே ! |
| ते हरी | உனது குதிரைகள் |
| योजा | தேரில் பூட்டப் பெற்றன. |

சாயணபாடியக் கருத்து.

வடக்கே திரும்பிக்கொண்டு இம் மந்திரத்தால் ஆகவனீயத்தீயைப் போற்றுதல் வேண்டுமென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

காருகபத்தியத் துதி

மந்திரம் :

**अक्षन्नमीमदन्तह्यव प्रिया अधूषत । अस्तोषत स्वभानवोविप्रा नविष्ठया मती । योजा न्विन्द्र ते हरी ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अक्षन् | பிதிர்க்கள், அவியை யருந்தி விட்டனர் |
| अमीमदन्त | மிகக் களிப்புற்றனர். |
| अवाधूषत | உணவு நல்லதாயிருந்ததால், தலை முதலிய அங்கங்களை அசைக்கின்றனர். |
| स्वभानवः | தமது ஒளிகளால் விளங்கு கின்றவர்களாய் |

| | |
|---|---|
| **विप्राः** | அந்தணர்களானவர்கள் |
| **यविष्ठयामती** | புதிதாய் அற்புதமானது என்று உணர்ந்து |
| **अस्तोषत** | மிகப்பிரியம், என்பது முதலான சொற்களால் துதிக்கின்றூர்கள். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், காருகபத்தியத்தீயைப் போற்றுதல் வேண்டுமென்பதாம்.

எஞ்சிய மந்திரத்திற்கு முன்னர்ப் பொருள் கூறப்படுள்ளது.

———

ஆறும் விநியோகம்

தக்ஷிணத்தீயைப் போற்றுதல்

மந்திரம் :

**अक्षन्पितरोऽमीमदन्त पितरोऽतीतृपन्त पितरोऽमीमृजन्त पितरः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| **अक्षन्** | அவிகளை அருந்தி |
| **पितरः** | பிதிர்க்கள் |
| **अमीमदन्त** | களிப்படைந்தனர். |
| **पितरः** | பிதிர்க்கள் |
| **अतीतृपन्त** | திருப்தியடைந்தார்கள். |
| **पितरः** | பிதிர்க்கள் |
| **अमीमृजन्त** | எம்மைச் சுத்தஞ் செய்துவிட்டார்கள் |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், தட்சிணத்தீயைப் போற்றுதல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுத் தீயினிடத்தில் பிண்ட ஆகுதிசெய்யாமையால் தீ கோபமடையும் என்று கருதித் தீயைப் போற்றுதலாம்.

———

ஏழாம் விநியோகம்

பிதிர்க்களை அநுப்புதல்

மந்திரம் :

**परेत पितरस्सोम्यागम्भीरैः पथिभिः पूर्व्यैः। अथा पितॄन्त्सुविदत्रा२ अपीत यमेन ये सधमादं मदन्ति ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे सोम्याः ! | நல்லோர்களான |
| पितरः | பிதிர்க்களே ! நீவிர் |
| परेत | திரும்பி |
| गम्भीरैः | உணவு, நீர் என்பவைகள் எளிதில் கிடைக்கத் தக்கவைகளும் |
| पूर्व्यैः | முன்பு செய்யப் பெற்றவைகளுமான |
| पथिभिः | வழிகளினால் வீட்டுக்குச் செல்வீர்களாக, |
| अथ | சென்றபிறகு |
| ये | அங்கு, எவர்கள் |
| यमेन | எமனுடன்கூட |
| सधमादं | சமான முடையவர்களாய்க் |
| मदन्ति | களிப்புறுகின்றார்களோ, |
| सुविदत्रान् | நெடுநாளிருந்தமையின் அங்குள்ள கதைகளையுணர்ந்தவர்களான |
| पितॄन् अपि | அப் பித்திருக்களை |
| इत | அடைவீர்களாக. |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பிதிர்க்களை வழியனுப்பல் வேண்டுமென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்

பிதிர்க்களைப் போற்றுதல்

முதல் மந்திரம்

மந்திரம் :

**मनोन्वा हुवामहे नाराशंसेन स्तोमेन पितृणां च मन्मभिः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| नाराशंसेन | மனிதரைப் போற்றுதற் குரிய |
| स्तोमेन | துதி மஞ்சரியால் |
| पितृणानपि | பிதிர்க்கட்கும் |

| | |
|---|---|
| मन्मभिः | மனனஞ் செய்யத்தக்க வாக்கியங்களாலும் |
| मनः | பிதிர்க்களின் வேள்வி செய்யு மனத்தராய் |
| नु | விரைவில் |
| आहुवामहे | அழைக்கின்றோம். |

சாயணபாடியக் கருத்து.

மக்களைப் போற்றுதற்குரிய துதிகளாலும், பிதிர்க்கட்கு உடன்பாடான வாக்கியங்களாலும், பிதிர் யக்ஞஞ் செய்யுமனமுடையவர்களாய் உங்களை யழைக்கின்றோம் என்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்

இரண்டாமந்திரம்

மந்திரம் :

आ न एतु मनः पुनः क्रत्वे दक्षाय जीवसे । ज्योक्च सूर्यं दृशे ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| क्रत्वे | கருமத்தை யநுட்டிப்பதற்கு உரிய |
| दक्षाय | வன்மையின் பொருட்டும் |
| जीवसे | வாழ்தற் பொருட்டும் |
| ज्योक् | நீண்டகாலம் |
| सूर्यं दृशे | இரவியைக் காண்பதற்கும் |
| मनः | மனம் |
| पुनः नः | மீண்டும் எங்கட்குக் |
| एतु | கிடைக்குக. |

சாயணபாடியக் கருத்து.

நீண்டநாள் கருமத்தைச் செய்து வாழும் வன்மையுடைய மனமானது மீண்டு எங்கட்கு உண்டாகுக என்பதாம்.

---

பத்தாம் விநியோகம்

மூன்றமந்திரம்

மந்திரம் :

पुनर्नः पितरो मनो ददातु दैव्यो जनः । जीवं व्रातꣳ सचेमहि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे पितरः ! | பிதிர்க்களே ! |
| दैव्योजनः | தேவர்கள் சம்பந்தபட்டவர்கள் |
| मनः | கருமத்தைச் செய்தலை மேற்கொண்டதாகிய மனத்தை |
| नः | எமக்குக் |
| ददातु | கொடுப்பார்களாக |
| व्रातं | யாமும், எண்ணிறந்த வருடகாலம் |
| जीवं | வாழ்வை |
| सचेमहि | அநுபவிப்போமாக. |

சாயணபாடிய கருத்து.

மீண்டும், தேவசம்பந்தமானவர்கள், எமக்கு, கருமாநுட்டானஞ் செய்யும் மனத்தைக் கொடுப்பார்களாக. யாமும் நெடுநாள் வாழ்வோமாக என்பதாம்.

மேற்கண்ட மூன்று மந்திரங்களாலும் பிதிர்க்களைத் துதித்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினோராம் அநுவாகம்.

காருகபத்தியத் தீயைப் போற்றுதல்.

மந்திரம் :

यदन्तरिक्षं पृथिवीमुत द्यांयन्मातरं पितरंवा जिहिंसिम । अग्निर्मातस्मादेनसो गार्हपत्यः प्र मुञ्चतु दुरिता यानिचक्रुम करोतु मामनेनसम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| अन्तरिक्षं | சுவர்க்கம் |
| पृथिवीं | மண் |
| उत द्यां | வான், என்னும் உலகங்களை |
| यत् जिहिंसिम | மனத்தால் துன்புறுத்த நினைத்துள்ளோமெனின்? (மற்றும்) |
| मातरं | அன்னையையேனும் |

| | |
|---|---|
| वा | அல்லது |
| पितरं | பிதாவை யேனும் |
| जिहिंसिम | (அவ்வாறு) எண்ணியிருப்பினும், |
| तस्मात् एनसः | அப்பாவங்களனைத்திலுருந்தும் |
| गार्हपत्यःअग्निः | காருகபத்திய அக்கினியானது |
| मां | என்னை |
| प्रमुञ्चतु | விடுவிக்குக. |
| यानि दुरिता | மற்றும், எந்தப் பாவங்களைச் |
| चकृम | செய்துள்ளேனே, |
| मुञ्चतु | அவைகளிலிருந்தும் விடுவிப்பதாகுக. |
| मां | என்னை |
| अनेनसम् | பாவமில்லாதவனுய்ச் |
| करोतु | செய்குக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், காருகபத்திய அக்கினியைத் துதித்தல் வேண்டுமென்பதாம்.

பிறகு, அனைவரும் பூணூலைச் சரியாய்போட்டுக்கொள்ளுதல் வேண்டும். சுருக்குக்களையும் முறைப்படி வைத்தல் வேண்டும்.

மற்றும், அனைவரும் தத்தமது இடங்கட்குச் செல்லுதல் வேண்டும்.

இரண்டு அநுயாசங்களையும் ஓமஞ் செய்தல் வேண்டும். சூக்தவாகத்தி (தர்ப்பைகளை எரிப்பதி) லிருந்து, பூணூலை, கழுத்தில் மாலைபோற் போட்டுக்கொள்ளுதல் வேண்டும்.

பத்தினி சம்யாசமும், சமிஷ்டயசுர் ஹோமமும் இல்லை. ஏனையவைகளை இஷ்டியிற் செய்து போன்றே செய்து முடித்தல் வேண்டும்.

ஐந்தாமநுவாகம்

முற்றிற்று.

ஆறும் அநுவாக விடயச்சுருக்கம்.

स्वामी यावन्त इत्याह पशू मूते समा वपेत् ॥
एक इत्युलमुकं नीत्वाऽऽखुस्त आखूत्करे हविः ॥ १ ॥
क्षिपेदेषोऽर्धहोमस्स्याद्भे सुभे परिषिञ्चति ॥
अवाम्बेति जपेत्स्वामी त्र्यम्बकं परि यन्ति ते ॥ २ ॥
एषोऽवस्थाप्य तच्छेषान्मूतेबध्नाति शाखिनि ॥
अवत श्वास नियमो मन्त्रा एकादश स्मृताः ॥ ३ ॥

வேள்வித் தலைவன், செபித்தல், புரோடாசங்களைக் கூடையில் வைத்தல், ஒரு தீக்கட்டையை எடுத்துக் கொள்ளல், எலிவளையில் புரோடாசத்தை வைத்தல், ஒரு ஹோமஞ் செய்தல், பரிஷேசனஞ் செய்தல், எஜமானன் ஜபித்தல், மூன்று முறை சுற்றி வருதல், புரோடசத் துண்டுகளை தொங்கவிடுதல், மரத்தின் கிளையில் புரோடாசம் உள்ள கூடையைக் கட்டுதல், மூச்சைப் பிடித்து விடுதல் என்பது.

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

### ஆறுமநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் மூன்று பதங்களைக் கொண்டது.

இராசசூயத்தில் சாதுர்மாச சம்பந்தமான சாகமேதமென்னும் மூன்றும் பருவத்தில் திரியம்பக இஷ்டியைக் கூறுமந்திரங்கள்.

प्रतिपूरुषमेककपालान्निर्वपत्येकमतिरिक्तं यावन्तो गृह्याः स्मस्तेभ्यः कर्मकरं पशूनाꣳ शर्मासि शर्म यजमानस्य शर्म मे यच्छैक एव रुद्रो न द्वितीयाय तस्थ आखुस्ते रुद्र पशुस्तं जुषस्वैष ते रुद्र भागस्सह स्वस्राऽम्बिकया तं जुषस्व भेषजं गवेऽश्वाय पुरुषाय भेषजमथो अस्मभ्यं भेषजꣳ सुभेषजम् ॥ १ ॥ यथाऽसति। सुगं मेषाय मेष्यै अवाम्ब रुद्रमदिमह्यव देवं त्र्यम्बकम्। यथा नश्श्रेयसः करद्यथा नो वस्यसः करद्यथा नः पशुमतः करद्यथा नो

ऽव्यवसाययात् । त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम् । उर्वारुक मिव बन्धनान्मृत्योर्मुक्षीय माऽमृतात् । एष ते रुद्रभागस्तं जुष स्व तेनावसेन परो मूजवतोऽतीह्यवततधन्वा पिनाकहस्तः कृत्ति वासाः ॥ २ ॥

ஐந்தாமநுவாகத்தில் பிதிர் யக்ஞங் கூறப்பட்டது, ஆறுமநுவாகத்தில் திரியம்பகப் புரோடாசமும், சாகமேதத்தின் பரிசேடமுங் கூறப்படுகின்றது.

---

முதலாம் விநியோகம்.

புரோடாச விதானஞ் செய்தல்,

மந்திரம் :

प्रतिपूरुषमेककपालान्निर्वपत्येकमतिरिक्तम् ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| प्रतिपूरुषं | வேள்வித் தலைவனுடைய சுற்றத்தார், ஒவ்வொருவருக்கும் |
| एककपालान् | ஒவ்வொரு மண்ணகல்களை |
| निर्वपति | வைத்தல் வேண்டும். |
| अतिरिक्तं एकं | மிகுதியாக ஒரு மண்ணகலையும் |
| (निर्वपति) | வைத்தல் வேண்டும், |

சாயணபாடியக் கருத்து.

ஈண்டுக் காருகபத்தியத் தீயிலிருந்து ஏனைய இரண்டு தீக்களையும் உண்டாக்கிக்கொண்டு, பரிஸ்தரணம் என்னும் தருப்பைக் கத்தையையும், வேதத்தை (தருப்பை முடிச்சை)யுஞ் செய்வதுடன், புரோடாசங்களைச் செய்வதற்கு வேண்டிய பாத்திரங்களையும், சுருவம், நெய்த்தட்டு முதலானவைகளையும் எடுத்துக்கொள்ளல் வேண்டும்.

பிறகு, இம் மந்திரத்தால், வேள்வித் தலைவன் வீட்டிலுள்ள குடும்பத்தார்களின் பொருட்டும், மேல் பிறக்கப் போகின்றவர்களின் பொருட்டும் கபாலங்களை வைத்துப் புரோடாசஞ் செய்வதற்கு வேண்டிய நெல்லை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்.

வேள்வித் தலைவன் சேபம்,

மந்திரம் ;

यावन्तो गृह्याः स्मस्तेभ्यः कमकरम् ।

என்பது.

| | |
|---|---|
| यावन्तः | எத்தனை பேர்கள் |
| गृह्याः स्मः | வீட்டில் உள்ளார்களோ, |
| तेभ्यः | அவர்கட்கு |
| कं | சுகத்தைச் |
| अकरम् | செய்கின்றேன், |

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவன், நெல்லெடுக்கும் போது இம்மந்திரத்தைச் செபித்தல் வேண்டுமென்பதாம், (2)

ஈண்டு, நெற்குத்துதல் முதலான கிரியைகளை மந்திரமோதுதலின்றியே செய்தல் வேண்டும். நெல்லைக் குத்தி, மாவரைத்துப் புரோடாசங்கள் செய்து காருக பத்தியத்தியின் வடபுறத்தில் ஒவ்வொரு கபாலங்களாக புரோடசங்கட்கு வேண்டிய அளவாய் வைத்து அவைகளின் மீது ஒவ்வொன்றில் ஒவ்வொரு புரோடாசத்தை வைத்தல் வேணடும், நெய் தடவாமல் இறக்கி அந்தர் வேதியில் வைத்தல் வேண்டும் என்பதையும் உணர்க.

---

மூன்றாம் விநியோகம்.

புரோடாசத்தைக் கூடையிலெடுத்தல்.

மந்திரம் ;

पशूनाꣳ शर्मासि शर्मयजमानस्य शर्म मे यच्छ ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे मूत !) | (கோரைக் கூடையே ! நீ, |
| पशूनां | விலங்குகட்குச் |
| शर्म | சுகவடிவாய் |
| असि | இருக்கின்றாய். |
| यजमानस्य मे | வேள்வித் தலைவனாகிய எனக்கு |

| | |
|---|---|
| शर्म | சுகத்தைக் |
| यच्छ | கொடுப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், ஒரு கோரைப் புல்லாற் செய்த கூடையில் அப்புரோடாசங்களை வைத்தல் வேண்டுமென்பதாம்,

---

நான்காம் விநியோகம்,

கொள்ளியை எடுத்தல்.

மந்திரம் :

**एकएव रुद्रो नद्वितीयाय तस्थे ।**

என்பது,

பதவுரை,

| | |
|---|---|
| रुद्रः | உருத்திரன் |
| एकएव | ஒருவனே உள்ளான். |
| द्वितीयाय | இரண்டாமவன் |
| न तस्थे | இல்லன். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் தட்சிணாத்தியிலிருந்து புகைந்துகொண்டிருக்கும் ஒரு கொள்ளியை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, இருத்துவிக்குக்களும், வேள்வித்தலைவனுடைய குடும்பத்தார்களும் புரோடாசக் கூடையையும், கொள்ளியையும், மற்றுமுள்ள வேள்விப் பொருள்களையும் எடுத்துக்கொண்டு ஈசானிய மூலையாய் வழிகளின் நாற்சந்திகள் கூடுமிடம் நோக்கிச் செல்லுதல் வேண்டும் என்பதையும் உணர்க.

---

ஐந்தாம் விநியோகம்.

எலிவளையில் புரோடாசத்தைப் போடுதல்.

மந்திரம் :

**आखुस्ते रुद्र पशुस्तं जुषस्व ।**

என்பது

பதவுரை

| | |
|---|---|
| हे रुद्र ! | உருத்திரனே ! |
| ते पशुः | உனக்குப் பிரியமானது |
| आखुः | எலியாம். ஆதலின் |
| तं | அதை |
| जुषस्व | அநுபவிப்பாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வழியிலுள்ள எலிவளை மண்ணின்மேல் ஒரு புரோடாசத்தை வைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

பிறகு, நாற்சந்தியுள்ள விடத்திற்குச் சென்று, கொண்டுவந்த கொள்ளியை வைத்துத் தீ மூட்டி வளர்த்து சுற்றிலும் தருப்பைகளைப் போட்டுவிட்டு, புரோடசங்களனைத்திலும் வடபக்கமாக சிறிது சிறிது எடுத்து ஒரு புரசமரத்தின்மீது வைத்தல் வேண்டும். அவ்விலை புரசமரத்தின் இலைக்கொத்துகளுள் நடுவில் இருப்பதாய் இருத்தல் வேண்டும். இது மிகச் சிறப்புடையதாம்.

---

ஆறும் விநியோகம்

ஹோமஞ் செய்தல்.

மந்திரம் :

एषते रुद्र भागस्सह स्वस्राऽम्बिकयातं जुषस्व ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| (हे रुद्र !) | உருத்திரனே ! நீ |
| एषः | புரசம் இலையில் எடுத்துவைத்துள்ள இப் புரோடாசக் கூறுகள், |
| ते | உனது |
| भागः | பாகமாம். |
| स्वस्रा | உடன்பிறந்தாள் போன்று இனிது செய்யும் |
| अम्बिकयासह | அம்பாளுடன் கூட |
| तं | அந்த அவிர்ப்பாகத்தை |
| जुषस्व | அருந்துவாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன் 'சுவாஹா' என்பதையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு அத்தீயில் அதை ஹோமஞ்செய்தல் வேண்டும் என்பதாம்.

---

ஏழாம் விநியோகம்

தீயைச்சுற்றி நீர்தெளித்தல்.

மந்திரம் :

**भेषजं गवेऽश्वाय पुरुषाय भेषजमथो अस्मभ्यं भेषजꣳ सुभेषजं यथाऽसति। सुगं मेषाय मेष्यै ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र ! | உருத்திரனே ! |
| गवे | எமது கோக் கூட்டத்திற்கு |
| भेषजं | பிணியிலாமையைச் செய்வாயாக. |
| अश्वाय | குதிரைக்கும் |
| पुरुषाय | ஏவலாளுக்கும் |
| भेषजं | நோயிலாமையைச் செய்வாயாக. |
| अथो | இனி |
| अस्मभ्यं | எமக்குச் செய்யும் |
| भेषजं | ஆரோக்கியத் தன்மையை |
| यथा असति | அடியோடு நோய்ஒழியுமாறு செய்வாயாக. |
| मेषाय | எருமைக் கடாவிற்கும் |
| मेष्यै | பால்கறக்கும் எருமைக்கும் |
| सुगं | நோயின்றி நடமாடுந் தன்மையைச் செய்வாயாக. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் அவ்வக்கினியைச்சுற்றி நீர் தெளித்தல் வேண்டும். சுற்றித் தெளித்ததால் நீர்த்தாரையால் சுற்றுதலாகும் என்பதாம்.

---

ஏழாம் விநியோகம்

வேள்வித்தலைவன் சேபம்.

மந்திரம் :

**अवाऽम्ब रुद्रमदिमह्यव देवं त्र्यम्बकम् । यथा नश्श्रेयसः करद्यथा नो वस्यसः करद्यथा नः पशुमतः करद्यथा नो व्यवसाययात् ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे अम्ब ! | அம்பிகே! |
| रुद्रं | உருத்திரனைக் குறித்து |
| अवअदिमहि | புரோடாசத்தைப் பகுக்கின்றோம் |
| त्र्यम्बकं देवं | முக்கண்ண தேவனைக் குறித்து |
| (अवअदिमहि) | புரோடாசத்தைப் பகுக்கின்றோம். எதன் பொருட்டெனின்? |
| नः | எமக்கு (அவ்வுருத்திரன்) |
| यथा | எவ்வாறு |
| श्रेयसः | பெருமையைச் |
| करत् | செய்கின்றானே, |
| नः | எம்மைத் |
| वस्यसः | தனமுடையராக |
| यथाकरत् | எவ்வாறு செய்கின்றானே, |
| नः | எம்மை |
| पशुमतः | பசுக்களையுடையவர்களாக |
| यथाकरत् | எவ்வாறு செய்கின்றானே |
| नः | எம்மை |
| व्यवसाययात् | சாத்திரப் பொருண் நிச்சய முடையராய்ச் செய்கின்றானே, அவ்வாறு செய்தற் பொருட்டென்க. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை வேள்வித்தலைவன் செபித்தல் வேண்டு மென்பதாம்.

———

எட்டாம் விநியோகம்

புரோடாசத் துண்டுகளைக் கைக்கொள்ளுதல்

மந்திரம் :

त्र्यम्बकं यजामहे सुगन्धिं पुष्टिवर्धनम्। उर्वारुकमिव बन्धनान्मृत्योर्मुक्षीय माऽमृतात्।

என்பது

பதவுரை.

| | |
|---|---|
| सुगन्धिं | திருமேனியின் மணம், அல்லது, புண்ய நறு மணங் கமழுகின்றவனும் |
| पुष्टिवर्धनं | நமது உடல் பொருள்களை வளர்க்கின்றவனு மாகிய |
| त्र्यम्बकं | முக்கண்ணுடைய பரமேசுரனை |
| यजामहे | ஆராதிக்கின்றோம். (ஆதலின்) |
| उर्वारुकमिव | வெள்ளரிப்பழம் போல் |
| मृत्योर्बन्धनात् | பாசக்கட்டிலிருந்து |
| मुक्षीय | யாம் விடுபட்டவராகின்றோம். |
| अमृतात् | நீண்ட வாழ்நாளிலிருந்து, அல்லது, சுவர்க் க்த்திலிருந்து |
| मामुक्षीय | நழுவாதவராகின்றோம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தை ஓதிக்கொண்டே வேள்வித்தலைவன் தனது குடும்பத் தாருடன் அத்தியை மும்முறை வலஞ் செய்தவுடன், சுற்றத்தாரனைவரும் ஒவ்வொருவரும் ஒவ்வொரு புரோடாசத் துண்டை எடுத்துக்கொண்டு அதன் மேல் விசிறிவிட்டு, அவைகளைக் கையில் வைத்துக்கொண்டே 'त्र्यम्बकं' என்பது முதலிய மந்திரத்தையே மீண்டும் ஓதி, அப்புரோடாசத் துண்டுகளை மேலே யெறிந்து வேள்வித் தலைவனுடைய இரண்டு கைகளின் மீதும் ஏந்தி 'भगस्थ भगस्यवो लप्सीय' என்று மீண்டும் அவற்றை எடுத்துக் கொள்ளல் வேண்டும். இவ்வாறே மூன்று முறையுஞ் செய்தல் வேண்டும் என்பதையு முணர்க.

எட்டாம் விநியோகம்.

புரோடாசத் துண்டுகளை மரத்தில் கட்டித் தொங்கவிடுதல்

மந்திரம் :

**एष ते रुद्रभागस्तं जुषस्व तेनाऽवसेन परोमूजवतोऽतीहि ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| हे रुद्र ! | உருத்திரனே! |
| एषः | மரத்தில் தொங்கும் புரோடாசத் துண்டுகள் |
| ते | உனது |
| भागः | பாகமாம். |
| तं | அதை |
| जुषस्व | அருந்துவாயாக. |
| तेन अवसेन | கட்டமுதாய்ப் பாதுகாப்பாற்றும் அவ்வுணவினால் |
| मूजवतः | 'மூசவத்' என்னும் மலையின் |
| परः | மேல் பாகத்தில் இருந்து |
| अतीहि | தாண்டிச் செல்வாயாக. |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், அப்புரோடாசத் துண்டுகளை கோரைக்கூடையிற் போட்டு ஒரு மரத்தின் கிளையில் கட்டித் தொங்கவிட்டுவிடல் வேண்டும் என்பதாம்.

இது உருத்திரனுக்கு, பாதேயம். (கட்டன்னமாம்.)

---

ஒன்பதாம் விநியோகம்

மும்முறை ஓதல்

மந்திரம் :

**अवततधन्वा पिनाकहस्तः कृत्तिवासाः ।**

என்பது.

பதவுரை

| | |
|---|---|
| पिनाकहस्तः | உருத்திரன், 'பிநாகம்' என்னும் தநுவை உடையவனும், |
| अवततधन्वा | நாணேந்தியவனும், |
| कृत्तिवासाः | யானைத்தோல் ஆடையை யணிந்தவனுமாவான். |

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்துடன் ஓம் என்பதையுஞ் சேர்த்து, உருத்திரன் எமது பகைவரைக் கொல்லுதற் பொருட்டு வில்லில் நாணேற்றுகின்றவனுருக ஓம்' என்று மும்முறை ஓதல் வேண்டும் என்பதாம்.

அதன் பிறகு, புரோடாசத் துண்டுகளைக் கட்டித் தொங்கவிட்ட அம் மரத்தின் அடியைச் சுற்றிலும் நீரை ஊற்றிவிட்டு திரும்பிப்பார்க்காமல் யாகசாலையை வந்தடைதல் வேண்டும். அடைந்தவுடன், "एधोऽस्येधिषीमहि" என்னும் மந்திரத்தால் ஆகவனீயத்தைப் போற்றுதல் வேண்டும்.

மற்றும், செய்யவேண்டிய கிரியைகளைத் தொடங்கிச் செய்து முடித்து விட்டு, ஆதித்திய தேவதையின் பொருட்டு நெய்ப்பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

இவ் வேள்வியில் வெள்ளைக்குதிரையைத் தானஞ் செய்தல் வேண்டும்.

ஆறும் அநுவாகம்

முற்றிற்று.

---

ஏழாம் அநுவாக விடயச் சுருக்கம்.

पञ्चेध्मवह्नौ जुहुयाद्यो देवाइति पञ्चभिः ॥
समूहन्तीध्मान्समिति पञ्चहोमस्तथाऽग्नये ॥ १ ॥
निशिहुत्वा सक्तुहोमः प्रातर्दैवेतिमन्त्रतः ॥
हुतंस्रुवप्रहरण मवधिष्मेति चोत्थितिः ॥ २ ॥
अनुवाके सप्तमेऽस्मिन्नुक्ता मन्त्राश्चतुर्दश ॥

ஐந்து விறகு ஹோமங்களை செய்தல், தீக்களை ஒன்றுபடுத்தல், மற்றும் ஐந்து நெய் ஹோமங்களை செய்தல், இரவில் ஸக்து (பொரிமா) வை ஹோமஞ் செய்தல், ஹோமஞ் செய்த ஸ்ருவத்தை அக்கினியிற் போட்டு விடல் என்பது.

---

## முதற் காண்டம் எட்டாம்பிரபாடகம்

### ஏழாம் அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பத்தைந்து பதங்களைக் கொண்டது.

சுனுசீரி, இந்திர தூரியகர்மங்கட்கும், ஐந்து இத்ம ஹோம முதலியவைகட்கும் மந்திரங்கள்.

ऐन्द्राग्नं द्वादशकपालं वैश्वदेवं चरुमिन्द्राय शुनासीराय पुरोडाशं द्वादशकपालं वायव्यं पयस्सौर्यमेककपालं द्वादशगवꣳ सीरं दक्षिणाऽऽग्नेयमष्टाकपालं निर्वपति रौद्रं गावीधुकं चरुमैन्द्रं दधि वारुणं यवमयं चरुं वहिनी धेनुर्दक्षिणा ये देवाः पुरस्सदोऽग्निनेत्रा दक्षिणसदो यमनेत्राः पश्चात्सदस्सवितृनेत्रा उत्तरसदो वरुणनेत्रा उपरिषदो बृहस्पतिनेत्रा रक्षोहणस्ते नः पान्तु ते नोऽवन्तु तेभ्यः ॥ १ ॥ नमस्तेभ्यस्स्वाहा समूढꣳ रक्षः संदग्धꣳ रक्ष इदमहꣳ रक्षोऽभि सं दहाम्यग्नये रक्षोघ्ने स्वाहा यमाय सवित्रे वरुणाय बृहस्पतये दुवस्वते रक्षोघ्ने स्वाहा प्रष्टिवाही रथो दक्षिणा देवस्य त्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्याꣳ रक्षसो वधं जुहोमि हतꣳ रक्षोऽवधिष्म रक्षो यद्वस्ते तद्दक्षिणा ॥ २ ॥

ஆறுமநுவாகத்தில் சாகமேதங்கள் கூறி முடிக்கப் பெற்றன. ஏழாவதில், சுனுசீரியம், இந்திரதுரீயம் என்னுங் கருமங்களிரண்டும், ஐந்து இத்ம (விறகு) மந்திரங்களும், நாயுருவி (அபாமார்க்க) ஹோமமந்திரங்களுங் கூறப் படுகின்றன.

---

முதல் விநியோகம்

இது ஐந்து விநியோகங்களைக் கொண்டது

சுனுசீர்ய அவிகளின் விதி

மந்திரம் :

**ऐन्द्राग्नं द्वादशकपालं वैश्वदेवं चरुमिन्द्राय शुनासीराय पुरोडाशं द्वादशकपालं वायव्यं पयस्सौर्यमेककपालं द्वादशगवꣳ सीरं दक्षिणा ।**

என்பது.

இதன் உரை.

ஈண்டுச் சுனுசீரியம், என்பது, சுன = வாயு, சீர = ஆதித்தன், அவ்விரண்டுடன் கூடியது சுனுசீரம். அதாவது பன்னிரண்டு எருதுகள் பூட்டிய கலப்பையாம்.

இவ்விஷ்டி, சாகமேத பருவம் முடிந்த பிறகு நான்கு மாதங்கள் கழித்து பங்குனி மாதப் பௌர்ணமியிற் செய்யத் தக்கதாம்.

மற்றும், வைசுவதேவபருவத்திற் செய்ததுபோல் கிரிகைகளைச் செய்யத் தொடங்கி அக்கினி முதலான ஐந்து தேவதைகளின் பொருட்டு அவிகளைச் செய்தல் வேண்டும்.

இந்திராக்கினி தேவதையின் பொருட்டு, மண்ணகல்கள் பன்னிரண்டு வைத்து அவற்றின்மீது புரோடாசத்தைச் செய்தும், வைசுவ தேவதையின் பொருட்டுப் பொங்கல் செய்தும், சுனசீரனென்னும் இந்திர தேவதையின் பொருட்டு, பன்னிரண்டு கபாலங்களின்மீது வைத்துச் செய்யும் ஒரு புரோடாசத்தைச்செய்தும், வாயுதேவதையின்பொருட்டு பால்கறந்தும், 'சூரிய தேவதையின் பொருட்டு ஒரு கபாலத்தின்மீது புரோடாசத்தைச் செய்தும் ஓமங்கள் செய்தல் வேண்டுமென்பதாம்.

மற்றும், 'स॑ँसर्पोऽस्यँ॑हस्पत्याय त्वा स्वाहा' என்னும் மந்திரத்தாலும்ஒரு ஹோமஞ் செய்தல் வேண்டும்.

எஞ்சிய முறைகள் வைசுவதேவபருவத்திற் செய்தவைகள் போன்றனவேயாம்.

இதற்கு பன்னிரண்டு எருதுகள் பூட்டிய கலப்பையைத் தானஞ் செய்தல் வேண்டும். சுனசீரிய இஷ்டி முடிந்தது. 1-2-3-4-5.

---

## இந்திர தூரிய இஷ்டி

### இரண்டாம் விநியோகம்

இவ்வாற்றால், இராசசூய யாகந் தொடங்கிய ஒரு வருடத்தில் சாதுர்மாசிய இஷ்டிகளைச் செய்து முடித்துக்கொண்டு மேல்வரும் இந்திர தூரிய இஷ்டியைச் செய்தல் வேண்டும்.

இந்திர தூரிய அவிகளின் விதி

மந்திரம் :

**आग्नेयमष्टाकपालं निर्वपति रौद्रं गावीधुकं चरुमैन्द्रं दधि वारुणं यवमयं चरुं वहिनी धेनुर्दक्षिणा ।**

என்பது.

உரை

இதை, அமாவாசை இஷ்டியைப்போல் தொடங்கி கிரியைகளைச் செய்து கொண்டுவந்து, அக்கினி தேவதையின் பொருட்டு எட்டு மண்ணகல்களை வைத்து அவற்றின்மேல் ஒரு புரோடாசத்தைச் செய்தும், உருத்திர தேவதையின் பொருட்டு காட்டுக்கோதுமையரிசிப் பொங்கலைச் செய்தும், இந்திரனைக் குறித்து தயிரையும், வருணனுக்கு வாற்கோதுமைப் பொங்கலைச் செய்தும் ஹோமங்கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

நன்கு வளர்ந்துள்ள பசுவைத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

ஈண்டு, இந்திர துரீயம் என்பதால், தேவர்களின் பொருட்டு அக்கினி மூவகையாயிற்று; அப்போது இந்திரன் துரீயனானன் ஆதலின் துரியன் என்னும் இந்திரனைக் குறித்துச் செய்யப்படுமிஷ்டியாம்.

இந்திர துரீய இஷ்டிமுடிந்தது.

---

பஞ்ச இத்மீய (ஐந்து விறகின்) இஷ்டி.

இந்திர துரீய இஷ்டியைச் செய்து முடித்த அன்றிரவில் ஆகவனீயாக்கினியை ஐந்தாய்ப் பகுத்து, நான்கு திசைகளில் நான்கையும் ஐந்தாம் பகுதியை நடுவிலும் வைத்து தனித்தனி ஐந்திலும் விறகுவைத்து ஐந்துமுறை நெய்யெடுத்துக்கொண்டு ஐந்தாகுதிகளைச் செய்வதாம்.

முதலாம் விநியோகம்.

முதல் ஆகுதி

மந்திரம் :

**ये देवाः पुरस्सदो ऽग्निनेत्राः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| पुरः सदः | கிழக்குத் திக்கிலுள்ளவர்களான |
| अग्निनेत्राः | அக்கினி முதலான |
| येदेवाः | எந்தத் தேவர்களிருக்கின்றார்களோ, |
| रक्षोहणः | இராக்கதரை ஒழிக்கும் அவர்கள் |
| नः | எம்மைப் |
| पान्तु | பரிபாலிப்பார்களாக. |
| ते अवन्तु | மற்றும், அவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக. |

| | |
|---|---|
| तेभ्योनमः | அவர்கட்கு வணக்கம். |
| तेभ्यःस्वाहा | அவர்கட்கு இந்த அவி அர்ப்பிர்க்கப் படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், ஆகவனீயத்தில் கிழக்குத் திசையிலுள்ள தீயில், சுருவிலிருக்கின்ற நெய்யிற் சிறிதளவு ஹோமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாவது விநியோகம்.

இரண்டாம் ஆகுதி

மந்திரம் :

**दक्षिणसदो यमनेत्राः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| दक्षिणसदः | தெற்குத் திசையில் வசிக்கின்றவர்களான |
| रक्षोहणः यमनेत्राः | இராக்கதரை ஒழிக்கும் எமன் முதலான தேவர்கள் |
| नःपान्तु | எம்மைப் பரிபாலிப்பார்களாக. |
| ते अवन्तु | மற்றும், அவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக. |
| तेभ्योनमः | அவர்கட்கு வணக்கம். |
| तेभ्य स्वाहा | அவர்கட்கு இந்த அவி அர்ப்பிர்க்கப் படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தினல் தெற்கிலுள்ள தீயில் முன்போல் ஆகுதி செய்தல் வேண்டுமென்பதாம்

---

மூன்றாவது விநியோகம்

மூன்றாம் ஆகுதி

மந்திரம்:

**पश्चात्सदस्सवितृनेत्राः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| पश्चात्सदः | மேற்குத் திக்கிலிருக்கின்ற |
| रक्षोहणः सवितृनेत्राः | இராக்கதரை ஒழிக்கின்ற சவிதா முதலான தேவர்கள் |
| नःपान्तु | எம்மைப் பரிபாலிப்பார்களாக. |
| ते अवन्तु | மற்றும், அவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக. |
| तेभ्योनमः | அவர்கட்கு வணக்கம். |
| तेभ्यःस्वाहा | அவர்கட்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் மேற்குத் திக்கிலுள்ள அக்கினியில் முன்போல் ஆகுதி செய்தல் வேண்டுமென்பதாம்.

---

நான்காம் விநியோகம்

நான்காம் ஆகுதி

மந்திரம் :

**उत्तरसदो वरुणनेत्राः ।**

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| उत्तर सदः | வடக்குத் திக்கிலிருக்கின்ற |
| रक्षोहणः वरुणनेत्राः | இராக்கதரை ஒழிக்கின்ற வருணன் முதலானோர்கள் |
| नःपान्तु | எம்மைப் பரிபாலிப்பார்களாக. |
| ते अवन्तु | மற்றும், அவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக. |
| तेभ्योनमः | அவர்கட்கு வணக்கம். |
| तेभ्यःस्वाहा | அவர்கட்கு இந்த அவி அர்ப்பிர்க்கப் படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் வடக்கு திக்கிலுள்ள அக்கினியில் முன்போல் ஓமஞ் செய்தல் வேண்டும்.

ஐந்தாம் விநியோகம்

ஐந்தாம் ஆகுதி

மந்திரம் :

उपरिषदो बृहस्पतिनेत्रा रक्षोहणस्ते नः पान्तु ते नोऽवन्तु तेभ्यो नमस्तेभ्यः स्वाहा ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| उपरिषदः | மேலே இருக்கின்ற |
| रक्षोहणः | இராக்கதரை ஒழிக்கின்ற |
| बृहस्पति नेत्राः | பிருகற்பதி முதலானோர்கள் |
| नःपान्तु | எம்மைப் பரிபாலிப்பார்களாக. |
| ते अवन्तु | மற்றும், அவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக. |
| तेभ्योनमः | அவர்கட்கு வணக்கம். |
| तेभ्यःस्वाहा | அவர்கட்கு இந்த அவி அர்ப்பிர்க்கப் படுகின்றது. |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நடுவிலுள்ள தீயில் ஹோமஞ் செய்தல் வேண்டுமென்பதாம்.

ஒவ்வொரு மந்திரத்திரத்தினீற்றிலும் அவர்கள் பாதுகாப்பாற்றுவார்களாக. அவர்களுக்கு வணக்கம் சுவாஹா அவர்கட்கு இந்த அவி அர்ப்பிக்கப்படுகின்றது. என்பவைகளையுஞ்சேர்த்துக் கூறப்பட்டிருக்கின்றன.

---

ஆறும் விநியோகம்

தீக்களை ஒன்றுபடுத்தல்

மந்திரம் :

समूढ९ रक्षस्संदग्ध९ रक्ष इदमह९ रक्षोऽभि सं दहामि ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| रक्षः | இராக்கதக் கூட்டத்தார்கள் |
| समूडं | சேர்க்கப்பட்டனர் |

சூஞுசீர்ய முதலியன)

| | |
|---|---|
| संदग्धं | முழுதுங் கொளுத்தப்பட்டனர் |
| इदं | மீண்டும் இப்போது |
| अहं | யான் |
| रक्षः अभि | கொளுத்திய இராக்கதரைச் சூழ்ந்திருக்கின்றவர்களையும் |
| संदहामि | நன்கு தீயில் எரிக்கின்றேன். |

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், விறகுகளையும் அக்கினிகளையும் ஒன்ருய்ச் சேர்த்துவிடல் வேண்டு மென்பதாம்.

---

பிறகும், ஐந்து முறை சுருவில் நெய் யெடுத்துக் கொண்டு ஆகுதி செய்தல்.

ஏழாம் விநியோகம்

ஆகுதி 1.

மந்திரம் :

**अग्नये रक्षोघ्ने स्वाहा ।**

என்பது.

உரை

இராக்கதரை யொழிக்கின்ற அக்கினிக்கு இது அர்ப்பிக்கப்படுகின்றது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் முதலாம் ஆகுதியைச்செய்தல் வேண்டுமென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்

ஆகுதி 2.

மந்திரம் :

**यमाय रक्षोघ्ने स्वाहा ।**

என்பது.

உரை

இராக்கதரை ஒழிக்கின்ற எமனுக்கு இது அர்ப்பிக்கப் படுகின்றது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் இரண்டாம் ஆகுதியைச் செய்தல் வேண்டுமென்பது.

ஒன்பதாம் விநியோகம்

ஆகுதி 3.

மந்திரம் :

**सवित्रे रक्षोघ्नेस्वाहा ।**

என்பது.

உரை

இராக்கதரை ஒழிக்கின்ற சவிதாதேவதைக்கு இது அர்ப்பிக்கப்படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால் மூன்றும் ஆகுதியைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

பத்தாம் விநியோகம்

ஆகுதி 4

மந்திரம் :

**वरुणाय रक्षोघ्नेस्वाहा ।**

என்பது.

உரை

இராக்கதரை ஒழிக்கின்ற வருணனுக்கு இது அர்ப்பிக்கப் படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் நான்காம் ஆகுதியைச் செய்தல் வேண்டுமென்பதாம்.

பதினோராம் விநியோகம்

ஆகுதி 5

மந்திரம் :

**बृहस्पतये दुवस्वते रक्षोघ्नेस्वाहा ।**

என்பது.

உரை

இராக்கதரை ஒழிக்கின்ற பிருகற்பதியின் பொருட்டு இது அர்ப்பிக்கப் படுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் ஐந்தாம் ஆகுதியைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, மூன்று ஆகுதி மந்திரங்களிலும், ரக்ஷோக்னே, 'சுவாஹா' என்னும் இரண்டு சொற்களும் வருவித்துரைக்கப்பட்டிருக்கின்றன என்பதை யுணர்க.

---

இரத விதி.

மந்திரம் :

प्रष्टिवाही रथो दक्षिणा ।

என்பது.

உரை

மூன்று குதிரைகளால் இழுக்கப்படுவதாகிய 'பிருஷ்டவாகி' என்னுந் தேரை இதில் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும் என்பது.

ஐந்து இத்ம இஷ்டி முடிந்தது.

---

அபாமார்க்க (நாயுருவி) ஹோமம்.

விடியற்போது அக்கினி ஹோத்திரஞ் செய்வதற்கு முன்னர் இதைச் செய்தல் வேண்டும். நாயுருவிச் செடியைக் கொண்டுவந்து பொடியாக்கிக் கொண்டு தட்சிணாக்கினியிலிருந்து ஒரு கொள்ளியை யெடுத்துக்கொண்டு வாயு மூலையாய்ச் சென்று, அங்கு, உவர் மண்ணிருக்கின்ற இடத்திலேனும், அல்லது, இயற்கைக் குழியிலாவது கொண்டுவந்த கொள்ளித்தீயைக்கொண்டு தீயை வளர்த்துக்கொண்ட பிறகு, நாயுருவிப் பொடிகளை, ஒரு புரசம் இலையில் எடுத்துச்கொள்ளுதல் வேண்டும். பிறகு,

நாயுருவி ஹோமஞ்செய்தல்.

மந்திரம் :

देवस्यत्वा सवितुः प्रसवेऽश्विनोर्बाहुभ्यां पूष्णो हस्ताभ्याᳫं रक्षसो वधं जुहोमि हतᳫं रक्षोऽवधिष्म रक्षः ।

என்பது.

பதவுரை.

| | |
|---|---|
| सवितुः देवस्य | சவிதாதேவனுடைய |
| प्रसवे | ஏவுதலிருக்குமிடத்து |
| अश्विनोः | அசுவினிகளின் |
| बाहुभ्यां | கைகளாலும் |
| पूष्णः हस्ताभ्यां | பூஷா தேவதையின் கைகளாலும் |
| रक्षसः | இராக்கதரின் |
| वधं | வதை (கொல்லவேண்டு மென்பது) பற்றி |
| जुहोमि | ஹோமஞ் செய்கின்றேன். |
| रक्षः | இராக்கதர் |
| हतं | கொல்லப்பட்டனர். |
| रक्षः | இராக்கதரைக் |
| अवधिष्म | கொல்வோம். |

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரங்களால், நாயுருவிகளை ஓமஞ்செய்துவிட்டு, புரசம் இலையையும் அத் தீயிற் போட்டுவிட்டு, அவ்வக்கினியைத் துதித்தல் வேண்டும் என்பதாம்.

---

தட்சிணையின் விதி

மந்திரம் :

**यद्धस्ते तद्दक्षिणा ।**

என்பது.

உரை

நாயுருவியை ஹோமஞ் செய்யும்போது உடம்பைப் போர்த்திருந்த வேஷ்டியைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டுமென்பதாம்.

இந்திரன், ' நமுசி ' என்னும் அசுரன் தலையை அறுத்துவிட்ட பிறகும் அத்தலை மீண்டும் இந்திரனைத் தொடரும்போது நாயுருவியை உண்டாக்கி ஓமஞ் செய்து அதை நீக்கிக் கொண்டனன் என்பது பிராமணம்.

நாயுருவி ஹோமம் முடிந்தது.

ஏழாம் அநுவாகம்

முற்றிற்று.

தேவிகா அவிகள்)

ஏழாம் அநுவாகத்தில் சுஞசீரிய முதலான ஆறு கருமங்கள் ஒருநாளில் ஆசரிக்கத் தக்கவைகள் என்று கூறப்பட்டது. எட்டாம் அநுவாகத்தில் தேவிகா முதலிய ஆறுகருமங்கள் ஒரு தினத்தின் ஆசரிக்கத் தக்கவைகள் என்று கூறப்படுகின்றது.

இனி எசுர் வேதம் முடியும்வரை பொழிப்புரையும் பிரயோகமுங் கூறப்படும்,

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

## எட்டாம் அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் எட்டுப் பதங்களைக் கொண்டது.

### தேவிகா முதலான ஆறுகர்மங்களின் மந்திரங்கள்

धात्रे पुरोडाशं द्वादशकपालं निर्वपत्यनुमत्यै चरुꣳ राकायै चरुꣳ सिनीवाल्यै चरुं कुह्वै चरुं मिथुनौ गावौ दक्षिणाऽऽग्नावैष्णवमेकादशकपालं निर्वपत्यैन्द्रावैष्णवमेकादशकपालं वैष्णवं त्रिकपालं वामनो वही दक्षिणाऽग्नीषोमीयमेकादशकपालं निर्वपतीन्द्रासोमीयमेकादशकपालꣳ सौम्यं चरुं बभ्रुर्दक्षिणा सोमापौष्णं चरुं निर्वपत्यैन्द्रापौष्णं चरुंपौष्णं चरुꣳ श्यामो दक्षिणा वैश्वानरं द्वादशकपालं निर्वपति हिरण्यं दक्षिणा वारुणं यवमयं चरुमश्वो दक्षिणा ॥ १ ॥

### தேவிகா என்னும் ஐந்து அவிகளின் விதி

அபாமார்க்க ஹோமம் முடிந்த பிறகு அக்கினி ஹோத்திரத்தைச் செய்துவிட்டு, முறையாய் இவ்விஷ்டிகளைச் செய்தல் வேண்டும்.

---

### முதலாம் இஷ்டி.

மந்திரம் :

**धात्रे पुरोडाशं द्वादशकपालं निर्वपत्यनुमत्यै चरुꣳ राकायै चरुꣳ सिनीवाल्यै चरुंकुह्वै चरुं मिथुनौ गावौ दक्षिणा ।**

என்பது.

உரை

வருட அபிமானியாகிய தாதா என்னுந் தேவதைக்கு, பன்னிரண்டு அகல்களின்மேல்வைக்கும் புரோடாசத்தையும், புத்திரோற்பத்தியைச் செய்விக்கும் அநுமதி என்னுந் தேவதைக்கும், புத்திரனை வளர்க்கும் 'ராகா' என்னுந் தேவதைக்கும், குழந்தை பிறக்கச் செய்யும், 'சினீவாலி' என்னும் தேவதைக்கும், குழந்தையைப் பேசும்படி செய்யும் 'குஹூ' என்னுந் தேவதைக்கும் பொங்கல்கள் செய்து ஓமங்கள் செய்தல் வேண்டுமென்பது.

இவற்றைச் செய்யுமுறை முழுதும் இஷ்டியைப் போலவேயாம்.

இதற்கு இரண்டு பசுக்களைத் தட்சிணையாய்க் கொடுத்தல் வேண்டும்.

---

### இரண்டாவது இஷ்டி.

மந்திரம் :

**आग्नावैष्णवमेकादशकपालं निर्वपत्यैन्द्रावैष्णवमेकादशकपालं वैष्णवं त्रिकपालं वामनो वही दक्षिणा ।**

என்பது.

உரை

அக்கினி விஷ்ணு தேவதைக்கும், இந்திர விஷ்ணு தேவதைக்கும், பதினொரு மண் அகல்களின்மேல் வைக்கும் புரோடாசங்களையும், விஷ்ணுவிற்கு, மூன்று மண் அகல்களின்மேல் வைக்கும் புரோடாசத்தையுஞ் செய்து ஓமங்கள் செய்தல் வேண்டுமென்பதாம்

இதற்கு குறுகிய பசுவைத் தட்சிணை கொடுத்தல்வேண்டும்.

---

### மூன்றாவது இஷ்டி.

மந்திரம் :

**अग्नीषोमीयमेकादशकपालं निर्वपतीन्द्रासोमीयमेकादशकपालꣳ सौम्यं चरुं बभ्रुर्दक्षिणा ।**

என்பது.

அவிகள்)

உரை

அக்கிகினி சோம தேவதைக்கும், இந்திர சோமதேவதைக்கும், பதினொரு மண் அகல்களின் மேல் வைத்துச் செய்யப்படும் புரோடாசத்தைச் செய்வதுடன், சோமதேவதைக்குப் பொங்கலுஞ் செய்து ஓமங்கள் செய்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு பிங்கல (சாம்பல்) நிற முடையதைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

---

நான்காவது இஷ்டி.

மந்திரம் :

सोमापौष्णं चरुं निर्वपत्यैन्द्रापौष्णं चरुं पौष्णं चरुँ श्यामो दक्षिणा ।

என்பது.

உரை

சோமபூஷா தேவதைக்கும், இந்திர பூஷா தேவதைக்கும், பூஷா தேவதைக்கும் பொங்கல்களைச் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு கறுப்பு நிறமுடையதைத் தட்சிணையாய்க் கொடுத்தல் வேண்டும்.

---

ஐந்தாவது இஷ்டி.

மந்திரம் :

वैश्वानरं द्वादशकपालं निर्वपति हिरण्यं दक्षिणा ।

என்பது.

உரை.

வைசுவானர தேவதைக்கு, பன்னிரண்டு மண் அகல்களின்மேல் வைத்துச் செய்யும் புரோடாசத்தைச் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு பொன் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

---

ஆறுவது இஷ்டி.

மந்திரம் :

वारुणं यवमयं चरुमश्वो दक्षिणा ।

என்பது

உரை.

வருண தேவதையின் பொருட்டு வாற்கோதுமைப் பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு குதிரையைத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

எட்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

ஒன்பதாமநுவாகம்

இராசசூய ரத்நிஹவிகளைக் கூறுமந்திரங்கள்.

இரண்டு பஞ்சாதிக்குமேல் முப்பத்துமூன்று பதங்களைக் கொண்டது

बार्हस्पत्यश्चरुं निर्वपति ब्रह्मणो गृहे शितिपृष्ठो दक्षिणैन्द्रमेकादशकपा
लꣳ राजन्यस्य गृह ऋषभो दक्षिणाऽऽदित्यं चरुं महिष्यै गृहे धेनुर्द
क्षिणा नैर्ऋतं चरुं परिवृक्त्यै गृहे कृष्णानां व्रीहीणां नखनिर्भिन्नं
कृष्णा कूटा दक्षिणाऽऽग्नेयमष्टाकपालꣳ सेनान्यो गृहे हिरण्यं
दक्षिणा वारुणं दशकपालꣳ सूतस्य गृहे महानिरष्टो दक्षिणा मारु
तꣳ सप्तकपालं ग्रामण्यो गृहे पृश्निर्दक्षिणा सावित्रं द्वादशकपालम्
॥ १ ॥ क्षत्तुर्गृह उपध्वस्तो दक्षिणाऽऽश्विनं द्विकपालꣳ संग्रहीतुर्गृ
हे सवात्यौ दक्षिणा पौष्णं चरुं भागदुघस्य गृहे श्यामो दक्षिणा
रौद्रं गावीधुकं चरुमक्षावापस्य गृहे शबल उद्वारो दक्षिणेन्द्राय
सुत्राम्णे पुरोडाशमेकादशकपालं प्रति निर्वपतीन्द्रायाꣳहोमुचेऽयं
नो राजा वृत्रहा राजा भूत्वा वृत्रं वध्यान्मैत्राबार्हस्पत्यं भवति
श्वेतायै श्वेतवत्सायै दुग्धे स्वयंमूर्ते स्वयंमथित आज्य आश्वत्थे
॥ २॥ पात्रे चतुस्स्रक्तौ स्वयमवपन्नायै शाखायै कर्णाꣳश्चाऽकर्णाꣳश्च

तण्डुलान्विचिनुयाद्ये कर्णास्स पयसि बार्हस्पत्यो येऽकर्णास्स आज्ये मैत्रस्स्वयंकृता वेदिर्भवति स्वयंदिनं बर्हिस्स्वयंकृत इध्म स्सैव श्वेता श्वेतवत्सा दक्षिणा ॥ ३ ॥

எட்டாமநுவாகத்தில் ஒருநாளிற் செய்யப்படும் தேவிகா அவிகள் முதலிய ஆறு கருமங்கள் கூறப்பட்டன. இவ்வொன்பதாம் அநுவாகத்தில் முறையாய் ஒவ்வொருநாளுஞ் செய்யவேண்டிய இரத்தினி அவிகள் பன்னிரண்டுங் கூறப் படுகின்றன.

ஈண்டு, அந்தணர், அரசர், இராணிகள் முதலானோர்கள் இரத்தினங்களையுடையவர்களாதலின் இரத்தினிகள் எனப்படுகின்றனர். அவர்களை அபிமானிக்குந் தேவதைகட்கே இந்த அவிகள் செய்யப்படுகின்றன. இதுபற்றியே இவர்களுடைய வீடுகளிற் சென்றுஇந்த அவிகளைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

இந்தத் தேவதைகள் இராச்சியமளிக்க வன்மையுடையவைகள் என்பதை யுணர்க.

---

முதலாவது அவி.

மந்திரம்:

बार्हस्पत्यश्चरुं ब्रह्मणो गृहेशितिपृष्ठो दक्षिणा ।

என்பது.

உரை.

பிரமன் என வழங்கும் வேள்விச் செயலாளன் வீட்டிற்கு அரசன் சென்று, பிருகற்பதி தேவதையின் பொருட்டு, அரிசியாற் பொங்கற் செய்து முதல் நாளில் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு, பின்புறம் வெண்மை நிறமுள்ள பசு தக்ஷிணையாம்.

---

இரண்டாவது அவி.

மந்திரம்:

ऐन्द्रमेकादशकपालꣳ राजन्यस्य गृह ऋषभो दक्षिणा ।

என்பது.

உரை.

பட்டாபிஷேகஞ் செய்துள்ள அரசன் வீட்டில் பதினொரு மண் அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து இந்திரனுக்கு இரண்டாம் நாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு, காளையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

மூன்றாவது அவி.

மந்திரம் :

आदित्यं चरुं महिष्यै गृहे धेनुर्दक्षिणा ।

என்பது.

உரை.

அரசனுடைய மூத்த மனையாள் வீட்டில் ஆதித்திய தேவதைக்கு பொங்கல் செய்து மூன்றாம் நாள் ஒரு இஷ்டி செய்தல வேண்டும்.

இதற்குப் பால் கறக்கின்ற பசுவைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

இங்கு, கீழ்க்காட்டும் பிராமண மந்திரத்தைத் தழுவி, இரண்டாவது மனையாள் வீட்டிலும் ஒரு அவி செய்யவும்.

மந்திரம் :

भगायचरुं वावातायै गृहे ।

என்பது.

பிராமணம், அஷ்டகம்-1, பிர-7. அநு-3.

உரை.

பட்டாபிஷேகஞ் செய்துள்ள அரசனுடைய இரண்டாவது மனையாள் வீட்டில், 'பக' என்னுந் தேவதைக்கு பொங்கல் செய்து ஒரு இஷ்டி நான்காம் நாள் செய்தல் வேண்டும். இதற்கு இளஞ்சினையாக இருக்கின்ற கடாரிப் பசு தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

இது, பிராமணமென்னும் வேத பாகத்திற் கூறியபடி செய்யப்பட்டது. வாவாதா = மத்திய மனைவி.

நான்காம் அவி.

மந்திரம் :

नैर्ऋतं चरुं परिवृक्त्यै गृहे कृष्णानां व्रीहीणां नखनिर्भिन्नं कृष्णा कूटा दक्षिणा ।

என்பது.

உரை.

அரசனுடைய மூன்றாவது மனையாள் வீட்டில், நிருதி தேவதையின் பொருட்டு, நகத்தால் உரித்த கரு நெல்லரிசியால் பொங்கல் செய்து ஐந்தாம் நாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு, கொம்பு முறிந்த கறுப்புப் பசுவைத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

ஐந்தாவது அவி.

மந்திரம் :

आग्नेयमष्टाकपालं सेनान्यो गृहे हिरण्यं दक्षिणा ।

என்பது.

உரை.

சேனைத் தலைவன் வீட்டில், அக்கினி தேவதையின் பொருட்டு எட்டு மண் அகல்களில் புரோடாசஞ் செய்து ஆறுநாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்குப் பொன் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

ஆறுவது அவி.

மந்திரம் :

वारुणं दशकपालं सूतस्यगृहे महानिरष्टो दक्षिणा ।

என்பது.

உரை.

தேர்ப்பாகன் வீட்டில், வருணதேவதையின் பொருட்டு, பத்து அகல்களை வைத்து அவற்றின்மேல் ஒரு புரோடாசஞ் செய்து ஏழாநாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு, காயொடித்த காளை தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

ஏழாவது அவி.

மந்திரம் :

**मारुतꣳ सप्तकपालङ्ग्रामण्यो गृहे पृश्निर्दक्षिणा ।**

என்பது.

உரை.

கிராமப் பெரியதனக்காரன் வீட்டில், ஏழு மண் அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து, மருத், என்னுந் தேவதையின் பொருட்டு எட்டாநாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு வெண்மை நிறமுள்ள ஆ தட்சிணையாம். இளைத்த பசு என்பர் சிலர்.

---

எட்டாவது அவி.

மந்திரம் :

**सावित्रं द्वादशकपालं क्षत्तुर्गृह उपध्वस्तो दक्षिणा ।**

என்பது.

உரை.

அரண்மனையின் அந்தப்புரத்தில் தண்டந் தாங்கிக்கொண்டு நிற்கின்றவனுடைய வீட்டில், சவிதா தேவதைக்கு பன்னிரண்டு மண் அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து ஒன்பதாநாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு, பல்வகை நிறங்கள் கலந்துள்ள பசுவைத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

---

ஒன்பதாவது அவி.

மந்திரம் :

**आश्विनं द्विकपालꣳ संग्रहीतुर्गृहे सवात्यौ दक्षिणा ।**

என்பது.

உரை.

பொருளைத் தேடுவோனாகிய 'கசானாத் தலைவன் வீட்டில் அசுவினி தேவதையின் பொருட்டு, இரண்டு மண் அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து பத்தாம் நாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

அவிகள்)

இதற்கு, ஒரே பசு ஈன்ற இரண்டு கன்றுகளைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

---

பத்தாவது அவி.

மந்திரம்:

**पौष्णं चरुं भागदुघस्य गृहे श्यामो दक्षिणा ।**

என்பது.

உரை.

அரசனுக்குச் சேரவேண்டிய ஆறிலொரு கடமையை (பாகத்தை) வசூல் செய்கின்றவனுடைய வீட்டில், பூஷா தேவதையின் பொருட்டு, பொங்கல் செய்து பதினோராம் நாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்குக் கருமை நிறமுடைய பசுவைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

---

பதினோராவது அவி.

மந்திரம்:

**रौद्रं गावीधुकं चरु मक्षा वापस्यगृहे शबल उद्वारो दक्षिणा ।**

என்பது.

உரை.

சதுரங்க முதலிய விளையாட்டுகளை விளையாடுவோனுடைய வீட்டில் உருத்திர தேவதைக்கு, காட்டுக் கோதுமைபால் பொங்கல் செய்து பன்னிரண்டா நாள் ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

'இதற்கு' சித்திர நிறமுடையதும், நீண்டவாலுடையதுமாகிய பசுவைத் தட்சிணைக் கொடுத்தல் வேண்டும்.

இங்கு, சூத்திர மந்திரத்தைத் தழுவி கீழ்வரும் அவியையுஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

இரதகாரன் வீட்டில், அல்லது, தச்சன் வீட்டில் மூன்று மண்ணகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து விஷ்ணுவிற்கு ஒரு இஷ்டி செய்தல் வேண்டும்.

இதற்கு, இரும்பைத் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

அங்ஙனமே, வலாகன் என்னும் பொய்த் தூதனுடைய வீட்டில், அத்வனே ஸ்வாஹா, என்று ஒரு நெய் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு, தோல்மயயாகிய மூன்று பாணங்களுடன் கூடிய தநுவை தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும். அல்லது, பாற் பசுவையாவது தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

---

விதித்த அவிகளுக்கு மேல், இரண்டு அவிகள்

தன்னுடைய வீட்டில் விதிக்கப்படுகின்றன.

மந்திரம் :

इन्द्राय सुत्राम्णे पुरोडाशमेकादशकपालं प्रति निर्वपतीन्द्रायाऽꣳहोमुचे ।

என்பது.

உரை.

வேள்வித் தலைவனுடைய வீட்டில் பதினொரு மண்ணகல்கள் வைத்து புரோடாசஞ்செய்து, இந்திரன் சூத்ராம்ணன் என்பவர்கட்கு ஒரு இஷ்டியும், இந்திர அம்ஹோமுசன் என்பவர்களுக்கு ஒரு இஷ்டியுஞ் செய்தல் வேண்டும். சூத்ராம்ணன் = நன்கு பரிபாலிப்பவன், அம்ஹோமுசன் = பாவத்தைப் போக்குபவன்.

இதற்கு, காளைமாடு தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

---

சேபமந்திரம்

மந்திரம் :

अयंनोराजा वृत्रहा राजा भूत्वा वृत्रंवध्यात् ।

என்பது.

உரை.

இந்த இராசூய யாகத்திற்குத் தலைவனாகிய அரசன் பகைவரைக் கொல்லும் வன்மையுடைவனாய்ப் பகைவரைக் கொல்வானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

சுவிஷ்டகிருத் யாகத்திற்குமுன், இந்த மந்திரத்தை, வேட்போன் சேபஞ்செய்தல் வேண்டும் என்பதாம்.

அவிகள்)

அபிடேகஞ் செய்யும் சோமயாகத்தின் பொருட்டு

தீக்ஷைத்தொடக்கம்

மந்திரம் :

**मैत्राबार्हस्पत्यं भवति श्वेतायै श्वेतवत्सायै दुग्धे स्वयंमूर्ते स्वयंमथित आज्य आश्वत्थे पात्रे चतुस्स्रक्तौ स्वयमवपन्नायै शाखायै कर्णाꣳश्चाऽकर्णाꣳश्च तण्डुलान्वि चिनुयाद्ये कर्णास्स पयसि बार्हस्पत्यो येऽकर्णास्स आज्ये मैत्रस्स्वयंकृता वेदिर्भवति स्वयंदिनं बर्हिस्स्वयंकृत इध्मस्सैव श्वेता श्वेत वत्सा दक्षिणा।**

என்பது.

உரை.

காற்றினால் வீழ்த்தப்பெற்ற அரசமரத்தில் நாற்கோணமாய் ஒரு பாத்திரஞ் செய்து வெள்ளை நிறக் கன்றையுடைய வெண்மைப் பசுவின் பால் கறந்து அப்பாத்திரத்திற்குமேலே புளிப்புள்ள பல்வகை பழச் சாறுகளைப் பூசிவைத்தல் வேண்டும். அவ்வணம் வைத்தால், உறைகுத்தாமலே தயிராகி விடும், அந்தத் தயிரிலுள்ள ஏட்டைக் கலக்கினால் வெண்மையாய் வரும். அதை வெயிலில் வைத்து உருக்கினால் நெய்யாகும்; இது, தானய்க்கடைதலாலுண்டாகும் நெய்யாம். அந்த நெய்யால், தீக்ஷணீயா இஷ்டியின் தேவதையாகிய மித்திரனுக்குப் பொங்கல் செய்தல் வேண்டும். அது எவ்வாறெனின்? பிருகற்பதி தேவதையின் பாத்திரத்தை வைத்து, பிறகு, மித்திரனுடைய பொங்கல் பாத்திரத்தை வைத்து நெற்குத்தி அரிசியானதும் அதை, நொய் வேறு அரிசி வேறாகப் பிரித்து பிருகற்பதியின் பாத்திரத்தில் நொய்யைப் போட்டு பால்விட்டுப் பொங்கல் வேண்டும். மித்திர பாத்திரத்தை அதன்மேல் மூடியாக வைத்து அதில் முழு அரிசியைப் போட்டு முன் எடுத்துள்ள நெய்யைவிட்டுப் பொங்கல் வேண்டும். பொங்கி, முன், பிருகற்பதியின் பொங்கலையும், பிறகு மித்திரன் பொங்கலையும் இறக்கி வைத்தல் வேண்டும். இதற்கு, போராடி வெற்றியடைந்ததாற் கிடைத்த பூமியில் வேதிகைப் போடக்கூடாது. மற்றோ, முந்தியே தனது பூமியாயுள்ள இடத்தில் வேதிகை போடுதல் வேண்டும்.

இதற்கு, மந்திரஞ் சொல்லி அறுத்த தருப்பை கூடாது; மற்றோ, ஒன்றுமின்றி அறுத்துக்கிடைத்துள்ள தருப்பையே உபயோகமாம்.

அங்ஙனமே, மந்திரத்தால் வெட்டிய விறகும் கூடாது; மற்றோ, இயற்கையாய் ஒடிந்து விழுந்த விறகு உபயோகமாம்.

பிருகற்பதிக்கு, பின்புறம் வெண்மை நிறப்பசு தட்சிணை, மித்திரனுக்கு வெள்ளைப்பசுவும் கன்றும், வெள்ளைக் குதிரையும் தட்சிணை.

ஒன்பதாம் அநுவாகம்

முடிந்தது.

---

பத்தாம் அநுவாகம் விடயச்சுருக்கம்.

सवितेति स्वाभि हस्तं ब्रह्मा गृह्णीत एषवः ॥

रत्निभ्यस्स्वामिनं ब्रूयात्सोमेति ब्रह्मणोजपः ॥

प्रति द्वाभ्यां मुखं स्वासी मार्ष्टि विष्णो स्त्रिभिःक्रमः ॥

दशमेअनुवाकेऽस्मिन्नष्टौ मन्त्रा उदीरिता : ॥

பிரமன், வேள்வித் தலைவனுடைய கையைப் பிடித்தல், அரசாங்கத்தார்களுக்கு அரசன் இன்னானெனத் தெரிவித்தல், பிரமன் செபம், தலைவனுடைய முகத்தைத் துடைத்தல், கிழக்காய் மூன்றடி யெடுத்துவைத்தல்.

---

முதற்காண்டம் எட்டாம் பிரபாடகம்

எட்டாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களைக் கொண்டது.

தேவ சுவ அவிகளைக்கூறுமந்திரங்கள்.

अग्नये गृहपतये पुरोडाशमष्टाकपालं निर्वपति कृष्णानां व्रीही- णाᳪं सोमाय वनस्पतये श्यामाकं चरुᳪं सवित्रे सत्यप्रसवाय पुरोडाशं द्वादशकपालमाशूनां व्रीहीणाᳪं रुद्राय पशुपतये गावीधुकं चरुं बृहस्पतये वाचस्पतये नैवारं चरुमिन्द्राय ज्येष्ठाय पुरोडाश- मेकादशकपालं महाव्रीहीणां मित्राय सत्यायाऽऽम्बानां चरुं वरु- णाय धर्मपतये यवमयं चरुᳪं सविता त्वा प्रसवानाᳪं सुवतामग्नि-

அவிகள்)

गृहपतीनाꣳ सोमो वनस्पतीनाꣳ रुद्रः पशूनाम् ॥ १ ॥ बृहस्पतिर्वाचामिन्द्रो ज्येष्ठानां मित्रस्सत्यानां वरुणो धर्मपतीनां ये देवा देवसुवस्स्थ त इम मामुष्यायणमनमित्राय सुवध्वं महते क्षत्राय महत आधिपत्याय महते जानराज्यायैष वो भरता राजा सोमोऽस्माकं ब्राह्मणानाꣳ राजा प्रति त्यन्नाम राज्यमधायि स्वां तनुवं वरुणो अशिश्रेच्छुचेर्मित्रस्य व्रत्या अभूमामन्महि महत ऋतस्य नाम सर्वे व्राता वरुणस्याभूवन्वि मित्र एवैररातिमतारीदसूषुदन्त यज्ञिया ऋतेन व्यु त्रितो जरिमाणं न आनड्विष्णोः क्रमोऽसि विष्णोः क्रान्तमसि विष्णोर्विक्रान्तमसि ॥ २ ॥

ஒன்பதாம் அநுவாகத்தில், ரத்நி அவிகளும், பட்டாபிடேகஞ் செய்து கொள்வோனுடைய தீக்ஷையுங் கூறப்பட்டன. பத்தாமநுவாகத்தில, தேவ சுவ அவிகள் கூறப்படுகின்றன.

ஈண்டு, எசமானனுக்கும் தேவனையறிகின்ற தேவதைகள் தேவ சுவ: எனப்படுகின்றன. அவைகட்குரிய அவிகள் தேவ சுவ அவிகள். இதற்கும் தசபேயத்திற்குஞ் சேர்த்து சோமத்தை விலைக்கி வாங்கிவைத்துக் கொள்ளல் வேண்டும்.

இந்த அவிகளுக்கும், அக்கினி சோமர்களின் புரோடாசங்கட்கும் நெல் எடுத்துக் கொள்ளல் வேண்டும். சுவிஷ்ட கிருத்திற்கும், இடாபட்சணம் வரையில் சமமாகும்.

---

முதல் அவி.

மந்திரம் :

अग्नये गृहपतये पुरोडाशमष्टाकपालं निर्वपति कृष्णानां व्रीहीणाम् ।

என்பது.

கருநெல் அரிசி மாவால் கிருகத் தலைவனாகிய அக்கினிக்கு எட்டு மண் ணகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து ஓமஞ்செய்தல் வேண்டும் என்பது.

இரண்டாவது அவி.

மந்திரம் :

सोमाय वनस्पतये श्यामाकश्चरुम् ।

என்பது.

உரை

வனஸ்பதியாகிய சோமத்திற்கு, சாமை அரிசியாற் பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

மூன்ருவது அவி.

மந்திரம் :

सवित्रे सत्यप्रसवाय पुरोडाशंद्वादशकपालमाशूनां व्रीहीणाम् ।

என்பது.

உரை.

உண்மையாகிற அநுக்ஞை செய்யும் சவிதா தேவதைக்கு அறுபது நாட்களில் விளைந்த நெல்லால் பன்னிரண்டு மண்ணகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பது.

---

நான்காம் அவி.

மந்திரம் :

रुद्राय पशुपतये गावीधुकं चरुम् ।

என்பது.

உரை.

பசுபதியாகிய உருத்திரனுக்கு, காவீதுகம் என்னும் காட்டுக்கோதுமைப் பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டுமென்பது.

---

ஐந்தாம் அவி.

மந்திரம் :

बृहस्पतये वाचस्पतये नैवारं चरुम् ।

என்பது.

உரை

பிருகற்பதி தேவதைக்கு நைவாரமென்னும் செங்நெல் அரிசிப் பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பது.

ஆறும் அவி.

மந்திரம் :

इन्द्राय ज्येष्ठाय पुरोडाशमेकादशकपालं महाव्रीहीणाम् ।

என்பது.

உரை.

முன்னோனாகிய இந்திரனுக்கு. பெரு நெல் அரிசியால், பதினொரு மண் அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும் என்பது

---

ஏழாம் அவி.

மந்திரம் :

मित्राय सत्यायाऽऽम्बानां चरुम् ।

என்பது.

உரை

உண்மையாகிற மித்திரனுக்கு ஆம்பா என்னும் வெண்கெழுனீர்ப் பூவின் அரிசியால் பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

---

எட்டாம் அவி.

மந்திரம் :

वरुणाय धर्मपतये यवमयं चरुम् ।

என்பது.

உரை.

தர்மபதியாகிற வருணனுக்கு வாற் கோதுமைப் பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

---

முதல் விநியோகம்.

பிரமன், எஜமானனுடையகையைப்பிடித்தல்.

மந்திரம் :

सविता त्वा प्रसवानाꣳ सुवतामग्निर्गृहपतीनाꣳ सोमो वनस्पतीनाꣳ रुद्रः पशूनां बृहस्पतिर्वाचामिन्द्रो ज्येष्ठानां मित्रस्सत्यानां वरुणो धर्मपतीनां ये देवा देवसुवस्स्थत इम मामुष्यायणमनमित्राय सुवध्वं महते क्षत्राय महत आधिपत्याय महते जानराज्याय ।

என்பது.

உரை.

எஜமான! உன்னை, அந்தப் பிரசைகளுக்கு இறைவனென்று அநுக்ஞை தருந் தேவதைகளுக்குள் சவிதா தேவதையானது உணருக. கிருகபதிகளுக்குள் அக்கினி தேவதையானது, எஜமான! உன்னை இறைவனென்று உணருக. வநஸ்பதிகளுக்குள் சோமமானது உன்னை இறைவனென்று உணருக. பசுக்களுக்குட் பதியாகிய உருத்திரன் உன்னை இறைவனென்று உணருவானாக. வாக்குகளுக்குள் பிருகற்பதி தேவதை உன்னை இறைவனென்று உணருவானாக. சேஷ்டர்களுக்குள் இந்திரன் உன்னை இறைவனென்று உணருவானாக. சத்தியங்களுள் மித்திர தேவதையானது உன்னை இறைவனென்று உணருக. தர்மபதிகளுக்குள் வருண தேவதை உன்னை இறைவனென்றுணருக என்பதாம்.

மற்றும், எஜமானனுக்கு அநுக்ஞை கொடுக்கின்றவர்களான தேவர்களே! நீவிர், இவனை, எதிராளியினின்று இராச்சியத்தை ஆண்டுவரும்படி அநுமதி கொடுப்பீர்களாக. அஃதன்றியும் ஏகாதிபத்ய சக்கரவர்த்தியாயிருந்து வருமாறும் அநுமதி கொடுப்பீர்களாக என்பது.

சாயண பாடியக்கருத்து.

இம்மந்திரத்தால், பிரமன் என்பவன் வேள்வித்தலைவனுடைய கையைப் பிடித்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்.

அறிவித்தல்.

மந்திரம் :

**एषवो भरता राजा ।**

என்பது.

உரை

தனமிக்க அரச வணிகர் முதலிலானோர்களே! இவன், உங்கட்கு அரசனாயினன் என்பது.

சாயண பாடியக்கருத்து.

இவன், உங்கட்கு அரசனாயிருத்தலின் உள்ளவாறு இவனைப் போற்றுவீர்களாக என்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, பாஞ்சால தேச முதலான அரசர்களையுங் கூறிக் கொள்க.

மூன்றும் விநியோகம்

அந்தணர்கட்கு அரசனென்றுணர்த்தல்.

மந்திரம் :

सोमोऽस्माकं ब्राह्मणानां राजा ।

என்பது.

உரை

பிராமணர்களான எங்கட்கு சோமம் அரசனுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இந்த மந்திரத்தை, பிரமன் செபித்தல் வேண்டுமென்பதாம்.

---

நான்காம் விநியோகம்.

முகத்தைத் துடைத்தல்

மந்திரம் :

प्रति त्यन्नाम राज्यमधायि स्वां तनुवं वरुणो अशिश्रेच्छुचेर्मित्रस्य व्रत्या अभूमाऽमन्महि महत ऋतस्य नाम ।

என்பது.

வருணன், கடலை எல்லையாகவுடைய இராச்சியத்தை எஜமானனுக்கு நிறுவியுள்ளான். வருணன், தனது உடம்பை யுணர்ந்து கொண்டான்; அதாவது, அறத்தைக் கைக்கொண்டவர்களுக் கெல்லாம் இன்னுன் அரசன் என்று தெரிந்து கொண்டனன் என்பதாம். யாமும், சுசியாகிய மித்திரனுடைய அநுக்ஞையால் கருமத்தைச் செய்யத் தக்கவர்களாயினேம். ஆதலின், யாம், பெரிய இராசசூய யாகத்தைச் செய்கின்ரும் என்று பெயரை எண்ணுகின்ரும் என்பது.

சாயண பாடியக்கருத்து.

இம் மந்திரத்தால், பிரமன், எஜமானனுடைய முகத்தைத் துடைத்து விடல் வேண்டும் என்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்.

இதுவுமது.

மந்திரம்:

सर्वे व्राता वरुणस्याऽभूवन्वि मित्र एवैररातिमतारीदसूषुदन्त यज्ञिया ऋतेन व्यु त्रितो जरिमाणं न आनट् ।

என்பது.

உரை.

வேள்விச் செயலாளர்களான நாம் எல்லாரும் வருணனுடைய அநுக்ஞையால் கருமாநுட்டானத்திற்கு உரியவர்களாயினேம். மித்திரன், எம்மைப் பாதுகாப்பதற்கு இவர்கள் வருவதைக் கொண்டு பகைவரைக் கடக்கும்படி செய்வானாக. வேள்விச் செயலாளர்கள் வேள்வியைப் பாதுகாக்கின்றூர்கள். மூவகையான அக்கினி, கிழத்தன்மையாற் குறைந்துபோகும் எனது ஆயுளை நீண்ட ஆயுளாகச் செய்தது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தாலும், பிரமன், வேள்வித் தலைவனுடைய முகத்தைத் துடைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

---

ஆறும் விநியோகம்.

முதல் அடியெடுத்துவைத்தல்.

மந்திரம்:

विष्णोःक्रमोऽसि ।

என்பது

உரை.

இம் மந்திரத்தால், கிழக்கு நோக்கி ஒரு அடி யெடுத்து வைத்தல் வேண்டும்.

---

ஏழாம் விநியோகம்.

இரண்டாம் அடியெடுத்துவைத்தல்.

மந்திரம் :

विष्णोः क्रान्तमसि ।

என்பது

உரை.

இம் மந்திரத்தால், முன்போல் இரண்டாவது அடியெடுத்து வைத்தல் வேண்டும்.

---

எட்டாம் விநியோகம்.

மந்திரம் :

विष्णोर्विक्रान्तमसि ।

என்பது.

வைத்தல்)

உரை.

இம் மந்திரத்தால், முன்போல் மூன்ருவது அடி யெடுத்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

இம் மந்திரங்களின் பொருள், வாசபேய மென்னும் யாகத்தில் இரதத்திற் கருகிற் செல்லவேண்டு மென்னுமிடத்து எழுதப்பட்டிருக்கின்றது.

ஈண்டு, ரூத்திரத்தைத் தழுவி, அபிடேசநீயம், உக்த்யயாகம் சோமரசத்தைப் பிழியுநாள், மத்தியானம் சோமரசத்தைப் பிழியும்போது, மாகேந்திரத் துதியென்னும் முதலாவது பிருஷ்டத் தோத்திரத்தை (அபித்வா என்பது முதலிய ரதந்தரசாமத்தை)ப் பாடுவதற்கு முன்னுள்ள கிரியைகளைச் செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

அல்லது, மாத்தியந்தின சவனீயத்தின் பொருட்டு, வாற்கோதுமை எடுக்கும் வரை செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், மருத் தேவதையின் பொருட்டு, கா–1 பிர–8 அநு–13-வது 'ईदृङ्च' என்பது முதலிய மந்திரங்களுடன், ஆரண்யம், பிர-4 அநு-27-வது, धुनिश्च, என்பது முதலிய மந்திரங்களையுஞ் சேர்த்து ஓதிக் கொண்டு இருபத்தொரு மண் அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து வைத்துக் கொள்ளினுங் கொள்ளலாம்.

மற்றும், வைசுவ தேவ ஆமிட்சையுஞ் செய்து வைத்துக் கொள்ளல் வேண்டும்.

பத்தாம் அநுவாகம்.
முற்றிற்று.

---

பதினோராவது அநுவாகம்
விடயச்சுருக்கம்

सारस्वतीजलेऽर्थेति होमस्त्वासुद्रिके स्वपाम् ॥
वृषाऽसीति प्रतीयोर्मावन्धीपोर्मौपुनर्वृषः ॥ १ ॥
व्रज कूप्यासु मरुतां वायुप्रति हतास्वथ ।
सूर्यश्चाऽऽ (वा ऽऽ) तप वृष्टासु सूर्यबिम्बयुतासुच ॥ २ ॥
मान्दाःस्थिरासु वाशास्थ नीहारस्थासुशक्करीः ।
गवोल्बस्थासु विश्वेति क्षीरगासु जनेतिनु ॥ ३ ॥
दधिगासु घृतस्थासु त्वमेर्मधुगतासुच ।
अपामपस्सर्वशेष शृङ्गेषा राष्ट्रदाहृति ॥
स्वाहान्तो होमगोऽभ्यस्तु ग्रहणे दशपञ्चच ॥ ४ ॥

சரசுவதி நதி நீரை யெடுத்தல், ஓடுநதியின் நீர், அருவியின்மேல் அலைநீர், அருவியின் கீழ் அலைநீர், கிணற்றுநீர், காற்றினால் சுழலுநீர், வெயிலில் பெய்யும் மழைநீர், சூரியப்பிரதி விம்பம்படுநீர், நிலையாய்க் கிடக்கின்ற நீர், கோரைப் புல்லில் தங்கியிருக்கும் நீர், பசுமாட்டின் கருப்பையிலுள்ள நீர், பாலிலுள்ள நீர், தயிரிலுள்ள நீர், நெய்யிலுள்ள நீர், தேனிலுள்ள நீர் என்னுமிந்த நீர்களை ஓமஞ்செய்து எடுத்துக் கொள்ளல் என்பது.

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

## பதினோராம் அநுவாகம்

இராசசூய யாகத்தைப் பற்றிய பட்டாபிஷேகத்திற்குரிய தண்ணீரைக் குறித்த மந்திரங்கள்.

अर्थेतस्स्थापां पतिरसि वृषाऽस्यूर्मिर्वृषसेनोऽसि व्रजक्षितः
स्थ मरुतामोजस्स्थ सूर्यवर्चसस्स्थ सूर्यत्वचसस्स्थ मान्दास्स्थ वाशास्स्थ
शक्करीस्स्थ विश्वभृतस्स्थ जनभृतस्स्थाग्नेस्तेजस्यास्स्थापामोष
धीनाꣳ रसस्स्थापो देवीर्मधुमतीरगृह्णन्नूर्जस्वती राजसूयाय चिता
नाः । याभिर्मित्रावरुणावभ्यषिञ्चन्याभिरिन्द्रमनयन्नत्यरातीः । राष्ट्र
दास्स्थ राष्ट्रं दत्तस्वाहा राष्ट्रदास्स्थ राष्ट्रममुष्मै दत्त ॥ १ ॥

ஈண்டுப் பத்தாமநுவாகத்தில், தேவ சுவ (எஜமானனுக்கு அநுக்ஞையளிக்கின்ற தேவர்களின்) அவிகள் கூறப்பட்டன. இவ்வநுவாகத்தில் அபிஷேகத்தின் பொருட்டு எடுக்கப்படும் நீரைப்பற்றிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.

---

முதல் விநியோகம்

முதலாவது சரசுவதி நதி நீரில் ஓமஞ் செய்து நீரைக் எடுத்து கொள்ளுதல்.

மந்திரம் :

**अर्थेतस्थ, आपो देवीर्मधुमतीर गृह्णन्नूर्जस्वती राजसूयाय चितानाः। राष्ट्रदास्स्थराष्ट्रं दत्त स्वाहा राष्ट्र दास्स्थ राष्ट्रममुष्मै दत्त ।**

என்பது.

உரை

சரசுவதி நதியின் நீரே! நீ, பயனை முன்னிட்டு வேள்வி செய்யுமிடத்திற் செல்கின்றதாய் யிருக்கின்றாய். அத்தகைய தண்ணீராகிய தேவியே! நீ, இன்சுவையுடையதும், வலியுடையதும், முன்னர் மித்திரவருணர்களுக்கு அபிஷேகம் பண்ணப்பட்டதும், பகைவரைக் கடந்து இந்திரனையடையச் செய்ததுமாக இருக்கின்றாய். அத்தகைய உன்னை, வேள்விச் செயலாலர்கள், இராசசூய யாகத்தின் பொருட்டு எடுத்துக் கொண்டனர். தண்ணீரே! நீ, இராச்சியத்தைக் கொடுக்கின்றவளாக இருக்கின்றாய். ஆதலின், இந்த வேள்வித் தலைவனுக்கு இராச்சியத்தைக் கொடுப்பாயாக. இது உனக்கு ஓமஞ் செய்யப்பட்டது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், சரசுவதிநதியின் சம்பந்தமாகிய நீரில் நெய் ஆகுதி செய்தல் வேண்டும்.

மற்றும், இந்த மந்திரத்திலுள்ள 'சுவாஹா' என்னுஞ் சொல்லை நீக்கி ஓதிக்கொண்டு, உரல் போன்ற மரப்பாத்திரத்தினால், அந்நீரை, ஆக்னீத்ர மண்டபத்தில் எடுத்து வைத்தல் வேண்டும்.

---

இரண்டாம் விநியோகம்

நதி நீரில் ஓமஞ் செய்து எடுத்தல்

மந்திரம் :

अपां पतिरसि।

என்பது.

உரை

நதியின் நீரே! நீ, தண்ணீர்கட்குத் தலைவனாயிருக்கின்றாய். உன்னை எடுத்துக்கொள்கின்றேன் என்பது எஞ்சி நின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்துடன், மேற்காட்டிய சுவாஹாந்த மந்திரத்தையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, நதியின் நீரிலாவது, அல்லது மேற்கு முகமாய் ஓடும் நதத்தின் நீரிலாவது ஓமஞ் செய்தல் வேண்டும். சுவாஹா, என்பதை நீக்கி முன்போல் மந்திரத்தைச் சேர்த்து ஓதிக்கொண்டு நதி நீரை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

மூன்றும் விநியோகம்

அருவி நீரின் மேல்அலையில் ஓமஞ்செய்து எடுத்தல்

மந்திரம் :

**वृषाऽस्यूर्मिः ।**

என்பது.

உரை

மநிதர்மீது, அல்லது விலங்குகளின்மீது விழும்போது மேலே யெழு கின்ற அலையே! நீ, தெளிக்கின்றவனா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல், இரண்டு மந்திரங்களையுஞ் சேர்த்துக் கொண்டு, அருவி நீரின் மேலெழும் அலையில் ஆகுதி செய்து அதை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

அருவி நீரின் கீழ் அலையில் ஓமஞ்செய்து எடுத்தல்

மந்திரம் :

**वृषसेनोऽसि ।**

என்பது.

உரை

மேற்கூறியபடி எழும் அருவியின் கீழ் அலையே! நீ, நீர்த்துளிகளாகிற சேனைகளையுடையதா யிருக்கின்றாய் என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

முன்போல், அருவியில் கீழ் ஓடுவதாகிய அலைநீரில் ஓமஞ் செய்து எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

கிணற்று நீரில் ஓமஞ் செய்து எடுத்தல்

மந்திரம் :

**व्रजक्षितस्स्थ ।**

என்பது.

எடுத்துக்கோள்ளல்)

உரை

கிணற்று நீரே! நீ, பசுக்கட்டும் இடத்தைப் போன்று, பல்வகையுயிர்கள் வாழுமிடமாகிய கிணற்றில் இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல், கிணற்றுநீரில் ஓமஞ் செய்துவிட்டு அந்நீரை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

ஆறும் விநியோகம்

சுழல் நீரில் ஓமஞ்செய்து எடுத்தல்

மந்திரம் :

**मरुतामोजस्स्थ ।**

என்பது.

உரை

காற்றிற் சுழன்று மேலெழும் நீரே! நீ வாயுக்களின் வன்மை வடிவாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல், சுழன்று எழும் நீரில் ஓமஞ் செய்து எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

இனி, சூத்திரத்தைத்தழுவி, ' प्रहावरीस्स्थ ' என்னும் சூத்திர மந்திரத்தால், முன்போல், விழுகின்ற நீரில் ஓமஞ் செய்து எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

அங்ஙனமே, 'परिवाहिणीस्स्थ ' என்னுமந்திரத்தால் நாற்புறமும் ஓடுகின்ற நீரில் ஓமஞ் செய்து எடுத்துக்கொள்ளலும் வேண்டும்.

---

ஏழாம் விநியோகம்

வெய்யிலிற் பெய்யும் மழைநீரில் ஓமஞ்செய்துஎடுத்தல்

மந்திரம் :

**सूर्यवर्चसस्स्थ ।**

என்பது.

உரை

வெயிலெறிக்கும்போது பெய்யும் மழை நீரே! நீ, சூரியன் போல் ஒளியுடையதாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல், வெயிற்படும் மழை நீரில் ஓமஞ்செய்து அந்நீரை எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்

சூரியப்பிரதிவிம்ப நீரில் ஓமஞ்செய்தெடுத்தல்

மந்திரம் :

**सूर्यत्वचसस्थ ।**

என்பது.

உரை

சூரியனுடைய பிரதிவிம்பத்தைக் கவர்ந்துள்ள தண்ணீரே! நீ, சூரியனுடைய வுடம்பைக் கொண்டதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல், சூரியப் பிரதிபிம்பம் பட்டிருக்கின்ற நீரில் ஓமஞ் செய்து எடுத்துக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்

நிலையாகக் கிடக் கின்ற நீரில் ஓமஞ்செய்தெடுத்தல்

மந்திரம் :

**मान्दास्थ ।**

என்பது.

உரை.

நிலையாயுள்ள தண்ணீரே! நீ, மந்தவடிவா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

வெளியிற் பாயாமல் ஒரே இடத்திற் கிடக்கின்ற தண்ணீரில் ஓமஞ் செய்து அதை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்,

---

எடுத்துக்கொள்ளல்)

பத்தாம் விநியோகம்

கோரைப்புல் நீரில் ஓமஞ் செய்தெடுத்தல்

மந்திரம் :

वाशास्थ ।

என்பது.

உரை.

கோரைப்புல்லில் இருக்கின்ற நீரே ! நீ வசியமாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

முன்போல், கோரைப்புலலில் இருக்கின்ற நீரில் ஓமஞ்செய்து அதை எடுத்துக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

பதினோராம் விநியோகம்

பசுவின் கர்ப்பப்பை நீரில் ஓமஞ் செய்தெடுத்தல்

மந்திரம் :

शकरीस्थ ।

என்பது.

உரை.

பசுமாட்டின் கர்ப்பத்திலுள்ள நீரே ! நீ, கருப்பத்தைப் பாதுகாப்பதில் வன்மையுடையதாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல் பசுமாட்டின் கருப்பையில் நிறைந்துள்ள நீரில் ஓமஞ்செய்து அந்த நீரை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

பனிரண்டாம் விநியோகம்.

பாலில் உள்ள நீரில் ஓமஞ் செய்தெடுத்தல்

மந்திரம் :

विश्वभृतस्थ ।

என்பது.

உரை

பாலில் இருக்கின்ற நீரே ! நீ, எல்லாவுயிர்களையும் பரிபாலிக்கின்றதாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

முன்போல், பாலில் கலந்துள்ள நீரில் ஓமஞ்செய்து அந்த நீரை எடுத்துக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

பதிமூன்றும் விநியோகம்

தயிரில் உள்ள நீரில் ஓமஞ்செய்தெடுத்தல்

மந்திரம் :

**जनभृतस्थ ।**

என்பது.

உரை.

தயிரில் உள்ள நீரே! நீ, சனங்களைப் பாதுசாக்கின்றதா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

முன்போல், தயிரில் இருக்கின்ற நீரில் ஓமஞ் செய்து அந்தநீரை எடுத்துக்கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

பதிநான்காம் விநியோகம்.

நெய்யில் உள்ள நீரில் ஓமஞ் செய்தெடுத்தல்

மந்திரம் :

**अग्नेस्तेजस्यास्थ ।**

என்பது.

உரை

நெய் உருகும்போதிருக்கின்ற நெகிழ்ச்சியாகிய நீரே! நீ, அக்கினிச் சுவாலை வடிவாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

முன்போல், நெய்யில் நெகிழ்ச்சி ரூபமாயிருக்கின்ற நீரில் ஓமஞ் செய்து அந்நீரை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

---

பதினைந்தாம் விநியோகம்

தேனில் உள்ள நிரில் ஓமஞ் செய்தெடுத்தல்

மந்திரம் :

**अपामोषधीनाꣳरसस्थ ।**

என்பது

எடுத்துக்கொள்ளல்)

உரை

தேனில் நிகழ்ச்சி வடிவாயிருக்கின்ற நீரே! நீ, தண்ணீரின் இரசமாகவும் பூக்களின் இரசமாகவும் இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

முன்போல், தேனில் நிகழ்ச்சி வடிவாயிருக்கின்ற நீரில் ஓமஞ்செய்து அதை எடுத்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

பதினோராம் அநுவாகம்

முற்றிற்று.

---

பன்னிரண்டாம் அநுவாகம்

விடயச்சுருக்கம்

देवीति वैतसेपात्रे सर्वा अपि नयेदपः
अनेति सादयेन्मध्ये होतुर्ब्रह्माख्यधिष्ण्ययोः ॥ १ ॥
अनिभृष्टेति तास्वन्तः शतस्वर्णं विनिक्षिपेत् ॥
स्वर्णेनोत्पवनं शुक्राः पात्रेषुध्यानयेत्सध ॥ २ ॥
क्षत्रेति धारयेत्स्वामी ताप्योर्ष्णीषद्वयं क्रमात् ।
स्वामिनं वाचयेदावि सप्तमन्त्रान्विनिर्गतौ ॥ ३ ॥
एषवः स्वामिनं दद्यात्सोमोऽस्मा ब्रह्मणोजपः ।
इन्द्रदद्यात्स्वामिनोऽन्यो धनुश्शत्रिति बाणकान् ॥ ४ ॥
पातेषून्मन्त्रयेत्स्वामी हिरबाहू तथोद्यतौ ।
अनुवाके द्वादशेऽस्मिन्मन्त्रा विंशतिरीरिताः ॥

'வைதசம்' என்னு மரப்பாத்திரத்தில் எல்லா நீர்களையும் ஒன்றாய்க் கொட்டுதல்' ஹோதா, பிரமன் என்பவர்களுடைய மேடைகட்கு நடுவில் வைத்தல், பொன் போடுதல், பொன்னால் அலைத்தல், நான்கு பாத்திரங்களில் அந்நீரை எடுத்துக் கொள்ளல், நெய்யாடையையும், தலைக்குட்டையையு மணிந்து கொள்ளல், ஏழுமந்திரங்களை ஓதுவித்தல், வெளியில் வருதல், பிரமன் மந்திர செபஞ் செய்தல், தநுவைக் கொடுத்தல், பிற அரசன்மேல் அம்பைவிடுதல், விடும்போது செபித்தல், கையைத்தூக்கிக் கொள்ளுதல் என்பது.

(எடுத்த நீர்களைப்

## முதற் காண்டம் எட்டாம்பிரபாடகம்

## பன்னிரண்டாம் அநுவாகம்

*அபிஷேக நீரைப் புநிதமாக்குதற்குரிய மந்திரங்கள்.*

*இரண்டு பஞ்சாதிக்குமேல் நாற்பது பதங்களைக் கொண்டது.*

देवीरापस्सं मधुमतीर्मधुमतीभिस्सृज्यध्वंमहि वर्चः क्षत्रियाय
वन्वाना अनाधृष्टास्सीदतोर्जस्वतीर्महि वर्चः क्षत्रियाय दधतीरनि
भृष्टमसि वाचो बन्धुस्तपोजास्सोमस्य दात्रमसि शुक्रा वश्शुक्रेणो-
त्पुनामि चन्द्राश्चन्द्रेणामृता अमृतेन स्वाहा राजसूयाय चितानाः ।
सधमादो द्युम्निनीरूर्ज एता अनिभृष्टा अपस्युवो वसानः । पस्त्या
सु चक्रे वरुणस्सधस्थमपाँ शिशुः ॥ १ ॥ मातृतमास्वन्तः ।
क्षत्रस्योल्बमसि क्षत्रस्य योनिरस्याविन्नो अग्निर्गृहपतिराविन्न इन्द्रो
वृद्धश्रवा आविन्नः पूषा विश्ववेदा आविन्नौ मित्रावरुणावृतावृधावा
विन्ने द्यावापृथिवी धृतव्रते आविन्ना देव्यदितिर्विश्वरूप्या विन्नोऽय
मसावामुष्यायणोऽस्यां विश्यस्मिन्राष्ट्रे महते क्षत्राय महत आधि
पत्याय महते जानराज्यायैष वो भरता राजा सोमोऽस्माकं ब्राह्मणा
नाँ राजेन्द्रस्य ॥ २ ॥ वज्रोऽसि वार्त्रघ्नस्त्वयाऽयं वृत्रं वध्याच्छ
त्रुबाधनास्स्थ पातमा प्रत्यञ्चं पात मा तिर्यञ्चमन्वञ्चं मा पात
दिग्भ्यो मा पात विश्वाभ्यो मा नाष्ट्राभ्यः पात हिरण्यवर्णावुषसां
विरोकेऽयस्स्थूणावुदितौ सूर्यस्याऽऽरोहतं वरुण मित्र गर्तं ततश्चक्षा
थामदितिं दितिं च ॥ ३ ॥

*பதினோராம் அனுவாகத்தில் அபிஷேகநீரை எடுத்தற்குரிய மந்திரங்கள் கூறப்பட்டன. பன்னிரண்டாம் அநுவாகத்தில், அந்த நீரைப் புநிதஞ்செய்தற்குரிய மந்திரங்கள் கூறப்படுகின்றன.*

புநிநஞ்செய்தல் முதலியன)

முதல் விநியோகம்

எடுத்த நீர்களை வைத்தல்

மந்திரம் :

देवीरापस्सं मधुमतीर्मधुमतीभिस्सृज्यध्वं महि वर्चः क्षत्रियाय वन्वानाः ।

என்பது.

உரை.

அநேக மர உரல்களில் எடுக்கப்பட்டதும், சுவையுடையதுமாகிய தண்ணீராகிய தேவியே! நீ, அரசனுகிய இவனுக்கு பெருங் கீர்த்தியையுண்டாக்குவதாய் இன்சுவையுடைய நீருடன் கலந்து கொள்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், வைதசம் என்னும், ஒருவகை மரத்தாற் செய்த பாத்திரத்தில், பதினாறு மரவுரல்களில் எடுத்துவைத்திருந்த நீர்களை ஒன்றாகக் கொட்டிவைத்தல் வேண்டும் என்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்

அப்பாத்திரத்தை வைக்குதல்

மந்திரம் :

अनाधृष्टास्सीदतोजस्वतीर्महिवर्चः क्षत्रियाय दधतीः ।

என்பது.

உரை

ஒருவராலேனும் பழித்துத் தள்ளப்படாத சாரத்தையுடைய தண்ணீரே! நீ, அரசனுக்குக் கீர்த்தியை யுண்டாக்குவதாய் இங்கு இருந்து கொள்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அந்த நீர்ப்பாத்திரத்தை, ஹோதாவின் மேடைக்கும், பிராமணாச்சம்சியின் மேடைக்கும் நடுவில் வைத்தல் வேண்டுமென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்

பொன்வைத்தல்

மந்திரம் :

अनिभृष्टमसि वाचो बन्धुस्तपोजास्सोमस्य दात्रमसि ।

என்பது.

உரை.

பொன்னே! நீ, தீயால் கெடாதவனுயிருக்கின்றாய். வாக்குக்குச் சுற்றமாயிருக்கின்றாய். சூடுள்ள தீயால் உண்டாகியதாயிருக்கின்றாய். சோமத்தை விலைக்கு வாங்குவதன் பொருட்டுக் கொடுக்கப்பட்டதாயிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அந்தப் பாத்திரத்தில் நூறு பொன்களைப் போடுதல் வேண்டும் என்பதாம்.

---

நான்காம் விநியோகம்

உத்பவனஞ் செய் (அலைத்)தல்

மந்திரம் :

शुक्रा वश्शुक्रेणोत्पुनामि चन्द्राश्चन्द्रेणामृता अमृतेन स्वाहा राजसूयाय चितानाः ।

என்பது.

உரை.

தண்ணீரே! களிப்பைத் தருவதும், அமுதமும், சுவாஹாகாரத்தாற் றேடிய இராச சூயத்தின்பொருட்டுச் சம்பாதித்ததுமாகிய பொன்னால், களிப்புடையதும், அமுதமும், இராசசூயத்திற்குத் தேடியதுமாகிய உன்னை உத்பவனஞ் (அலைத்தல்) செய்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், பொன்னால், அந்நீரை உத்பவனஞ் செய்தல் வேண்டும் என்பதாம். உத்பவனம் = அலைத்தல்.

---

ஐந்தாம் விநியோகம்

நீரைப் பாகமாக்கல்

மந்திரம் :

सधमाधो द्युम्निनीरूर्ज एता अनिभृष्टा अपस्युवो वसानः । पस्त्यासु चक्रे वरुणस्सदस्थमपाꣳशिशुर्मातृतमास्वन्तः ।

என்பது.

உரை

தண்ணீரின் புதல்வனாகிய வருணன், அன்னையினும் இனிய நீரின் நடுவில் ஆடைபோல் மறைத்து நிலைத்திருக்கும்படி செய்தனன் என்பது.

புநிதஞ்செய்தல் முதலியன)

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், புரசு, அத்தி, அரசு, ஆலம்விழுது என்னுமரங்ளாற் செய்த நான்கு பாத்திரங்களில் அங்நீர்களைப் பங்கிட்டு வைத்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி மேல்வரும் 14-ம் அநுவாகம், 'रुद्रयत्तेक्रयीपरं नाम, என்பது முதலிய மந்திரத்தால் ஆக்னீத்ரத்தியில் ஓமஞ்செய்தல் வேண்டும்.

---

ஆறும் விநியோகம்

நெய்த்துணி யணிதல்

மந்திரம் :

क्षत्रस्योल्वमसि ।

என்பது.

உரை.

நெய்யில் நனைக்கப்பெற்ற வேஷ்டியே! நீ, அரசனுடைய கருப்பையாக விருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நெய்யில் நனைத்துள்ள ஆடையை வேள்வித் தலைவன் போர்த்துக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

ஏழாம் விநியோகம்

தலைக்குட்டை யணிதல்

மந்திரம் :

क्षत्रस्य योनिरसि ।

என்பது.

உரை

வெண்ணிற ஆடையே! நீ, அரசனுக்குக் காரணமாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வெண்மை நிறமுடைய தலைக்குட்டையைத் தரித்துக் கொள்ளல் வேண்டும் என்பதாம்.

(எடுத்த நீர்களைப்

ஈண்டுச் சூத்திரப்படி, நூற்றொரு தருப்பைகளால் தலைவனைத் துடைத்துப் புனிதமாக்கல் வேண்டும். ஐம்பது தருப்பைகளால் வலது கண்ணுக்கும் ஐம்பத்தொரு தருப்பைகளால் இடது கண்ணுக்கும் மையிடுதல் வேண்டும்.

பிறகு, அத்திப்பழம், தயிர், நெல்முளை, அல்லது, கோதுமை முளையை உண்ணும்படி செய்தல் வேண்டும். இவைகள் அனைத்தும், ஆக்னீத்ர மண்டபத்திற் செய்யத் தக்கன.

---

### எட்டாம் விநியோகம்

எசமானனுக்கு மந்திரம் ஓதுவித்தல்

மந்திரம் :

आविन्नो अग्निर्गृहपतिरािवन्न इन्द्रो वृद्धश्रवा अाविन्नः पूषा विश्ववेदा आविन्नौ मित्राावरुणावृतावृधावाविन्ने द्यावापृथिवी धृतव्रते आविन्ना देव्यदितिर्विश्वरूप्या विन्नोऽयमसावामुष्यायणोऽस्यां विश्यस्मिन्राष्ट्रे महते क्षत्राय महत आाधिपत्याय महते जानराज्याय ।

என்பது.

உரை.

இப்போது, இக் கருமத்தால் அக்கினி, கிருகபதித் தன்மையை யடைந்தது, இந்திரன் பெருங் கீர்த்தியை யடைந்தனன். பூஷா என்பவன் விக்ஞானத்தை யடைந்தான். மித்திர வருணர்கள் மெய்யுரை மிகுந்தவர்களாயினர். வானும் மண்ணும் எல்லாச் செயல்களிலும் நியமமாய் விரதத்தைத் தாங்கின. அதிதி மாதா எல்லாத் தேவவுடம்பையும் பெற்றவளாயினள். இவ் வேள்வித்தலைவன், பண்டைக் காலத்திய அரசர்களின் பெருங்குணங்களனைத்தையும் பெற்றுக் கொண்டான் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இந்த எழு மந்திரங்களையும், வேள்வித்தலைவன் ஓதும்படி செய்தல் வேண்டும் என்பதாம்,

---

### ஒன்பதாம் விநியோகம்

சேபம்

மந்திரம் :

एषवो भरता राजा सोमोऽस्माकं ब्राह्मणानाᳬराजा ।

என்பது

புநிதஞ் செய்தல் முதலியன)

உரை.

இதன் உரை, பத்தாம் அநுவாகத்திற் கூறப்பட்டுள்ளது.

சாயணபாடியக் கருத்து.

வேள்வித்தலைவனை வெளியே அழைத்துக் கொண்டுவந்து இம் மந்திரத்தைச் செபஞ் செய்வித்தல் வேண்டும் என்பதாம்.

---

பத்தாம் விநியோகம்

தநுவைக் கொடுத்தல்

மந்திரம் :

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्त्वयाऽयं वृत्रं वध्यात् ।

என்பது.

உரை

தநுவே! நீ, இந்திரனுடைய வச்சிராயுதம் போன்று வதைப்பதற்குக் கருவியா யிருத்தலின், உன்னால் இவ்வேள்வித் தலைவன் பகைவரையழிப்பானாக என்பது

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், எஜமானனுக்கு தநுவைக் கொடுத்தல் வேண்டுமென்பதாம்.

---

பதினோராம் விநியோகம்

அம்புகளைக் கொடுத்தல்

மந்திரம்

शत्रुबधनास्थ ।

என்பது.

உரை.

அம்புகளே! நீங்கள், பகைவரைக் கொல்லத் தக்கவர்களாவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் எஜமானனுடைய கையில் மூன்று அம்புகளைக் கொடுத்தல் வேண்டுமென்பதாம்.

---

பன்னிரண்டாம் விநியோகம்

கொடுத்த அம்புகளைப் போற்றுதல்

மந்திரம் :

**पातमा प्रत्यञ्चं पात मा तिर्यञ्चमन्वञ्चं मा पात दिग्भ्यो मा पात विश्वाभ्यो मा नाष्ट्राभ्यः पात ।**

என்பது.

உரை.

அம்புகளே ! நீங்கள், முன்னும், பின்னும், பக்கத்திலும், சுற்றிலுமாகச் சென்று பகைவர் விடப்பட்ட அம்புகளிலிருந்தும் எம்மைப்பாது காப்பீர்களாக. மற்றும், எல்லாவிதமான துன்பங்களிலிருந்தும் எம்மைப் பாதுகாப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், கொடுத்திருக்கின்ற அம்புகளைப் போற்றுதல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, पात प्राञ्चं, पात प्रत्यञ्चं पातोदञ्चं என்னுஞ் சூத்திரமந்திரங்களை வேட்போன்செபித்தல் வேண்டும் என்பதையு முணர்க.

அங்ஙனமே, வேள்வித்தலைவன் मित्रोऽसि என்று, வலதுகையையும் वरुणोऽसि என்று இடதுகையையும் மேலேதூக்கல்வேண்டும் என்பதும் உணரத் தக்கது.

---

பதின்மூன்றும் விநியோகம்

கைகளைத் தூக்கிய எசமானனைப் போற்றுதல்

மந்திரம் :

**हिरण्यवर्णावुषसां विरोकेऽयस्स्थूणावुदितौ सूर्यस्याऽऽरोहतं वरुण मित्र गर्तं ततश्चक्षाथामदितिं दितिञ्च ।**

என்பது.

உரை.

பொன்போல் ஒளிர்கின்றவைகளும், இரும்புத் தூண்களைப்போன்று வன்மையுடையவைகளும், பகைவரை நீக்குவதும், கொல்வதுமாகிய இடதுகை வலதுகைகளே ! நீங்கள், தேர்த்தட்டின்மீது ஏறுவதன் பொருட்டு, பிறருடைய அம்புகளினின்றும் பாதுகாக்கப் பட்டிருக்கின்றீர்கள். இரதத்தின் மீது ஏறியபிறகு, கணக்கிலாத நமது சேனையைப் பாதுகாப்பதற்கும், கணக்குள்ள பிற சேனையைக் கெடுப்பதற்கும் பார்ப்பீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கைகளைத் தூக்கிக்கொண்டிருக்கின்ற எசமானனைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

பன்னிரண்டாம் அநுவாகம்

முற்றிற்று.

---

பதின்மூன்றும் அநுவாகம்

விடயச்சுருக்கம்.

**दिशो व्यास्थापयेद्धप मध्वर्युस्समिपञ्चभिः ।**

**मारुतस्य कपालानि दध्यादीदङ्चतुर्दश ॥ १ ॥**

**अत्राभिषेकतः पूर्वः षट्पार्थान्युत्तराणिषट् ।**

**पृथिषट्कद्वयं तद्वत्स्युर्भूतानामवेष्टयः ॥ २ ॥**

**त्रयोदशेऽनुवाकेऽस्मिन्त्रि चत्वारिंशदीरिताः**

ஐந்து மந்திரங்களால், ஐந்து திக்குக்களில் அரசனை நிற்கவைத்து நோக்கச்செய்தல், மாருத கபாலங்கள் பதினான்கையும் வைத்தல். அபிஷேகத்திற்கு முன் பன்னிரண்டு ஹோமங்கள் செய்தல், அபிஷேகத்திற்குப்பின் பன்னிரண்டு ஹோமங்கள் செய்தல் என்பது.

---

**முதற்காண்டம் எட்டாம் பிரபாடகம்**

பதின்மூன்றும் அநுவாகம்

மூன்று பஞ்சாதிகளைக் கொண்டது

திக்குக்களை நோக்குதற்குரிய மந்திரங்கள்

समिधमातिष्ठगायत्रीत्वा छन्दसामवतुत्रिवृत्स्तोमो रथंतरँ सामाग्निर्देवता ब्रह्म द्रविणमुग्रामातिष्ठ त्रिष्टुप् त्वा छन्दसामवतु पञ्चदशस्स्तोमो बृहत्सामेन्द्रो देवता क्षत्रं द्रविणं विराजमा तिष्ठ जगती त्वा छन्दसामवतु सप्तदशः स्तोमो वैरूपँ साम मरुतो देवता-

विड्द्रविणमुदीचीमा तिष्ठानुष्टुप्त्वा ॥ १ ॥ छन्दसामवत्वेकविंशः स्तोमो वैराजꣳ साम मित्रावरुणौ देवता बलं द्रविणमूर्ध्वामा तिष्ठ पङ्क्तिस्त्वा छन्दसामवतु त्रिणवत्रयस्त्रिꣳशौस्तोमौ शाक्वररैवते सामनी बृहस्पतिर्देवता वर्चो द्रविणमीदृङ्चान्यादृङ्चैतादृङ्च प्रतिदृङ्च मितश्च संमितश्च सभराः । शुक्रज्योतिश्च चित्रज्योतिश्च सत्यज्योतिश्च ज्योतिष्माꣳश्च सत्यश्चर्तपाश्च ॥ २ ॥ अत्यꣳहाः । अग्नये स्वाहा सोमाय स्वाहा सवित्रे स्वाहा सरस्वत्यै स्वाहा पूष्णे स्वाहा बृहस्पतये स्वाहेन्द्राय स्वाहा घोषाय स्वाहा श्लोकाय स्वाहाऽꣳशाय स्वाहा भगाय स्वाहा क्षेत्रस्य पतये स्वाहा पृथिव्यै स्वाहाऽन्तरिक्षाय स्वाहा दिवे स्वाहा सूर्याय स्वाहा चन्द्रमसे स्वाहा नक्षत्रेभ्यः स्वाहाऽद्भ्यः स्वाहौषधीभ्यः स्वाहा वनस्पतिभ्यःस्वाहा चराचरेभ्यः स्वाहा परिप्लवेभ्यः स्वाहा सरीसृपेभ्यः स्வाहा ॥ ३ ॥

பன்னிரண்டாம் அநுவாகத்தில் அபிடேக நீரின் புநித மந்திரங்கள் கூறப்பட்டன. பதின்மூன்றும் அநுவாகத்தில், அரசனை திக்குக்களை நோக்கி நிறுத்தல் கூறப்படுகின்றது.

ஈண்டு, திக்குக்களை நோக்கி நிற்றல் என்பது ஒவ்வொரு திக்குக்களையும் பார்த்து வெற்றியின் பொருட்டு பிரயாணப்படுதலாம்.

———

முதல் விநியோகம்.

கிழக்கு

மந்திரம் :

समिधमातिष्ठगायत्रीत्वा छन्दसामवतु त्रिवृत्स्तोमो रथंतरꣳ सामाग्निर्देवता ब्रह्मद्रविणम् ।

என்பது.

நோக்குதல்)

உரை

அரசனே ! நீ, இரவி ஒளிரும் கிழ்த்திசையை வளைந்துக்கொண்டிருப்பாயாக. சந்தங்களுக்குட் சிறந்த காயத்திரியென்னுஞ் சந்தமானது உன்னைப் பாதுக்காப்பாற்றுக. ஸ்தோமங்களுக்குட் சிறந்த திரிவிருத் ஸ்தோமம் பாது காப்பாற்றுக. தேவதைகட்குட்சிறந்த அக்கினி தேவதை பாது காப்பாற்றுக. தனத்தை அந்தணர்கள் பாதுகாப்பார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அபிடேகம் பண்ணிக்கொண்ட அரசன் கிழக்குத் திக்கை நோக்கி நிற்றல் வேண்டு மென்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்.

தெற்கு

மந்திரம்:

उग्रामातिष्ठ त्रिष्टुप्त्वा छन्दसामवतु पञ्चदशःस्तोमो बृहत्सामेन्द्रो देवता क्षत्रं द्रविणम्।

என்பது

உரை.

அரச ! நீ, எமனால் அதிட்டித்துள்ள தென்திசையை நோக்கி நிற்பாயாக. சந்தங்களுக்குள் திருஷ்டுப் என்னும் ஒருவகைச் சந்தம் உன்னைக் காக்க. ஸ்தோமங்களுக்குள் பதினைந்து முறைபாடும் பிருகத்சாமம் என்னும் பாடல் பாதுகாக்க. இந்திர தேவதை பாதுகாக்க. அரசன் உனது தனத்தைப் பாதுகாப்பானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால் தெற்குத் திசையை நோக்கி நிற்றல் வேண்டும் என்பதாம்.

---

மூன்றாம் விநியோகம்

மேற்கு

மந்திரம்:

विराजमा तिष्ठ जगती त्वा छन्दसामवतु सप्तदशःस्तोमो वैरूपं साम मरुतो देवता विड्द्रविणम्।

என்பது.

உரை.

அரச! நீ, வருணனால் அதிட்டிக்கப்பெற்று பயிர் முதலியவைகளால் இனிது விளங்கும் மேற்குத் திக்கை நோக்கி நிற்பாயாக. சந்தங்களுக்குள் 'சகதி, என்னும் சந்தம் உன்னைப் பாதுகாக்க. பதினேழுமுறைபாடும் வை ரூபம் என்னும் சாமம் பாதுகாக்க. 'மருத்,' தேவதை பாதுகாக்க. வைசியன் உனது தனத்தைப் பாதுகாப்பாற்றுவானாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அரசன் மேற்குத் திக்கை நோக்கி நிற்றல்வேண்டு மென்பதாம்.

---

நான்காம் விநியோகம்.

வடக்கு

மந்திரம் :

**उदीचीमा तिष्ठानुष्टुप्त्वा छन्दसामवत्वेकविꣳशः स्तोमो वैराजꣳ साम मित्रा वरुणौ देवता बलं द्रविणम् ।**

என்பது.

உரை.

அரச! நீ, வடக்குத் திசையை நோக்கிக்கொண்டு நிற்பாயாக. அநுஷ்டுப் சந்தம் உன்னைப் பாதுகாக்க. சந்தங்களுக்குள் பத்தொன்பது முறை பாடும் வைராசம் என்னும் சாமப்பாட்டுப் பாதுகாக்க. மித்திர வருண தேவதைகள் பாது காப்பார்களாக. வன்மையானது உனது தனத்தைப் பாதுகாப்பாற்றுவதாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், அரசன், வடக்குத்திக்கை நோக்கி நிற்றல் வேண்டு மென்பதாம்.

---

ஐந்தாம் விநியோகம்

மேல்திக்கு

மந்திரம் :

**ऊर्ध्वामातिष्ठपङ्क्तिस्त्वा छन्दसामवतु त्रिणवत्रयस्त्रिꣳशौस्तोमौ शाक्वररैवते सामनी बृहस्पतिर्देवतावर्चो द्रविणम् ।**

என்பது.

நோக்குதல்)

உரை.

அரச! நீ, மேல் திசையை நோக்கிக் கொண்டு நிற்பாயாக. உன்னை, சந்தங்களுக்குள் 'பங்தி, என்னும் சந்தம் பாதுகாக்க. முப்பத்து மூன்று முறைபாடும் சாக்வர மென்னும் பாடல் பாதுகாக்க. பிருகஸ்பதி தேவதை பாதுகாக்க, கீர்த்தியென்பது உனது திரவியத்தைப் பாதுகாக்க என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், அரசன், மேல் திசையை நோக்கி நிற்றல் வேண்டு மென்பதாம்.

ஈண்டு, மேற்கூறின மந்திரங்களை மனதிற்குள்ளேயே ஓதல் வேண்டு மென்பதையுணர்க.

---

ஆறும் விநியோகம்

(இது பதினைந்து விநியோகங்களைக் கொண்டது.)]

மாருதிகளின் கபாலங்களை வைத்தல்

மந்திரம்:

ईदङ्चान्यादङ्चैतादङ्च प्रतिदङ्च मितश्च संमितश्च सभराः। शुक्रज्योतिश्च
चित्रज्योतिश्च सत्यज्योतिश्च ज्योतिष्मांश्च सत्यश्चर्तपाश्चात्यंहाः।

என்பது.

உரை.

முதற்கபாலமே! நீ, (1) ஈதிருக், என்னும் மருத் விசேட வடிவாயிருக் கின்றாய். இவ்வாறே (2) அன்யாதிருக் (3) ஏதாதிருக், (4) பிரதிதிருக், (5) மித், (6) ஸம்மித், (7) சபரா, (8) சுச்ரஜ்யோதி, (9) சித்திரஜ்யோதி, (10) சத்தியஜ்யோதி, (11) சோதிமான், (12) சத்திய, (13) ருதபா, (14) அத்யம்ஹா என்னும் பெயர்களையுடைய மருத்துக்களின் வடிவுகளா யிருக்கின்றீர்கள் என்று ஏனைய கபாலங்களையும் வைத்துப் புரோடாசஞ் செய்தல் வேண்டும்.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், மாருதிகளுக்குப் புரோடாசஞ் செய்து வைத்தற் பொருட்டு 14 கபாலங்களை வைத்தல் வேண்டும்.

ஈண்டு, ஆரண்ய மந்திரக்களாலும், மற்றும், ஏழு கபாலங்களை வைத்தல் வேண்டுமென்பதையு முணர்க.

இவ்வாறு வைத்துப் புரோடாசஞ்செய்து ஓமஞ்செய்து விட்டு, அதில் மீந்த புரோடாசங்களை, தருப்பையின்மீது வைத்து, 'एनान्याग्रंपरिषस्वजाना' என்பது முதலிய, க - 15, ல் கூறிய சூத்திர மந்திரத்தால், ஸ்ப்யம் என்னும் மரக்கத்தியால் அடித்து உடைத்து, உடைந்ததையும் அக்கத்தியில் ஒட்டிக் கொண்டிருப்பதையும் எடுத்து, சிபிவிஷ்டமென்னும் விஷ்ணுவிற்கு ஓமஞ் செய்தல் வேண்டும்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, மைத்திரா வருணனுடைய மேடைக்குக் கிழக்கில், கருங்காலி, அல்லது, அத்திமரத்தாற் செய்த நாற்காலி ஒன்றைப் போட்டு, அதன் மீது அங்கங்களோடு கூடிய புலித்தோலை, மேல்வரும் அநுவாகத்திள்ள, 'सोमस्यत्विषिरसि' என்பது முதலிய மந்திரத்தால், கிழக்கே தலையாக விரித்து வைத்தல் வேண்டும்.

அங்ஙனமே, மேல் அநுவாகத்திலுள்ள, 'अमृतमसि' என்பது முதலிய மந்திரத்தால் அதன்மீது நூறு பொன் வைத்தல் வேண்டும்.

மற்றும், மேல்வரும் 'दियोन्मापाहि' என்னும் அநுவாக மந்திரத்தால், நூறு பொன்னாற் செய்ததும், நூறு துவாரங்களை யுடையதுமாகிய ஒரு தங்கப் பாத்திரத்தை எஜமானனுடைய தலையின்மீது வைத்தல் வேண்டும்.

பிறகு, எசமானன் முன்னுள்ள ஆசனத்தின் மீது ஏறி நின்று கொண்டு 'अवेष्टादन्दशूकाः' என்னும் மந்திரத்தால் வலது காலால், ஈயத்தை, அந்தர் வேதியில் நிற்கின்ற ஒரு அலியி (நபும்சகனி) டத்தில் எற்றித் தள்ளிவிடல் வேண்டும். 'निरस्तंनमुचेःशिरः' என்னும் மந்திரத்தால், முன்போல், இடது காலால், அந்தர் வேதியில் நிற்கின்ற நாவிதனிடத்தில் தாமிரத்தை எற்றித் தள்ளிவிடல் வேண்டும். பிறகு, நபும்சகனையும், நாவிதனையும் வெளிவேதியிற் போம்படி செய்தல் வேண்டும்.

---

## இருபதாம் விநியோகம்

இது பன்னிரண்டு விநியோகங்களைக் கொண்டது

### பட்டாபிஷேகத்திற்கு முன் செய்யும் ஆகுதிகள்

மந்திரம் :

**अग्नयेस्वाहा, सोमाय स्वाहा, सवित्रेस्वाहा, सरस्वत्यै स्वाहा, पूष्णे स्वाहा, बृहस्प तये स्वाहा ।**

இவை முன் ஆறுகளெனப் படுகின்றன.

நோக்குதல்)

**पृथिव्यै स्वाहा, अन्तरिक्षाय स्वाहा, दिवे स्वाहा, सूर्याय स्वाहा, चन्द्रमसे स्वाहा, नक्षत्रेभ्यस्स्वाहा ।**

இவைகள் பின் ஆறுகள்.

உரை

அக்கினி, சோமன், சவிதா, சரசுவதி, பூஷா, பிருகஸ்பதி, நிலம், வான் சுவர்க்கம், இரவி, சந்திரன், உடுக்கள் என்னும் இத்தேவதைகட்கு இது அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

பட்டாபிஷேகஞ் செய்வதற்கு முன், இம்மந்திரத்தால் பன்னிரண்டு நெய் ஆகுதிகள் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

இருபத்தோராவது விநியோகம்

இது பன்னிரண்டு விநியோகங்களைங் கொண்டது.

அபிஷேகஞ்செய்த பிறகு செய்யவேண்டிய ஆகுதிகள்.

மந்திரம் :

**इन्द्राय स्वाहा, घोषाय स्वाहा, श्लोकायस्वाहा, अꣳशायस्वाहा, भगाय स्वाहा, क्षेत्रस्यपतये स्वाहा ।**

பின் கணத்தில் முன் ஆறு

**अद्भ्यः स्वाहा, ओषधीभ्यः स्वाहा, वनस्पतिभ्यस्वाहा, चराचरेभ्यस्वाहा, परिप्लवेभ्यः स्वाहा, सरीसृपेभ्यस्स्वाहा ।**

இவை பின்கணத்தில் பின் ஆறு

உரை

இந்திரன், கோஷன், சுலோகன், அம்சன், பகன், க்ஷேத்திரபதி, நீர், கொடிசெடி, வநஸ்பதி, சராசரம், வெள்ளம், பாம்பு என்பவைகட்கு இது அர்ப்பணமாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

அபிஷேகம் முடிந்தபிறகு இப்பன்னிரண்டு ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

இவ்வாறு நாற்பத்து மூன்று விநியோகங்கள் முடிந்தன.

பதின்மூன்றும் அநுவாகம்

முற்றிற்று.

---

பதிநான்காம் அநுவாகம்
விடயசுருக்கம்.

सोमाऽऽसन्द्यां व्याघ्रचर्माऽऽस्तीर्यात्स्वर्णकं क्षिपेत् ॥
दिद्योद्राजास्वर्णपात्रं दध्यान्मूर्ध्नि शतक्षरम् ॥
अवेरोहन्विहाऽऽसन्दीं क्लीबसीसेन विध्यति ॥
निरस्तं केशवापाय निरस्येल्लोहितायसम् ॥
सोमोध्वर्युमन्त्रयेत सोमस्येत्यभिषिञ्चति ॥
क्षत्राभिषिक्तं संमन्त्रयत्यजेद्वस्त्रमतीग्यतः ॥
समालेपान्मार्जनं स्याद्दुग्धशेषं जुहोतिहि ॥
प्रजापतेकाम्यहोमो मन्त्रा द्वादश वर्णिताः ॥ ४ ॥

நாற்கலியின் மீது புலித்தோலை விரித்தல், பொன்வைத்தல், நூறு துளைகள் உடைய பொற்பாத்திரத்தை எஜமானனுடைய தலையின் மீது வைத்தல், ஆதனத்தின் மீது நிற்றல், வெள்ளியை ஒரு அலியின்மீது காலால் எற்றிவிடுதல், செம்பை ஒரு நாவிதன்மீது எற்றிவிடுதல், மங்திரத்தைச் செபித்தல், அபிஷேகஞ் செய்தல், பட்டாபிஷேகஞ் செய்துகொண்டவனைப் போற்றுதல், வஸ்திரத்தைக்களைதல், மேலைத்துடைத்தல், ஹோமஞ்செய்தல், காமிய ஹோமம் என்பது.

---

முதற்காண்டம் எட்டாம் பிரபாடகம்
பதிநான்காமநுவாகம்
பட்டாபிஷேகத்தைக் கூறும் மந்திரங்கள்.

सोमस्य त्विषिरसि तवेव मे त्विषिर्भूयादमृतमसि मृत्योर्मा पाहि दिद्योन्मा पाह्यवेष्टादन्दशूका निरस्तं नमुचेः शिरः । सोमो राजा वरुणो देवा धर्मसुवश्च ये । ते ते वाचꣳ सुवन्तां ते ते प्राणꣳ सुवन्तां ते ते चक्षुः सुवन्तां ते ते श्रोत्रꣳ सुवन्ताꣳ सोमस्यत्वाद्युम्नेनाभि षिञ्चाम्यग्नेः ॥ १ ॥ तेजसा सूर्यस्य वर्चसेन्द्र-

स्येन्द्रियेणं मित्रावरुंणयोर्वीर्येण मरुतामोजंसा क्षत्राणां क्षत्रपंतिरस्य र्ति दिवस्पांहि समावंवृत्रन्नधरागुदींचीरिंह बुध्नियमनुं संचरंन्तीस्ताः पर्वंतस्य वृषभस्यं पृष्ठे नावंश्चरन्ति स्वसिचं इयानाः। रुद्र यत्ते क्रयी परं नाम तस्मैं हुतमंसि यमेष्टंमसि प्रजांपते न त्वदेतान्यन्यो विश्वां जातानि परि ता बंभूव। यत्कांमास्ते जुहुमस्तन्नों अस्तु वयꣳ स्यांम पतंयो रयीणाम् ॥ २ ॥

பதின்மூன்றும் அநுவாகத்தில் திக்கை நோக்கி நிற்றல் கூறப்பட்டது. பதி நான்காம் அநுவாகத்தில் பட்டாபிஷேகங்கூறப்படுகின்றது.

---

முதல் மந்திரம்

सोमस्य त्विषिरसि तवेव मे त्विषिर्भूयात्।

உரை.

புலித்தோலே! நீ, மதியின் ஒளிபோன்றிருக்கின்றாய். ஆதலின், உன்னைப்போல் எனக்கும் ஒளியுண்டாகுக என்பது.

---

இரண்டாமந்திரம்

अमृतमसि मृत्यो र्मा पाहि।

உரை

பொன்னே! நீ, அமுதமாக விருக்கின்றாய். மிருத்துவினின்றும் என்னைப் பாதுகாப்பாயாக என்பது.

---

மூன்றாமந்திரம்.

दियोन्मापाहि।

உரை.

நூறு துளைகளையுடையதும், எசமானனுடைய தலையின்மீது இருப்பதுமாகிய தங்கப்பாத்திரமே! நீ, என்னைப் பாதுகாப்பாயாக என்பது.

நான்காமந்திரம்

**अवेष्टा दन्दशूकाः ।**

உரை

பாம்புகள் ஒழிந்தன என்பது.

---

ஐந்தாமந்திரம்

**निरस्तन मुचेः शिरः ।**

உரை.

பாவியின் தலை ஒழிந்தது என்பது.

இந்த ஐந்து மந்திரங்களின் பிரயோகங்களும் முன் அநுவாகத்தில் விநியோகிக்கப்பட்டன. இனி,

---

ஆறும் விநியோகம்.

போற்றுதல்

மந்திரம்:

**सोमो राजावरुणो देवा धर्मसुवश्च ये । ते ते वाचꣳ सुवन्ताम् । ते ते प्राणꣳ सुवन्तां ते ते चक्षुः सुवन्तां ते ते श्रोत्रꣳ सुवन्ताम् ।**

என்பது.

உரை.

தருமத்தை யுணர்ந்தவர்களான, சோமராசன், வருணராசன் என்பவர்களும், ஏனைய தேவர்களும் உனது வாக்கையுணர்வார்களாக. பிராணன், கண், செவிகளும் உனது வாக்கை யுணர்வனவாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், அபிஷேகஞ் செய்துகொள்ளும் அரசனைப் போற்றல் வேண்டுமென்பதாம்.

---

ஏழாம் விநியோகம்

முதல் அபிஷேகம்

மந்திரம்:

**सोमस्य त्वाद्युम्नेनाभि षिञ्चाम्यग्नेस्तेजसा सूर्यस्यवर्चसेन्द्रस्येन्द्रियेण मित्रावरुणयोर्वीर्येण मरुतामोजसा ।**

என்பது.

உரை.

அரசனே ! உன்னை ! (உனக்கு) சோமனுடைய ஒளியால் அபிஷேகஞ் செய்கின்றேன். இவ்வாறே, அக்கினி, சூரியன், இந்திரியம், மித்திராவருணர்கள் மருத்துக்கள் என்னுமிவர்களின், வன்மை ஒளி வீரியங்களால் அபிஷேகஞ் செய்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், சாமமறை பாடுவோர்கள், மாகேந்திரத்தோத்திரத்தைப் பாடும்போது கிழக்கில் புரசமரப்பாத்திரத்திலிருக்கும் நீரை வேட்போன் எசமானனுக்கு அபிஷேகஞ் செய்தல் வேண்டும்.

தெற்குப்பக்கத்தில், அத்திமரப் பாத்திரத்திலிருக்கின்ற நீரை பிரமன் என்னும் வேள்விச் செயலாளன் அபிஷேகஞ் செய்தல் வேண்டும்.

மேற்கில், அரசமரத்தின் பாத்திரத்திலிருக்கின்ற நீரை மற்றொரு அரசன் அபிஷேகஞ் செய்தல் வேண்டும்.

வடக்கில், ஆலமரத்தினுற் செய்த பாத்திரத்திலிருக்கின்ற நீரை வணிகன் அபிஷேகஞ் செய்தல் வேண்டும்.

---

எட்டாம் விநியோகம்

போற்றுதல்

மந்திரம் :

**क्षत्राणां क्षत्रपतिरसि ।**

என்பது.

உரை.

எஜமானனே ! நீ, அரசர்கள் அனைவருக்கும் தலைவனாக இருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பட்டாபிஷேகஞ் செய்து கொண்ட அரசனைப் போற்றுதல் வேண்டு மென்பதாம்.

---

ஒன்பதாம் விநியோகம்

இது பாடமுறையில் பின்னுள்ளது

ஒழுகும் நீரைத்துடைத்தல்

மந்திரம் :

**समावव्रृत्रन्नधरागुदीचीरहिं बुध्नियमनु संचरन्तीस्ताः पर्वतस्य वृषभस्य पृष्ठे नावश्चरन्तिस्वसिच इयानाः ।**

என்பது.

உரை.

கீழும், மேலும், நடுவிலும் சமமாய் ஒழுகுகின்றதும், தலையிலிருந்து புறங்கால்வரை யொழுகுகின்றதும், மலையின் பின்புறத்தில் அருவியைப்போலும் ஓடம் ஓடுவதுபோலும் ஒழுகுகின்றதும், எசமானனுடைய வயல்களிற் பாய்வது போன்றிருப்பதுமாகிய அபிஷேகநீர் எஜமானனுடைய உடம்பிலிருந்து ஒழுகுகின்றது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், அபிஷேகம் பண்ணிய எசமானனுடைய உடம்பிலிருந்து ஒழுகும் நீரை பாத்திரஙகளால் துடைத்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு, சூத்திரத்தைத் தழுவி, 'இந்திரஸ்ய யோநிரஸி' என்னும் மந்திரத்தால், அபிஷேகம் பண்ணிக்கொண்ட எசமானன் உடுத்தியிருந்த வேஷ்டியை மான்கொம்பில் சுற்றிவைத்தல் வேண்டும்.

---

பத்தாம் விநியோகம்

அவ்வேஷ்டியை யெறிதல்

மந்திரம் :

अतिदिवस्पाहि ।

என்பது.

உரை

எசமான! நீ, விளங்காநின்ற அரசர்களுக்குமேலாக எல்லாப் பூமிகளையும் பாதுகாப்பாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால் அவ்வேஷ்டியை எறிந்துவிடல் வேண்டுமென்பதாம். இது பாடமுறையில் முன்னுள்ளது.

---

பதினோராம் விநியோகம்

மீந்த நீரை ஹோமஞ்செய்தல்

மந்திரம் :

रुद्र यत्ते क्रयी परं नामतस्मै हुतमसि यमेष्टमसि ।

என்பது.

உரை

உருத்திர! ஜெபஞ்செய்வோனை தம் வசப்படுத்துகின்றவைகளும், சுருதியில் ஓதப்பட்டிருக்கின்றவைகளும், சிறப்புடையவைகளுமான, சர்வாயநம:, சிவாயநம: என்பது முதலிய திருநாமங்களின் பொருட்டு, அபிஷேகம் பண்ணி மீந்த இந்த நீர் ஆகுதிசெய்யப்படுகின்றது. அதுவும் எமனுக்குப் பிரியமாகுக என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், பாத்திரங்களில் எஞ்சியிருந்த அபிஷேக நிரை ஆக்னீத்ரத்தியில் ஹோமஞ்செய்தல் வேண்டும் என்பதாம்.

---

பன்னிரண்டாம் விநியோகம்

காமிய ஹோமம்

மந்திரம் :

**प्रजापते न त्वदेतान्यन्यो विश्वाजातानि परि ता बभूव। यत्कामास्ते जुहुमस्तन्नो अस्तु वयꣳ स्याम पतयो रयीणाम्।**

என்பது.

உரை.

பிரசைகட்கிறைவ! உனைத்தவிர்த்து, படைப்பித்தவுலகங்களை அடக்குகின்றவர் ஒருவருமிலர். ஆதலின், உன்னைச் சேர்ந்த யாம் விரும்பிச் செய்யும் ஹோமத்தின் பயனையடைவோமாக என்பதாம்.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், எஞ்சிய நீர்களை ஒன்று சேர்த்து அதை மிகப்பிரியமுள்ள மனைவியின் கையிற் கொடுத்து பிரிய புத்திரன் தொட்டுக்கொண்டு நிற்க ஓமஞ் செய்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுப் பிரிய புத்திரன் தொடுதலின்றெனின், அவனுடைய பெயரைக் கூறிக்கொண்டு ஹோமஞ்செய்யலாம் என்பதையுமுணர்க.

பதிநான்காம் அநுவாகம்

முடிந்தது.

பதினைந்தாம் அநுவாகம்

விடயசுருக்கம்

इन्द्रेति रथमाहृत्य मित्रेस्येतंयुनक्तिहि ।
विष्णोस्त्रिभीरथंगत्वा मर्वारुह्यप्रयातिसः ॥ १ ॥
आसं क्षत्रइषुं मुक्त्वा प्रप्रदक्षिणमाव्रजेत् ॥
पश्चिस्युपानहौ धृत्वा नमो भूम्यभिमन्त्रणम् ॥ २ ॥
इयन्मणिं राजतं चोग्रंधनात्यौदुम्बरं मणिम् ।
युङ्सौवर्णं चाग्नहुत्वा चतस्रोरथमोचनीः ।
हंसोरथंस्थापयीत मन्त्रा अष्टादशेरिताः ॥ ३ ॥

இரதத்தைக் கொண்டுவருதல், குதிரைகளைப் பூட்டுதல், மூன்றடியெடுத்து வைத்து இரதத்திற் கருகிற் போதல், இரதத்திலேறுதல், பிரயாணஞ்செய்தல், அரசன் மீது அம்புவிடல், திரும்பிவரல், செருப்பணிதல், கீழேயிறங்கல், வெள்ளிமணி செம்புமணி பொன்மணிகளைக் களைதல, நான்கு ஹோமஞ்செய்தல், இரதத்தை நிறுத்துதல் என்பது.

---

முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம

பதினைந்தாம் அநுவாகம்

இரண்டு பஞ்சாதிக்குமேல் மூன்று பதங்களைக் கொண்டது.

வெற்றியைக் கூறுகின்ற மந்திரங்கள்

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्त्वयाऽयं वृत्रंवध्यान्मित्रावरुणयोस्त्वा प्रशास्त्रोः प्रशिषा युनज्मि यज्ञस्य योगेन विष्णोः क्रमोऽसि विष्णोः क्रान्तमसि विष्णोर्विक्रान्तमसि मरुतां प्रसवे जेषमाप्तं मनः समहमिन्द्रियेण वीर्येण पशूनां मन्युरसि तवेव मे मन्युर्भूयान्नमो मात्रे पृथिव्यै माऽहं मातरं पृथिवीं हिंसिषं मा ॥ १ ॥ मां माता पृथिवी हिंसिदियदस्यायुरस्यायुर्मेधेह्यूर्गस्यूर्जं मे धेहि युङ्ङसि वर्चोऽसि वर्चो मयि धेह्यग्नये गृहपतये स्वाहा सोमाय वनस्पतये

स्वाहेन्द्रस्य बलाय स्वाहा मरुतामोजसे स्वाहा हꣳसः शुचिषद्वसु
रन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत्। नृषद्वरसदृतसद्व्योमसदब्जा
गोजा ऋतजा अद्रिजा ऋतं बृहत् ॥ २ ॥

பதினன்காம் அநுவாகத்தில் பட்டாபிஷேகங் கூறப்பட்டது. பதினைந்தாமநுவாகத்தில் தேரிலேறி வெல்லுதல் கூறப்படுன்றது.

---

முதலாம் விநியோகம்

தேரைக் கொண்டுவருதல்

மந்திரம் :

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्त्वयाऽयं वृत्रं वध्यात्।

என்பது.

உரை

இதன் பொருள் வாசபேய யாகத்திற் கூறப்பட்டுள்ளது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இரதத்தைக் கொண்டுவரல் வேண்டுமென்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்

குதிரைகளைப் பூட்டுதல்

மந்திரம் :

मित्रावरुणयोस्त्वा प्रशास्त्रोः प्रशिषा युनज्मि यज्ञस्य योगेन।

என்பது.

உரை.

இதன் பொருளும் வாசபேய யாகத்திற் கூறப்பட்டுளது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், குதிரைகளைத் தேரிற் பூட்டல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்

இரதத்தையடைதல் இது மூன்று விநியோகங்களைக்கொண்டது

மந்திரம் :

**विष्णोः क्रमोऽसि विष्णोः क्रान्तमसि विष्णोर्विक्रान्तमसि ।**

என்பது.

உரை.

இதன் பொருள் வாசபேய யாகத்திற் கூறப்பட்டுளது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், எசமானன் தேரின்மீது ஏறுதல் வேண்டும் என்பதாம்.

ஈண்டும், பிரியமான புத்திரர்கள் தொட்டுக் கொண்டிருத்தல் வேண்டும்.

மற்றும், ' प्रससाहिषे ' என்னு மந்திரத்தால், பிரமன் என்னும் வேள்விச் செயலாளன் இரதத்திற்குத் தெற்கில் வரல் வேண்டும்.

———

ஆறும் விநியோகம்

புறப்படுதல்

மந்திரம் :

**मरुतां प्रसवेजेषम् ।**

என்பது.

உரை

மருத்துக்கள் என்னுந் தேவதைகளின் அநுக்ஞையிருக்கும்போது நான் வெற்றியடைவேன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இரதம் புறப்படல் வேண்டும் என்பதாம்.

ஈண்டுப், புறப்பட்ட அரசனுக்கு எதிரிலாவது, அல்லது, வடக்கிலாவது மற்றொரு அரசனை, நணேற்றிய தநுவுடன் நிறுத்தி வைத்தல் வேண்டும்.

———

ஏழாம் விநியோகம்

பாணம் விட்டு வெல்லுதல்

மந்திரம் :

**आप्तं मनः ।**

என்பது

உரை

மனதில் விரும்பியது கிடைத்தது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், தேரின்மீதிருக்கின்ற எசமானன், எதிரில் நிற்கும் அரசன் மீது இவன் பாணங்கள் படும்படி அம்புகளை, விடுதல் வேண்டுமென்பதாம்.

இதனால், பிற அரசனை, போரில் வென்றது போலாயிற்றென்பதை யுணர்க.

---

எட்டாம் விநியோகம்
திரும்பிவருதல்

மந்திரம் :

**समहमिन्द्रियेण वीर्येण ।**

என்பது.

உரை

நான் இந்திரியங்களுடைய வன்மையோடு கூடியவனுவேனுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், போனவழியாகவே வலமாய்த்திரும்பிவந்து முன் நின்ற விடத்தில் நின்றுவிடல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, 'इन्द्रस्य वज्रोऽसि' என்னும் மந்திரத்தால் பத்தினியையும், குதிரைகளையும் தநுவால் தொடுதல் வேண்டும்,

அங்ஙனமே, 'एषवज्रः' என்பது முதலிய மந்திரத்தால் பத்தினியிடத்தில், தநுவைக் கொடுத்து விடுதலும் வேண்டும்.

---

ஒன்பதாம் விநியோகம்
செருப்பை அணிந்து கொள்ளுதல்

மந்திரம் :

**पशूनः स्मन्युरसितवेव मे मन्युर्भूयात् ।**

என்பது.

உரை.

பன்றித் தோலாற் செய்த செருப்பே! நீ பசுக்கட்குப் பகைவடிவாயிருக்கின்றாய். ஆகலின், எனது பகைவரிடத்தும் முனிவுடையவனுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், பன்றியின் தோலாற் செய்த செருப்பைக் காலிற் போட்டுக்கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

பத்தாம் விநியோகம்

பூமியைத் தொட்டுப் போற்றுதல்

மந்திரம் :

**नमो मात्रेपृथिव्यै माऽहं मातरं पृथिवीꣳ हिꣳसिषं मा मां माता पृथिवी हिꣳसीत् ।**

என்பது.

உரை

பூமி மாதாவிற்கு வணக்கம். நான் பூமியைத் துன்புறுத்த மாட்டேன், பூமி என்னைத் துன்புறுத்தாதிருக்குக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், கீழே இறங்குவதன் பொருட்டு பூமியைத் தொட்டுப் போற்றுதல் வேண்டுமென்பதாம். இவ்வாறு போற்றியவுடன் இரதத்திலிருந்து கீழேயிறங்கிக் கொள்ளல் வேண்டும் என்பதாம்,

---

பதினோராம் விநியோகம்

வெள்ளிமணியை யணிதல்

மந்திரம் :

**इयदस्यायुरस्यायुर्मे धेहि ।**

என்பது.

உரை

வெள்ளிமணியே ! நீ, இந்த அளவுடையதா யிருக்கின்றாய். ஆதலின், ஆயுளாகின்றாய். ஆதலின், எனக்கு ஆயுளைத் தருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால் எசமானன் வெள்ளி மணிகளைக் கழுத்திற் போட்டுக் கொள்ளல் வேண்டு மென்பதாம்.

பனிரண்டாம் விநியோகம்

செம்புமணியை அணிந்துகொள்ளல்

மந்திரம் :

ऊर्गस्यूर्जम्मे धेहि ।

என்பது.

உரை.

செம்பு மணியே! நீ, வன்மை வடிவாயிருக்கின்றாய். ஆதலின், எனக்கு வன்மையைத் தருவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், முன்போல், செம்பு மணியைக் கழுத்திற் போட்டுக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

---

பதின்மூன்றாம் விநியோகம்

போன்மணியை அணிந்துகொள்ளுதல்

மந்திரம் :

युङ्ङसि वर्चोऽसि वर्चो मयि धेहि ।

என்பது.

உரை.

பொன்மணியே! நீ, அணிவதற்குரியதா யிருக்கின்றாய். கீர்த்தியாயிருக்கின்றாய். ஆதலின், எனக்கு அழகைக் கொடுப்பாயாக என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், முன்போல் பொன் மணியைக் கழுத்திற் போட்டுக் கொள்ளல் வேண்டுமென்பதாம்.

பதினான்காம் விநியோகம்.

(இது நான்கு விநியோகங்களைக் கொண்டது)

விமோசன ஹோமம்

மந்திரம்

अग्नये गृहपतये स्वाहा सोमाय वनस्पतये स्वाहेन्द्रस्य बलाय स्वाहा मरुतामोजसे स्वाहा ।

என்பது.

உரை

கிருகபதியாகிய அக்கினிக்கு அர்ப்பணஞ்செய்கின்றேன், வநஸ்பதியாகிய சோமனுக்கு அர்ப்பணஞ் செய்கின்றேன், வலியையுடைய இந்திரனுக்கு அர்ப்பணஞ்செய்கின்றேன், மருத்துக்களின் வன்மைக்கு அர்ப்பணஞ்செய்கின்றேன் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இரதத்தைவிட்டு விட்டதின் பொருட்டு நான்குகள் செய்தல் வேண்டுமென்பதாம்.

---

## பதினெட்டாம் விநியோகம்

### இரதத்தைக் கொண்டுபோய் நிறுத்தல்

மந்திரம் :

हꣳसश्शुचिषद्वसुरन्तरिक्षसद्धोता वेदिषदतिथिर्दुरोणसत्। नृषद्वरसदृतसद्व्योमसदब्जा गोजा ऋतजा अद्रिजा ऋतं बृहत्।

என்பது.

உரை.

விடுமிடத்தில் நிற்கின்றதும், எசமானனை தன்மேல் வசிக்கச் செய்வதும், வேதியிலிருப்பதும், அதிதி போன்று வீடுகளில் வசிப்பதும், மக்களுக்கு உதவிசெய்து கொண்டிருப்பதும், அரசன் முதலானோர் வீட்டிலிருப்பதும், வாசபேய முதலிய எக்ஞத்தில் இருப்பதும், வானில் நிமிர்ந்து நிற்பதும், நீரிற் றோன்றிய குதிரையுடன் கூடியதும், வச்சிரத்தால் உண்டானதும், வேள்வியின் பொருட்டு உண்டானதும், கல்லைப்போன்ற மரத்தாற் செய்யப்பட்டதுமாகிய இந்த இரதம் பெரிய இராசசூயத்தைத் தேடுவதாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், குதிரையைப் பிடித்துக் கொள்கின்றவனிடம் இரதத்தைக் கொடுத்து இரதம் நிற்குமிடத்தில உள்ள முட்டுக்கட்டைமீது வைத்துவிடல் வேண்டும் என்பதாம்.

பதினைந்தாம் அநுவாகம்

முற்றிற்று.

பதினாறுவது அநுவாகம்

விடயச்சுருக்கம்

बाहू अधो हरेद्वाभ्यां मित्रेति वरुणेतिच ।
स्वाम्युपाहृत्य बाहू संवैश्वदेव्यां प्रसादयेत् ॥ १ ॥
क्षत्राऽऽसन्द्यान्तु स्वादिर्यां कृत्यधीवास संस्तृतिः ।
स्योनास्वामी समागत्य मात्वातत्रोपसीदति ॥ २ ॥
निषोपविष्टं संमन्त्र्य ब्रह्मा ३नध्वर्युमीरयेत् ॥
प्रत्याह सोऽपित्वमिति ब्रह्मा होताच सामगः ॥ ३ ॥
राज्ञोक्ता उत्तरंप्राहुरिन्द्रस्फ्यं स्वामिनेऽर्पयेत् ।
दिशोऽक्षान्दापयेत्पञ्चसुश्लोकाँ इतिचक्रमात् ॥ ४ ॥
सग्रहीता भागदुघः क्षत्ताचाहूयतेत्रिभिः ।
अपां जुहोत्यप्सु दर्भे गार्हपत्ये त्रिभिःक्रमात् ॥
अनुवाकेषोडशेऽस्मिं स्त्रयोविंशतिरीरिताः ॥ ५ ॥

கைகளை யிறக்குதல், ஆமிட்சையின்மேல் கையைவைத்தல், நாற்காலியைப் போடுதல், யானைத்தோலை விரித்தல், எசமானன் வருதல், உட்காருதல், நான்கு பேர்களைக் கூப்பிடுதல், நான்கு பேரும் பதில் சொல்லுதல், மரக்கத்தியைக் கொடுத்தல், ஐந்து சொக்கட்டான் காய்களைக் கொடுத்தல், மூன்றுபேர்களை யழைத்தல், நீரில், புத்தில், காருகபத்தியத் தீயில் ஓமஞ் செய்தல் என்பது.

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

### பதினாறாம் அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் நாற்பது பதங்களைக் கொண்டது.

அரசனை அனைவரும் வழிபடல் வேண்டுமென்பதைக் கூறுமந்திரங்கள்.

मित्रोऽसि वरुणोऽसि समहं विश्वैर्देवैः क्षत्रस्य नाभिरसि क्षत्रस्य योनिरसि स्योनामासीद सुषदामासीद मात्वा हिंसीन्मा माहिंसीन्नि षसाद धृतव्रतो वरुणः पस्त्यास्वा साम्राज्याय सुक्रतुर्ब्रह्मा३न्त्वं राजन्ब्रह्माऽसि सविताऽसि सत्यसंवो ब्रह्मा३न्त्वं राजन्ब्रह्माऽसीन्द्रोऽसिसत्यौजाः ( १ ) ब्रह्मा३-

न्त्वꣳ राजन्ब्रह्माऽसि मित्रोऽसि सुशेवो ब्रह्मा३न्त्वꣳ राजन्ब्रह्माऽसि
वरुणोऽसि सत्यधर्मेन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्न स्तेन मे रध्य दिशो-
ऽभ्ययꣳ राजाऽभूत्सुश्लोकाँ३ सुमङ्गलाँ३ सत्यराजा३न्। अपां
नप्त्रे स्वाहोर्जोनप्त्रे स्वाहाऽग्नये गृहपतये स्वाहा ॥ २ ॥

*பதினைந்தாம் அநுவாகத்தில் திக்விசயங் கூறப்பட்டது. பதினாறும் அநுவாகத்தில், வெற்றியடைந்தபிறகு, சிம்மாசனத்தின் மீது அவ்வரசனை இருத்தி அனைவருஞ் சேவிக்கவேண்டுமென்பது கூறப்படுகின்றது.*

---

முதல் விநியோகம்

வலதுகையை இறக்கல்

மந்திரம் :

**मित्रोऽसि ।**

என்பது

உரை.

வலது கையே ! நீ, நண்பன் போன்று அருந்தல் முதலானவைகளில் விரும்பியதை யடைவிக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், இதுகாறும், எஜமானன் கைகளை உயர்த்திக் கொண்டிருந்தானன்றோ, அவற்றுள் வலதுகையைக் கீழே இறக்கிவிடல் வேண்டுமென்பதாம்.

---

இரண்டாம் விநியோகம்

இடதுகையை இறக்கல்

மந்திரம் :

**वरुणोऽसि ।**

என்பது.

உரை.

இடதுகையே ! நீ, கை கால்கள் முதலானவைகளை அலம்பும் விஷயத்தில் வேண்டாதவற்றை விலக்குவதால் வருணனாக விருக்கின்றாய் என்பது.

வழிபடுதல்)

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், இடதுகையையும் இறக்கிக்கொள்ளல் வேண்டு மென்பதாம்.

---

மூன்றும் விநியோகம்

ஆமிட்சையி (முறிந்தபாலில்)ல் கையைவைத்தல்

மந்திரம் :

**समहं विश्वैर्देवैः ।**

என்பது.

உரை

நான் எல்லாத் தேவர்களுடனுங் கூடுவேனாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், முறிந்த பாலில் உறைந்ததாகிய ஆமிட்சையின் மீது இரண்டு கைகளையும் வைத்தல் வேண்டு மென்பதாம்.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, ஆச்னீத்ரத்துக்குக் கிழக்காய் நாற் கோணமாக ஒரு மண்டபஞ் செய்து அதில் கருங்காலி மரத்தாற் செய்த ஒரு நாற்காலியை. स्योनाऽसिसुषदा என்னும் மந்திரத்தால் போட்டு வைத்தல் வேண்டும்.

---

நான்காம் விநியோகம்

யானைத்தோலை விரித்தல்

மந்திரம் :

**क्षत्रस्यनाभिरसि क्षत्रस्य योनिरसि ।**

என்பது.

உரை

யானைத்தோலே ! நீ, அரசன் உட்காருவதற்கு நாபி போன்று நடுவாயி ருக்கின்றாய். அன்னையைப் போன்று தாங்குவதால் அரசர்கட்குக் காரணமா யிருக்கின்றாய் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அந்த நாற்காலியின் மீது ஒரு யானைத் தோலை விரித்து வைத்தல் வேண்டும் என்பதாம்.

பிறகு, சூத்திரத்தைத் தழுவி,'अवनहनिविशिमादॄ़ह' என்னும் மந்திரத்தால் அந்த ஆசனத்திற் கருகில் வரல் வேண்டும்.

---

ஐந்தாம் விநியோகம்

ஆசனத்தின்மீது ஏறுதல்

மந்திரம் :

**स्योनामासीद सुषदामासीद ।**

என்பது.

உரை

எனது உடம்பே! நீ, நலந்தரும் இந்த நாற்காலியின் அருகையடைவாயாக. அதில் நன்கு அமருவதற்கு உரியதாகுவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம்மந்திரத்தால், அந்த ஆசனத்தின் மீது ஏறல் வேண்டும் என்பதாம்.

---

ஆறும் விநியோகம்

உட்காருதல்

மந்திரம் :

**मात्वाहिंसीन्मामाहिंसीत् ।**

என்பது.

உரை.

எனது உடம்பே! உன்னை, இந்த நாற்காலி துன்புறுத்தாது. உடம்பிற்குத் தலைவனாகிய என்னையும் துன்புறுத்த மாட்டாது என்பதாம்.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், அந்த நாற்காலியின்மீது உட்காருதல் வேண்டுமென்பதாம்.

---

ஏழாம் விநியோகம்

போற்றுதல்

மந்திரம் :

**निषसाद धृतव्रतो वरुणः पस्त्यास्वा साम्राज्याय सुक्रतुः ।**

என்பது.

உரை

இவ் வேள்வித் தலைவன், வேள்வியை ஏற்றுக் கொண்டவனுயும், வெறுப்பானதை விலக்கு வோனுமாகி இந் நாற்காலியின் மீது உட்கார்ந்துள்ளான். இவன், பல்வகையான பகைவர் வீடுகளில் சுயராச்சியஞ் செய்வதற் கெண்ணுவானுக என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், நாற்காலியின்மீது உட்கார்ந்த எசமானனைப் போற்றல் வேண்டு மென்பதாம்.

---

எட்டாம் விநியோகம்

(இது எட்டு விநியோகங்களைக் கொண்டது)

கூடியழைத்தல்

மந்திரம் :

ब्रह्मा३न्त्वꣳ राजन्ब्रह्माऽसि सविताऽसि सत्यसवो ब्रह्मा३न्त्वꣳ राजन्त्ब्रह्मासीन्द्रोऽसि सत्यौजा ब्रह्मा३न्त्वꣳ राजन्ब्रह्मासि मित्रोऽसि सुशेवो ब्रह्मा३न्त्वꣳ राजन्ब्रह्माऽसि वरुणोऽसि सत्यधर्मा ।

என்பது.

உரை

அரச ! நீயே பிரமனுயிருக்கின்றுய், மற்றும் சவிதாவாகவும், பயன்றரும் அநுக்ஞை செய்வோனுகவும், இந்திரனுகவும், போராற்றலுடையவனுகவும், மித்திரனுகவும், சேவிக்கத் தக்கோனுகவும், வேண்டாததை விலக்கும் வருணனுகவும், நால்வழியாகிய தருமத்தையுடையவனுகவும் இருக்கின்றுய் என்னல் வேண்டும் என்பது.

சாயணபாடியக் கருத்து.

இம் மந்திரத்தால், வேள்விச் செயலாளர்களும், அரசனுடைய மனைவி முதலானோர்களும் எசமானனைச் சூழ்ந்து, கிழக்கில் வேட்போனும், தெற்கில் பிரமனும், மேற்கில் இருக்கோதுவோனும், வடக்கில் உத்காதாவுமாக உட்கார்ந்து கொள்ளல் வேண்டும். அப்போது, வேட்போன் முதலானோர்களை எசமானன் அழைத்தல் வேண்டும். அதற்கு அவர்கள், நீயே வேட்போன் முதலானோர்களாயிருக்கின்றுய் என்று பதிற் கூறல் வேண்டும் என்பதாம்.

---

பதினாறும் விநியோகம்

மரக்கத்தியைக் கொடுத்தல்

மந்திரம் :

इन्द्रस्य वज्रोऽसि वार्त्रघ्नस्तेन मे रध्य ।

என்பது.

உரை.

மரக்கத்தியே! நீ, வச்சிரமாக இருக்கின்றாய். வச்சிராயுதத்தின் மூன்றாவது கூறாயிருத்தலின் மரக்கத்தியும் வச்சிரமெனம்பட்டது. இவ்வாறு, நீ, பகைவரைக் கொல்வோனாயிருத்தலின் சொக்கட்டான் ஆடுமிடத்தைக் கிளறி விடுதலாகிய காரியத்தைச் செய்வாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், ஸ்ப்யம் என்னும் ஒரு மரக்கத்தியை பிரமன், அரசனுக்குக் கொடுத்தல் வேண்டுமென்பதாம்.

ஈண்டு, சூத்திரத்தைத் தழுவி, அந்த மரக்கத்தியை, தனக்குப் பிரியமாகிய புத்திரனிடத்திலும், புத்திரன் புரோகிதனிடத்திலும், புரோகிதன் இரத்தினிகள் என்னும் இராணி முதலானோர்களிடத்துங் கொடுத்தல்வேண்டும், முடிவில் அக்ஷாவாபன் என்னும் சொக்கட்டான் ஆடுவோனிடத்திற் கொடுத்துவிடல் வேண்டும். அவன் அந்த மரக்கத்தியால், சொக்கட்டான் ஆடுமிடத்தைக் கொத்திக்கிளறுதல் வேண்டும்; கிளறி நீர் தெளித்து பொன்னாற் செய்த சொக்கட்டான் காய்களை ஆயிரக்கணக்காக அவ்விடத்தில் இறைத்து வைத்தல் வேண்டும். இளஞ்சினைப் பசுவை, இவ்வாறு செய்த அவனுக்குத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

---

பதினேழாம் விநியோகம்

சொக்கட்டான் காயைக் கொடுத்தல்

மந்திரம் :

दिशोऽभ्ययꣳ राजाऽभूत् ।

என்பது.

உரை.

இவ் வெசமானன், திசைகளுக்கு அரசனாயினன் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், ஐந்து சொக்கட்டான் காய்களை எடுத்து அரசனிடத்திற் கொடுத்தல் வேண்டும் என்பதாம்.

———

பதினெட்டாம் விநியோகம்

இது மூன்று விநியோகங்களைக் கொண்டது

மூன்று பேர்களை யழைத்தல்

மந்திரம் :

सुश्लोकाँ३ सुमङ्गलाँ३ सत्यराजा३न् ।

என்பது

உரை

நிதிக்குவியலைக் காப்போன், அல்லது, நிதியைத் தேடுகின்றவன், வரி வாங்குகின்றவன். அந்தப் புரத்தைப் பாதுகாக்கின்றவன் என்னுமிவர்கள், போற்றுவதற்கும், நலஞ் செய்வதற்கும், சத்தித்தன்மைக்கும் உரியராகின்றார்கள் என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், சுஃலோகா, சுமங்கலா! சத்திய ராசாவே! என மூவரையும் முறையாய்க் கூப்பிடுதல் வேண்டும் என்பதாம்.

பிறகு, நான்கு அடிப் பூமியைப் பிரமனுக்குத் தானமாய்க் கொடுத்தல் வேண்டும்.

ஹோதா, ஆயிரம் பொன்கள் மீது உட்கார்ந்துகொண்டு ! சுனச்சேப: என்னுஞ் சஸ்திரத்தை (சங்கீதமில்லாத துதியை) ச் சொல்லல் வேண்டும். பொன் கூர்ச்சங்களிரண்டின் மீதும் நின்றுகொண்டு, அத்வரியு, பிரதிகாத்தையுஞ் சொல்லல் வேண்டும். சொல்லி முடிந்தவுடன், முன்னர், ஆசனமாக வைத்த பொன்னை ஹோதாவிற்கும், கூர்ச்சததை அத்துவரியுவிற்குங் கொடுத்து விடல் வேண்டும்.

மற்றும், முன் அரசனுக்கு அபிஷேகத்தின் பொருட்டு வைத்த இரண்டு பொன் தகடுகளையும் அத்துவரியுக்குக் கொடுத்தல் வேண்டும்.

அவ்வாறே, முன், அரசன் போட்டுக்கொண்டிருந்த மணிகளைக் கயட்டிப் பிரமனுக்குக் கொடுத்தல் வேண்டும்.

இனி, மகேந்திர சஸ்திரம் (தோத்திரம்) முதல் அவபிருதம் (முடிவில் நீராடல்) வரை சமமாகச் செய்து கொள்ளல் வேண்டும்.

இருபத்தோன்றும் விநியோகம்

இது மூன்று விநியோகங்களைக் கொண்டது

தண்ணீரில் ஓமஞ் செய்தல்

மந்திரம் :

अपांनप्त्रे स्वाहोर्जोनप्त्रे स्वाहाऽग्नये गृहपतये स्वाहा ।

என்பது.

உரை

நீரிற் றோன்றியதற்கு இது அர்ப்பணமாகுக. வன்மையாற் றோன்றிய தற்கு இது அர்ப்பணமாகுக. கிருகபதியாகிய அக்கினிக்கு இது அர்ப்பண மாகுக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், நீராடிய தண்ணீரிலும், தருப்பைக் கொம்பிலும், அல்லது புத்திலும், காருகாத்தியத்தீயிலும் முறையாய் மூன்று ஆகுதிகள் செய்தல் வேண்டும் என்பதாம்.

ஈண்டு, அநுபந்தியா என்னுங் கடாவிற்குப் பதிலாக இந்திர தேவதை யின் பொருட்டு சினையாகாத ஆட்டைக் கொன்று ஆகுதிசெய்தல வேண்டும்.

புரோடாசஞ் செய்யும்போது அதைச் செந்நெல்லாற் செய்தல் வேண்டு மென்பதை யுணர்க.

பதினாறும் அநுவாகம்.

முடிந்தது.

---

முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

பதினேழாம் அநுவாகம்

இது நாற்பத்திரண்டு பதங்களைக் கொண்டது.

சம்சிருப அவிகளைக் கூறுமந்திரங்கள்.

आग्नेयमष्टाकपालं निर्वपति हिरण्यं दक्षिणा सारस्वतं चरुं वत्स

तरी दक्षिणा सावित्रं द्वादशकपालमुपध्वस्तो दक्षिणा पौष्णं चरुꣳ

श्यामो दक्षिणा बार्हस्पत्यं चरुꣳ शितिपृष्ठो दक्षिणैन्द्रमेकादशकपा-

அவிகள்)

लमृषभो दक्षिणा वारुणं दशकपालं महानिरष्टो दक्षिणा सौम्यं चरुं बभ्रुर्दक्षिणा त्वाष्ट्रमष्टाकपालꣳ शुण्ठो दक्षिणा वैष्णवं त्रिकपालं वामनो दक्षिणा ॥ १ ॥

பதினாறும் அநுவாகத்தில் வெற்றிபெற்ற அரசனுக்கு பிறர்களாற் செய்யப்படும் சேவையென்னும் உபசாரஞ் சொல்லப்பட்டது. பதினேழாம் அநுவாகத்தில் 'சம்சிருப' அவிகள் கூறப்படுகின்றன.

சம்சிருபம் என்பது இந்திரியங்கட்கு வன்மையைக் கொடுக்குந் தேவதைகள்; அத்தேவதைகளைக் குறித்துச் செய்யப்படும் அவிகள் சம்சிருப அவிகள் எனப்படுகின்றன.

சோமரசம் பிழிந்த வருணனுடைய இந்திரிய வன்மையானது பத்து வகையாய்க் கெட்டுப்போயிற்று. அவன், இந்த அவிகளைச் செய்து யாகம் பண்ணியதால் மீண்டும் அந்த வன்மையைப் பெற்றுக்கொண்டனன். ஆதலின், இது இந்திரியவன்மையை அடைதற் பொருட்டுச் செய்யப்படுகின்றது.

ஈண்டு, அரசன் பட்டாபிஷேகஞ் செய்து கொண்டதால் அவனுடைய இந்திரியங்கள் வலிகுறைந்தவைகளாயின; ஆதலின், அவ்விந்திரிய வன்மைகள் உண்டாதற்பொருட்டு இந்த யாகஞ் செய்யப்படுகின்றது.

---

முதல் அவி

மந்திரம்:

आग्नेयमष्टाकपालं निर्वपति हिरण्यं दक्षिणा ।

என்பது.

உரை

அக்கினி தேவதைக்கு எட்டு மண் அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து ஹோமஞ்செய்தல் வேண்டும்.

இதற்கு பொன் தட்சிணை கொடுத்தல் வேண்டும்.

இங்கு, யாகஞ் செய்யுமுறை வருமாறு:—இச் சோமயாகஞ் செய்யுமிடத்திற்கு மேற்கில், முறையாய் ஏழு நாட்களில் காருகபத்திய முதலான மூன்று அக்கினிக் குண்டங்கள் அமைத்து ஹோமஞ் செய்தல் வேண்டும். அதில், முதல் நாள் செய்த ஆகவனீயாக்கினிக் குண்டத்தை இரண்டாம் நாள் செய்யும் யாகத்துக்கு காருகபத்திய அக்கினிக்குண்டமாகச் செய்து கொள்ளல் வேண்டும். இவ்வாறே ஏனைய நாட்களிலுஞ் செய்து கொண்டுவந்து

ஏழாவது நாளிற செய்யும் யாகத்தில், பிராக்வம்சமென்னும் மூங்கிற் கொட்டகைக்குள் ஆகவனீயாக்கினி வருதல் வேண்டும். இவ்வாறு வந்து சேரும்படி மேற்கில் இடங்தேடி முன்னரே செய்தல் வேண்டும். பிறகு இந்த பிராக்வம்சத்தைத்தழுவி வேள்விச்சாலையைச் செய்துகொண்டு முதல் நாள் யாகத்தைச் செய்தல் வேண்டு மென்பதை யுணர்க.

---

இரண்டாம் அவி

மந்திரம் :

**सारस्वतं चरुं वत्सतरी दक्षिणा ।**

என்பது.

உரை.

இரண்டாம் நாள், முதல் நாளில் ஆகவனீயமாயிருந்ததைக் காருகபத்தியமாகச் செய்துகொண்டு அதைத் தழுவி காரணமாகிய ஆகவனீயத்தில் சரசுவதிதேவதைக்குப் பொங்கல் செய்து ஹோமஞ் செய்தல் வேண்டும்.

பால்ஊட்டுதலை மறந்த பசுக்கடாரி தக்ஷிணை.

---

மூன்றும் அவி

மந்திரம் :

**सावित्रं द्वादशकपालमुपध्वस्तो दक्षिणा ।**

என்பது.

உரை.

இரண்டாநாள் ஆகவனீயமாயிருந்ததைக் காருகபத்தியமாக்கிக் கொண்டு, அதைத்தழுவி காரணமாகிய ஆகவனீயத்தைச் செய்துகொண்டு, அதில், பன்னிரண்டு மண் அகல்கள் வைத்துப்புரோடாசஞ் செய்து மூன்றும் நாள் சவிதாதேவதைக்கு ஓமஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு, கொம்பு ஒடிந்த பசு தட்சிணை.

---

நான்காம் நாள் அவி

மந்திரம் :

**पौष्णं चरु श्यामो दक्षिणा ।**

என்பது.

உரை

மூன்றுநாள் ஆகவனீயத்தைக் காருகபத்தியமாக்கிக் கொண்டு அதைத் தழுவி ஆகவனீயத்தைச் செய்துகொண்டு நான்காம் நாள் அதில் பூஷா தேவதையின் பொருட்டு பொங்கல் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு, கருமை நிறமுடைய பசு தட்சிணை.

---

ஐந்தாம் அவி

மந்திரம் :

बार्हस्पत्यं चरुᳶ शितिपृष्ठो दक्षिणा ।

என்பது.

உரை

நான்காம் நாள் ஆகவனீயமாயிருந்ததைக் காருகபத்தியமாகச் செய்து கொண்டு, அதைத்தழுவி ஆகவனீயத்தைச் செய்து கொண்டு, ஐந்தாம்நாள் பிருகற்பதி தேவதைக்குப் பொங்கல் செய்து ஓமஞ்செய்தல் வேண்டும்.

இதற்கு, பின்புறம் வெண்மை நிறமுடைய பசு தட்சிணை.

---

ஆறும் அவி

மந்திரம் :

ऐन्द्रमेकादशकपालमृषभो दक्षिणा ।

என்பது.

உரை

ஐந்தாநாள் ஆகவனீயமாயிருந்ததைக் காருகபத்தியமாகச் செய்து கொண்டு, அதைத் தழுவி ஆகவனீயத்தைச் செய்து கொண்டு, ஆறுநாள் இந்திர தேவதைக்கு பதினொரு மண்அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு, காளை தட்சிணை.

---

ஏழாம் அவி

மந்திரம் :

वारुणं दशकपालं महानिरष्टो दक्षिणा ।

என்பது.

உரை

ஆறுநாள் ஆகவனீயமாயிருந்ததைக் காருகபத்தியமாக்கிக் கொண்டு, அதைத்கழுவி ஆகவனீயாக்கினியைச் செய்து கொண்டு, எழாம்நாள் வருண தேவதையின் பொருட்டு பத்து மண்அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்து ஓமஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு, விதையொடித்த காளைமாடு தட்சிணை.

---

எட்டாம் அவி

மந்திரம் :

सौम्यं चरुं बभ्रुर्दक्षिणा ।

என்பது

உரை

எழாம் நாள் காலையில் வருணதேவதையின் ஹோமம் முடிந்தவுடன், பிற்பகலில் தசபேயமென்னும் மேல்வரும் சோமயாகத்தைச் செய்யத் தொடங்கல் வேண்டும். அதில், உபசத்யாகஞ் செய்வதற்கு முன்னர் சோம தேவதையின் பொருட்டு எட்டாம்நாள் பொங்கல் செய்து ஓமஞ்செய்தல் வேண்டும் என்பதாம்.

இதற்கு, மங்கல் நிறமுடைய பசு தட்சிணை.

---

ஒன்பதாம் அவி

மந்திரம் :

त्वाष्ट्र मष्टाकपालꣳ शुण्ठो दक्षिणा ।

என்பது

உரை

ஒன்பதாம் நாள் இரண்டாமுறை செய்யும் உபசத்யாகங்களில் முதலாவது செய்யவேண்டிய உபசத்யாகம் செய்து முடிந்தவுடன் துவஷ்டா என்னுந் தேவதைக்கு எட்டு மண்அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செயது ஹோமஞ் செய்தல் வேண்டும்.

இதற்கு வெண்மையாகிய பசுவைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

---

அவிகள்)

பத்தாம் அவி

மந்திரம் :

**वैष्णवं त्रिकपालं वामनो दक्षिणा ।**

என்பது

உரை

பத்தாம் நாள், மூன்றாவது உபசத்யாகங்களுள் இரண்டாவது உபசத் யாகம் முடிந்தவுடன் விஷ்ணுதேவதையின் பொருட்டு மூன்று அகல்கள் வைத்துப்புரோடாசஞ் செய்து ஓமஞ்செய்தல் வேண்டும்.

இதற்குக் குட்டையாகிய பசுவைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

பதினேழாம் அநுவாகம்

முடிந்தது

---

## முதற்காண்டம் எட்டாம் பிரபாடகம்

## பதினெட்டாம் அநுவாகம்

தசபேயத்தைக் கூறும் மந்திரங்கள்

ஒரு பஞ்சாதிக்குமேல் நான்கு பதங்களைக் கொண்டது.

**सद्यो दीक्षयन्ति सद्यस्सोमं क्रीणन्ति पुण्डरिस्रजां प्र यच्छति दशभिर्वत्सतरैस्सोमं क्रीणाति दशपेयो भवति शतं ब्राह्मणाः पिबन्ति सप्तदशꣳ स्तोत्रं भवति प्राकाशावध्वर्यवे ददाति स्रजमुद्गात्रे रुक्मꣳ होत्रेऽश्वं प्रस्तोतृप्रतिहर्तृभ्यां द्वादश पष्ठौहीर्ब्रह्मणे वशां मैत्रावरुणायर्षभं ब्राह्मणाच्छꣳसिने वाससी नेष्टापोतृभ्याꣳ स्थूरि यवाचितमच्छावाकायानड्वाहमग्नीधे भार्गवो होता भवति श्रायन्तीयं ब्रह्मसामं भवति वारवन्तीयमग्निष्टोमसामꣳ सारस्वतीरपो गृह्णाति ॥ १ ॥**

பதினேழாம் அநுவாகத்தில் சம்சிருப அவிகள் கூறப்பட்டன. பதினெட்டாம் அநுவாகத்தில் தசபேயம் அதாவது ஒருவகைச் சோமயாகங் கூறப்படுகின்றது. தசபேயம்=பத்துப்பேர்கள் அருந்தலாம் ஆகவே, பத்துப் பாத்திரங்களில் ஒவ்வொரு பாத்திரத்தின் சோமரசத்தைப் பத்துப் பேர்கள் அருந்தில் பத்துப் பாத்திரத்திலுள்ள சோமரசத்தை நூறுபேர்கள் அருந்தும் யாகம் என்பதாம்.

---

### தீட்சையும் சோமம் வாங்குதலும்

மந்திரம்:

**सद्यो दीक्षयन्ति सद्यस्सोमंक्रीणन्ति ।**

என்பது

உரை

ஒரே தினத்தில், தீட்சை செய்து கொள்ளலும் சோமத்தை விலைக்கு வாங்குதலுமாம் என்பதாம்.

---

### தீட்சை இன்னதெனல்

மந்திரம்:

**पुण्डरिस्रजां प्र यच्छति ।**

என்பது

உரை.

பன்னிரண்டு தாமரைப் பூக்களை மாலையாகத் தொடுத்து எஜமானனுடைய கழுத்தில் அணிதலே இதில் தீட்சையாம் என்பது.

ஈண்டு, ஆங்கிரசர், சுவர்க்கத்திற்குச் செல்லும்போது அவருடைய தீட்சையும் தவமும் நீரிற்புகுந்தன. அவை தாமரைப் பூக்களாயின; ஆதலின், தாமரைப் பூவையணிதல் நேரே தீட்சையாம் என்பதை யுணர்க.

---

### சோமத்தை விலைக்கு வாங்குதல் இவ்வாறெனல்

மந்திரம்:

**दशभिर्वत्सतरैस्सोमंक्रीणाति ।**

என்பது.

உரை.

பாலூட்டுதல் மறந்த பத்துப் பசுங்கன்றுகளைக் கொடுத்துவிட்டு, முன்னர் இராசப் புரோகிதன் வீட்டில் வாங்கி வைத்திருந்த சோமத்தைப் பெற்றுக்கொள்ளுதல் வேண்டுமென்பது.

இங்குச் சோமக்கிரயத்திற்கு பத்துப் பசுங்கன்று என்றதால், சோமத்தை விலைக்கு வாங்குதலும், பத்துவகைப் பொருள்களைக் கொடுத்தலுக்கு ஒப்பாயிற்றென்பதை யுணர்க.

---

தசபேயம் என்பதன் பொருள்

மந்திரம் :

दशपेयो भवति ।

என்பது.

உரை

இனி, அத்தகைய பத்து மரப்பாத்திரங்களில் அருந்துதற்குரிய சோம ரசமிருக்கின்ற யாகம் தசபேய மெனப்படும் என்பது.

---

சோமம் அருந்தும் பிராமணர்களைக் கணக்கிடல்

மந்திரம் :

शतं ब्राह्मणाः पिबन्ति ।

என்பது.

உரை.

நூறு பிராமணர்கள் ஆகின்றார்கள் என்றது, அவர்கள், முன் சோம ரசம் அருந்தினவர்களாயிருத்தல் வேண்டுமென்பதாம். மற்றும், சபையிலும் இருத்தலும் வேண்டும். அவர்களுவடைய ஆயுளும், இந்திரியங்களும் நூறாத லின் இவ்வாறாயிற்றென்பதாம்.

---

தோத்திரத்தின் வகையைக் கூறுதல்

மந்திரம் :

सप्तदशꣳस्तोत्रं भवति ।

என்பது.

உரை

இந்த யாகத்திற் செய்யப்படும் தோத்திரங்கள் அனைத்தும் பதினேழு முறை ஆவிர்த்தி பண்ணுவதாக இருத்தல் வேண்டும் என்பது.

---

தட்சிணை

**மந்திரம் :**

**प्राकाशावध्वर्यवे ददाति ।**

என்பது.

உரை

வேட்போனுக்கு இரண்டு பொன்களையும் கண்ணாடிகளையும் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டுமென்பது. பிரசாகங்கள் என்பது விளக்குத் தண்டுகளென்பர் சிலர்.

---

இதுவுமது

**மந்திரம் :**

**स्रजमुद्गात्रे ।**

என்பது.

உரை.

சாமமறை பாடுவோனுக்கு பொன்மாலையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும் என்பது.

---

இதுவுமது

**மந்திரம் :**

**रुक्मँ होत्रे ।**

என்பது.

உரை

இருக்கோது வோனுக்கு பொன்னாற் செய்த தட்டு தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டுமென்பது.

---

தசபேயம்)

இதுவுமது

மந்திரம் :

अश्वं प्रस्तोतृ प्रति हर्तृभ्याम्।

என்பது.

உரை

பிரஸ்தோதா, பிரதிஹர்த்தா என்பவர்களுக்கு ஒவ்வொரு குதிரையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும் என்பது.

---

இதுவுமது

மந்திரம் :

द्वादशपष्ठौहीर्ब्रह्मणे।

என்பது.

உரை

இளஞ்சினைகளாயுள்ள பன்னிரண்டு பசுக்களை, பிரமனுக்குத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும் என்பது.

---

இதுவுமது

மந்திரம் :

वशां मैत्रा वरुणाय।

என்பது.

உரை

மலட்டுப்பசு, மைத்திராவருணனுக்குத் தட்சிணையாம் என்பது.

---

இதுவுமது

மந்திரம் :

ऋषभं ब्राह्मणाच्छंसिने।

என்பது.

உரை

கொழுப்புடைய காளை பிராமணச்சம்சி என்பவனுக்குத் தட்சிணையாம் என்பது.

---

இதுவுமது

மந்திரம் :

वाससी नेष्टापोतृभ्याम् ।

என்பது.

உரை

நேஷ்டாவுக்கும், போத்தாவிற்கும் ஒவ்வொரு வெண்மை வஸ்திரத்தைத் தட்சிணை கொடுத்தல் வேண்டு மென்பது.

---

இதுவுமது

மந்திரம் :

स्थूरि यवाचित मच्छावाकाय ।

என்பது.

உரை

அச்சாவாகனுக்கு வாற்கோதுமையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும் என்பது.

---

இதுவுமது

மந்திரம் :

अनड्वाहमग्नीधे ।

என்பது.

உரை

வண்டி எருது ஆக்னீத்ரனுக்குத் தட்சிணையாம் என்பது.

ஈண்டுச் சூத்திரத்தைத் தழுவி, உன்னேதாவுக்குப் பீதாம்பரமும், கிராவஸ்த் தோத்திரகாரனுக்குக் காளையும், சுப்ரமணியனுக்குச் செம்மறியாடும் தட்சிணைகளாகக் கொடுத்தல் வேண்டும்.

---

விசேட விதிகள்

மந்திரம்.

भार्गवोहोता भवति आयन्तीयं ब्रह्मसामं भवति वारवन्तीयमग्निष्टोमसामꣳ सारस्वतीरपो गृह्णाति ॥

என்பது.

உரை

இந்த யாகத்திற்கு பார்க்கவரிஷியின் வம்சமுடையவன் ஹோதாவாக (இருக்கோதுவானுக) இருத்தல் வேண்டும். மத்யான நோத்தில் சோமரசம் பிழியுங்கால், 'श्रायन्तइवसु' என்றற்றொடக்கத்து இருக்கிலெழுந்த ஶ்ராயந்தீயமும், 'யக்ஞாயக்ஞீயம்' என்பது முதலிய விடத்தில், 'अश्वनत्वा' என்றற்றொடக்கத்து இருக்கின்மீதெழுந்த, 'வாரவந்தீயம்' என்னும் சாமவேதப் பாடல்களையும் பாடல் வேண்டும்.

மூன்றாவது உபசத்யாகஞ் செய்யும் நாளாகிய அக்கினி ஷோமீய தினத்தில், 'வசதீவரி, என்னும் நீரை சரசுவதி நதியிலேயே எடுத்தல் வேண்டும் என்பது.

பதினேட்டாம் அநுவாகம்

முடிந்தது.

---

## முதற்காண்டம் எட்டாம் பிரபாடகம்

## பத்தொன்பதாம் அநுவாகம்

நாற்பத்தேழு பதங்களைக் கொண்டது

आग्नेयमष्टाकपालं निर्वपति हिरण्यं दक्षिणैन्द्रमेकादशकपालमृषभो दक्षिणा वैश्वदेवं चरुं पिशङ्गी पष्ठौही दक्षिणा मैत्रावरुणीमामिक्षां वशा दक्षिणा बार्हस्पत्यं चरुꣳ शितिपृष्ठो दक्षिणाऽऽदित्यां मल्हां गर्भिणीमा लभते मारुतीं पृश्निं पष्ठौहीमश्विभ्यां पूष्णे पुरोडाशं द्वादशकपालं निर्वपति सरस्वते सत्यवाचे चरुꣳ सवित्रे सत्यप्रसवाय पुरोडाशं द्वादशकपालं तिसृधन्वꣳ शुष्कदृतिर्दक्षिणा ॥ १ ॥

பதினெட்டாம் அநுவாகத்தில் தசபேயஞ் சொல்லப்பட்டது. இதில், திசைகளை நோக்குதற்கு ஐந்து அவிகளும், இரண்டு கடா ஹோமங்களும், சாத்யதூத (உண்மைத் தூதுவ) அவிகளுங் கூறப்படுகின்றன.

ஐந்து திக்குக்களுக்கு அவிகள்

மந்திரம் :

आग्नेयमष्टाकपालं निर्वपति हिरण्यं दक्षिणैन्द्रमेकादशकपालमृषभो दक्षिणा वैश्वदेवं चरु पिशङ्गी पष्ठाही दक्षिणा मैत्रावरुणीमामिक्षां वशा दक्षिणा बार्हस्पत्यं चरुꣳ शितिपृष्ठो दक्षिणा ।

என்பது.

உரை

அக்கினி தேவதைக்கு எட்டுக்கபாலங்களில் புரோடாசமும், இந்திரனுக்கு பதினொரு கபாலங்களில் புரோடாசமும், விசுவதேவதைக்குப் பொங்கலும், மைத்திரா வருணதேவதைக்கு பால் முறியவைத்த திருகலும், பிருகற்பதி தேவதைக்குப் பொங்கலுஞ் செய்து ஓமஞ்செய்தல் வேண்டும். அவற்றுள், முதல் நான்கு அவிகளின் பரிசேடத்தை, பிருகற்பதி தேவதையின் பொங்கல் மீது தடவிக்கொண்டே வரல்வேண்டும்; முடிவில் பிருகற்பதியின் பொங்கலை ஓமஞ்செய்தல் வேண்டும் என்பதை யுணர்க.

இது, பிருகற்பதி எசமான தேவதையா யிருத்தலின் என்க.

இந்த யாகங்கட்கு, முறையே, பொன், காளை, மங்கல் நிறமுடைய இளஞ்சினைப்பசு, மலட்டுப்பசு, பின்புறம் வெண்மையுடையபசு தட்சிணைகள்.

---

இரண்டு கடாக்களின் பசுபந்த கர்மம்

மந்திரம் :

आदित्यां मल्हां गर्भिणीमा लभते मारुतीं पृश्निं पष्ठौहीम् ।

என்பது.

உரை.

பிற்பகலில், கழுத்தில் மணிபோல் தொங்குகின்ற சினையாட்டை அதிதி தேவதையின் பொருட்டும், மெலிந்துபோன வெண்மை நிறமுடைய பெண் ஆட்டை மாருத தேவதையின் பொருட்டும் அவிசெய்து ஓமஞ்செய்தல் வேண்டும் என்பது.

இந்த ஹோமத்தில் 'ஆஸ்ராவய' என்பது முதலியவைகளை உபாம்சுவாகவே (இரைச்சலின்றியே) கூறுதல் வேண்டும்.

---

சத்யதூத அவி

மந்திரம் :

अश्विभ्यां पूष्णे पुरोडाशं द्वादशकपालं निर्वपति सरस्वते सत्यवाचे चरु सवित्रे सत्यप्रसवाय पुरोडाशंद्वादशकपालं तिसृधन्वं शुष्कदृतिर्दक्षिणा ।

என்பது

உரை

மறு நாளில், அசுவினிகளுக்கும் பூஷா தேவதைக்கும் பன்னிரண்டு கபாலங்களில் புரோடாசமும், சத்திய வாக்குக்கூறும் சரசுவதி யென்னுந் தேவதைக்குப் பொங்கலும், உண்மையாகிய அநுக்ஞைதரும் சவிதா தேவதைக்குப் பன்னிரண்டு கபாலங்களிற் செய்யும் புரோடாசமுஞ் செய்து ஓமங்கள் செய்தல் வேண்டும்.

இதற்கு, மூன்று அம்புகளுடன் ஒரு தநுவும், அதை விடுவதற்குரிய தாய்ச் சமமாக்கிய இடத்தையும் தூதர்கட்குத் தட்சிணை கொடுத்தல் வேண்டும். தூதர்கள், எசமானனை நோக்கி, ஐய! நீர் பட்டாபிஷேகஞ் செய்யப் பெற்றுள்ளீர் நீரே அனைவருக்கும் அரசன் என்று சொல்லுதல் வேண்டும்;

அதற்கு வேள்விக்தலைவனும், ஆமாம், நான் பட்டாபிஷேகஞ் செய்து கொண்டேன் எல்லாருக்கும் நான் அரசனுயிருக்கின்றேன் என்று கூறுதல் வேண்டும் என்க.

பத்தோன்பதாம் அநுவாகம்

முடிந்தது.

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

## இருபதாம் அநுவாகம்

இது முப்பத்துநான்கு பதங்களைக் கொண்டது.

பிரயுஜாம் அவிகளைக்கூறும் மந்திரங்கள்

आग्नेयमष्टाकपालं निर्वपति सौम्यं चरु सावित्रं द्वादशकपालं बार्हस्पत्यं चरुं त्वाष्ट्रमष्टाकपालं वैश्वानरं द्वादशकपालं दक्षिणो रथवाहनवाहो दक्षिणा सारस्वतं चरुं निर्वपति पौष्णं चरुं मैत्रं चरुं वारुणं चरुं क्षैत्रपत्यं चरुमादित्यं चरुमुत्तरो रथवाहनवाहो दक्षिणा ॥ १ ॥

பத்தொன்பதாம் அநுவாகத்தில், திக்குக்களின் அவிகள், பசுபந்தம், (கடாவின் அவி) சாத்யதூத அவிகள் கூறப்பட்டன. இதில், பன்னிரண்டு மாதங்களில் விளையும் தானியங்கள் பயனுகி வருவதற்கு உரிய அவிகள் கூறப்படுகின்றன. இவை இருதுக்கட்கும் பொருந்துமாதலின் பிரயுக்த அவிகளெனப்படுகின்றன.

ஈண்டுப் பன்னிரண்டு மாதங்களிற் செய்யவேண்டிய அவிகளை, ஒரே தினத்தில், முன்னுறு பின்னுருகச் செய்தல் வேண்டு மென்பதை யுணர்க. சிலர், இவை ஒவ்வொரு மாதங்களில் ஒவ்வொரு யாகமாகப் பன்னிரு மாதங் களிற்செய்யற்பாலன என்பர்.

---

முதல் ஆறு அவிகள்.

மந்திரம்:

**आग्नेयमष्टाकपालं निर्वपति सौम्यं चरुꣳ सावित्रं द्वादशकपालं बार्हस्पत्यं चरुं त्वाष्ट्रमष्टाकपालं वैश्वानरं द्वादशकपालं दक्षिणो रथवाहनवाहो दक्षिणा ।**

என்பது.

உரை.

பிற்பகலில், அக்கினிக்கு எட்டுக்கபாலங்களில் புரோடாசமும், சோம தேவதைக்குப் பொங்கலும், சவிதா தேவதைக்குப் பன்னிரண்டு கபாலங் களில் புரோடாசமும், பிருகற்பதி தேவதைக்குப் பொங்கலும், துவஷ்டா தேவதைக்கு எட்டுக் கபாலங்களிற் செய்யும் புரோடாசமும், வைசுவாநரன் என்னுந் தேவதைக்கு பன்னிரண்டு கபாலங்களிற் செய்யும் புரோடாசமுஞ் செய்து ஓமஞ்செய்தல் வேண்டும்.

இதற்கு, வண்டியிழுக்கும் எருதுகளில் வலது பக்கத்துக் காளையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

---

பின், ஆறு அவிகள்.

மந்திரம் :

**सारस्वतं चरुं निर्वपति पौष्णं चरुं मैत्रं चरुं वारुणं चरुं क्षैत्रपत्यंचरुमादित्यं चरुमुत्तरो रथवाहनवाहो दक्षिणा ।**

என்பது.

உரை.

மறு நாள், சரசுவதி தேவதைக்குப் பொங்கலும், பூஷாதேவதைக்குப் பொங்கலும், மற்றும், மித்திர தேவதைக்கும், வருண தேவதைக்கும் க்ஷேத்திரபதி யென்னுந் தேவதைக்கும், ஆதித்ய தேவதைக்கும் பொங் கலுஞ் செய்து ஓமங்கள் செய்தல் வேண்டும்.

இதற்கு, வண்டிஎருதுகளில் இடது காளையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும் என்பது.

வண்டி எருதுகளிரண்டையுந் தானங் கொடுத்தால் ஒரு வருடத்தில் இரண்டு அவ்வாறு மாதங்கள் தேடப் பெற்றனவாதலின் இதனுல் சுவர்க்கமடைகின்ருன் என்பது கருத்து.

இருபதாம் அநுவாகம்
முடிந்தது.

---

பிறகு, ஒரு வருஷம் அக்கினி ஹோத்திரஞ் செய்துகொண்டுவந்து பிறகு 'கேசவபனீயம்' என்னும், அதிராத்திர யாகத்தைச் செய்ய வேண்டும். அதில் அக்கினி ஷ்டோமத்தைப் போல், திரிவிருத்து முதலான நான்கு ஸ்தோமங்களை வரிசையாய்ச் செய்யாமல், ஏகவிம்சம், ஸப்ததசம், பஞ்சதசம், திரிவிருத்து என்னும் முறையாய்ச் சாமங்களைப் பாடுதல் வேண்டும். அந்த யக்ஞம் முடிந்ததும், யஜமானன் கேசவபனஞ் (மயிர் கழித்தல்) செய்து கொள்ளல் வேண்டும். பிறகு, வ்யுஷ்டி, துவிராத்திரம் என்னும், இரண்டு சுத்தியாகசுக்களை உடைய யாகத்தைச் செய்தல் வேண்டும். அதில் முதல் சுத்தியாசகை அக்கினி ஷ்டோமமாகவும், ஏகாதசினீ (பதினொரு) பசுக்களில் ஐந்து பசுக்களையும், இரண்டாவது சுத்தியாகசை அதிராத்திரமாகவும் மிச்சமுள்ள ஆறு பசுக்களையுஞ் செய்து முடித்தல் வேண்டும். பிறகு, திருஷ்டோமம். (மூன்று முறை திரும்பும் ஸ்தோமம்.) என்னுஞ் சோமயாகத்தைச் செய்தல் வேண்டும்.

இராசசூயயாகம் முடிந்தது.

இனி, மறுநாள் இராசசூயத்தின் அங்கமாகசௌத்திரா மணியையும் மித்திரா வருண தேவதைகளுக்கு ஆமிக்ஷையுஞ் செய்தல் வேண்டும்.

சௌத்ராமணியின் அநுபந்தம்.

சௌத்ராமணி யென்பது பொதுவாய் இந்திர தேவதையின் பொருட்டுச் செய்யப்படும் முடிவுயாகமாம். இது, சரகா, கௌகிலீ என இருவகைப்படும். அவற்றுள், கௌகிலீ என்பது சுவதந்திரமாய் ஒருயாகம் போல் வருவது. சரகா என்பதோ, சில விடத்துச் சுவதந்திரமாகவும் சிலவிடத்து மற்றென்றிற்கு அங்கமாகவும் வரும். இவற்றுள்ளும், கௌகிலீ என்பதன் விரிவு, பிராமணம், அஷ்—2—பிர-6-ல் கூறப்பட்டிருக்கின்றது.

ஈண்டு, இராசசூயத்திற்கு அங்கமாக வருவதால் சரகாஎன்னுஞ் சௌத்திராமணியே கூறப்படுகின்றது.

மற்றும், சரகா, என்னும் சௌத்திராமணியும், சுராவை (சாராயத்தை)க் கொண்டு செய்வதெனவும், பாலைக்கொண்டு செய்வதெனவும் இருவகைப் படும். இவற்றுள்ளும் இக்காலத்திற் செய்யப்படுவது பாலைக்கொண்டு செய்வதேயாம். ஈண்டுக் கூறப்படுகின்றது சாராயத்தாற் செய்யப்படுவதாம்.

இனி, சௌத்திராமணி செய்யப் போகும் பருவத்திற்கு முன், நவமி (ஒன்பதாம்) தினத்தின் காலையில் அக்கினி ஹோத்திரத்தை முடித்துக் கொண்டு, இராசசூய யாகத்தை முன்னிட்டு சௌத்திராமணி யாகத்தைச் செய்வேனாக, என்று சங்கற்பித்துக் கொண்டு ஆகவனீயாக்கினியைப் பிரணயனஞ் செய்து விட்டு, ஷட்டோதா ஹோமத்தைச் செய்தல் வேண்டும்.

பிறகு, ஒரு பட்டு ஆடையில், ஈயம், அறுகம்புல், வாற்கோதுமைமுளை என்பவைகளை ஒன்றாகச் சேர்த்துக் கட்டிவைத்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், அக்கினி ஹோத்ரகாலமாக மூன்று நாள் அவ்விடத்திலேயே இருந்து பன்னிரண்டாம் நாட்காலையில் அக்கினி ஹோத்திரத்தை முடித்துக் கொண்டு, 'சாராயஇஷ்டியால் வேட்பேன், என்று சங்கற்பித்துக் கொண்டு, 'வித்யுத், என்பது முதலான 'மந்திரத்தாற் கை யலம்புதல் முதல் ஏனைய கிரியைகளையும் பசுபந்த யாகத்திற் செய்வது போற் இருத்துவிக் வரணத்தையுஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

இனி, இஷ்டியின் பொருட்டு அக்கினிப் பிரணயனஞ் செய்வது முதலாகிய இஷ்டியைச் செய்யத் தொடங்கல் வேண்டும்.

இதில், 'அக்னிம் க்ருஹ்ணாமி, எனபது முதலிய மந்திரத்தில், 'சதுரஹோ, எனவும், ' இமா மூர்ஜம், என்பது முதலிய மந்திரததில் ' த்வாதசீம், எனவும் ' சௌத்ராமணீயம் ஹவி: எனவும், யூகஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

இதில், இத்மம் (விறகுகள்) இல்லை. மற்றும், தருப்பைகளைப் பரப்பி அதன்மேல் பாத்திரங்களை வைக்கும்போது, மேற்கில், ஸ்ப்யம், (மரக்கத்தி) ஸ்தாலி (பானை) வைக்கவேண்டியதில், சம்யா முதல்இலலை. கிழக்கில் சுருவம், வேதம், பாத்திரீ, நெய்ப்பானை, பிரணீதா, மதந்தி (வென்னீர்ப்பாத்திரம்) உபவேஷம், வேதாக்ரம், (தருப்பை முடிச்சின் நுனி) மேக்ஷணம், (மாக்கிளறும் துடுப்பு) என்பவைகளை வைத்தல் வேண்டும்.

பிறகு 'சம்விஶந்தாம்' என்பது முதலிய மந்திரத்தால், பாத்திரங்களைத் தொடுதல், இஷ்டியைப் போற் செய்து கொள்ளல் வேண்டும்.

நிர்வாபஞ் செய்யும் (நெல்லெடுக்கும்) போது மாத்திரம் अश्विभ्यां सरस्वत्या इन्द्रायसुत्राम्णेजुष्टं निर्वपामि, என்று எடுத்துக் கொள்ளல் வேண்டும். மற்றும், உத்காத்தில் நீரைவிடுதல் வரை தரிசபூரணமாசத்திற் செய்வதுபோலவே செய்து கொள்ளல் வேண்டும்.

அதன் பிறகு, உபவேஷத்தை எடுப்பது முதல், பானையை வைப்பது வரை செய்து கொண்டு, 'समाप:' என்பது முதலியதால் பானையில் பிரணீதாவிலுள்ள நீரைவார்த்து அத்துடன் மந்திரமின்றி வெந்நீரையும் விட்டு, 'घर्मोऽसि என்பது முதலிய மந்திரத்தால், அதில் அரிசியைப் போட்டுவிட்டு ஏனைய கிரியைகளை இஷ்டிபோற் செய்து கொள்ளல் வேண்டும். வேதிகை செய்தல் இல்லை. பிரேஷையின் (ஏவும்) போது 'सुवचसंमृड्ढि पत्नीः सन्नह्याज्येनोदेहि' என்று ஏவுதல் வேண்டும்.

பிறகு, நெய்யின் உத்பவனம் (தருப்பையால் அலைக்கும்) வரை தரிசபூரணமாதயாகம்போற் செய்து கொள்ளல் வேண்டும்.

'वेदिरसि' என்று நீர் தெளிக்கும் போது எல்லா நீரையுந் தெளித்துவிட்டு, மந்திரமின்றி வெண்பொங்கலு (சருவு) க்கு நெய்வார்த்துக் கொண்டு பொங்கலையிறக்கிவிட்டு காருகபத்தியத்திற்குக் கிழக்கில் ஒரு பள்ளங் கெல்லிவைத்தல் வேண்டும்.

---

இருபத்தோராவது அநுவாக

விடய சுருக்கம்

स्वाद्वीं शष्पैस्सुरायोज्या पुनाद्वाभ्यांतु पावयेत् ।
कुवित्स्वरे सुराग्राह्या सोमावनयते सुराम् ॥ १ ॥
शतच्छिद्रयुतस्थाल्यां मन्त्राःपञ्चेह वर्णिताः ।

சாராயஞ் செய்தல், வடித்தல், சாராயத்தைப் பாத்திரத்தில் வார்த்துவைத்தல், மீந்த சாராயத்தைக் கொட்டிவிடல் என்பது.

மற்றும், இவ்வநுவாகத்திலுள்ள, 'आश्विनं धूम्रं' என்பது முதலிய மூன்று பிராமணங்கள் மூன்று பசுக்களை (கடாக்களை)யும், 'ऐन्द्रमेकादशकपालं' என்பது முதலிய பிராமணம் புரோடாசங்களையும், 'वडवादक्षिणा' என்பது முதலான பிராமணம் தக்ஷிணையையும் விதித்திக்கின்றன என்பதையு முணர்க.

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்
## இருபத்தோராவது அநுவாகம்

ஒரு பஞ்சாதிக்குமேல் இருபத்தாறு பதங்களைக்கொண்டது.

சௌத்திராமணி யாகத்தின் பசு அவியைக் கூறு மந்திரங்கள்.

स्वाद्वीं त्वा स्वादुना तीव्रां तीव्रेणामृतांममृतेन सृजामि सꣳ
सोमेन सोमोऽस्यश्विभ्यां पच्यस्व सरस्वत्यै पच्यस्वेन्द्राय सुत्राम्णे

पच्यस्व पुनातु ते परिस्रुतꣳ सोमꣳ सूर्यस्य दुहिता । वारेण शश्वता तना । वायुः पूतः पवित्रेण प्रत्यङ्सोमो अतिद्रुतः । इन्द्रस्य युज्यस्सखा । कुविदङ्ग यवमन्तो यवं चिद्यथादान्त्यनुपूर्वं वियूय । इहेहैषां कृणुत भोजनानि ॥ १ ॥ ये बर्हिषो नमोवृक्तिं न जग्मुः । आश्विनं धूम्रमालभते सारस्वतं मेषमैन्द्रमृषभमैन्द्र मेकादशकपालं निर्वपति सावित्रं द्वादशकपालं वारुणं दशकपालꣳ सोमप्रतीकाः पितरस्तृप्णुत वडबा दक्षिणा ॥ २ ॥

இருபதாம் அநுவாகத்தில் பிரயுஜ அவிகள் கூறப்பெற்றன. இருபத்தோராவது அநுவாகத்தில் சௌத்திராமணி யாகமந்திரங்களும், பசுவின் அவிகளுங் கூறப்படுகின்றன.

---

முதல் விநியோகம்

பள்ளத்தில் பொங்கலை வைத்தல்

மந்திரம்:

स्वाद्वीं त्वा स्वादुना तीव्रां तीव्रेणामृताममृतेन सृजामि सꣳ सोमेन सोमोऽस्यश्विभ्यांपच्यस्व सरस्वत्यै पच्यस्वेन्द्राय सुत्राम्णे पच्यस्व ।

என்பது.

உரை

சாராயமே! மிகுந்த இன்சுவை யுடையதும், உக்கிரமான நாற்றமுடையதும், அமுதம் போன்று வளர்ப்பதுமாகிய உன்னை, இன்சுவையுடையதும், மருந்துடன் கூடியதால் தீவிரமானதும், அமுதத்தன்மை யுண்டாக்குவதுமாகிய சோமம் என்னுஞ் சொல்லாற் குறிப்பிட்ட நெல்முளை கோதுமை முளை முதலியவைகளுடன் சேர்க்கின்றேன். ஆதலின் நீ, அசுவினி, இந்திரன், சரசுவதி என்னும் மூன்று தேவதைகளின் பொருட்டுப் பக்குவமாவாயாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம்மந்திரத்தால், முன் பொங்கி வைத்திருக்கும் பொங்கலை, பூமியிற் கெல்லியுள்ள பள்ளத்திற்குள் வைத்தல் வேண்டுமென்பதாம்.

பிறகு, அப்பொங்கலில் நீரைவிட்டு. கருவேலம் பட்டையைப் போடுவ துடன், முன்னர் பட்டுத் துணியிற் கட்டிவைத்திருந்த அறுகம்புல் முதலிய வைகளையும் அதிற் போட்டு மூடிவிடல் வேண்டும். இது மூன்று நாள்வரை அவ்வண்ணமாகவே இருத்தல் வேண்டும். அம் மூன்று நாளும் அவ்வக்கினி யிலேயே அக்கினி ஹோத்திரஞ் செய்துவிட்டு, அத்தீயை, ஆன்மாவிலேனும், அல்லது தீக்கடைக் கோலிலேனும் ஏற்றிக்கொண்டு இவ்வேள்வி செய்யுஞ் சாலைக்குப்போய் தீக்கடைந்து தீயையுண்டாக்கல் வேண்டும்.

இதில் பசு இஷ்டி இல்லை. உண்டென்பர் சிலர்.

இவ்வாறு இஷ்டி முடிந்ததும், புரசங்கொம்பைக் கொண்டுவருதல் முத லானவற்றைச் செய்யத் தொடங்கி சஷாலம் (யூபகடகம்) வரை பசுயாகத்திற் செய்தது போலவே செய்துகொள்ளல் வேண்டும்.

மற்றும், ' वेदि तृतीये यजेत' என்று இருப்பதால், அதாவது " வேதிகையில் மூன்றிலொன்றில் வேட்க " என்று கூறியிருத்தலின், இருபத்தாறங்குலங் கள் கொண்ட பிரக்கிரமத்தா (முழத்தா)ல், சிரோணி, பத்துப் பிரக்கிரமமும், தீர்க்கம் (நீளம்) பன்னிரண்டு பிரக்கிரமமும், அம்சம் எட்டுப் பிரக்கிரமமு மாக முப்பத்தாறு அங்குல பரிமாணத்தால் உத்தர வேதிகையைப் போட்டுக் கொண்டு, ' उद्दप्रथस्व ' என்பதால் அதை அழுத்தி மெழுகிவிடும் வரை பசு பந்த யாகம் போற் செய்துகொள்ளல் வேண்டும்.

மற்றும் பிரதிப்பிரஸ்தாதா என்பவன், மண்ணெடுக்குங் குழியிலி ருந்து மண் கொண்டு வந்து உத்தர வேதிக்குத் தெற்கில் ஒரு மேடையும், தட்சிணாக்கினிக்குக் கிழக்கில் ஒரு மேடையுஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், 'ध्रुवाऽसि' என்பது முதல் அக்கினிப் பிரணயனம்வரை பசு பந்த யாகம்போற் செய்து கொள்ளல் வேண்டும்.

அக்கினிப் பிரணயனஞ் செய்யுங்கால் பிரதிப் பிரஸ்தாதா தட்சிணாக் கினியிலிருந்து அக்கினியை யெடுத்து ஆகவனீயத்திற்குத் தெற்கிலுள்ள வேதிகையின் மீது வைத்தல் வேண்டும்.

வேட்போன், அதி முக்தி ஹோமம் முதல், கருப்பையை விரிப்பதுவரை பசுயாகத்திற் செய்ததுபோற் செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, 'த்ரிவிருத்யபாலாசே, என்பது முதலிய மந்திரத்தில், ' पशून्हव्यं करोतुमे ' என்று ஊகித்துக் கொள்ளல் வேண்டும்.

பாத்திரங்களை வைக்கும்போது, மூன்று கலசங்கள், யூபத்திற் கட்டும் இரண்டு கயிறுகள், ஆட்டுக்கடாவைக் கட்டும் மூன்று கயிறுகள், வபைகளைக் காய்ச்சும் மூன்று இரும்பு முள் என்பவைகளை வைத்தல் வேண்டும்.

பிறகு, தட்சிணாக்கினிக்குக் கிழக்கிலுள்ள மேடையின்மீது தருப்பைகளைப் பரப்பிவிட்டு புரசமரத்தாற் செய்த கிரகங்கள் என்னும் உரல் போன்றவைகளை மூன்று வைத்தல் வேண்டும். மரத்தாற்செய்த ஒரு வாணவையும், நூறு துளைகள் உள்ள ஒரு மண் பாண்டத்தையும் வைத்தல் வேண்டும்.

மற்றும், மயிராற் செய்த பவித்திரத்தையும் கம்பளியையும், கழுகின் சிறகையும், க்வலம், பதரி, கர்க்கந்து (இலந்தைப்பழம் முதலியவைகள்) என்பவைகளின் மாவையும் வைத்தல் வேண்டும்.

பசுவின் பாத்திரங்களைத் துடைத்து வைத்தவுடன், சுருவைத்துடைப்பதுபோல் அங்கு வைத்திருக்கின்ற மூன்று கிரகங்களையும் (உரல் போன்ற மூன்று மரப்பாத்திரங்களையும்) துடைத்துவிட்டு, நெய்யை யெடுத்தல் முதல், ஆட்டுக்கடாவைக் கொல்லும்வரை பசு யாகத்திற் செய்ததுபோலவே செய்துகொண்டு, காருகபத்தியத்திற்குக் கிழக்கில் புதைத்து வைத்திருந்த சாராயத்தை எடுத்து தட்சிணாக்கினிக்குக் கிழக்கிலுள்ள மேடையின் மீது வைத்தல் வேண்டும்.

---

## இரண்டாவது விநியோகம்

### சாராயத்தை வடித்தல்

### முதல் மந்திரம்

மந்திரம் :

**पुनातु ते परिस्रुतꣳ सोमꣳ सूर्यस्य दुहिता । वारेण शश्वता तना ।**

என்பது.

உரை.

இந்திரனே! நின் பொருட்டு, சூரியனுடைய பெண்ணைப்போன்ற ஒளியானது, உறுதியுடையதும், விரிந்ததுமாகிய சோமத்தை மயிராடையால் (கம்பளியால்) புனிதஞ்செய்க என்பது.

---

### இரண்டாவது மந்திரம்

மந்திரம் :

**वायुः पूतः पवित्रेण प्रत्यङ्सोमो अतिद्रुतः । इन्द्रस्य युज्यस्सखा ।**

என்பது.

உரை.

இப்பவித்திரத்தா (கம்பளியா)ல் புனிதமாகிய சோமம் (சாராயம்) வாயுவைப்போல் விரைவில் ஓடுவதால் பாத்திரத்திற்கு நேரே விரைவில் இளகுவதாகுக. எத்தகைய சோமமெனின்? இந்திரனுக்குரிய நண்பனனது என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரங்களிரண்டாலும், கம்பளியால் சாராயத்தை வடித்து அம் மேடையின் மீதே வைத்துவிடல் வேண்டுமென்பதாம்.

இனி, இரண்டு தருப்பைகளையும் கல்லாலங்கிளையையும் எடுத்தல் முதலான கிரியைகளைச் செய்யத் தொடங்கி,

'अश्विभ्यां त्वा जुष्टमुपाकरोमि' என்று ஒரு வெள்ளாட்டுக்கடாவையும்,

'सरस्वत्यै त्वा जुष्टमुपाकरोमि' என்று ஒரு செம்மறி ஆட்டுக் கடாவையும்,

'इन्द्रायत्वाजुष्टमुपाकरोमि' என்று மற்றொரு செம்மறியாட்டுக் கடாவையும், உபாகரணஞ் செய்தல் (கொல்லல்) வேண்டும்.

பிறகு, சூத்திரத்தைத்தழுவி, 'बृहस्पतये त्वा जुष्टमुपाकरोमि' என்று, ஒரு வெள்ளாட்டுக் கடாவை நான்காவதாகக் கொல்லுதலும்வேண்டுமென்பர் சிலர்.

அதன் பிறகு, 'பிரஜானந்த:, என்பது முதலான ஐந்து மந்திரங்களையும் பகுவசனமா (பன்மையா) க ஊகித்துக் கொண்டு ஐந்து ஹோமங்களையுஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, கடாவை யூபத்திற் கட்டுதல் முதலான கிரியைகளைப் பசுயாகத் திற் செய்தது போலவே முறையாய்ச் செய்துகொண்டு நீர் தெளித்தல் முதலான பசுவின்சம்பந்தமான காரியங்களையும் முறையாகச் செய்துகொள் ளல் வேண்டும்.

மற்றும், 'अग्निरुप्रेषै, ऊवध्यखननं' 'उल्मुकाहरणं' என்பவைகட்கு ஆவிருத்தி (மறித்து மறித்தும் ஓதல்) இல்லை.

ஆஸ்வினியின் கடாவைமாத்திரந் தொட்டுக் கொண்டே போதல் வேண்டும்

தருப்பையைப் போடுவது முதலானவைகளை முறையாய்ப் போட்டு விட்டு.

'अमायून्कृणुतस्संज्ञपयत' என்று, ஊகித்துக் கொண்டு ஏவல்வேண்டும். ஏவிய வுடன் திரும்பி வந்துவிடல் வேண்டும்.

'स्वाविदसि' என்பது முதலான பசு சம்பந்தமுடைய எல்லாமந்திரங் களையும் பகுவசனமா (பன்மைகளா)க ஊகிக்துக் கொள்ளல் வேண்டும்.

மற்றும், 'वाक्त आप्यायतां' என்பதை அதாவது கடாவின் வாய் முதலான விடங்களில் நீர்தெளித்தல் முதலானவைகளை முறையாகச் செய்துவிட்டு,

'शमोषधीभ्यः' என்பதால் எஞ்சிய நீர்களை ஒன்றாய்க் கலந்து கீழே ஊற்றி விடல் வேண்டும்.

மற்றும், 'ओषधेत्रायस्वैनं' என்பதால் தருப்பையைக் கடாவின் வயிற்றில் வைப்பது முதல், வபையைக் கிழி யெடுப்பது வரை செய்துகொண்டு, அசுவினியின் கடாவினுடைய வபையை மாத்திரந் தொட்டுக் கொண்டே திரும்பி வருதல் வேண்டும்.

மற்றும், 'வாயோவீஹி, (வபைக்குக் கீழே நுனித் தருப்பைகளை வைத்து) நெய்த்துளியைச் சிந்துதல் முதலானவைகளைச் செய்த பிறகு வபையை முறையாய் ஹோமஞ்செய்தல் வேண்டும்.

வபையை ஹோமஞ்செய்யும் முறை வருமாறு :—

'अश्विभ्यां छागस्य वपाया मेदसोऽनुब्रूहि' என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'आपश्चातात्' என்பது முதலிய புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அவன் அதற்குப் பதிற் கூறியபிறகு,

'अश्विभ्यां छागस्य वपायामेदसः प्रेष्य' என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षदश्विनौ' என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'येयजामह उदुस्तोमासः' என்பது முதலான யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'जातवेदोवपया' என்பது முதலான மந்திரத்தால். வஷட்காரத்தில் வபையை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன், 'அஸ்விப்யாமிதம், என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'अश्विनोरहं देवयज्ययेन्द्रियावी भूयासं' என்று, அதாவது அசுவினிகளின் யாகத்தால் யான் இந்திரிய முடையவனுவேன், என்று தன்னை வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

பிறகு வேட்போன், தாண்டிவந்து முன்போல் வபையை எடுத்துக் கொண்டு,

'सरस्वत्यै मेषस्यवपाया मेदसोऽनुब्रूहि' என்று மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ‘ एकाचेतत्सरस्वती ’ என்பது முதலான புரோநு வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்

வேட்போன் தெற்கில் தாண்டிவந்து ஆக்னீத்ரனை ஏவி, அதற்கவன் பதிற் கூறிய பிறகு,

‘ सरस्वत्यै मेषस्य वपायामेदसः प्रेष्य ’ என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ‘ होतायक्षत्सरस्वती ’ என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, ‘ येयजामहे प्रक्षोधसा ’ என்பது முதலான யாஜ்யா வாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

வேட்போன், ‘ जातवेदोवपया ’ என்பது முதலான மந்திரத்தால், வஷட்காரத்தில் வபையை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், ‘ सरस्वत्या इदं ’ என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், ‘ सरस्वत्या अहं देवयज्यया वाचमन्नाद्यंपुषेयम् ’ சரசுவதி யாகத்தால், வாக்கையும், நல்லுணவு அருந்துவதையும் அடைவேனாக, என்று தன்னை வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

பிறகு வேட்போன் வடக்கே தாண்டிவந்து முன்போல் வபையை எடுத்துக் கொண்டு

‘ इन्द्रायर्षभस्यवपायामेदसोऽनुब्रूहि ’ என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ‘ इन्द्रंनमोने ’ என்பது முதலான புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

பிறகு, வேட்போன் தெற்கில் தாண்டிவந்து, ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறிய பிறகு,

‘ इन्द्रायर्षभस्य वपाया मेदसःप्रेष्य ’ என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், ‘ ‘ होतायक्षदिन्द्र मृषभस्य ’ என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, ‘ येयजामह उरुंनोलोकमनुनेषिविद्वान् ’ என்பது முதலான யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், 'जातवेदोवपया' என்பது முதலான மந்திரத்தால், வஷட் காரத்தில் வபையை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், इन्द्रायेदं' என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், 'इन्द्रस्याहं देवयज्ययेन्द्रियावीभूयासम्' என்று, தன்னை வாழ்த்திக் கொள்ளல் வேண்டும்.

பிறகு, உததரபரிவப்யம், அதாவது வபா ஹோம முடிவிற் செயும் நெய்யாகுதி முதலான கிரியைகளை, பசு பந்தத்திற் செய்ததுபோலவேசெய்து கொண்டு, 'मारुतंगच्छत, என்று, பகுவசனமா (பன்மையா) க ஊகித்துக் கொண்டு வபாசிரபணிகள் (வபையை மாட்டி வைத்திருந்த முட்கிளைகள்) ஆறையும் ஒன்றாகவே எறிந்து விடல் வேண்டும்.

தட்சிணை கொடுக்கும்போது, நிஷ்கம், ரிஷபம், சாத்வரீஞ்சவடபாம் (பொன், எருது, ஓடித்திரும்பிவந்த கோவேறு கழுதை) என்பவைகளை, தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும்.

பிரமன், ப்ரஹ்மாண:, என்று பன்மைச் சொல்லாக்கிக் கொண்டு தட்சிணைகளைத் தொடல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'सहस्रधारे' என்பது முதலான மந்திரத்தை, பன்மைச்சொல்லா (பகுவசனமா) க ஊகித்துக் கொண்டு ஓதிவந்து, முடிவில்,

"நிஷ்கரிஷப சாத்வரவடபா பிரதி தராணி மிருத்யும், என்று தட்சிணைகளைப் போற்றுதல் வேண்டும்.

வேட்போன் முதலானோர்கள், அக்னயேஹிரண்யம், என்று பொன்னையும், 'ருத்ரா யகாம், என்று ரிஷபத்தையும, வருணாயாஸ்வம், என்று கோவேறு கழுதையையும் பெற்றுக் கொள்ளுதல வேண்டும.

இனி, வேட்போன், மண்ணெடுக்குங் குழியில் மார்ச்சனஞ் செய்து கொண்டு தட்சிணாக்கினிக்குக் கிழக்கிலுள்ள மேடையின் மேலிருக்கும் கிரக பாத்திரங்களுள் ஒன்றை யெடுத்துக் கொள்ளல் வேண்டும்.

---

## மூன்றும் விநியோகம்

### சாராயத்தைப் பாத்திரத்திலெடுத்து வைத்தல்

மந்திரம் :

कुविदङ्ग यवमन्तो यवं चिद्यथादान्त्यनुपूर्वं वियूय। इहेहैषां कृणुत भोजनानि ये बर्हिषो नमोवृक्तिं न जग्मुः।

என்பது

உரை

அசுவி, சரசுவதி, சூத்ராமா, இந்திரா என்னும் அன்புமிக்குடையார்களே! நீவிர், வணக்கத்தைக் கெடுக்காதவர்களாயிருந்து அன்புடையர்களாக இவ் வேள்வியை அநுட்டிக்கின்றவர்களுக்கு அவியுணவைச் செய்வீர்களாக. உலகில், கோதுமை முதலான தானியங்களை யுடையவன் அவற்றை ஆராய்ந்து, இத்தானியம் முற்றிவிட்டது, இது முத்தாதது என்று பார்த்து அறுப்பது போல் இவர்கள் வணக்கம் முதலான இல்லாத நாத்திகர்கள்; இவர்கள் சிரத்தை யுடையவர்கள் என்று பகுத்துப் பார்த்து சிரத்தையுடையோர்களின் அவியை அருந்துவீர்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்துடன், उपयाम गृहीतोऽस्यच्छिद्रांत्वाच्छिद्रेणत्वाऽश्विभ्यांस्वाजुष्टं गृह्णामि என்னும் சூத்திர மந்திரத்தையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு, பாத்திரத்தில் சாராயத்தை எடுத்து அத்துடன் சிம்மத்தின் மயிரையும், க்வாலப்பழத்தின் மாவையும் போட்டுக் கம்பளியால் துடைத்து,

'एषते योनि रश्विभ्यांत्वा, என்று, அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டும என்பதாம.

அங்ஙனமே, பிரதிபிரஸ்தாதா, 'குவிதங்க' என்பது முதலான சம்மிதை மந்திரததுடன,

' उपयामगृहीतोऽस्यच्छिद्रांत्वाऽच्छिद्रेणत्वा सरस्वत्यै त्वाजुष्टंगृह्णामि, என்னுஞ் சூத்திர மந்திரத்தையுஞ் சோத்து ஓதிக்கொண்டு இரண்டாவது கிரக பாத்திரத்தில் சாராயத்தை யெடுதது, இலந்தைப்பழம், புலிமயிர் என்பவைகளை அதில்போட்டு கம்பளியால துடைத்து, ' एषते योनिस्सरस्वत्यैत्वा, என்னுஞ் சூத்திர மந்திரத்தால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடலவேண்டும்.

அங்ஙனமே, பிரமன், 'குவிதங்க' என்பது முதலான சம்மிதை மந்திரத்துடன்,

' उपयाम गृहीतोऽस्यच्छिद्रान्त्वाऽच्छिद्रेणत्वा इन्द्रायत्वा सुत्राम्णेजुष्टं गृह्णामि, என்னு மந்திரத்தையுஞ் சேர்த்து ஓதிக்கொண்டு மூன்றுவதுகிரக பாத்திரத்தில் சாராயத்தை யெடுத்து, கர்க்கந்துப் பழத்தின் மாவையும் செந்நாயின் மயிரையும் அதில் போட்டுக் கம்பளியால்துடைத்து, ' एषतेयोनिरिन्द्रायत्वा सुत्राम्णे, என்னும் மந்திரத்தால் அதனுடைய இடத்திலேயே வைத்துவிடல் வேண்டும.

முன் சொல்லிய, க்வலம் முதலானவைகள் கிடைக்காவிடின் அவைகளை மனத்தில் தியானஞ் செய்துகொள்ளல் வேண்டும்,

பிறகு, இந்திர தேவதையின் பொருட்டு பதினேரு கபாலங்களையும், சவிதா தேவதையின் பொருட்டுப் பன்னிரண்டு கபாலங்களையும், வருண தேவதையின்பொருட்டுப் பத்துக் கபாலங்களையும் வைத்து, மற்றும் நெல் லெடுத்தல் முதல் புரோடாசங்களை அந்தர்வேதியில் வைக்கும் வரையில் பசு யாகத்திற் செய்ததுபோலவே செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு வேட்போன், ஆசுவினக் கிரகத்தையும், பிரதிப்பிரஸ்தா சாரசுவதக் கிரகத்தையும், பிரமன் ஐந்திரக் கிரகத்தையும் எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

வேட்போன், ' अश्विभ्यां सरस्वत्या इन्द्राय सुत्राम्णे सोमानां सुराम्णामनुब्रूहि, என்று மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், इमं सुराममश्विना, என்பது முதலான புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்.

மூவரும் தெற்கில் சென்று, வேட்போன், ஆக்னீத்ரனை ஏவி, அவன் பதிற் கூறியபிறகு, अश्विभ्यां सरस्वत्या इन्द्रायसुत्राम्णेसोमानां सुराम्णाप्रेष्य, என்று மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், ' होतायक्षदश्विना सरस्वती, என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'येयजामहे पुत्रमिवपितरा, என்பது முதலான யாஜ்யாவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன் முதலான மூவர்களும் வஷட் காரத்தில் சுராவை (சாராயத்தை) ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன், ' अश्विभ्यां सरस्वत्या इन्द्राय सुत्राम्णइदं, என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

மற்றும், ' अहाव्यग्ने, என்பது முதலான பிராமண மந்திரத்தால் துதித்தலும்வேண்டும்.

இரண்டாம் வஷட் காரத்திலும் வேட்போன் முதலான மூவரும் ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன், 'அக்னய இதம், என்று, தியாகஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, ' नानाहिवां, என்பது முதலான மந்திரத்தால், வேள்வித் தலைவன், வணிகனுகவேனும், அல்லது, அரசனுக வேனும் இருப்பானேல், எஞ்சிய சாராயத்தை அருந்தல் வேண்டும். பிராமணனு யிருந்தால், 'த்வேஸ்ருதீ, என்பது முதலான மந்திரத்தால் மீந்த சாராயத்தை புத்துவளையில் வார்த்து விடல் வேண்டும்.

பிறகு, உத்தர வேதிக்குக் தெற்கிலிருக்கின்ற மேடையின் மேலிருக்கும் அக்கினிக்கு மேல், யாரேனுமொருவர் முன் வைத்திருந்த நூறு துளைகளுடைய மண்பாத்தைப் பிடித்துக் கொள்ளும்படி செய்து அதன்மீது வடக்கு நுனியாய்க் கம்பளியைப் போட்டுவிட்டு, यन्मेमनः परागतं என்பது முதலான மந்திரத்தால், அதற்குள் நூறு குன்றுமணி இடை கொண்ட பொன்னை வைத்தல் வேண்டும்.

---

நான்காம் விநியோகம்

எஞ்சிய சுராவை (சாராயத்தை)த் தொட்டுதல்

மந்திரம்;

**सोमप्रतीकाः पितरस्तृप्णुत ।**

என்பது.

உரை.

சோமன் முதலான பிதிரு தேவதைகள் களிப்புறுவார்களாக என்பது.

சாயணபாடியக் கருத்து

இம் மந்திரத்தால், வேட்போன், பூணூலை மாற்றிப் போட்டுக்கொண்டு, மாவாணுவிலிருக்கும் சாராயத்தை அப் பொன்னின் மேல் விட்டுவிடல் வேண்டும்.

பிறகு, பூணூலை முன்போல் போட்டுக்கொண்டு தண்ணீரைக் கையால் தொட்டுக் கொள்ளல் வேண்டும்.

---

கடாநியமம்

பிராமண பாகத்தின் உரை :—

(1) அசுவினி தேவதையின் பொருட்டு புகைநிறமான ஆட்டுக் கடாவைக் கொல்லல் வேண்டும்.

சரசுவதி தேவதைக்கு செம்மறிக் கடாவைக் கொல்லல் வேண்டும்.

இந்திர தேவதைக்கு ரிஷபத்தைக் கொல்லல் வேண்டும்.

---

புரோடாசம்

(2) இந்திரனுக்கு, பதினொரு அகல்களை வைத்துப் புரோடாசஞ் செய்தல்வேண்டும்.

சவிதாதேவதைக்கு பன்னிரண்டு அகல்கள் வைத்து புரோடாசஞ் செய்தல்வேண்டும்.

வருண தேவதைக்கு பத்து அகல்கள் வைத்துப் புரோடாசஞ் செய்தல் வேண்டும்.

தட்சிணை

(3) கோவேறுகழுதையைத் தட்சிணையாகக் கொடுத்தல் வேண்டும். இவைகள், சங்கிதையில் யாண்டும் விதிக்கப் படாமையின் இங்கேயே பிராமண மந்திரங்கள் விதிக்கின்றன என்பதை யுணர்க.

இருபத்தோராவது அநுவாகம்

முற்றிற்று.

இவ்வநுவாகத்தின் பரிசேடம்

ஆகுதி செய்யும் சாராயம் தீயில் விழும்போது அவ்வக்கினிக்குக் கிழக்கில் மேற்குமுகமாக வேட்போன் நின்றுகொண்டு, ஒழுகிக் கொண்டிருக்கும் பானையை, 'त्वꣳ सोमप्रचिकितः, என்பது முதலான மந்திரங்களால் போற்றல் வேண்டும்.

அவ்வக்கினிக்குத் தெற்கில் வடக்கு முகமாக நின்றுகொண்டு 'बर्हिषदः, என்பது முதலான மூன்று மந்திரங்களாலும் பிரமனும் போற்றல் வேண்டும்

அவ்வக்கினிக்கு மேற்கில் கிழக்கு முகமாய் நின்றுகொண்டு, 'अग्निष्वात्ताः पितरः, என்பது முதலான மூன்று மந்திரங்களாலும் ஹோதாவும் போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், 'यदग्ने कव्यवाहन, என்பது முதலான மூன்று மந்திரங்களாலும், நூறு துளைகளுள்ள அக்குடத்தை அவ்வக்கினியின் மேடையின் மீது வைத்து விடல் வேண்டும்.

வேட்போன், சுருவத்தால் பிருஷத் ஆஜ்யத்தை (தயிர் கலந்த நெய்யை) எடுப்பது முதலான கிரியைகளை, பசு யாகத்திற் செய்தது போற் செய்து கொண்டு தனித்தனி அங்கங்கள் வேகவைத்த மூன்று பானைகளையும் வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'இதமிந்திரியம், என்பதுமுதலான மந்திரங்களால் வைத்த பானைகளைப் போற்றல் வேண்டும்.

பிறகு, வேட்போன், பசு யாகத்தில் எடுத்ததுபோல் கடாவின் அங்கங்களை எடுத்துக் கொண்டு, உபபிருதில் பொன் துண்டைப் போடாமல் நிறுத்தி விட்டு 'अश्विभ्यां छागस्यहविषोऽनुब्रूहि, என்று, மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், 'अश्विनोदेवेभिः; என்பது முதலான புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிப்போய் ஆக்னீத்ரனை ஏவி அதற்கவன் பதில் சொன்ன பிறகு,

'अश्विभ्यां छागस्य हविषः प्रेष्य, என்று, மைத்திரா வருணனை 'ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், 'होतायक्षदश्विनौ छागस्य, என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'येयजामहे हिरण्यत्वं, என்பது முதலான யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

பாதி இருக்கை ஓதும்போது, பிரதிப்பிரஸ்தாதா, வசா (மாமிசம் வெந்த நீர்) ஹோமத்தைச் செய்துவிட்டு திக்யாகஞ் செய்யாதிருத்தல் வேண்டும்.

வேட்போன் வஷட்காரத்தில் அங்கத்தை ஹோமஞ் செய்தல்வேண்டும்.

வேள்வித்தலைவன், வாபா ஹோமத்திற்குச் செய்ததுபோலவே தியாகமும், தனது வாழ்த்துஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

வேட்போன் வடக்கில் தாண்டிவந்து சரசுவதி தேவதையின் அங்க அவியை யெடுத்துக்கொண்டு, உபபிருதில் பொன் துண்டைப்போடாமல் வைத்து விட்டு,

'सरस्वत्यै मेषस्यहविषोऽनुब्रूहि,என்று மைத்திரா வருணனை ஏவல் வேண்டும்.

மைத்திரா வருணன், 'सरस्वत्या अभिनोनेषि, என்பது முதலான புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி அதற்கவன் பதில்கூறியபிறகு,

'सरस्वत्यै मेषस्यहविषःप्रेष्य, என்று, மைத்திரா வருணனை ஏவல்வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षत्सरस्वतीं मेषस्य, என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'येयजामहेयस्तेस्तन:, என்பது முதலான யாஜ்யா வாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

பிரதிப்பிரஸ்தாதா, பாதிஇருக்கை ஓதும்போது வசா (அங்கம் வெந்த நீர்) ஹோமத்தைச் செய்து திக்யாகஞ் செய்யாமல், முன்வைத்திருந்த மீதி வசாவோடு இதையுஞ் சேர்த்து வைத்துக்கொள்ளல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் அங்க ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போலவே, தியாகமும், தனது வாழ்த்துஞ் செய்துகொள்ளல் வேண்டும்.

வேட்போன், வடக்கில் தாண்டிவந்து ஐந்திர பசுவின் அங்கங்களை எடுத்துக்கொண்டு, உபபிருதில் பொன் துண்டைப் போடாமல் நிறுத்திவிட்டு,

'इन्द्रायर्षभस्य हविषोऽनुब्रूहि, என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'इन्द्रोराजा, என்பது முதலான புரோநுவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்

வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி அவன் அதற்குப் பதிற்கூறிய பிறகு, 'इन्द्रायर्षभस्य हविष: प्रेष्य, என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், 'होतायक्षदिन्द्रमृषभस्य, என்பது முதலானதால் ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, येयजामहेस्वस्तये, என்பது முதலான யாஜ்யாவாக்கியத்தைச் சொல்லல் வேண்டும்

பிரதிப்பிரஸ்தாதா, பாதி இருக்கை ஓதும்போது வசா (அங்கம் வெந்த நீர்) ஓமஞ் செய்துவிட்டு, முன் மீதிவைத்திருந்த வாசாவையும் இப்போது மீந்த வசாவையுஞ் சேர்த்துக்கொண்டு திக்யாகங்களைச் செய்தல் வேண்டும்.

வேட்போன் வஷட்காரத்தில் அங்க ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், முன்போல் தியாகமும், தனது வாழ்த்துஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், தாண்டிவந்து, இந்திரனுடைய புரோடாசத்தை எடுத்துக் கொண்டு,

'इन्द्रायाऽनुब्रूहि, என்று, ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'एन्द्रसानसिं, என்பது முதலான புரோநுவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி அவன் அதற்கு பதில் கூறிய பிறகு,

इन्द्रंयज, என்று ஹோர்தாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, येयजामह इन्द्रं प्रससाहिषे, என்பது முதலான யாஜ்யா வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன் வஷட்காரத்தில் புரோடாசத்தை ஓமஞ்செய்தல் வேண்டும்.

வேள்வித்தலேன், 'இந்திராயேதம்' என்று தியாகமும், 'இந்திரஸ்யாஹம்' என்பது முதலானதால் தனது வாழ்த்துஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், தாண்டிவந்து சவிதா தேவதையின் புரோடாசத்தை எடுத்துக் கொண்டு,

'சவித்ரே' என்று மெதுவாகக்கூறி, 'அநுப்ரூஹி' என்று இரைந்து கூறி ஹோதாவை ஏவல்வேண்டும்.

ஹோதா, 'आविश्वदेवं, என்பது முதலான புரோநுவாக்கியத்தைச் சொல்லல வேண்டும்.

வேட்போன் தெற்கில் தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி அதற்கவன் பதில் கூறிய பிறகு,

'சவிதாரம், என்று மெல்லக்கூறி, 'யஜ, என்று இரைந்து சொல்லி ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, 'येयजामहे, என்று உரக்கக்கூறி 'सवितारं वाममद्य, என்று மெது வாக யாஜ்யாவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேள்வித்தலைவன், சவித்ரஇதம், என்று, தியாகமும், 'ஸவிதுரஹம், என்பது முதலானதால் தனது வாழ்த்துஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன், தாண்டிவந்து, வருணதேவதையின் புரோடாசத்தை எடுத்துக்கொண்டு,

: வருணுயாநுப்ருஹி, என்று ஹோதாவை ஏவல் வேண்டும்.

ஹோதா, ' अवतेहेडः, என்பது முதலான புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், தெற்கில் தாண்டிச் சென்று ஆக்னீத்ரனை ஏவி அதற்கவன் பதிற்கூறிய பிறகு,

' வருணம் யஜ ' என்று, ஹோதாவை ஏவவ் வேண்டும்.

ஹோதா, ' येयजामहे वरुणसुदुत्तमं ' என்பது முதாலன யாஜ்யாவாக்கியத்தைக் கூறுதல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் புரோடாசத்தை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன், 'வருணுயேதம், என்று தியாகமும், ' வருணஸ்யாஹம் ' என்பது முதலானதால் தனது வாழ்த்துஞ் செய்தல் வேண்டும்.

வேட்போன் தாண்டிவந்து பசு யாகத்திற் செய்ததுபோல் நாரிஷ்ட ஹோமங்களையும் வனஸ்பதி யாகத்தையுஞ் செய்துவிட்டு, யூபத்திற்குக் கிழக்காகவே சுற்றிவந்து உபபிருதில் உள்ள பசு ஸ்விஷ்டகிருத அங்கங்களுடன் புரோடாச ஸ்விஷ்டகிருத் அங்கங்களையும் எடுத்துக்கொண்டு மாமிசததால் அதை மறைத்து வெந்நீரையும் அதில் சேர்த்து பொன் துண்டைப்போட்டு இரு முறை நெய்யைச் சிதறி எடுததுக்கொண்டு யூபத்திற்குக் கிழக்காகவே வந்து ஆகவனீயத் தீயின்மேல், உபபிருதில் இருப்பதைச் சுருவில் மாற்றிக் கொண்டு,

' अग्नयेस्विष्टकृतेऽनु ब्रूहि ' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்,

மைத்திராவருணன், ' பிப்ரீஹி ' என்பது முதலான புரோநு வாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், அங்கிருந்துகொண்டே, ஆக்னீத்ரனை ஏவி அதற்கவன் பதிற்கூறிய பிறகு,

' अग्नियेस्विष्टकृते प्रेष्य ' என்று, மைத்திராவருணனை ஏவல் வேண்டும்.

மைத்திராவருணன், ' होतायक्षदग्निं स्विष्टकृतं ' என்பது முதலானதால் ஹோதாதை ஏவல் வேண்டும்.

ஹோதா, ' येयजामहे ऽग्नेयदद्य ' என்பது முதலான யாஜ்யாவாக்கியத்தைக் கூறல் வேண்டும்.

வேட்போன், வஷட்காரத்தில் அங்கத்தை ஹோமஞ் செய்தல் வேண்டும்.

வேள்வித் தலைவன், 'अग्नये स्विष्टकृत इदम्' என்று தியாகமும், 'अग्नेस्विष्टकृतोऽहं' என்பது முதலானதால் தனது வாழ்த்தலுஞ் செய்தல் வேண்டும்.

பிறகு, வேட்போன் தாண்டிவந்து, சுருவில் தண்ணீரை எடுத்துக் கொண்டு, இஷ்டியிற் செய்தது போலவே நடுவிறகில் கொட்டிவிடல் வேண்டும்.

அதன் பிறகு, பிரமன், ப்ராசித்ரஹரணம் என்னும் பாத்திர விசேடத்தை எடுத்துக்கொண்டு அதிலுள்ள புரோடாசத்தை அருந்திய பிறகு இடாவிலுள்ள புரோடாசத்தையும் அங்கத்தையும் பசு யாகத்தில் அருந்தியதுபோல் அருந்தல் வேண்டும்.

நீர் தெளித்துக் கொள்ளுதல் முடிந்ததும் 'अग्नीदौपयजान्' என்பது முதல், उपयड्ढोमं ' என்பது வரை, அதாவது கடாவின் சாணிப்பை ஹோமம் வரை பசுவில்செய்ததுபோல் செய்துகொள்ளல் வேண்டும். மற்றும், உபயட்டோமங்களையும் பன்மைச் சொல்லாக்கிச் செய்துகொள்ளல் வேண்டும்.

கடாவின் வால்களை, பசுயாகத்திற் செய்ததுபோல் பத்னி சம்யாஜஞ் செய்தல் வேண்டும்.

பத்தினி கையில் நீர்விடலும், இடுப்பிற் கட்டியுள்ள தருப்பைக் கயிற் கயிற்றை அவிழ்த்தலும் இல்லை. பிராயச்சித்த முதல் சமிஷ்டய ஜுர்வரை பசு யாகத்திற் செய்ததுபோலவே செய்துகொண்டு,

' : अभिस्तृणीहि ' என்பது முதலானதால் ஹோதாவின் இருப்பிடமாகிய தருப்பையை விரித்துவிடல் வேண்டும்.

உப வேஷத்தை எறிந்துவிடல் வேண்டும். சூலத்தை எறியக்கூடாது.

பிறகு, அவபிருதந் (முடிவு நீராடல்) தொடங்கி பரிமோஹநாலங்கரணம் (தீயைத்துடைத்து, அலங்கரித்தல்) முதல் செய்து தருப்பைகளைப் பரப்பிப் பாத்திரங்களை வைக்கும்போது, மேற்கில், மரக்கத்தி, அக்கினி ஹோத்திரஹவணி (ஒரு அகப்பைவிசேடம்) என்னும் இரண்டும் நீங்கலாக ஒருகபாலத்துடன் எல்லாப் பாத்திரங்களையுங் வைத்தல் வேண்டும்.

கிழக்கில், வாணு முதலானவைகளை வைத்துவிட்டு பவித்திரத்தைச் செய்துகொள்ளல் வேண்டும்.

பிரமனை அழைத்தல் இல்லை. வேள்வித் தலைவன் வாக்கையடக்கிக் கொண்டு அக்கினி ஹோத்திரஹவணியை எடுத்தல் முதலான கிரியைகளை தரிச பூரணமாதத்திற் செய்ததுபோற் செய்துகொண்டு,

'वरुणायजुष्टं निर्वपामि' என்று நெல்லை எடுத்துக் கொள்ளல் வேண்டும்.

இவ்வாறே, நீர் தெளித்தல் முதலான கிரியைகளைச் செய்துகொண்டு ஒரு கபாலத்தை வைத்து, தப்யஸ்வ என்று ஒருமையாக ஊகித்துக்கொண்டு, வாணுவைக்கழுவி நீரை விடுதல் வரை தரிசபூரணமாதத்திற் செய்ததுபோல வே செய்தல் வேண்டும்.

மந்திரமின்றி மரக்கத்தியை எடுப்பது முதல் நான்கு முறை நெய் யெடுப்பது வரை சோமயாக அவபிருதத்திற் செய்ததுபோலவே செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு புரோடசத்தை எடுத்துவிட்டு, உத்தர வேதிக்கு வடக்கில் நெய் முதலானவைகளையும், சௌத்திராமணியில் இருந்த பாத்திரங்களையும் வைத் துக் கொள்ளல் வேண்டும்.

'आयुर्दाअग्ने' अवभृथनिचंकुण' 'नमोरुद्राय' என்னும் இம்மூன்று மந்திரங் களாலும் மூன்று ஹோமங்கள் செய்தல் வேண்டும்.

'उरुं हिराजा' என்பது முதலான மந்திரத்தை அனைவரும் ஓதிக்கொள் வதுடன் அவபிருதத்தின் பொருட்டு, புரோடாசம், நெய், சௌத்திரா மணிக் குரிய பாத்திரங்கள் என்னு மனைத்தையும் எடுத்துக்கொண்டு நதிக்குச் செல்லல் வேண்டும். சாமமறை பாடுதல் இல்லை.

'शतंते राजन्' என்பது முதல் ஸ்விஷ்டகிருத் வரை சோமயாக அவபி ருதம் போல் செய்தல் வேண்டும்.

பிறகு வேட்போன், 'यस्ते देववरुण' என்பது முதலான மந்திரத்தால் ஆசு வினக்கிரக பாத்திரத்தைத் தண்ணீரில் எறிதல் வேண்டும்.

'यस्ते देववरुणत्रिष्टुप्' என்பது முதலான மந்திரத்தால் சாரசுவதக் கிருக பாத்திரத்தையும், 'यस्तेदेववरुणजगती' என்பது முதலான மந்திரக் தால் ஐந்திரக்கிரக பாத்திரத்தையும், 'यस्तेदेववरुणानुष्टुप्' என்பது முதலான மந்திரத்தால், மாவாணு, மயிர்த்துணி, கழுகு இறகு என்பவைகளையும் 'यस्तेदेववरुण पंक्तिश्छन्दः' என்பது முதலான மந்திரத்தால், இருதய சூலங்களையு (இருதய மாமிசத்தைக் குத்திக் காய்ச்சும் முட்களையு) ம் நீராடும் தண்ணீரில் போட்டுவிடல் வேண்டும்.

பிறகு, இமம் விஷ்யாமி (தருப்பைக் கயிற்றை அவிழ்த்து விடுதல்) என்பது முதல், ஆதித்தனைப் போற்றும்வரை சோமயாக அவபிருதத்திற் செய்தது போலவே செய்தல் வேண்டும். 'यद्दिदीक्षे' தலையில் நீர் விட்டுக் கொள்ளுதல் என்பது இல்லை.

மந்திரமின்றி சமித்துக்களை எடுத்துக்கொண்டு திரும்பிப்பாராமல் யாக சாலையை அடைந்து.

'**एधोऽस्येधिषीमहि**' (சமித்தைத் தீயிற்போடுதல்) என்பது முதல் பசு யாகத்திற் செய்தது போல் அனைவருஞ் செய்து கொள்ளல் வேண்டும்.

பிறகு, பிரமன், '**अयाडग्निः**' (தீயைப் போற்றுதல்) முதல் செய்து முடித்ததும், வேள்வித்தலைவன், விஷ்ணு வதிக்ரம முதல் பிராமண தர்ப்பணம் வரை பசு யாகத்திற் செய்ததுபோற் செய்தல் வேண்டும்.

'**यज्ञश्चमे**' (என்பது முதலான மந்திர ஜபம்) இல்லை.

வேள்வித்தலைவன் தீயைச்சமாரோபணஞ் செய்து கொண்டு வீட்டிற்கு வந்து தீக் கடைந்து தீயை உண்டாக்கிக் கொள்ளல் வேண்டும்.

சாராயத்தாற் செய்யப்படும்

சௌத்திராமணியாகம்

முற்றிற்று.

---

இனி, பாலாற் செய்யப்படும் சௌத்திராமணி யாகம் வருமாறு:—

பருவ நாட் காலையில் அக்கினி ஹோத்திரத்தை முடித்துக்கொண்டு, சௌத்திராமணியால் யாகஞ் செய்வேன் என்று சங்கற்பஞ் செய்த பிறகு தீயைச் சமாரோபணஞ் செய்துகொண்டு யாகசாலையை யடைந்து வித்யுதஸி, முதல், யூபத்தைக் கொண்டு வருதல்வரை பசுஇஷ்டியை பசுயாகத்திற் செய்ததுபோலவே செய்து கொள்ளல் வேண்டும்.

வேதிபோடுவதை முன்கூறியது போலவே செய்துகொண்டு, உத்தரவேதி செய்யும் போது, சரங்க (மேடைக) ளையும், பிரணயனகாலத்தில், தட்சிணைக்கினியிருலிந்து பிரதிப்பிரஸ்தாதா தீயுண்டாக்குவதையும் முற் கூறியது போலவே செய்துகொள்ளல் வேண்டும்.

பாத்திரங்களை வைக்கும்போது, சௌத்திராமணிக்குரிய கிரகங்கள் முதலானவைகளையும், காலையில் பால்கறக்கும் பாத்திரத்தையும் பசு (புரசங்) கிளையுடன் கும்பியை (பானையை) யும். அபிதாநி (தலையைக் கட்டு) ங்கயிறு, நிதானம் (கால் கட்டுங்கயிறு) என்னும் இவைகளையும் வைத்தல் வேண்டும்.

பிறகு, காலைப்பால் கறக்குங் கன்றை ஓட்டிவிட்டுப் பாத்திரத்தைத் தேய்க்கும்போது, ஊர்த்வ பாத்திர சம்மார்ச்சனமும் (கிரகங்களின் மேல் பக்கத்தை துடைத்தல் முதலான) முன் கூறியது போல் செய்தல் வேண்டும்.

சாராயத்தை மேலே எடுக்குங் காலத்தில் பால் கறக்கும் பசுக்களைப் பார்த்தல் முதல் 'अश्विभ्यां सरस्वत्या इन्द्रायसुत्राम्णे, हविरिन्द्रियम्, बहुदुग्धयश्विभ्यां सरस्वत्या इन्द्राय सुत्राम्णेदेवेभ्यः 'என்று பால் கறத்தல் வேண்டும்.

சம்க்ஷாளன நிநயனம் (அலம்பிய ஜலத்தை விடுதல்) முடிந்ததும் மேடையின்மீது கறந்தபாலை வைத்தல் வேண்டும்.

வேள்வித்தலைவன், 'इदमिन्द्रियं' என்பது முதலான மந்திரத்தால், வைத்ததைத் தொடல் வேண்டும்.

வேட்போன, கம்பளியால் 'புநாதுதே' என்பது முதலான இரண்டு மந்திரங்களாலும் பாலை வடித்தல் வேண்டும்.

பிறகு, கடாவைக் கொல்லுதல் முதலான கிரியைகளை முற்கூறியது போற்செய்து கொண்டு நெய்களை எடுத்துக்கொண்டபின், சாராயத்தைக்கிரகித்தபோது சொல்லிய மந்திரங்களால் கிரகபாத்திரங்களில் பாலை எடுத்து வைத்தல் முதலான கிரியைகளைச் செய்தல் வேண்டும்.

பிறகு, நீர்தெளித்தல் முதல், வபாஹோமம், நீர் தெளித்துக்கொள்ளும் வரை முற் கூறியபடியே செய்துகொண்டு, புரோடாச நிர்வாபம் முதலானவைகளையும், கிரகத்தை (எடுத்தபாலை) ஹோமஞ் செய்தல் முதல் எல்லாக் கிரியைகளையும் முற் கூறிய முறையாகவே செய்து முடித்துக் கொள்ளல் வேண்டும்.

பாலால் செய்யும் சௌத்திராமணியாகம்

முற்றிற்று

பரிசேடம் முடிந்தது.

---

இருபத்திரண்டாவது அநுவாக

விடயச்சுருக்கம்

आग्नावैष्णवमित्यादावभिचारहवि ष्षये ।
अग्नाप्रणो वृद्देत्याद्या अधिकातु विकल्प्यते ॥ १ ॥
आन एककपालेतु मैत्रावरुण नामके ॥
अग्निमित्यादिकाधाय्यास्युस्सोमारौद्रकेचरौ ॥ २ ॥
देवानामिति चार्धर्चस्तिसृष्वृक्ष्वनुषज्यते ।
षड्धाऽय्याद्वेतु याज्यानुवाक्ये सोमेत्युदीरिते ॥ ३ ॥
सोमापौष्णेतु सोमेति मन्त्रा एकोनविंशतिः ॥

ஆக்ஞ வைஷ்ணவங்களுக்கு மூன்று இருக்குக்களும், விகல்ப இருக்குக்களும், மைத்திராவருண ஒரு கபாலதேவதைக்கு இரண்டு இருக்குக்களும், சுவிஷ்டகிருத்துக்கு இரண்டு இருக்குக்களும், சோமாரௌத்திர வெண் பொங்கலுக்கு பின்பாதியை அநுஷங்கங்களாக்கலும், சுவிஷ்டகிருத்துக்கு இரண்டு இருக்குக்களும், சோமாபௌஷ்ண தேவதைக்கு இரண்டு இருக்குக்களும் முறையே யாஜ்யா புரோநு வாக்கியங்கள் என்பது,

---

## முதற் காண்டம் எட்டாம் பிரபாடகம்

## இருபத்திரண்டாவது அநுவாகம்

ஐந்து பஞ்சாதிக்குமேல் இருபத்தைந்து பதங்களை கொண்டது.

காமியயாஜ்ய புரோநுவாக்கியங்களைக் கூறும் இருக்கு மந்திரங்கள்

अग्नाविष्णू महि तद्वां महित्वं वीतं घृतस्य गुह्यानि नाम । देमेदमे सप्त रत्ना दधानाप्रति वां जिह्वा घृतमा चरण्येत् । अग्नाविष्णू महि धाम प्रियं वां वीथो घृतस्य गुह्या जुषाणा । देमेदमे सुष्टुतीर्वावृधाना प्रति वां जिह्वा घृतमुच्चरण्येत् । प्र णो देवी सरस्वती वाजेभिर्वाजिनीवती । धीनामवित्र्यवतु । आ नो दिवो बृहतः ॥ १ ॥ पर्वतादा सरस्वती यजता गन्तु यज्ञम् । हवं देवी जुजुषाणा घृताची शग्मां नो वाचमुशती शृणोतु । बृहस्पते जुषस्व नो हव्यानि विश्वदेव्य । रास्वरत्नानि दाशुषे । एवा पित्रे विश्वदेवाय वृष्णे यज्ञैर्विधेम नमसा हविर्भिः । बृहस्पते सुप्रजा वीरवन्तो वयꣳ स्याम पतयो रयीणाम् । बृहस्पते अति यदर्यो अर्हाद्द्युमद्विभाति क्रतुमज्जनेषु । यद्दीदयच्छवसा ॥२॥ ऋतप्रजात तदस्मासु द्रविणं धेहि चित्रम् । आ नो मित्रावरुणा घृतैर्गव्यूतिमुक्षतम् । मध्वा रजाꣳसि सुक्रतू । प्र बाहवा सिसृतं

जीवसे न आ नो गव्यूतिमुक्षतं घृतेन । आ नो जने श्रवयतं युवा-
ना श्रुतं मे मित्रावरुणा हवेमा । अग्निं वः पूर्व्यं गिरा देवमीडे
वसूनाम् । सपर्यन्तः पुरुप्रियं मित्रं न क्षेत्रसाधसम् । मक्षू देववतो
रथः ॥ ३ ॥ शूरो वा पृत्सु कासु चित् । देवानां य इन्मनो यज-
मान इयक्षत्यभीदयज्वनो भुवत् । न यजमान रिष्यसि न सुन्वान
न देवयो । असदत्र सुवीर्यमुत त्यदाश्वश्वियम् । नकिष्टं कर्मणा
नशन्न प्र योषन्न योषति । उप क्षरन्ति सिन्धवो मयोभुव ईजानं च
यक्ष्यमाणं च धेनवः । पृणन्तं च पपुरिं च ॥ ४ ॥ श्रवस्यवो घृत-
स्य धारा उप यन्ति विश्वतः । सोमारुद्रा वि वृहतं विषूचीममीवा
या नो गयमाविवेश । आरे बाधेथां निर्ऋतिं पराचैः कृतं चिदेनः
प्र मुमुक्तमस्मत् । सोमारुद्रा युवमेतान्यस्मे विश्वा तनूषु भेष
जानि धत्तम् । अव स्यतं मुञ्चतं यन्नो अस्ति तनूषु बद्धं कृतमेनो
अस्मत् । सोमापूषणा जनना रयीणां जनना दिवो जनना पृथिव्याः ।
जातौ विश्वस्य भुवनस्य गोपौ देवा अकृण्वन्नमृतस्य नाभिम् ।
इमौ देवौ जायमानौ जुषन्तेमौ तमाꣳसि गूहतामजुष्टा । आभ्या
मिन्द्रः पक्वमामास्वन्तः सोमापूषभ्यां जनदुस्रियासु ॥ ५ ॥

அநுவாக எண்களைக் காட்டும் தலைப்புச் சொற்கள் :—

अनुमत्या आग्नेयमैन्द्राग्नमग्नये सोमाय प्रति पूरुषमैन्द्राग्नं धात्रे बार्हस्पत्य
मग्नये गृहपतयेऽर्थेतो देवीः समिधꣳ सोमस्येन्द्रस्य मित्र अग्नेयꣳ सद्य
आग्नेयꣳ हिरण्यमाग्नेयꣳ स्वाद्वीं त्वाऽग्नाविष्णू द्वाविꣳशतिः । (२२)

பஞ்சாதி எண்:—

अनुमत्यै यथाऽसति देवीरापो मित्रोऽसि शूरो वा द्विचत्वारिꣳशत् (४२)

இருபத்தோராவது அநுவாகத்தில் சௌத்திராமணி யாகங்கள் கூறப்பட்டன. இருபத்திரண்டாவது அநுவாகத்தில் காமியயாஜ்யா புரோநு வாக்கியங்கள் கூறப்படுகின்றன.

காமியேஷ்டி காண்டத்தில், சங் - கா – 2 பிர - 2 - அநு - 9 - ல், आग्नावैष्णवमेकादशकपालं निर्वपेत् என்பது முதலான மந்திரங்களால் மூன்று அவிகளைக் கொண்ட ஒரு இஷ்டி விதிக்கப் பட்டிருக்கின்றது. அவற்றுள் முதலாவது அவிக்குப் புரோநுவாக்கியம் :—

முதல் இருக்கு

மந்திரம் :

अग्नाविष्णू महितद्वां महित्वंवीतं घृतस्य गुह्यानि नाम । दमेदमे सप्तरत्ना
दधानाप्रति वां जिह्वा घृतमा चरण्येत् ।

என்பது.

உரை

அக்கினி விஷ்ணுக்களே! நீவிர், எல்லா வேள்வித்தலைவன் வீடுகளிலும், மகிமையோடு கூடியவைகளும் மந்திரங்களுக்குள் இரகசியங்களுமான பிருஷ தாஜ்யம், சர்ப்பி : என்பது முதலான பெயர்களைக் கேட்டுக் கொள்வீர்களாக. அதாவது,

पशूनांतेजसाऽग्नयेजुष्टमभिघारयामि என்பது முதலான மந்திரங்களைச் செவி மடுத்துக் கேட்பீர்களாக என்பதாம். மற்றும், உங்களுடைய நாக்குக்கள் தனித்தனியே வந்து நெய்யை அருந்துக. எவ்வண்ணமான நாக்குக்களெனின்? ஏழு இரத்தினங்கள் போன்ற சுவாலைகளையுடையன என்பது.

குடைபிடித்தவன் நியாயம் போன்று, அக்கினியுடன் கூடியதால் விஷ்ணுவிற்கும் அத்தன்மையாம் என்பது.

இரண்டாவது இருக்கு

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் :

अग्नाविष्णू महि धाम प्रियं वां वीथो घृतस्य गुह्याजुषाणा । दमेदमे सुष्टुतीर्वा
वृधाना प्रति वांजिह्वा घृतमुच्चरण्येत् ।

என்பது.

உரை.

வேள்விததலைவர்களுடைய வீடுகளில், 'आयुर्दा अग्ने' என்பது முதலான அழகிய துதிகளை வளர்க்கின்றவர்களான அக்கினி விஷ்ணுக்களே! உங்களுக்குப் பிரியமான இடம் யாகசாலையாம். அபிகாரம் (நெய்யைத் தாரையாய் விடல்) என்னும் அவியையும் புரோடாசத்தையும் அருந்துவீர்களாகஎன்பது

---

மூன்றுவது இருக்கு

இரண்டாவது அவிக்குப் புரோநுவாக்கியம்

மந்திரம் :

**प्र णो देवी सरस्वती वाजेभिर्वाजिनीवती । धीनामवित्र्यवतु ।**

என்பது

உரை

அன்னமளிக்கும் வேள்விக்கிரியையுடையவளும், யாகவிடயமாகிய எமது புத்தியைப் பாதுகாக்கின்றவளுமாகிய சரசுவதி தேவி, உணவுப்பொருள்களால் எம்மைப் பாதுகார்த்தருள்வாளாக என்பது.

---

நான்காவது இருக்கு

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் :

**आनो दिवो बृहतः पर्वतादा सरस्वती यजता गन्तु यज्ञम् । हवं देवी जुजुषाणा घृताची शग्मां नो वाचमुशती शृणोतु ।**

என்பது

உரை

எமது அழைப்பை ஏற்றுக் கொள்கின்றவளும், நெய்யை யடைகின்றவளும், வேட்கத் தக்கவளுமாகிய சரசுவதிதேவி, எமது வேள்வியை முன்னிட்டு வானிலிருந்தேனும் மலையிலிருந்தேனும் இங்கு வருவாளாக. வந்து, சுகத்தை யளிக்கும் எமது துதியைப் பிரியத்துடன் கேட்பாளாக என்பது.

---

ஐந்தாவது இருக்கு

மூன்றுவது அவிக்குப் புரோநுவாக்கியம்

மந்திரம் :

**बृहस्पते जुषस्व नो हव्यानि विश्वदेव्य । रास्वरत्नानि दाशुषे ।**

என்பது.

உரை

விசுவே தேவர்கட்கு இனியராகிய பிருகற்பதிதேவரே! நீர், எமது அவியை அருந்துவீராக. அவியளித்த வேள்வித்தலைவனுக்கு இரத்தினங்களைக் கொடுப்பீராக என்பது.

---

ஆறுவது இருக்கு

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம்:

**एवा पित्रे विश्वदेवाय वृष्णे यज्ञैर्विधेम नमसा हविर्भिः। बृहस्पते सुप्रजा वीरवन्तो वयꣳ स्याम पतयो रयीणाम्।**

என்பது.

உரை.

பிதாவைப் போல் பாதுகாப்பவனும், எல்லாத் தேவர்கட்கும் ஆசிரியனும், வேண்டிய பயனை அளிக்கின்றவனுமாகிய பிருகற்பதிதேவனே! உனக்கு, பல்வகை வேள்விகளாலும், அன்போடுகூடிய வணக்கங்களாலும் இடையறாது வழிபாடு செய்கின்றோம். உனதருளால், யான்அழகிய புத்திரனையுடையவனும், சூரர்களான படர்களுடன் கூடியவனும், தனங்கட்குத் தலைவனும் ஆவேனாக என்பது.

---

எழாவது இருக்கு

மேற்கூறிய அதற்கே விகற்பமாகிய யாஜ்யாவாக்கியம்

மந்திரம்:

**बृहस्पते अति यदर्यो अर्हाद्द्युमद्विभाति क्रतुमज्जनेषु। यद्दीदयच्छवसर्तप्रजात तदस्मासु द्रविणं धेहि चित्रम्।**

என்பது.

உரை

பிருகற்பதியே! அரசன் தானாகவே அநுபவித்தற் குரியவைகளும் மந்திரி முதலானோர்களிடத்தில் அணிகள் போல் விளங்குகின்றவைகளும், வேள்வித் தலைவர்களிடத்தில் வேள்விக்குச் சாதனங்களாக விளங்குகின்றவைகளும், மற்றும், வன்மையால் வாழ்க்கையைத்தேடும் சைன்யமாய் விளங்குகின்றவைகளுமான முத்து இரத்தின முதலான தனங்களை, பரமான் மாவினிடத்தில் உண்மையுள்ள தேவகுருவாகத் தோன்றிய நீ எமக்குக்கொடுப்பாயாக என்பது.

எட்டாவது இருக்கு

மைத்திராவருணனுடைய புரோநுவாக்கியம்

மந்திரம் :

आ नो मित्रावरुणा घृतैर्गव्यूतिमुक्षतम्। मध्वा रजाꣳसि सुक्रतू।

என்பது.

உரை

மித்திர வருணர்களே! நீவிரிருவரும் எமது கோக்கள் மேயும் புல் தரையை மிகுந்த நெய்யால் தெளிப்பீர்களாக. எமது வேள்விப் பூமியின் தூசுகளை நீரால் தெளிப்பீர்களாக என்பது.

---

ஒன்பதாவது இருக்கு

மேற்கூறியதற்கே யாஜ்யாவாக்கியம்

மந்திரம் :

प्र बाहवा सिसृतं जीवसे न आ नो गव्यूतिमुक्षतं घृतेन। आनो जने श्रवयतं युवाना श्रुतं मे मित्रावरुणा हवेमा।

என்பது.

உரை.

மித்திர வருணர்களே! எமது வாழ்க்கையின் பொருட்டு கைகளில் நிறையத் தனங்களை யெடுத்துக் கொண்டு வருவீர்களாக. வந்து, எமது கோக்கள் மேயும் புல் தரையை நெய்யால் நனைப்பீர்களாக. கூடியிருக்கின்ற வர்களான நீவிரிருவரும், அந்தணர் முதலானோர்கள் கூடிய கூட்டத்தில் எம்மைப் பெருமைப் படுத்திப் பேசி அவர்கட்கு எம்மை அறிவுறுத்துவீர்களா. மித்திர வருணதேவர்கள் எமது அழைப்பைக் கேட்பார்களாக என்பது.

இனி, तस्माएतꣳ सोमारौद्रंचरुंनिर्वपेत् என்பது முதலிய, சங், கா-2. பிர-2, அநு-10-வது மந்திரத்தால் பிரம வொளியை விரும்பியவனுக்கு ஒரு இஷ்டி விதிக்கப்பட்டிருக்கிறது. இச் சோமருத்ர சருவி (பொங்கலி)ல், தாய்யாத் வேன (சேர்ப்பதற்குரியவைகள்) விகற்பமான ஆறு இருக்கு மந்திரங்களுள்,

---

(10) முதலாவது இருக்கு மந்திரம்

மந்திரம் :

अग्निं वः पूर्व्यं गिरा देवमीडे वसूनाम्। सपर्यन्तः पुरुप्रियं मित्रं न क्षेत्रसाधसम्।

என்பது.

புரோநு வாக்கியங்கள்)

உரை

வேள்வியை முடிவுவரை அநுட்டிக்கின்ற யான், எமது க்ஷேத்திரத்திற்கு பிதா அண்ணன் தம்பிகள் போல் சாதகமாயிருக்கின்றதும், வசுக்களான உங்களுக்குள் முதலாவதாகத் தோன்றியதுமாகிய அக்கினியை வைதிக தோத்திரத்தால் துதிக்கின்றேன் என்பது.

---

## (11) இரண்டாவது இருக்கு

மந்திரம் :

**मक्षू देववतो रथश्शूरो वापृत्सु कासु चित् । देवानां य इन्मनो यजमान इयक्षत्यभीदयज्वनो भुवत् ।**

என்பது.

உரை

போரில் ஊக்கமாய்ச் செல்கின்றவர்களுக்குள் சூரனாகிய ஒரு காலாளைப் போல் வேள்வி செய்யும் தேவதைகளுடன் வேள்வித்தலைவனுடைய இரதஞ் செல்கின்றது. அதாவது, போரில் வீரனான தனதுடலை மறந்து பகைவனைக் கொல்ல வேகமாய்ச் செல்வதுபோல் வேள்வி செய்யும் தலைவனுடைய மனோ விருத்தி மிக விரைவாய்ச் செல்கின்றது என்பதாம். வேள்வியால் தேவதையின் அருளையடைய வேண்டுமென்று விரும்பியவன் வேள்வி செய்யாதவர்களை அடக்கியே விடுவான் என்பது.

---

## (13) மூன்றாவது இருக்கு

மந்திரம் :

**न यजमान रिष्यसि न सुन्वान न देवयो ।**

என்பது.

உரை

தலைவ ! நீ, வேள்விசெய்து கெடமாட்டாய். ஈண்டுத் தலைவன் என்றது வேள்விக்கு எசமானன். சோமயாகஞ் செய்வோய்! நீயும் கெடமாட்டாய். பாகயக்ஞம் முதலியவைகளால் தேவர்களை விரும்புவோய் ! நீயும் கெடமாட்டாய். பிற்பகுதி மந்திரத்திற்கு முன்போல் உரை கூறிக் கொள்க என்பது.

---

(14) நான்காவது இருக்கு

மந்திரம் :

असदत्र सुवीर्यमुत त्यदाश्वश्वियम्।

என்பது.

உரை

இவ்வேள்வித் தலைவனிடத்தில் நல்ல ஆற்றல் உண்டாகுக. மற்றும், வேகசம்பந்தமான ஆற்றலும் உண்டாகுக. மற்றவை முன்போல் என்பது.

---

(15) ஐந்தாவது இருக்கு

மந்திரம்,

नकिष्टं कर्मणा नशन्न प्र योषन्न योषति।

என்பது.

உரை

கருமாநுட்டானத்தோடு கூடிய வேள்வித்தலைவனை, இராக்கதர் முதலானோர்கள் நாசப்படுத்தாதவர்களாகுக. வேள்விக்குப் பகையாகிய பாவம் வேள்வித்தலைவனிடஞ் சேராததாகுக. வேள்வித்தலைவனும் பாவத்துடன் கூடாதவனாகுக. மற்றவை முன்போல் என்பது.

---

(16) ஆறாவது இருக்கு மந்திரம்

மந்திரம் :

उप क्षरन्तिसिन्धवो मयोभुव ईजानं च यक्ष्यमाणं च धेनवः। पृणन्तंच पपुरिं च श्रवस्यवो घृतस्य धारा उप यन्ति विश्वतः।

என்பது

உரை.

நதிகள் போல் சுகத்தைப் பாவிக்கின்ற பாற்பசுக்கள், முன்னர் வேள்வி செய்தவனும், மேல் வேள்வி செய்பவனுமாகிய வேள்வித்தலைவனை யடைந்து பாலைப் பொழிகின்றன. இக்கருமத்தில் சுருவை நிறைக்கின்றவனும், அவிகளையுடைய கருமத்தில் அவிகளை நிறைக்கின்றவனுமாகிய வேள்வித்தலைவனைக் கேட்பது போன்று நெய்த்தாரைகள் அவன் அருகில் வருகின்றன என்பது.

---

பதினேழாவது இருக்கு

மூன்று, தாம்ய யுக்மங்களைக் கூறியபின் புரோநுவாக்கியங் கூறப்படுகின்றது.

மந்திரம் :

**सोमारुद्राविवृहतं विषूचीममीवा या नो गयमाविवेश। आरे बाधेथां निर्ऋतिं पराचैः कृतं चिदेनः प्र मुमुक्तमस्मत्।**

என்பது.

உரை

சோம உருத்திரர்களே! நீவிர், பிணியாகிய நிருதிதேவதை எங்களுடைய வீட்டுக்குள் நுழைந்திருக்கின்றது. அதை நாலாபக்கங்களிலும் ஓடியொழியும்படி செய்வீர்களாக. வெளிநோக்கி ஓடத்தக்க பீடையைத் தூரத்திற் கொண்டுபோய்க் கெடுப்பீர்களாக. அதனுல் வந்த பிணி வடிவ பாவத்தை எம்மிலிருந்து விடுவிப்பீர்களாக என்பது.

---

பதினெட்டாவது இருக்கு

யாஜ்யாவாக்கியம்

மந்திரம் :

**सोमारुद्रा युवमेतान्यस्मे विश्वा तनूषु भेषजानि धत्तम्। अव स्यतं मुञ्चतं यन्नो अस्ति तनूषु बद्धं कृतमेनो अस्मत्।**

என்பது.

உரை

சோம உருத்திரர்களே! நீவிரிருவரும் எல்லாமருந்துக்களையும் எமது உடம்பினுள் வைப்பீர்களாக. அம்மருந்துக்களால் வேண்டாததை விலக்குவீர்களாக. தீய கிரகத்தால் எமது உடம்பில் கட்டுப்பட்டிருக்கின்ற பாவத்தை விடுவிப்பீர்களாக என்பது.

---

பத்தொன்பதாவது இருக்கு மந்திரம்

உடம்பின்தோல் கெடுதியடையுமென்னும் பயமுண்டானவனுக்கு, **'सोमापौष्णं चरुं निर्वपेत्'** என்பது முதலிய, சங்-கா-2-பிர-1-அநு-10 வது மந்திரம் ஒரு இஷ்டியை விதித்திருக்கின்றது. அதற்குப் புரோநுவாக்கியம். :—

மந்திரம் :

**सोमापूषणा जनना रयीणां जनना दिवो जनना पृथिव्याः। जातौ विश्वस्य भुवनस्य गोपौ देवा अकृण्वन्नमृतस्य नाभिम्।**

என்பது.

உரை.

இவ்வுலக பரவுலக பயன்களைக் கொடுக்கின்றவர்களும், உண்டான மாத்திரத்தால் எல்லாப் புவனங்களையும் பாதுகாப்பாற்றுவர்களுமான சோம பூஷா தேவதைகளே! உங்களை, தேவர்கள், கருமபயனின் நாபியாகச் செய்துள்ளார்கள். அதாவது' சோமனும் பூஷாதேவதையுமே எசமானனுக்குக் கருமபயனைக் கட்டுபடுத்துகின்றவர்கள் என்பதாம். நாபி = மூலகாரணம்.

---

இருபதாவது இருக்கு

மேற்கூறிய அதற்கே யாஜ்யாவாக்கியம்

**மந்திரம் :**

**इमौ देवौ जायमानौ जुषन्तेमौ तमाꣳसि गूहतामजुष्टा । आभ्यामिन्द्रः पक्कमामास्वन्तस्सोमापूषभ्यां जनदुस्रियासु ।**

என்பது.

உரை.

உண்டான இவ்விருவரையும் எல்லாத் தேவர்களும் வழிபடுகின்றார்கள். இவ்விருவரும் எனது புத்திமறைப்பை நீக்குவார்களாக. சோமன் பூஷன் என்னும் இவ்விருவர்களிடத்தினின்று, இந்திரன் தருணப்பசுக்களால் பால் கறக்கின்றான். பசுக்கள், சாரத்தோடுகூடிய பூமியில் சோமத்தால் வளர்ந்த புல்லை அருந்தி நவநீதம் மிக்குடைய பாலைத் தாங்குகின்றன என்பது.

இருபத்திரண்டாம் அநுவாகம்

முற்றும்

---

எட்டாம் பிரபாடகமும்

முற்றிற்று.

---

முதற்காண்டம் முடிந்தது.

சுப்ரமண்யோம்! சுப்ரமண்யோம்!! சுப்ரமண்யோம்!!!

